


# குறவஞ்சி இலக்கியம்

டாக்டர் நிர்மலா மோகன்

# குறவஞ்சி இலக்கியம்

(குறம், குறவஞ்சி, குளுவ நாடகம்)



மணிவாசகர் பதிப்பகத்தின்
வெள்ளிவிழா வெளியீடு




டாக்டர் நிர்மலா மோகன்







மணிவாசகர் பதிப்பகம்
சிதம்பரம்

முதற்பதிப்பு : ஏப்ரல், 1985

உரிமை : ஆசிரியருக்கு

பதிப்பாசிரியர் : ச. மெய்யப்பன், எம். ஏ.

விலை ரூ. 35-00




கிடைக்குமிடம் :
12-B, மேல சன்னதி, சிதம்பரம்-608 001
14, சுங்குராம் தெரு, பாரிமுனை, சென்னை-600 001
55, லிங்கிச் செட்டித் தெரு, சென்னை-600 001
28-A, வடக்கு ஆவணி மூலவீதி, மதுரை-625 001
அசோகா பிளாசா, நஞ்சப்பா சாலை, கோவை-641 012
சென்னை போன் : 512996 சிதம்பரம் போன் : 799

அச்சிட்டோர் : கற்பகம் அச்சகம், சென்னை—600 002.
தொலைபேசி எண் : 847174

# குறவஞ்சியும் குளுவ நாடகமும்

பேராசிரியர் ச. மெய்யப்பன் எம். ஏ.
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

மணிவாசகர் பதிப்பகத்திற்கு இது வெள்ளி விழா ஆண்டு. இந்த ஆண்டில் மணிவாசகர் பதிப்பகம் மூன்று வகையான நூல்களைத் தமிழ் கூறு நல்லுலகத்திற்கு வழங்குகின்றது. ஒன்று: ஆய்வு நூல்கள். இரண்டு: அறிமுக நூல்கள். மூன்று: எளிய நூல்கள். 'குறவஞ்சி இலக்கியம்' என்னும் இந்நூல் ஆய்வு நூல் வரிசையில் அமைவதாகும்.

அடிநாள் தொட்டு மணிவாசகர் பதிப்பகம் சிற்றிலக்கிய ஆய்வுக்கு முதன்மை தந்து வந்துள்ளது. சிற்றிலக்கியங்களை அறிமுகப்படுத்தும் நிலையிலும், ஆராயும் வகையிலும் மணிவாசகர் பதிப்பகம் வெளியிட்டுள்ள நூல்கள் பற்பல. இந்நூல்கள் தமிழ்ப் பேராசிரியர்களாலும் ஆய்வாளர்களாலும் பெரிதும் போற்றி வரவேற்கப் பெற்றுள்ளன. இந்நூல்களால் சிற்றிலக்கியங்களுக்கு ஒரு தனி மதிப்பே ஆய்வுலகில் ஏற்பட்டிருப்பது கண்கூடு. 'சிற்றிலக்கிய ஆய்வு எனில் மணிவாசகர் பதிப்பகம்தான்' என்று கூறும் அளவிற்கு மணிவாசகர் பதிப்பகம் சிற்றிலக்கியம் குறித்து வெளியிட்டுள்ள நூல்கள் கற்றோரால் மதிக்கப் பெறுகின்றன.

குறவஞ்சி, பள்ளு, நொண்டி ஆகிய மூன்றும் பதினேழாம் நூற்றாண்டின் இறுதியில் தோன்றிய புகழ்பெற்ற இசை நாடக இலக்கிய வகைகள் ஆகும். இம் மூன்றனுள் தரத்தாலும் திறத்தாலும் முதல் இடத்தைப் பெறுவது குறவஞ்சி. ஏனைய இரு வகைகளை விட எண்ணிக்கையில் குறவஞ்சி இலக்கியங்கள் மிகுதியாகத் தோன்றி இருப்பதும் இதனை உறுதிப்படுத்தும். குறவஞ்சி இலக்கியம் நாடகக் கூறுகளையும், நாட்டுப்புறக் கூறுகளையும் தன்னகத்தே கொண்டு, இசை நயத்தையும்

பெற்றிருப்பதால், கற்றவர்கள் மத்தியிலும் பொதுமக்கள் மத்தியிலும் சிறப்பானதோர் இடத்தைப் பெற்றுள்ளது. 'குறவஞ்சி இலக்கியம்' என்னும் இந்நூல் குறவஞ்சி இலக்கியத்தையும், அதனோடு உறவுடைய குறம், குளுவ நாடகம் ஆகியவற்றையும் பல கோணங்களில் விரிவாக ஆராய்கின்றது.

இந்நூலின் ஆசிரியர் டாக்டர் நிர்மலா மோகன் சிற்றிலக்கியம் குறித்து ஏற்கெனவே இரு ஆய்வு நூல்களை எழுதி இருப்பவர்; நாடகவியல், நாட்டுப்புறவியல், வாழ்வியல், இலக்கிய இயல் என்னும் பல்வேறு இயல்களின் அறிமுகத்தோடு அவர் இந்நூலை ஆக்கி இருப்பது குறிப்பிடத்தக்கதாகும். இந்நூலின் வாயிலாகக் குளுவ நாடகம் பற்றிய நல்லதோர் அறிமுகம் தமிழ் ஆய்வுலகிற்குக் கிடைத்துள்ளது எனலாம். அண்மையில் 'இளங்கோவடிகள் யார்?' என்னும் புகழ் பெற்ற ஆய்வு நூலை வெளியிட்ட திரு. ரகுநாதன், தம் ஆய்வுக்கு உற்றுழி உதவியராக இந் நூலாசிரியரைக் குறிப்பிட்டுள்ளமை இங்கே நினைவு கூரத்தக்கதாகும்.

இன்னொரு வகையிலும் இந்நூல் தனிச்சிறப்பு வாய்ந்ததாகும். பள்ளு, பிள்ளைத்தமிழ், சதகம், உலா, தூது, அந்தாதி, பரணி போன்ற சிற்றிலக்கியங்களுக்குத் தனித்தனி நூல்கள் மணிவாசகர் பதிப்பகத்தின் வாயிலாக வெளிவந்துள்ளன. ஆனால் குறவஞ்சி இலக்கியம் குறித்து இதுவரை ஆய்வு நூல் ஒன்றும் வெளிவரவில்லை. இந்நிலையை மனத்தில் கொண்டு டாக்டர் நிர்மலா மோகன் குறவஞ்சி இலக்கியம் குறித்த ஒரு விரிந்த அளவிலான ஆய்வு நூலை ஆக்கித்தந்துள்ளார். அன்னாரது முயற்சி பாராட்டுதற்கு உரியதாகும்.

ஆராய்ச்சியாளரும் ஆய்வாளர்களுக்குச் சிறந்த ஆய்வு வழிகாட்டியாகவும் இளைஞர்களுக்கு நல்ல முன்மாதிரியாகவும் விளங்குபவர் டாக்டர் ச. வே. சுப்பிரமணியன் அவர்கள். புதிய தமிழ் இயக்கத்தின் புதிய களங்களை அமைப்பவர், அயராத உழைப்பு மிக்க பேராசிரியர் டாக்டர் ச. வே. சுப்பிரமணியன் அவர்கள் இந்நூலுக்கு அரிய அணிந்துரை வழங்கியுள்ளார்கள். அவர்களுக்கு எங்கள் நெஞ்சார்ந்த நன்றி.

மணிவாசகர் பதிப்பகத்தின் நல்லாசிரியர் டாக்டர் இரா. மோகன் இந் நூல் வெளிவர உற்றுழி உதவினார்கள். அவர்களுக்கு நன்றி!

57-1

# அணிந்துரை

டாக்டர் ச. வே. சுப்பிரமணியன்
இயக்குநர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை.

மணிவாசகர் பதிப்பகம் தமிழ்த் தொண்டு என்ற நிலையில் மிகப் பல நல்ல காரியங்களைச் செய்து வருகின்றது. அவற்றுள் ஒன்று பல பல்கலைக்கழகங்களில் இருந்து வெளிவருகின்ற ஆய்வேடுகளைப் புதுக்கியும், பெருக்கியும் வளர்த்தும் வெளியிடுவது. பல்கலைக்கழகங்களில் சமர்ப்பிக்கின்ற ஆய்வேடுகள் அனைத்தும் வெளியிடப்பட்டால் ஆய்வுலகிற்கு மிகப் பெரிய உதவியாக அது அமையும். இதுவரை அவ்வாறு அமையவில்லை. தமிழகத்தில் ஏறத்தாழ 250 பேருக்கு மேல் முனைவர் பட்டம் பெற்றவர்கள் இருப்பார்கள். ஆனால் அந்த முனைவர் பட்ட ஆய்வேடுகளில் ஐம்பது வெளிவந்திருக்கலாம். ஏனைய நூல்கள் வெளிவரவேண்டும். அந்த முயற்சியில் மணிவாசகர் பதிப்பகத்தின் எண்ணத்தையும் செயலையும் பாராட்டிப் போற்றி மகிழ்கின்றேன்.

திருமதி டாக்டர் நிர்மலா மோகன் அவர்கள் நல்ல நுணுகிப் பார்க்கின்ற ஆற்றலும், மிகுந்த உழைப்பும் உடைய சிறந்த ஆய்வாளர். குறம், குறவஞ்சி, குளுவ நாடகம் என்ற மூன்றையும் இணைத்து, சிறந்த முறையில் அவர் மதுரைக் காமராசர் பல்கலைக் கழகத்தில் ஆய்வேட்டினைக் கொடுத்து எல்லாத் தேர்வாளர்களும் சிறந்த ஆய்வேடு எனப் பாராட்டிப் பட்டம் பெற்றவர். இதுவரை குறம், குறவஞ்சி, குளுவ நாடகம் பற்றி வந்துள்ள நூல்கள் கட்டுரைகள் அனைத்தையும் நுணுகிப் பார்த்து, தமிழகம் முழுவதிலுமுள்ள சிறந்த நூல் நிலையங்களுக்குச் சென்று தேடித் தொகுத்துள்ள செய்திகளைக் 'குறவஞ்சி இலக்கியம்' என்ற நூலில், ஒவ்வொரு பக்கமும் நமக்குச் சான்றாக எடுத்துத் தருகின்றார். இது போன்ற பல நல்ல நூல்களைத் திருமதி நிர்மலா மோகன் அவர்கள் தர வேண்டும் என்று நான் வேண்டுகிறேன். அவருடைய பெரு முயற்சியைப் பாராட்டிப் போற்றி மகிழ்ந்து வாழ்த்துகிறேன்.

மணிவாசகர் பதிப்பகம் தனக்கென ஒரு தனித்தன்மையை அமைத்துக்கொண்டுள்ளது. அந்தத் தனித்தன்மையில் ஒரு நூலாகக் குறவஞ்சி இலக்கியம் என்ற நூல் வெளிவருகிறது. அந்தத்தனித்தன்மை என்றும் நின்று நிலைக்க என வாழ்த்துகிறேன்.

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | — | அகநானூறு |
| அகத். | — | அகத் திணையியல் |
| அர்த் | — | அர்த்தநாரீசுவரர் குறவஞ்சி |
| அழ. குற. | — | அழகர் குறவஞ்சி |
| அ. செ. கு. நா. | — | அருணாசலம் செட்டியார் குளுவ நாடகம் |
| இ. குறம். | — | இலக்கணையார் குறம் |
| இரிஷி. குற. | — | இரிஷிவிந்தக் குறவஞ்சி |
| உரை. | — | உரையாசிரியர் |
| ஏ. ந. கு. நா. | — | ஏழு நகரத்தார் குழுவ நாடகம் |
| ஐங். | — | ஐங்குறு நூறு |
| ஓதா. குற. | — | ஓதாளர் குறவஞ்சி |
| கண். | — | கண்ணிகள் |
| கள. | — | களவியல் |
| க. கு. நா. | — | கறுப்பர் குளுவை நாடகம் |
| காங். குற. | — | காங்கேயன் குறவஞ்சி |
| கிரு. குற. | — | ஸ்ரீ கிருஷ்ணமாரி குறவஞ்சி |
| கீ. | — | கீர்த்தனை |
| குமா. குற. | — | குமாரலிங்கக் குறவஞ்சி |
| கும். குற. | — | கும்பேசர் குறவஞ்சி நாடகம் |
| குறுந். | — | குறுந்தொகை |
| குறு. குற. | — | குறுக்குத்துறைக் குறவஞ்சி |
| குற். குற. | — | திருக்குற்றாலக் குறவஞ்சி |
| குன். குற. | — | குன்றாக்குடி சிவ சுப்பிரமண்யக் கடவுள் குறவஞ்சி |
| கோ. ந. கு. நா. | — | கோட்டூர் நயினார் குளுவ நாடகம் |
| சர. குற. | — | சரபேந்திர பூபால குறவஞ்சி நாடகம் |
| சித. குற. | — | சிதம்பரக் குறவஞ்சி |
| சிவ. குற. | — | சிவன் மலைக் குறவஞ்சி |
| சி. ம. கு. நா. | — | சின்ன மகிபன் குளுவ நாடகம் |

| | | |
|---|---|---|
| செய். | — | செய்யுளியல் |
| சோலை. குற. | — | சோலைமலைக் குறவஞ்சி |
| ஞா. குறம் | — | ஞானக் குறம் |
| த. குறம் | — | தர்மாம்பாள் குறம் |
| தண்டி. | — | தண்டியலங்காரம் |
| தமி. குற. | — | தமிழரசி குறவஞ்சி |
| தியா. குற. | — | தியாகேசர் குறவஞ்சி |
| திரு. குற. | — | திருமலையாண்டவர் குறவஞ்சி |
| தி. ம. ப. குறம் | — | திருக்குருகூர் மகிழ்மாறன் பவனிக் குறம் |
| து. குறம் | — | துரோபதை குறம் |
| தொகுப். | — | தொகுப்பாசிரியர் |
| தொல். | — | தொல்காப்பியம் |
| நகு. குற. | — | நகுலமலைக் குறவஞ்சி |
| நவ. குற. | — | சிக்கல் நவநீதேசுவர சுவாமி குறவஞ்சி |
| நற். | — | நற்றிணை |
| நூ. | — | நூற்பா |
| ப. | — | பக்கம் |
| பக். | — | பக்கங்கள் |
| பதிப். | — | பதிப்பாசிரியர் |
| பா. | — | பாடல் |
| பன். பாட். | — | பன்னிரு பாட்டியல் |
| பாம். குற. | — | பாம்பண காங்கேயன் குறவஞ்சி |
| புறம். | — | புறநானூறு |
| புற. வெ. மா. | — | புறப்பொருள் வெண்பா மாலை |
| பெத். குற. | — | பெத்லகேம் குறவஞ்சி |
| பெரி. திருமொழி | — | பெரியாழ்வார் திருமொழி |
| பொய். குற. | — | பொய்யாமொழியீசர் குறவஞ்சி |
| பொருள். | — | பொருளதிகாரம் |
| மண். குற. | — | மண்ணிப்படிக்கரை நீலகண்டர் குறவஞ்சி |
| மாத். குற. | — | மாத்தளை முத்துமாரியம்மன் குறவஞ்சி |
| மின். குறம் | — | மின்னொளியாள் குறம் |
| மீ. குறம் | — | மதுரை மீனாட்சியம்மை குறம் |
| மு. நா. | — | முற்காட்டிய நூலிலிருந்து |
| முத். | — | முத்தானந்தர் ஞானக் குறவஞ்சி |
| வித்.குறம் | — | வித்துவான் குறம் |

## உள்ளுறை

# 1. ஆய்வு அறிமுகம்

**ஆய்வின் நோக்கம்**

தமிழ் இலக்கிய ஆய்வுத் துறையில் சிற்றிலக்கிய ஆராய்ச்சி மிகச்சிறிய அளவிலேயே மேற்கொள்ளப்பட்டுள்ளது. கி.பி. 17, 18 ஆம் நூற்றாண்டுகளில் தோன்றி வளர்ந்த குறம், குறவஞ்சி, குளுவ நாடகம் பற்றிய செய்திகள், ஒருசில கட்டுரைகள் அளவிலேயே நமக்குத் தெரிய வருகின்றன.

'மீனாட்சியம்மை குறம்' பற்றி ச. சாம்பசிவன் நிகழ்த்திய இலக்கியப் பேருரை 'சிற்றிலக்கியச் சொற்பொழிவுகள்—மூன்றாவது மாநாட்டில் இடம் பெற்றுள்ளது.[1] பீர்முகம்மது அப்பா இலக்கிய ஆய்வுக்கோவையில் 'பிஸ்மில் குறம்' பற்றி ம.மு. உவைஸ் எழுதிய கட்டுரையும்,[2] 'ஞானக்குறம்' பற்றி அ.ச. ராமையா எழுதிய கட்டுரையும்[3] இடம் பெற்றுள்ளன. நிர்மலா மோகன் எழுதிய 'மீனாட்சியம்மை குறமும் மகிழ் மாறன் பவனிக் குறமும்' என்னும் கட்டுரை பத்தாவது கருத் தரங்கு ஆய்வுக் கோவைத் தொகுதியிலும்,[4] 'தர்மாம்பாள் குறம், வேதாந்தக் குறம், அகண்டவெளிக் குறம்—ஓர் ஆய்வு' என்னும் கட்டுரை பன்னிரண்டாவது கருத்தரங்கு ஆய்வுக் கோவைத் தொகுதியிலும்,[5] 'குறத்தின் இலக்கணம்' என்னும் கட்டுரை 'புலமை' இதழிலும்[6] வெளியாகியுள்ளன.

குறவஞ்சி இலக்கியம் பற்றிய ஆய்வுக் கட்டுரைகளை, குறவஞ்சியின் தோற்றம், வளர்ச்சி, அமைப்பு முதலியன பற்றிக் கூறுவன, தனி ஒரு குறவஞ்சி பற்றிக் கூறுவன என இரண்டு வகையாகப் பிரிக்கலாம்.

ஸ்ரீ சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தங்களைப் பதிப்பித்த உ. வே. சாமிநாதையர், 'நூன்முகம்' என்னும் பகுதியில்

குறவஞ்சி இலக்கியத்தில் தோற்றமும் வளர்ச்சியும் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.[7] மு. அருணாசலம் பிள்ளை 'செந்தமிழ்' 53ஆவது தொகுதியில் 'சிறு பிரபந்தங்கள்' என்னும் தலைப்பில் எழுதியுள்ள கட்டுரையில் குறவஞ்சி இலக்கியத்தின் தோற்றத் தினையும் வளர்ச்சியினையும் எடுத்துக்காட்டியுள்ளார்.[8] மு. அருணாசலம் பொய்யாமொழியீசர் குறவஞ்சியின் பதிப் புரையில் குறவஞ்சியின் பொதுவான அமைப்பை ஆராய்ந் துள்ளார்.[9] ந. வீ. செயராமன் 'சிற்றிலக்கியச் செல்வங்கள்' என்னும் தம் நூலில் 'குறவஞ்சி இலக்கியம்' என்னும் தலைப்பில் ஒரு கட்டுரை எழுதியுள்ளார்.[10] அதில் அவர் குறவஞ்சியின் தோற்றம், வளர்ச்சிநிலை, பொதுவான அமைப்பு ஆகியனபற்றி ஆராய்ந்துள்ளார். தியாகேசர் குறவஞ்சியைப் பதிப்பித்த வே. பிரேமலதா, முன்னுரையில் குறவஞ்சி, நாட்டிய நாடகமாக நடிக்கப்பட்டு வருவதைச் சுட்டி, உட்பொருளைக் கருதுகையில் அஃது ஆற்றுப்படையுடன் ஒப்புநோக்கத்தக்கதாக உள்ளது என்று குறிப்பிட்டுள்ளார்.[11] கு. இன்னாசி எழுதியுள்ள 'குறவஞ்சி வளர்ச்சி' என்னும் கட்டுரை,[12] பொன்னு. ஆ. சத்தியசாட்சி எழுதியுள்ள 'குறவஞ்சி' என்னும் கட்டுரை,[13] டி. ஸ்குவார்ட்ஸ் பிளேக் எழுதியுள்ள 'குறம்' என்னும் கட்டுரை,[14] சி. தனுஷ்கோடியா பிள்ளை எழுதியுள்ள 'குறவஞ்சியின் தோற்றமும் வளர்ச்சி யும்'[15] என்னும் கட்டுரை ஆகிய அனைத்தும் குறவஞ்சி இலக்கியத்தின் தோற்றம், வளர்ச்சி முதலியன பற்றிக் கூறுவன வாகவே அமைந்துள்ளன.

குறத்திப்பாட்டு என்னும் தலைப்பில் அமைந்த கலைக் களஞ்சியக் கட்டுரையும் குறவஞ்சியின் பொது அமைப்பு, தோற்றம், வளர்ச்சி ஆகியன பற்றிக் கூறுவதாக அமைந் துள்ளது.[16] மது. ச. விமலானந்தம் 'தமிழ்ப் பொழில்' திங்கள் இதழில் 'குறமும் குறவஞ்சியும்' என்னும் தலைப்பில் எழுதி யுள்ள தொடர் கட்டுரையில் குறவஞ்சியின் தோற்றம், வளர்ச்சி ஆகியன பற்றியும், இதுவரை தெரியவரும் குறவஞ்சி நாடகங்களைப் பற்றியும், அவற்றின் இலக்கிய நயம் பற்றியும் ஆராய்ந்துள்ளார்.[17] அன்னி. மிருதுலகுமாரி தாமசு 'இளவேனில்' மூன்றாம் தொகுதியில் எழுதியுள்ள 'குறவஞ்சி இலக்கியப் பாவமைப்பு' என்னும் கட்டுரையில் குறவஞ்சியின் யாப்பை ஆராய்ந்துள்ளார்.[18] ஆய்வாளர் 'குறவஞ்சியின் நாடக அமைப்பு' என்னும் தலைப்பில் எழுதிய கட்டுரை பதின் மூன்றாவது கருத்தரங்கு ஆய்வுக் கோவைத் தொகுதியிலும்,[19]

'குறி கூறும் மகளிர்' என்னும் தலைப்பில் எழுதிய கட்டுரை 'செந்தமிழ்ச் செல்வி' இதழிலும்[20] வெளியாகியுள்ளன.

அ. மு. பரமசிவானந்தம் 'மானுடம் வென்றது' என்னும் நூலில் 'குறவஞ்சி' என்னும் தலைப்பில் குறவஞ்சி இலக்கியத்தைப் பற்றிய ஒரு சிறு குறிப்புடன் திருக்குற்றாலக் குறவஞ்சியின் இலக்கிய நயத்தைப் புலப்படுத்தியுள்ளார்.[21] ஏ. வி. சுப்பிரமணிய அய்யர் 'தமிழ் ஆய்வு' என்னும் தம் ஆங்கில நூலில் 'திருக்குற்றாலக் குறவஞ்சியைப்பற்றி ஆராய்ந்துள்ளார்.[22] 'சிற்றிலக்கியச் சொற்பொழிவுகள் மூன்றாவது மாநாடு' என்னும் நூலில் அ. இராசகோட்டியப்பன் 'திருக்குற்றாலக் குறவஞ்சி' என்னும் தலைப்பில் அதன் இலக்கிய நயத்தையும், நாடக அமைப்பையும் புலப்படுத்தியுள்ளார்.[23] அ திருமலை முத்துசுவாமி 'இலக்கியப் புலவர்கள்' என்னும் தம் நூலில் 'குறவஞ்சிப் புலவர்' என்னும் தலைப்பில் எழுதியுள்ள கட்டுரையும் திருக்குற்றாலக் குறவஞ்சியின் நாடக அமைப்பினையே ஆராய்கின்றது.[24] இவை தவிர, 'கும்பேசர் குறவஞ்சி' பற்றி கு. பரமசிவனும்,[25] 'சரபேந்திர பூபால குறவஞ்சி' பற்றி லூ. ஜான் அம்மையாரும்[26] விரிவாக ஆராய்ந்து நிகழ்த்திய சொற்பொழிவுக் கட்டுரைகள் 'சிற்றிலக்கியச் சொற்பொழிவுகள் மூன்றாவது மாநாடு' நூலில் இடம்பெற்றுள்ளன. மொ. அ. துரை அரங்கசாமி 'தென்றலிலே தேன்மொழி' என்னும் தம் நூலில் ஏட்டுச் சுவடியாக விளங்கும் 'துரோபதை குறவஞ்சி' பற்றி விளக்கியுள்ளார்.[27] அலங்கார தேவராஜனின் 'சோலைமலைக் குறவஞ்சி' பற்றிய ஆய்வுக் கட்டுரை 'செந்தமிழ்' இதழில் வெளியாகியுள்ளது.[28] க. பழனிச்சாமிப் புலவர் 'அலகுமலைக் குறவஞ்சி' என்னும் தலைப்பில் எழுதிய கட்டுரையில் அக்குறவஞ்சியின் அமைப்பைப் புலப்படுத்தியுள்ளார்.[29]

குறவஞ்சி இலக்கியத்திற்கு முன்னர்த் தோன்றியது குளுவ நாடகம் என்றும், குறவஞ்சி இலக்கியத்திற்குப் பின்னர்த் தோன்றியது குளுவ நாடகம் என்றும் இருவேறு கருத்துக்களை மட்டுமே சில ஆய்வறிஞர்கள் சுட்டிச் சென்றுள்ளனர். குளுவ நாடகத்தைப் பற்றிய பிற ஆய்வுகள் இல்லை. ஆய்வாளரின் முயற்சியால் ஐந்து குளுவ நாடகங்கள் கிடைத்துள்ளன. 'நகரத்தார் வரலாறும் ஏழு நகரத்தார் குளுவ நாடகமும்' என்னும் தலைப்பில் ஆய்வாளர் எழுதிய கட்டுரை பதினோராவது கருத்தரங்கு ஆய்வுக்கோவைத் தொகுதியில் இடம் பெற்றுள்ளது.[30] ஆய்வாளரின் மற்றொரு

கட்டுரையான 'குளுவ நாடகத்தின் காலம்' என்பது 'புலமை' இதழில் வெளியாகியுள்ளது.[31] குறவஞ்சிக்குப் பின்னர்த் தோன்றியதே குளுவநாடகம் என்னும் கருத்து இக்கட்டுரையில் வலியுறுத்தப்பட்டுள்ளது. 'சின்ன மகிபன் குளுவ நாடக'த்தைப் பதிப்பித்த ஏ. என். பெருமாள், 'சிந்தனை உலையில் சின்ன மகிபன் குளுவ நாடகம்' என்னும் தலைப்பில் குளுவ நாடகத்தின் அமைப்பைப் புலப்படுத்தியுள்ளார்.[32] குறவஞ்சியினின்றும் தோன்றிய குளுவ நாடகம் என்னும் இலக்கிய வகை இன்னும் சரியாக அறிமுகம் ஆகாத நிலையிலேயே உள்ளது.

இதுவரை பல்கலைக்கழக அளவில் குறவஞ்சி பற்றி மேற்கொள்ளப்பட்டுள்ள ஆய்வு முயற்சிகள் மூன்றாகும்: (1) அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தைச் சார்ந்த ஆ. இராமசாமி தம் எம். லிட். பட்டத்திற்காகத் 'திரிகூடராசப்பக் கவிராயர்' என்னும் தலைப்பில் ஆய்வை மேற்கொண்டுள்ளார். அவர்தம் ஆய்வேட்டின் ஓர் இயலாக அமைந்துள்ளது திருக்குற்றாலக் குறவஞ்சி பற்றிய ஆய்வு.[33] குற்றாலக் குறவஞ்சியில் அமைந்த வரிசைப்படியே ஒவ்வொரு பாடலின் பாவமைப்பையும் ஆராய்ந்து, இடையிடையே தம் கருத்துக்களைக் கூறிச் சென்றுள்ளார் அவர். (2) 'திருக்குற்றாலக் குறவஞ்சி' என்பது மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தின் முதுகலை இரண்டாம் ஆண்டுத் தேர்வுக்குரிய ஓர் ஆராய்ச்சிக் கட்டுரையாகும்.[34] (3) ஆய்வாளர், மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் எம். ஃபில் பட்டத்திற்காக, பத்துக் குறவஞ்சிகளின் அடிப்படையில் குறவஞ்சி இலக்கியத்தின் அமைப்பை ஆராய்ந்துள்ளார்.[35] பக்க வரையறை காரணமாகக் குறவஞ்சி இலக்கியம் பற்றிய முழுமையான—விரிவான—ஆய்வாக அஃது அமையவில்லை. குறம், குறவஞ்சி, குளுவ நாடகம் ஆகிய மூன்றும் ஒன்றினின்றும் ஒன்று கிளைத்த உறவுடையவை. எனவே, குறவஞ்சியை முழுமையாகவும் விரிவாகவும் ஆராயும் நோக்கத்துடனும், அதனோடு தொடர்புடைய குறம், குளுவ நாடகம் ஆகியவற்றுடன் ஒப்பிட்டுக் காட்டும் வகையிலும், 'குறம், குறவஞ்சி, குளுவ நாடகம்—ஓர் ஆய்வு' என்னும் தலைப்பு இவ் ஆய்வாளரால் இப்போது மேற்கொள்ளப்பட்டுள்ளது.

### ஆய்வின் எல்லை

இதுகாறும் 18 குற இலக்கியங்கள், 115 குறவஞ்சிகள், 5 குளுவ நாடகங்கள் ஆகியன பற்றி அறிய முடிகின்றது.

ஆயின், அவற்றுள் சிலவே அச்சுப்படியாக வெளிவந்துள்ளன; பல இன்னும் ஓலைச் சுவடியாகவோ, காகிதப் படியாகவோ தான் இருக்கின்றன. மயிலை. சீனி. வேங்கடசாமி 'மறைந்த போன தமிழ் நூல்கள்' என்னும் நூலில்' காரைக் குறவஞ்சி' பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.[36] அதுபோல் பல குறவஞ்சிகளைப் பற்றிய செய்திகள் மறைந்து போய்விட்டன.

ஆய்வாளர் சென்னையில் உள்ள உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம், மறைமலையடிகள் நூல் நிலையம், கீழ்த் திசைச் சுவடிகள் நூல் நிலையம், ஆவணக் காப்பகம், மதுரையில் உள்ள மதுரை காமராசர் பல்கலைக்கழக தெ. பொ. மீ. நூலகம், மாவட்ட மைய நூலகம், தமிழ்ச்சங்க நூலகம், தியாகராசர் கல்லூரி நூலகம், அமெரிக்கன் கல்லூரி நூலகம், இறையியல் கல்லூரி நூலகம், தஞ்சாவூரில் உள்ள சரசுவதி மகால் நூல் நிலையம், திருச்சியில் உள்ள ஜமால் முகம்மது கல்லூரி நூலகம் ஆகிய பல்வேறு நூலகங்களி னின்றும், சில ஆய்வறிஞர்களிடமிருந்தும் அச்சுப் படியாகவோ, காகிதப் படியாகவோ, ஓலைச் சுவடியாகவோ தொகுத்த 14 குறங்கள், 40 குறவஞ்சிகள், 5 குளுவ நாடகங்கள் ஆகிய வற்றின் அடிப்படையில் இவ் ஆய்வு மேற்கொள்ளப்பட் டுள்ளது.

### ஆய்வுத் தரவுகள்

ஆய்வாளர்க்குக் கிடைத்துள்ள குறம், குறவஞ்சி, குளுவ நாடகம் ஆகிய இலக்கியங்கள் முதன்மைத் தரவுகளாகவும் (Primary Sources), அவை பற்றிய ஆய்வுக் கட்டுரைகள், ஆய்வாளர் அறிஞர்கள் பலருடன் ஆய்வு பற்றி மேற்கொண்ட கலந்துரையாடல்கள், ஆய்வாளர்க்குக் கடிதங்கள் வாயிலாகக் கிடைத்த செய்திகள் ஆகியன துணைமைத் தரவுகளாகவும் (Secondary Sources) கொள்ளப்பட்டுள்ளன.

### ஆய்வுப் பகுப்பு

இவ் ஆய்வு ஒன்பது இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவையாவன:

1. ஆய்வு அறிமுகம்
2. சிற்றிலக்கிய அறிமுகம்
3. அமைப்பாய்வு

4. குறவஞ்சியில் பிற சிற்றிலக்கியக் கூறுகள்
5. நாடகத் திறன்
6. நாட்டுப்புறக் கூறுகள்
7. வாழ்வியல் செய்திகள்
8. இலக்கியத் திறன்
9. முடிவுரை

இயல் செய்திகள்

'ஆய்வு அறிமுகம்' என்னும் முதல் இயல் ஆய்வின் நோக்கம், ஆய்வின் எல்லை, ஆய்வுத் தரவுகள், ஆய்வுப் பகுப்பு, இயல் செய்திகள், ஆய்வின் பயன் ஆகிய ஆய்வேட்டின் அமைப்பை விளக்குகின்றது.

'சிற்றிலக்கிய அறிமுகம்' என்னும் இரண்டாவது இயல் ஆய்வாளர்க்குக் கிடைத்துள்ள குறம், குறவஞ்சி, குளுவ நாடகம் ஆகிய சிற்றிலக்கியங்களின் அறிமுகமாகவும், அவற்றின் தோற்றம், வளர்ச்சி முதலியன பற்றிக் கூறுவ தாகவும் அமைந்துள்ளது.

கருப்பொருள் ஒன்றாக இருப்பினும், குறம், குறவஞ்சி, குளுவ நாடகக் கவிஞர்கள் தத்தம் படைப்புக்களின் அமைப்பு முறையில் பல்வேறு மாற்றங்களையும் புதுமைகளையும் புகுத்தியுள்ளனர். மேலும், அன்னோர் தம் கொள்கை விளக்கத்திற்காகவும் அவ்விலக்கிய வகைகளைக் கையாண் டுள்ளனர். இதுவே மூன்றாம் இயல் புலப்படுத்தும் உண்மை யாகும்.

குறவஞ்சி இலக்கியம் தோன்றுவதற்கு முன்னரே, கலம் பகம், குறம், உலா, தூது, தசாங்கம், கேசாதிபாதம், பவனிக் காதல், கோவை, ஆற்றுப்படை போன்ற சிற்றிலக்கியங்கள் தோன்றியுள்ளன; குறவஞ்சி எழுந்த காலத்தில் பள்ளு, நொண்டி நாடகம் ஆகிய சிற்றிலக்கியங்கள் தோன்றியுள்ளன; குறவஞ்சிக்குப் பின்னர்க் குளுவ நாடகம் தோன்றியுள்ளது. குறவஞ்சி இலக்கியம், பிற சிற்றிலக்கியக் கூறுகள் சிலவற்றைத் தன்னுள் கொண்டு விளங்குகின்றது. உறவுடைய இலக்கிய வகைகள், தொடர்புடைய இலக்கிய வகைகள், சாயலுடைய இலக்கிய வகைகள் என்னும் மூன்று உட்பிரிவுகளில் அமைகின்றது நான்காவது இயல்.

கோவில்களில் நடைபெற்ற திருவிழாக்களில் குறவஞ்சி நாடகங்கள் நடிக்கப்பட்டுள்ளன. குறவஞ்சி நாடகம் இரட்டைக் கரு அமைப்பைக் (Double-plot Structure) கொண்டு விளங்கு கின்ற தன்மை, அந்நாடகத்தை ஆறு காட்சிகளாகப் பிரிக்க வேண்டியதன் காரணம், நாடகமாந்தர் பண்புநலன் முதலான செய்திகள் 'நாடகத் திறன்' என்னும் ஐந்தாவது இயலில் ஆராயப்பட்டுள்ளன.

குறம், குறவஞ்சி, குளுவ நாடகம் ஆகிய மூன்று இலக்கியங் களும் பல நாட்டுப்புறக் கூறுகளைக் கொண்டு விளங்குகின்றன. திரும்பத் திரும்ப வரல் (Repetition), இசைப்பாங்கு (Rhythm), சுட்டி ஒருவர்ப் பெயர்கொளப் பெறா மரபு, புராண மரபுச் செய்தி (Myth), பழமொழியாட்சி (Proverb), விடுகதைப் பாங்கு (Riddle), பேச்சு வழக்குச் சொற்கள், யாப்பு வடிவ ஒற்றுமை, நம்பிக்கைகளும் சடங்குகளும் ஆகிய நாட்டுப்புறக் கூறுகள் இவ் இலக்கியங்களில் அமைந்திருக்கும் பாங்கினை எடுத்துக் காட்டுகின்றது 'நாட்டுப்புறக் கூறுகள்' என்னும் ஆறாவது இயல்.

குறவஞ்சியில் தலைமைக் கதைமாந்தராக விளங்குவோர் குறத்தியும் குறவனும் ஆவர். அரசர்களையும், தெய்வங் களையும், வள்ளல்களையும் மட்டுமே சிறப்பித்துப் பாடும் இலக்கியப் போக்கை மாற்றித் தாழ்ந்த இன மக்களான குறவர்களுக்குச் சிறப்பளித்தன குறம், குறவஞ்சி, குளுவ நாடகம் ஆகிய மூன்று இலக்கியங்களும். சாதிப் பிரிவுகள், உணவு, உடை, தொழில், பழக்க வழக்கங்கள், சடங்குமுறைகள் முதலான குறவரின் வாழ்வியல் செய்திகளை ஏழாம் இயல் ஆராய்கின்றது.

'இலக்கியத் திறன்' என்னும் இயல், அக்காலச் சூழல், குறவஞ்சித் தமிழை எப்படியெல்லாம் தாக்கியிருக்கிறது என்பதை எடுத்துக்காட்டுகிறது; குறவஞ்சியின் இலக்கிய நயம் மிக்க பகுதிகளையும் சுட்டிச் செல்கின்றது.

'முடிவுரை' என்னும் இறுதி இயல் இதுகாறும் கூறப்பட்ட கருத்துக்களைத் தொகுத்துத் தருவதாக அமைந்துள்ளது.

அடுத்து, பின்னிணைப்புக்கள் இடம்பெற்றுள்ளன.

முதல் பின்னிணைப்பில் இதுவரை தெரியவந்துள்ள குறம், குறவஞ்சி, குளுவ நாடகங்களின் பெயர்கள் அகர வரிசையில் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

இரண்டாவது பின்னிணைப்பில் ஆய்வாளர்க்குக் கிடைத்துள்ள குறம், குறவஞ்சி, குளுவ நாடகம் ஆகிய நூல்களின் ஆய்வடங்கல் தரப்பட்டுள்ளது.

மூன்றாவது பின்னிணைப்பில் குறம், குறவஞ்சி, குளுவ நாடகம் ஆகியவற்றின் கருத்தலகுகளைக் காணும் முயற்சி மேற்கொள்ளப்பட்டுள்ளது.

நான்காவது பின்னிணைப்பில் இதுகாறும் வெளிவந்துள்ள குறம், குறவஞ்சி, குளுவ நாடகம் பற்றிய ஆய்வுகளின் பட்டியல் தரப்பட்டுள்ளது.

ஐந்தாவது பின்னிணைப்பில் குறவஞ்சி நாடகத்தின் யாப்பு அமைப்பு ஆராயப்பட்டுள்ளது.

ஆறாவது பின்னிணைப்பில் குறவஞ்சி இலக்கியத்தில் காணலாகும் பேச்சு வழக்குச் சொற்களின் பட்டியல் தொகுத்துத் தரப்பட்டுள்ளது.

இறுதியில் துணைநூற்பட்டியல் இடம்பெற்றுள்ளது.

## ஆய்வுப் பயன்

பல சிற்றிலக்கியங்களின் கூறுகள் ஒன்றிணைந்து ஓர் இலக்கிய வகை தோன்றக்கூடும் என்பதனையும், அவ் இலக்கிய வகையினின்று காலப்போக்கில் புதியதோர் இலக்கிய வகை மலரக்கூடும் என்பதனையும் இவ் ஆய்வு தெளிவாக்குகின்றது. முன்னையவற்றின் பரிணாமமாக வளருகின்ற ஓர் இலக்கிய வகை, பின்னர் வருவனவற்றிற்கு அடித்தளமாய் அமையும் என்னும் உண்மை குறவஞ்சி இலக்கியத்திற்குப் பொருந்தி வரக் காண்கிறோம். இவ்வாறு கூர்தலறக் கோட்பாட்டின் (Theory of Evolution) வழிநின்று இலக்கிய வகையை ஆராய்வதற்கு இவ் ஆய்வு ஒரு முன்மாதிரியாகப் பயன்படுவதாகும்.

### குறிப்புக்கள்

1. ச. சாம்பசிவன், மீனாட்சியம்மை குறம்,' சிற்றிலக்கியச் சொற்பொழிவுகள் மூன்றாவது மாநாடு, பக். 293—330.
2. ம. மு. உவைஸ், 'பிஸ்மில் குறம்', பீர் முகம்மது அப்பா இலக்கிய ஆய்வுக்கோவை, பக். 433—437.
3. அ. ச. ராமையா, 'ஞானக்குறம்', மு. நூ., பக். 188—206.

4. நிர்மலா மோகன், 'மீனாட்சியம்மை குறமும் மகிழ் மாறன்பவனிக் குறமும்', பத்தாவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை, தொகுதி 1, பக். 407—412.

5. ..........., 'தர்மாம்பாள் குறம், வேதாந்தக் குறம், அகண்ட வெளிக்குறம்—ஓர் ஆய்வு'. பன்னிரண்டாவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை. தொகுதி—3, பக். 180—185.

6. ........, 'குறத்தின் இலக்கணம்', புலமை, தொகுதி 4, பகுதி 3, 4, சூலை—செப்டம்பர், 1978, பக். 201—226.

7. உ. வே, சாமிநாதையர், 'சரபேந்திர பூபால குறவஞ்சி நாடகம்—நூன்முகம்', ஸ்ரீசிவக்கொழுந்து. தேசிகர் பிரபந்தங்கள், பக். 277—283.

8. மு. அருணாசலம்பிள்ளை, 'சிறு பிரபந்தங்கள்', செந் தமிழ், தொகுதி 53, பகுதி 4—12, பக். 271—280.

9. மு. அருணாசலம் (பதிப்.), பொய்யாமொழியீசர் குறவஞ்சி, முன்னுரை, பக். 1—38.

10. ந. வீ. செயராமன், 'குறவஞ்சி இலக்கியம்', சிற்றிலக் கியச் செல்வங்கள், பக். 167—179.

11. வே. பிரேமலதா (பதிப்.), தியாகேசர் குறவஞ்சி, முன்னுரை, பக். 20—35.

12. சூ இன்னாசி, 'குறவஞ்சி வளர்ச்சி', பத்துக் கட்டுரை. பக். 48—58.

13. பொன்னு. ஆ. சத்தியசாட்சி, 'குறவஞ்சி', ஒன்ப தாவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை, தொகுதி 1, பக். 191—196.

14. ஸ்குவார்ட்ஸ் டி. பிளேக், 'குறம்', சிறு பிரபந்த வகைகள், பக். 1—8.

15. சி. தனுஷ்கோடியாபிள்ளை, 'குறவஞ்சியின் தோற்ற மும், வளர்ச்சியும்', இலக்கியப் பூங்கர, பக். 1—27.

16. 'குறத்திப்பாட்டு', கலைக்களஞ்சியம், தொகுதி நான்கு, பக். 130—132.

17. மது. ச. விமலானந்தம், 'குறமும் குறவஞ்சியும்', தமிழ்ப்பொழில், துணர் 35, மலர் 11, பிப்ரவரி—மார்ச்சு, 1960, பக். 334—342; துணர் 36, மலர் 4—6, ஜூலை—அக்டோபர், 1960, பக். 117—125; 157—160; 183—187.

18. அன்னி. மிருதுல குமாரி தாமசு, 'குறவஞ்சி இலக்கியப் பாவமைப்பு', இளவேனில், தொகுதி 3, பக். 229—237.

19. நிர்மலா மோகன், 'குறவஞ்சியின் நாடக அமைப்பு', பதின்மூன்றாவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை, தொகுதி 3, பக். 242—247.

20. ............ 'குறி கூறும் மகளிர்', செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு 56, பரல் 4, டிசம்பர் 1981, பக். 181—184; சிலம்பு 56, பரல் 5, சனவரி 1982, பக். 213—217.

21. அ. மு. பரமசிவானந்தம், 'குறவஞ்சி', மானுடம் வென்றது, பக். 41—46.

22. A. V. Subramania Aiyar, 'The Thirukkurralakkura-vanji', Tamil Studies-First Series, pp. 40—43

23. அ. இராசகோட்டியப்பன், 'திருக்குற்றாலக் குறவஞ்சி', சிற்றிலக்கியச் சொற்பொழிவுகள் மூன்றாவது மாநாடு, பக். 213—248.

24. அ. திருமலை முத்துசுவாமி, 'குறவஞ்சிப் புலவர்', இலக்கிய மலர்கள், பக். 14—32.

25. கு. பரமசிவன், 'கும்பேசர் குறவஞ்சி,' சிற்றிலக்கியச் சொற்பொழிவுகள் மூன்றாவது மாநாடு, பக், 249—274.

26. ஔ. ஜான் அம்மையார், 'சரபேந்திர பூபால குறவஞ்சி' மு. நூ., பக். 275—292.

27. மொ. அ. துரை அரங்கசாமி, 'துரோபதை குறவஞ்சி' தென்றலிலே தேன்மொழி, பக். 37—46.

28. அலங்கார தேவராஜன், 'சோலைமலைக் குறவஞ்சி,' செந்தமிழ், தொகுதி 44, பகுதி 6, ஏப்ரல், மே, 1947, பக். 271—280.

29. க. பழனிச்சாமிப் புலவர், 'அலகுமலைக் குறவஞ்சி', தவத்திரு சாந்தலிங்க அடிகளார் தமிழ்க்கல்லூரி ஆண்டுமலர், 1971, பக். 50—55.

30. நிர்மலாமோகன்; 'நகரத்தார் வரலாறும், ஏழு நகரத்தார் குளுவ நாடகமும்,' பதினோராவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை, தொகுதி 3, பக். 147—152.

31. ..........., 'குளுவ நாடகத்தின் காலம்', புலமை, தொகுதி 5, பகுதி 2, டிசம்பர் 1979, பக். 167—195.

32. ஏ. என். பெருமாள் (பதிப்.), சின்ன மகிபன் குளுவ நாடகம், பக். 1—49.

33. A. Ramaswami, 'Tirikutaracappak kavirayar', Unpublished M. Litt. Thesis, Annamalai University, 1961, pp. 216—275.

34. திருக்குற்றாலக் குறவஞ்சி ஒரு திறனாய்வு, மதுரைப் பல்கலைக்கழக முதுகலை இரண்டாம் ஆண்டுத் தேர்வுக்கு உரிய ஓர் ஆராய்ச்சிக் கட்டுரை, ஏப்ரல், 1970, பக். 65.

35. ஜி. டி. நிர்மலா, 'குறவஞ்சி இலக்கியம்', மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் எம். ஃபில் பட்டத் திற்காக அளிக்கப்பெற்ற ஆய்வேடு, மே, 1977, பக். 132.

36. மயிலை சீனி. வேங்கடசாமி, மறைந்து போன தமிழ் நூல்கள், ப. 199.

# 2. சிற்றிலக்கிய அறிமுகம்

சிற்றிலக்கிய அறிமுகம் என்னும் இவ் இயல், ஆய்வாளர்க்குக் கிடைத்துள்ள குறம், குறவஞ்சி, குளுவ நாடகம் ஆகியவற்றின் அறிமுகமாகவும், அவற்றின் இலக்கணம், தோற்றம், வளர்ச்சி ஆகியன பற்றிக் கூறுவதாகவும் அமைந்துள்ளது.

குறம்

இதுவரை ஏட்டுச் சுவடியாகவும், காகிதப் பிரதியாகவும், நூல் வடிவமாகவும் தெரியவரும் குற இலக்கியங்கள் பதினெட்டு. அவையாவன :

1. மதுரை மீனாட்சியம்மை குறம்
2. தஞ்சை வெள்ளைப் பிள்ளையார் குறம்[1]
3. திருக்குருகூர் மகிழ்மாறன் பவனிக் குறம்
4. தர்மாம்பாள் குறம்
5. வேதாந்தக் குறம்
6. அகண்டவெளிக் குறம்
7. துரோபதை குறம்
8. மின்னொளியாள் குறம்
9. வித்துவான் குறம்
10. இலக்கணையார் குறம்
11. குறமாது அல்லது சொர்க்கக் குறம் அல்லது மாதுக்குறம்

12. ஞானக் குறம்
13. பிஸ்மில் குறம்
14. திருவரமுனி ஞானக்குறம்
15. அம்பலக் குறம்
16. விதுரர் குறம்
17. வேதபுரீசர் குறம்
18. நெல்லை நாயகர் குறம்

இவற்றுள் முதலில் கூறிய 14 குறங்களே ஆய்வாளர்க்குக் கிடைத்துள்ளன.

மதுரை மீனாட்சியம்மை குறம் குமர குருபர சுவாமிகளால் பாடப்பட்டது ஆகும்.[2] பிள்ளைத்தமிழ் என்றாலே எல்லோர் நினைவிற்கும் வரும் மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழையும், முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ், மதுரைக் கலம்பகம், நீதி நெறி விளக்கம் போன்ற பல புகழ்பெற்ற இலக்கிய வகைகளையும் அளித்த குமரகுருபரர் திருமலை நாயக்கர் காலத்தில் வாழ்ந்தவர். திருமலை நாயக்கர் கி. பி. 1623 முதல் 1659 வரை மதுரை நகரை அரசாண்டவர் ஆவார்.[3] எனவே, இன்று கிடைக்கப்பெறுவனவற்றைக் கொண்டு நோக்கும் பொழுது முதல் குற இலக்கியம் 17ஆம் நூற்றாண்டில் தோன்றியது எனலாம்.

தஞ்சை வெள்ளைப் பிள்ளையார் குறத்தினை இயற்றிய ஆசிரியர் பெயர் தெரியவில்லை.

> "விசையரா கவசுவாமி மேன்மேலும் வாழி
> மெச்சுதள வாய்வேங்க டேந்திரனும் வாழி."
>
> (பா. 31)

என அமையும் நூலின் இறுதிப்பாடல் அடிகளைக் கொண்டு தஞ்சை வெள்ளைப் பிள்ளையார் குறவஞ்சி எனப்படும் இக் குறம் "கி. பி. 1633—1673 வரை தஞ்சையை ஆண்ட விஜய ராகவ நாயக்க மன்னர் காலத்தில் இயற்றப்பட்டதாயிருக் கலாம்"[4] என்று கூறுவர்.

திருக்குருகூர் மகிழ்மாறன் பவனிக் குறத்தை இயற்றிய ஆசிரியர் பெயரும், காலமும் சரியாகத் தெரியவில்லை. எனினும் குருவணக்கப் பகுதியில் 'குருகை வருமாறன் தன்னை

யல்லால் 'மனிதர்தமைப் புகழாத வயித்திய நாதன்—துணைத் தாள் வழுத்து வாமே' (பா. 2) என வரும் அடிகள், ஆசிரியர் வயித்திய நாதர் என்பவருடைய மாணவரி என்பதைப் புலப் படுத்துகின்றன. ''நம்மாழ்வார் பள்ளில் 'விண்டலத்தோர் புகழ்ந்தேத்துந் தமிழ்ப் பேரை வேந்தன் கல்விக் கொண்ட வியற்றிரு மேனி வயித்தியநாதன் பதமேற் கொண்டு வாழ்த்தி' என்றிருப்பதால் மாறனலங்கார உரை செய்தவராகிய திருமேனி இரத்னக்கவிராயர் வம்சத்தினராகிய திருமேனி வயித்தியநாதன் என்பாரின் மாணாக்கர்களுள் ஒருவர்தாம் இதை இயற்றியவர் என நிச்சயிக்கலாம்''[5] என இக்குறத்தை வெளியிட்டுள்ள பெரியர் வெ. நா. ஸ்ரீநிவாஸன் தம் பதிப் புரையில் குறிப்பிடுவது மனங்கொளத்தக்கது. காரிரத்தினக் கவிராயர் பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்[6] என்பத னால், இந்நூல் பதினேழாம் நூற்றாண்டின் இறுதியிலோ அல்லது பதினெட்டாம் நூற்றாண்டின் தொடக்கத்திலோ இயற்றப்பட்டிருக்கலாம்.

தர்மாம்பாள் குறம், வேதாந்தக் குறம், அகண்ட வெளிக் குறம் ஆகிய மூன்று குறங்களும் 'குறவஞ்சி' என்னும் தலைப்பில் ஒருங்கே தொகுக்கப் பெற்று ஒரு சிறு நூலாக விளங்குகின்றன. வி. எஸ். வாலாம்பாள் என்பவரால் இயற்றப்பெற்ற இந்நூல் கி.பி. 1915ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டுள்ளது. இந்நூலின் மூன்றாம் பதிப்பு 1949ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. எனவே, இம்மூன்று குறங்களும் இருபதாம் நூற்றாண்டைச் சார்ந்தவை என்பது தெளிவு.

துரோபதை குறம், மின்னொளியாள் குறம், வித்துவான் குறம் ஆகிய மூன்றும் புகழேந்திப் புலவர் என்பவரால் பாடப் பெற்றுள்ளன. இவை மூன்றும் நாட்டுப்புறக் கதைப் பாடல் களாக விளங்குகின்றன. புகழேந்திப் புலவர் என்பவரின் பெயரால் அல்லியரசாணி மாலை, ஏணியேற்றம், பஞ்ச பாண்டவர் வனவாசம் போன்ற பல நாட்டுப்புறக் கதைப் பாடல்கள் வெளிவந்துள்ளன. பதினெட்டு, பத்தொன்பதாம் நூற்றாண்டுகளில் தெருக்கூத்துக்கள் பெருகியுள்ளன. இக்குறங் களும் அக்காலத்தைச் சார்ந்தவையாக இருக்கலாம். குறவஞ்சி இலக்கியம் தோன்றிய பின்னரே இம்மூன்று குறங்களும் எழுந்தன என்று கொள்வது பொருத்தமுடையதாகும்.

இலக்கணையார் குறத்தினை இயற்றிய ஆசிரியர் பெயர் தெரியவில்லை. கி.பி. 1886 ஆம் ஆண்டில் இந்நூல் பதிப்பிக்கப்

பட்டுள்ளது. மின்னொளியாள் குறத்தினைப் போன்ற கதையமைப்பினைக் கொண்டு அமைந்துள்ளது இக்குறம்.

சொர்க்கக் குறம் என்றும், மாதுக்குறம் என்றும் வழங்கும் 'குற மாது' என்னும் நூல் மீறான் கனியண்ணாவி என்னும் புலவரால் இயற்றப்பட்டது ஆகும்.

தக்கலை பீர் முகம்மது அப்பா, ஞானக்குறம், பிஸ்மில் குறம் ஆகிய இரண்டு குறங்களைப் படைத்துள்ளார். பீர்முகம்மது அப்பா திருநெல்வேலி மாவட்டத்தில் தென்காசியில் பிறந்தவர். இவர் சதக்கத்துல்லா அப்பா அவர்களின் காலத்தவர் என்பது,

" மனமது மகிழ அறிவையு மறிந்து
வழுத்தினார் சதக்கத் துல்லாவே." (பா. 2)

என வரும் பிஸ்மில் குறம் பாடல் அடிகளால் விளங்கும். "ஞானி சதக்கத்துல்லா இந்தியாவை ஆட்சிபுரிந்த மொகலாயப் பேரரசர் அவுரங்கசிப்பின் காலத்தவர். அவுரங்கசிப் கி. பி. 1658 முதல் 1707 வரை ஆண்டவர்."[7] எனவே, பீர்முகம்மது அப்பா கி.பி. 17ஆம் நூற்றாண்டின் இறுதியிலும், பதினெட்டாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் வாழ்ந்தவர் என்று துணியலாம்

திருவரமுனி ஞானக்குறம் சென்னைக் கீழ்த்திசைச் சுவடிகள் நூல்நிலையத்தில் காகிதப்பிரதி (Paper manuscript) நிலையில் கிடைக்கப் பெற்றுள்ளது. இந்நூலின் ஆசிரியர், காலம் முதலியன அறிய இயலவில்லை.

திருக்குற்றாலக் குறவஞ்சி இலக்கிய நயம் செறிந்து விளங்குவதனால், மக்களிடையே பெரிதும் செல்வாக்கும் வரவேற்பும் பெற்றது. எனவே, குறவஞ்சி என்றாலே, எல்லோர் நினைவிலும் எழும் நூலாக அஃது அமைந்தது. மேலும் முதலில் தோன்றிய குறவஞ்சி நூலாகவும் அது கருதப்பட்டு வந்தது. ஆயின் குற்றாலக் குறவஞ்சி தோன்றுவதற்கு முன்னரே, கும்பேசர் குறவஞ்சி, தியாகேசர் குறவஞ்சி, சரபேந்திர பூபாலக் குறவஞ்சி ஆகியன தோன்றியுள்ளன.

கும்பேசர் குறவஞ்சி, 'இரவலர் தருவான்றஞ்சை யேகோசிராசன்' (பா. 6) எனக் குறிப்பிடுகின்றது. இதனால் இந்நூலாசிரியரான பாபநாச முதலியார், தஞ்சையை ஆண்ட மராட்டிய மன்னன் ஏகோஜி காலத்தவர் என்பது விளங்கும். "தஞ்சையைக் கடைசியாக ஆட்சி புரிந்த செங்கமல தாசனைத் துரத்தி

நாட்டைக் கைப்பற்றி ஆண்ட மராத்திய மன்னன் ஏகோஜி (கி.பி. 1676—1683)"[8] என 'மதுரை நாயக்கர் வரலாறு' இம் மன்னனைக் குறிப்பிடுகின்றது. உ. வே. சாமிநாதையரும், "பாபநாச முதலியார் கும்பகோணத்தில் பதினேழாம் நூற்றாண்டில் வசித்தவர்"[9] என்று 'நினைவு மஞ்சரி'யில் குறிப்பிட்டுள்ளதும் இதனை மெய்ப்பிப்பதாக அமைகின்றது.

ஏகோஜிக்குப் பின்னர்த் தஞ்சையை ஆண்டவர் இரண்டாம் சஹாஜி (கி.பி.1684—1712) என்று வரலாறு கூறுகிறது. அவர் மீது முத்துக் கவிராயர் என்னும் புலவர் 'சகசி மன்னன்மீது குறவஞ்சி' என்னும் ஒரு குறவஞ்சியைப் படைத்துள்ளார். அது யக்ஷகானம் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.[10] யக்ஷகானம் என்பதற்கேற்ப, தெருக்கூத்தின் அமைப்பிலேயே இக்குறவஞ்சி அமைந்துள்ளது. இதில் வரும் சூத்திரதாரன் என்னும் பாத்திரப் படைப்பு பிற குறவஞ்சிகளினின்றும் மாறுபட்டு, கதை முழுவதும் நகைச்சுவை விளைவிப்பதாய் அமைந்துள்ளது.

தியாகேசர் குறவஞ்சியும், 'சகசிராசேந்திரன் போற்றும்' (பா. 3), ராஜராஜர் பணியேக ராஜனுதவிய சகஜி' (பா. 15: 3), 'சிலைமதவேள் சகஜிராஜன் தினம்பணியும் வாசலிது' (பா. 25 : 1), 'மண்டலாதிபதி சகஜிராஜேந்திரன் வாழுஞ் சோழதேச வளம்' (பா. 31 : 4) என்று சகஜி மன்னரைக் குறிப்பிடுகின்றது. எனவே, அவர் காலத்து வாழ்ந்த ஒரு புலவரால் இக்குறவஞ்சி பாடப்பட்டிருத்தல் வேண்டும். முத்துக்கவிராயர் இயற்றிய குறவஞ்சியும் தியாகேசர் குறவஞ்சியும் அமைப்பிலும், மொழிநடையிலும் பெரிதும் வேறுபடுகின்றன. "தியாகேசர் குறவஞ்சியில் கையாண்டுள்ள தமிழின் நடை முத்துக்கவிராயரின் பாணியைப் போலில்லாமல், எளிமையாகவும், பாமர மக்களுக்குப் புரியும் வகையிலும் அமைந்துள்ளது. தியாகேசர் குறவஞ்சியின் ஆசிரியரை நிர்ணயிப்பதற்கான போதிய ஆதாரங்கள் குறவஞ்சிப்பாடல்களிலோ, சமகாலத்திய இதர நூல்களிலோ கிடைக்கப்பெறாமையால், இக்குறவஞ்சியை இயற்றிய புலவர் இரண்டாம் சாஹஜி மன்னர் காலத்தவரென்றும், திருவாரூர் தியாகேசர் மீதில் அளவு கடந்த பக்தி கொண்டவரென்றும் தெரியவருகிறது"[11] என்று இக்குறவஞ்சியைப் பதிப்பித்த ஆசிரியர் கூறியுள்ளார். ஆதலின் தியாகேசர் குறவஞ்சி இரண்டாம் சஹாஜி மன்னர் காலத்து (கி.பி. 1684—1712) எழுந்த ஓர் இலக்கியம் என்று கொள்வதே பொருத்தமுடையதாகும்.

திருக்குற்றாலக் குறவஞ்சி, திரிகூடராசப்பக் கவிராயரால் இயற்றப்பட்ட நூல் என்றும், இக்குறவஞ்சிக்காக ஆசிரியருக்கு மதுரையை ஆண்ட விஜயரங்க சொக்கநாத நாயக்கரால் (கி.பி. 1706—1732), 'குறவஞ்சிமேடு' என்று இன்று வழங்கப் படும் பகுதி இறையிலியாகக் கொடுக்கப்பட்டது என்றும் வரலாறு கூறுகிறது. திரிகூடராசப்பக் கவிராயர் கி.பி. 1715-ல் இந்நிலத்தைப் பெற்றார் என்று சாசனம் கூறுகிறது.[12] எனவே, இக்குறவஞ்சி இவ்வாண்டை யொட்டி எழுந்தது என முடிவு செய்யலாம்.

ஒதாளர் குறவஞ்சியைப் பதிப்பித்த ஆசிரியர்,

> " வல்லமைப் பெரிய பெருமாள் வசீரன்மேல்
> சஞ்சீவி கலியுக சகாப்தம் நாலாயிரத்
> தெஞ்சுறும் எண்ணூற் றைம்பத்து நான்கிலிக்
> குறவஞ்சி பாடி அரங்கேற்றி வைத்தான்
> பிரமண கவிஞன் பெருசின்னத் தம்பியே." (ப. 124)

என வரும் பாடலடிகளைக் கொண்டு "இப்பொழுது கலியுக சகாப்தம் 5071. இந்த நூல் அரங்கேறிய காலம் 4854 என்பதால் இந்த நூல் இன்றைக்கு 217 ஆண்டுகளுக்குமுன் அரங்கேறியதாதல் பெறப்படும்"[13] என்று கூறுகின்றார். எனவே, இக்குறவஞ்சி கி. பி. 1752 ஆம் ஆண்டில் இயற்றப் பட்டிருக்கலாம். இதனை இயற்றியவர் சின்னத்தம்பி என்னும் புலவராவார்.

சரபேந்திர பூபால குறவஞ்சியின் பாட்டுடைத் தலைவர் சரபோஜி மன்னர் ஆவார். அவர் கி.பி. 1798—1832 வரை தஞ்சையை ஆண்ட மராட்டிய மன்னர்.[14] கொட்டையூர் ஸ்ரீசிவக்கொழுந்து தேசிகர் இக்குறவஞ்சியை இயற்றியுள்ளார்.

மண்ணிப்படிக்கரை நீலகண்டர் குறவஞ்சி, சரபோஜி மன்னரின் தந்தை துளசாஜியை,

> " தேசுயர் பிரதாப சிங்கமா ராசன்
> உளமகிழ் தனயன் உபயகு லோத்தமன்
> துளசிரா சேந்திரன்." (பா. 10:112-114)

எனப் பல இடங்களில் (பா. 25, 33, 36) குறிப்பிடுகின்றது. துளசாஜி மன்னர் கி. பி. 1786-ல் இயற்கை எய்தினார் என வரலாறு கூறுகின்றது. எனவே, இக்குறவஞ்சி கி.பி. 1786 ஆம்





ஆண்டுக்கு முன்னர் எழுந்ததாக இருக்கலாம். இந்நூலை இயற்றியவர் வெ. சாமிநாதையன் என்பவர். இதனை,

> " புகழ்பெறும் ஆதி புரிதனில் விளங்கும்
> மிகுதமிழ் அன்பினன் வெங்கடே சனருள்
> நலமிகு சாமிநா தையன் மகிழ்வாய்
> இலகுசொற் குறவஞ்சி என்னுநா டகத்தைப்
> பரிவுடன் உரைத்தேன் பைந்தமிழ் வாணர்
> பெரிதென உகந்தென் பிழைபொறுத் தருள்வீர்."
>
> (பா. 10:288-293)

என வரும் பகுதியால் உணரலாம்.

சரபோஜி மன்னருக்குப் பின்னர்த் தஞ்சையை ஆண்டவர் அவருடைய புதல்வர் சிவாஜி ஆவார். அவரைப் பற்றிய குறிப்பு சிக்கல் நவநீதேசுவர சுவாமி குறவஞ்சியில் இடம் பெற்றுள்ளது (பா. 11). "இந்நூல் எழுதி முடிக்கப்பெற்ற காலம் இதன் இறுதி ஏட்டில் 'பரிதாபி வரு. தைமீ 2-ந் தேதி புதவாரம் எழுதி முடிந்தது' என்றுள்ள குறிப்பால் அது கி.பி. 1852 ஆம் ஆண்டு என்று தெளிவாகின்றது. மற்றும் 'திருவாரூர் ஸ்கூல் மாஸ்டர் சொக்கலிங்கம்பிள்ளை' என்றுள்ள குறிப்பால் நூலாசிரியர் பெயரையும் அறியலாம்."[13] தஞ்சையை ஆண்டு வந்த மராத்திய மன்னர்கள் தமிழ்ப் புலவர்களுக்குப் பெரும் ஆதரவு நல்கியமையை அவர்கள்மீது பாடப்பெற்ற குறவஞ்சிப் பிரபந்தங்கள் உணர்த்துகின்றன. ஏகோஜி, சஹாஜி, துளசாஜி, சரபோஜி, சிவாஜி எனத் தலைமுறை தலைமுறையாகக் குறவஞ்சி நூல்களால் பாடப் பெறும் சிறப்புப் பெற்றுள்ளனர் மராத்திய மன்னர்கள்.

கவிகுஞ்சர பாரதி கி.பி. 1810 முதல் 1890 வரை வாழ்ந்தவர்; இசைப் புலமை மிக்கவர். அவர் அழகர் குறவஞ்சி எனத் திருமாலைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு பாடியுள்ளார். திருமாலைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு பாடிய மற்றொருவர் கிருஷ்ண பாரதி எனப்படும் ஐம்புலிபுத்தூர் கிருஷ்ணய்யங்கார் ஆவார். அவர், குற்றாலக் குறவஞ்சிக்கு எதிராகப் பாடி, திருமாலின் பெருமைகளை நிலைநிறுத்த வேண்டும் என்னும் நோக்கத்துடன் பாடியுள்ளார். எனவே, அவர் பாடிய சோலைமலைக் குறவஞ்சியில் சைவத் தாக்குதல் மிகுதியாக உள்ளது.

குற்றாலக் குறவஞ்சிக்கு எதிராகப்பாடப்பெற்ற மற்றொரு குறவஞ்சி, வேதநாயக சாஸ்திரியார் பாடிய பெத்லகேம் குறவஞ்சி ஆகும். இப்புலவரும் தஞ்சாவூரில் வாழ்ந்தவர் என்பது குறிப்பிடத்தக்கது.

சிவன்மலைக் குறவஞ்சி, கி. பி. 1767-ல் பிறந்து 1859 வரை வாழ்ந்த இலக்குமணபாரதி என்பவரால் பாடப் பெற்றுள்ளது.

இலங்கைப் புலவர்கள் பாடியனவாகப் பல குறவஞ்சிகள் அறியப்படுகின்றன.[16] அவையாவன:

| | | |
|---|---|---|
| அனலைத்திவு ஐயனார் குறவஞ்சி | — | முத்துக்குமாரப் புலவர் |
| கச்சால் குறவஞ்சி | — | மாம்பாண முதலியார் |
| கதிரைமலைக் குறவஞ்சி | — | சதுமலைப் புலவர் விநாயகர் |
| காரைக் குறவஞ்சி | — | சஞ்சித சுப்பையர் |
| சந்திரசேகரக் குறவஞ்சி | — | — |
| தத்துவக் குறவஞ்சி | — | முருகேச பண்டிதர் |
| வண்ணக் குறவஞ்சி | — | விசுவநாத சாத்திரியார் |
| நல்லைநகர்க் குறவஞ்சி | — | கந்தப் பிள்ளை |
| மல்வில் குறவஞ்சி வள்ளிக் குறவஞ்சி | — | வெற்றிவேலுப் புலவர் |
| முத்துக்கிருட்டினர் குறவஞ்சி | — | இன்பகனி |
| வண்ணை வைத்திலிங்கர் குறவஞ்சி | — | கணபதி ஐயர் |

இவற்றுள் 'காரைக் குறவஞ்சி' பற்றிய குறிப்பு 'மறைந்து போன தமிழ் நூல்கள்' என்னும் நூலில் காணப்படுகின்றது.[17] விசுவநாத சாத்திரியார் பாடிய நகுலமலைக் குறவஞ்சியும், முருகேச பண்டிதரின் தத்துவக் குறவஞ்சியும் ஆய்வாளர்க்குக் கிடைத்துள்ளன. இரு புலவர்களும் கி.பி. 19 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்கள்.[18] நவாலியூர் சு. சொக்கநாதன் என்னும் இலங்கைப் புலவர் 1964 ஆம் ஆண்டில் மாத்தளை முத்து மாரியம்மன் குறவஞ்சி என ஒரு நூல் இயற்றியுள்ளார். அந் நூலும் ஈண்டு ஆய்வுக்கு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

பாலபாரதி முத்துசாமி ஐயர் பாடிய பாம்பண காங்கேயன் குறவஞ்சி, குமர குருபர தேசிகர் பாடிய ஞானக் குறவஞ்சி, தத்துவலிங்கன் பாடிய பொய்யாமொழியீசர் குறவஞ்சி ஆகியனவும், ஆசிரியர் பெயர் தெரியாத முத்தானந்தர் ஞானக் குறவஞ்சி, வள்ளியம்மன் ஆயலோட்டும் குறவஞ்சி ஆகியனவும் கி.பி. 18, 19 ஆம் நூற்றாண்டுகளில் தோன்றியுள்ளன.

கி.பி. 20 ஆம் நூற்றாண்டிலும் சில குறவஞ்சிகள் தோன்றி யுள்ளன. அ. வரத நஞ்சைய பிள்ளை என்பவர் 1951 ஆம் ஆண்டில் தமிழரசி குறவஞ்சியைப் பாடியுள்ளார். தஞ்சை. துரைவாணன் எழுதிய கூட்டுறவுக் குறவஞ்சி 1968 ஆம் ஆண்டிலும், கருமாரி இராமதாஸர் பாடிய ஸ்ரீகிருஷ்ணமாரி குறவஞ்சி 1971 ஆம் ஆண்டிலும், வித்துவான் ஆறுமுகம் பாடிய குறுக்குத்துறைக் குறவஞ்சி 1972 ஆம் ஆண்டிலும் வெளிவந்துள்ளன. சுதந்திர இயக்கத்தை அடிப்படையாகக் கொண்டு எழுந்த பாரத ஸ்வதந்திர குறவஞ்சியும், கே. என். தண்டாயுதபாணிபிள்ளை பாடிய சிற்றம்பலக் குறவஞ்சியும், கச்சிப்பிள்ளையம்மாள் பாடிய மெஞ்ஞானக் குறவஞ்சியும் இருபதாம் நூற்றாண்டில் எழுந்துள்ள மற்றும் சில குறவஞ்சிகள் ஆகும். இவையனைத்தும் இவ் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.

இவை தவிர, சென்னைக் கீழ்த்திசைச் சுவடிகள் நூல் நிலையத்தினரால் வெளியிடப் பெறும் இதழில் தொடர்ந்து வெளிவந்த விராலிமலைக் குறவஞ்சி, இரிஷிவிந்தக் குறவஞ்சி ஆகியனவும் அந்நூலகத்தில் காகிதப் பிரதிநிலையில் இருக்கும் திருப்பரங்குன்றக் குறவஞ்சியும், உ. வே. சாமிநாதையர் நூல் நிலையத்தில் காகிதப் பிரதி நிலையில் இருக்கும் அர்த்த நாரீசுவரர் குறவஞ்சி, குமாரலிங்கக் குறவஞ்சி ஆகியனவும், திருச்செந்தூரினின்றும் சுவடியாக ஆய்வாளர்க்குக் கிடைத் துள்ள செந்திலாண்டவர் குறவஞ்சியும், திருச்சியினின்றும் ஆய்வாளர்க்குக் கிடைத்துள்ள மந்திரி சுப்பிரமணியமுதலியார் குறவஞ்சி ஆகியனவும் இங்கு ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.

ஓலைச்சுவடியாக இருக்கும் மற்றும் இரு குறவஞ்சிகள்; (1) முத்து வடுகநாதன் குறவஞ்சி, (2) கௌள குறவஞ்சி ஆகியன.

வருணாபுரிக் குறவஞ்சி தமிழ் இசைச் சங்கத்தில் நாட்டிய நாடகமாக அரங்கேற்றப்பட்டுள்ளது.

குளுவ நாடகம்

குறவஞ்சிக்குப் பின்னர்த் தோன்றிய ஒரு சிற்றிலக்கியம் குளுவ நாடகம் ஆகும். குளுவ நாடகத்தின் தோற்றம் பற்றி இருவகையான கருத்துக்கள் ஆய்வுலகில் நிலவுகின்றன. "குளுவ நாடகத்தின் நாடக அமைப்பும், குறத்திப் பாட்டின் இலக்கியச் சாயலும் சேர்ந்ததே குறவஞ்சி என்னும் சிற்றிலக்கியம் உண்டாகிறது"[19] என்று கூறுகிறது கலைக் களஞ்சியம். குறவஞ்சி இலக்கியம் தோன்றுவதற்கு முன்னரே குளுவ நாடகம் தோன்றிவிட்டது என்னும் கருத்தினைத் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார், 'தமிழ் இலக்கிய வரலாறு' என்னும் தம் ஆங்கில நூலில் குறிப்பிடுகின்றார்.[20] வே. பிரேமலதாவும் 'குறவஞ்சி நாடகம்' என்னும் தம் ஆங்கிலக் கட்டுரையில் இத்தகைய கருத்தினையே வெளி யிட்டுள்ளார்.[21]

மற்றொரு கருத்து இதற்கு மாறுபட்டதாகும். "குளுவ நாடகம் என்பது மிகவும் பிற்காலத்தில் குறவஞ்சி இலக்கியங் களுக்குப் பின்னர் எழுந்த அரிய நாடக இலக்கியம். ஆதலால் குளுவ நாடகத்தின் அமைப்பு குறவஞ்சி இலக்கியத்தில் இடம் பெற்றிருக்க முடியாது என்று கூறலாம். ஆனால் குறவஞ்சி இலக்கிய வளர்ச்சிக்குப் பின்னர், அதனின்றும் கிளைத்த சிறு முழுமையான நாடக இலக்கியமே குளுவ நாடகம் என்று கொள்ளலாம்"[22] என்பர் ந. வீ. செயராமன். மு. அருணாசலம் 'தமிழ் இலக்கிய வரலாறு—ஓர் அறிமுகம்' என்னும் தம் ஆங்கில நூலில் "குளுவ நாடகம் என்பது குறவஞ்சியின் ஒரே ஒரு காட்சியை மட்டும் சுருங்கிய அளவிலே சித்திரிப்பது"[23] என்று கூறுகிறார். மேலும் அவர், சிதம்பரக் குறவஞ்சியின் முகவுரையில், "குறம், குளுவ நாடகம் என்ற பிரபந்தங்கள் குறவஞ்சியில் காணும் உறுப்புக்களிற் சில குறைந்து வருவன வாகும்"[24] என்று கூறுவதும் முன்னைய கருத்திற்கு— குறவஞ்சிக்குப் பின்னர்க் குளுவ நாடகம் தோன்றியிருக்க வேண்டும் என்னும் கருத்திற்கு—அரண் செய்வதாக அமை கின்றது.

இன்று கிடைக்கப்பெறும் குளுவ நாடகங்கள் ஐந்து. அவையாவன:

1. சின்னமகிபன் குளுவ நாடகம்
2. அருணாசலம் செட்டியார் குளுவ நாடகம்
3. கோட்டூர் நயினார் குளுவ நாடகம்

4. ஏழு நகரத்தார் குழுவ நாடகம்

5. கறுப்பர் குளுவை நாடகம்

இவை தவிர, 'குற்றாலக் குளுவ நாடகம்' என ஒரு சுவடி இருப்பதாகத் தெரியவருகிறது; "குற்றாலக் குளுவ நாடக ஏட்டுச் சுவடியில் முதல் 41 ஏடுகளும், இறுதியில் சில ஏடு களும் கிடைக்கப்பெறவில்லை. இதன் ஆசிரியர் பெயர் எதுவும் தெரியவில்லை"[25] என்னும் குறிப்பு 'சுவடிகளின் விளக்கம்' என்னும் நூலில் காணப்படுகின்றது. அச் சுவடி 'கண்ணி கொண்டு வாடா குளுவா' என்னும் பாடலுடன் தொடங்குகிறது. அச்சுவடியினைக் குற்றாலக் குறவஞ்சி நூலுடன் ஒப்பிட்டபொழுது அது, 'கண்ணி கொண்டு வாடா குளுவா' என்று குறவஞ்சியில் வரும் பாடலிலிருந்து (பா. 95) இறுதி வரை ஒரே மாதிரியாக அமைந்திருந்தது. எனவே, இது குற்றாலக் குறவஞ்சியின் சிதைந்த சுவடியேயன்றி, குற்றாலக் குளுவ நாடகம் அன்று என்பதை உணரமுடிகின்றது.

காகிதப் பிரதி நிலையில் இருந்த சின்னமகிபன் குளுவ நாடகம் அண்மையில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தாரால் பதிப்பிக்கப்பட்டுள்ளது. இக்குளுவ நாடகம் மிதுலைப்பட்டியில் சிற்றரசனாக விளங்கிய சின்னனேந்திரன் என்னும் சின்ன மகிபனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டுள்ளது. 'மருது பாண்டிய மால் மகிழும் பிரதாபன்' (பா. 10), 'வள்ளல் நற்குணமுடையான் வடுக நாதேந்திரன் உள்ளமே மகிழு முல்லாச யோகன்' (பா. 10) என வரும் அடிகள் சின்னமகிபன், சிவகங்கையை ஆண்ட மருதுபாண்டியர், மறவர் சீமையை ஆண்ட வடுகநாதர் ஆகியோர் காலத்தவனாக இருக்கலாம் என்பதை உணர்த்துகின்றன. மருதுபாண்டியர் காலம் கி.பி. 1780 முதல் 1801 வரை என்பது வரலாற்றுண்மை. எனவே, சின்னமகிபன் குளுவ நாடகம், பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியில் எழுந்ததாக இருக்கலாம் என்றும், இதனை இயற்றிய ஆசிரியர் பெயர் முத்தாண்டியாக இருக்கலாம் என்றும் இக்குளுவ நாடகத்தைப் பதிப்பித்த ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.[26]

'அருணாசலம் செட்டியார் பேரில் இராமநாதபுரம் சமஸ்தான வித்துவான் ஸ்ரீமத் சரவணப் பெருமாள் கவிராயரால் பாடப்பட்ட குளுவ நாடகம்' 1914-ல் அருணாசலம் செட்டியார் அவர்களுடைய பேரன் அள.அரு. ராம. அருணாசலம் செட்டியாரால் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

சரவணப் பெருமாள் கவிராயர் 19ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவர் என்று கூறுகிறது தமிழ் இலக்கிய வரலாறு.[27] பாட்டுடைத் தலைவரின் பேரன் இருபதாம் நூற்றாண்டுத் தொடக்கத்தில் வாழ்ந்துள்ளார். எனவே, அவருடைய தாத்தாவாகிய பாட்டுடைத் தலைவரின் காலம் பத்தொன்ப தாம் நூற்றாண்டின் இறுதியாக இருக்கலாம். அருணாசலம் செட்டியார் தேவகோட்டைக் குறுநில மன்னராக விளங்கி யதையும், காளையார் கோயில் மடம் கட்டுவித்தமையையும் 'சோமலெ', 'செட்டிநாடும் தமிழும்' என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார்.[28]

கோட்டூர் குளுவ நாடகத்தின் சரியான காலத்தை அறிய முடியவில்லை. இந்நூலைப் பாடிய புலவரின் பெயர் 'கோட்டூர் ஆண்டியப்பப் புலவன் மகன் வெள்ளையப் புலவன்' எனப் பதிப்புரையில் குறிக்கப்பட்டுள்ளது. இக்குளுவ நாடகம் அமைப்பில் சின்னமகிபன் குளுவ நாடகத்தைப் பெரிதும் ஒத்துள்ளது. அருணாசலம் செட்டியார் குளுவ நாடகத்தில், பல்வேறு குறவஞ்சிகளில் காணப்படும் நிகழ்ச்சிகளும் உவமை களும் மிகுதியாகக் காணப்படுகின்றன. எனவே, கோட்டூர் குளுவ நாடகம் சின்னமகிபன் குளுவ நாடகத்திற்குப் பின்னரும், அருணாசலம் செட்டியார் குளுவ நாடகத்திற்கு முன்னரும் தோன்றியிருக்கலாம்.

கறுப்பர் குளுவை நாடகத்தைப் பாடியவர் பாடுவார் முத்தப்பச் செட்டியார் என்னும் புலவர் ஆவார். "இப்புலவர் பெருமான் திருமதுரைச் சிவல்பட்டி என்னும் கீழச்சிவற் பட்டியில் நகரத்தார் மரபில் கி.பி. 1810ஆம் ஆண்டில் தோன்றி யவர்"[29] என்று 'சோமலெ', 'செட்டிநாடும் தமிழும்' என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார். எனவே, இக்குளுவ நாடகம் 19ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது என்பது உள்ளங்கை நெல்லிக்கனி.

ஏழு நகரத்தார் குழுவ நாடகம் கி.பி. 1922-ல் திருஞான சம்பந்தக் கவிராயரால் பதிப்பிக்கப்பட்டுள்ளது. இக்குளுவ நாடகம் முழுமையும் கிடைக்கப் பெறவில்லை; இதன் ஆசிரியர் பெயரும் தெரியவில்லை.

குளுவ நாடகங்கள் அனைத்தும் கி.பி. பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியிலும், கி.பி. பத்தொன்பதாம் நூற் றாண்டிலும் தோன்றியுள்ளன. ஆயின், குறவஞ்சி இலக்கியமோ பதினேழாம் நூற்றாண்டிலேயே தோன்றிவிட்டது. குறவ னுக்குச் சிறப்பளிக்க வேண்டும் என்னும் எண்ணத்தில்

குளுவனைத் தலைமை மாந்தனாகக் கொண்டு, குறவஞ்சியைச் பின்பற்றி அமைந்த நாடக இலக்கியமே குளுவ நாடகம் என்று கொள்வதே பொருத்தமுடையதாகும்.

இதுவரை கிடைத்துள்ள ஐந்து குளுவ நாடகங்களும் செட்டிநாட்டுப் பின்னணியிலேயே தோன்றியுள்ளமை குறிப் பிடத்தக்கதாகும். மதுரையிலிருந்து தேவகோட்டைக்குச் செல்லும் வழியில் திருப்பத்தூருக்கு அருகில் கிருஷ்ணாபுரம் என்னும் ஊரில் பறவைகள் சரணாலயம் ஒன்று அமைந்துள்ளது. அங்கு நூற்றுக்கணக்கான பறவைகள் மாலை வேளையில் வந்து தங்குவதை இன்றும் காணலாம். எனவே, இப்பகுதியைச் சுற்றிப்பறவை வேட்டையை மையமாகக் கொண்டு எழுந்த குளுவ நாடகங்கள் தோன்றியிருக்கக்கூடும்.

### இலக்கணம்

சிற்றிலக்கியங்களுக்கு இலக்கணம் கூறும் எந்தப் பாட்டியல் நூலும் 'குறம்', 'குறவஞ்சி', குளுவ நாடகம்' என்னும் சிற்றிலக்கிய வகைகளின் இலக்கணம் கூறவில்லை. பன்னிரு பாட்டியலில் 'குறத்திப்பாட்டு' என்னும் சிற்றிலக்கிய வகையின் இலக்கணமாகப் பின்வரும் இரண்டு நூற்பாக்கள்[10] அமைந்துள்ளன:

1. ''இறப்பு நிகழ்வெதிர் வென்னுமுக் காலமும்
   திறப்பட வுரைப்பது குறத்திப் பாட்டே.''

2. ''அதுவும் அதனோ ரற்றே.''

முக்காலமும் நோக்கிக் குறி கூறுதலே குறத்திப்பாட்டு என்பதும், முன்னர்க் கூறிய உழத்திப்பாட்டைப் போன்று, குறத்திப்பாட்டும் பத்துப் பாடல்களால் அமைந்திருக்கும் என்பதும் இந்நூற்பாக்களால் பெறப்படுகின்றன. குறவஞ்சி இலக்கியம் தோன்றியதற்குப்பின் எழுந்த தொன்னூல் விளக்கம் குறத்திப்பாட்டின் இலக்கணமாகக் குறவஞ்சி நிகழ்ச்சி களையே தொகுத்துரைக்கின்றது.[31]

### தோற்றம்

தொல்காப்பியர் கூறும் வனப்பு எட்டனுள் ஒன்றான விருந்து என்பதன் இலக்கணம்,

'' விருந்தே தானும்
புதுவது புனைந்த யாப்பின் மேற்றே.''

(தொல். செய். நூ. 231)

என்பதாகும். 'விருந்தாவது முன்புள்ளார் சொன்ன நெறி போய்ப் புதிதாகச் சொன்ன யாப்பின் மேலது'[32] என்னும் இந் நூற்பாவின் கருத்து பல சிற்றிலக்கிய வகைகளுக்கு அடிகோலியது. இவ்வகையில்,

"கட்டினும் கழங்கினும் வெறியென இருவரும்
ஒட்டிய திறத்தாற் செய்திக் கண்ணும்."

(தொல். கள. நூ. 25:3-4)

எனத் தொல்காப்பியர் கூறும் குறிவகையினை அடியொற்றிப் பல புதிய கூறுகளுடன் குறவஞ்சி தோன்றியது.

வளர்ச்சி

'கட்டினும் கழங்கினும்' என்னும் தொல்காப்பிய நூற்பா அடிகள், களவுக் காலத்துத் தலைவனைப் பிரிந்த தலைவியின் நிலை கண்டு செவிலித் தாயும் நற்றாயும் கட்டு வைத்தும், கழங்கு வைத்தும், வெறியாட்டின் வாயிலாகவும் குறி பார்த்த செய்தியை உணர்த்தி நிற்கின்றன. இதற்கு உரை கூற வந்த நச்சினார்க்கினியர், "கட்டுவிச்சியும் வேலனும் தாம் பார்த்த கட்டினாலும், கழங்கினாலும் தெய்வத்திற்குச் சிறப்புச் செய்யாக்கால் இம்மையில் திராதென்று கூறுதலின், அவ்விரு வருந் தம்மின் ஒத்த திறம் பற்றியதனையே செய்யுஞ் செய்தி யிடத்தும்"[33] என்று கூறுவர்.

கட்டுப் பார்த்தலாவது, "சேரியின் முதுபெண்டாகிக் குறி சொல்லு மாதரை மனையகத்துக் கொணர்ந்து வைத்து, முறத்திலே பிடிநெல்லையிட்டு எதிரே தலைமகளை நிறுத்தித் தெய்வத்திற்குப் பிரப்பிட்டு வழிபாடு செய்து அந்நெல்லை நந்நான்காக எண்ணி எஞ்சிய ஒன்றிரண்டு மூன்றளவும் முரு கணங்கெனவும், நான்காயின் பிறிதொரு நோயெனவும் கூறப் படுவது"[34] ஆகும். இவ்வாறு கட்டுப்பார்த்த செய்தி நற்றிணையில் கூறப்பட்டுள்ளது.[35]

கழங்கு பார்த்தலும் கட்டுப் பார்த்தல் போன்றதே ஆகும். "முருகனால் நோய் ஏற்பட்டதோ என்பதை அறிவதற்கு வேலன் குறி பார்ப்பது கழங்கு பார்த்தல் எனப்படும்."[36]

"பொய்யா மரபி னூர்முது வேலன்
கழங்குமெய்ப் படுத்துக் கன்னந் தூக்கி
முருகென மொழியும்." (பா. 245:1-3)

என்னும் ஐங்குறுநூற்றுப் பாடல் வெறியாடும்பொழுது வேலன் கழற்காயை மெய்யில் அணிந்து, படிமக் கலத்தைத் தூக்கிக் கொண்டு, முருகணங்கின் குறை எனக் கூறுதலை விளக்கு கின்றது. வேலனேயன்றி, மகளிரும் வெறியாடிக் குறி சொல்வ துண்டு. வெறியாட்டம் மேவிய மகளிரின் தோற்றப்பொலிவு குறிஞ்சிப்பாட்டு, குறுந்தொகை, அகநானூற்றுச் செய்யுட்களில் கூறப்பட்டுள்ளது.[37]

'அகவன்மகள்' மலைவளம் பாடிக்கொண்டே குறி சொல்லும் வழக்கத்தை,

"அகவன் மகளே அகவன் மகளே
மனவுக் கோப்பன்ன நன்னெடுங் கூந்தல்
அகவன் மகளே பாடுக பாட்டே
இன்னும் பாடுக பாட்டேயவர்
நன்னெடுங் குன்றம் பாடிய பாட்டே." (பா. 23)

என வரும் குறுந்தொகைப் பாடல் விளக்கி நிற்கின்றது. அகவன் மகளோடு உரையாடுவதன் வாயிலாகத் தோழி அறத்தொடு நின்று, தலைவியின் நோய்க்குரிய காரணத்தை மறைமுகமாக வெளிப்படுத்துகின்றாள். " 'அவர் நன்னெடுங் குன்றம் பாடிய பாட்டு' என்று கூறின், 'அவர் யார்?' என்னும் ஆராய்ச்சி தாயரிடையே பிறந்து உண்மையறிதற்கு ஏதுவா மாகலின் இஃது அறத்தொடு நிற்றலாயிற்று"[38] என உ. வே. சாமிநாதையர் கூறும் உரைவிளக்கம் இங்கு நினைவு கூரத்தக்கது.

அகவன் மகளிர் கையில் சிறு கோல் வைத்திருந்ததை 'வெண்கடைச் சிறுகோல் அகவன் மகளிர்' (குறுந்தொகை, பா. 298) என்றும், 'நுண்கோல் அகவுநர்' (அகநானூறு, பா. 152, 208) என்றும் வரும் சங்க இலக்கிய வரிகளால் அறியலாம்.

குறி கூறும் மகளிர் 'முதுவாய்ப் பெண்டிர்' (அகநானூறு, பா. 22) என்றும், 'முதுவாய்ப் பொய்வல் பெண்டிர்' (அக நானூறு, பா. 98) என்றும், 'செம்முது பெண்டிர்' (நற்றிணை, பா. 288) என்றும், 'அறியுநர்' (குறிஞ்சிப்பாட்டு, வரி 4) என்றும் பல்வேறு பெயர்களால் அழைக்கப்பட்டதையும், இம்மகளி நரைத்த முதாட்டியர் என்பதையும் சங்க இலக்கியம் எடுத்துக் காட்டுகின்றது.

நிமித்தம் பார்த்தல் அல்லது விரிச்சி கேட்டல் என்னும் வழக்கத்தின்மூலம் குறிபார்த்த செய்தியைப் 'பல சங்க

இலக்கியப் பாடல்கள் தெரிவிக்கின்றன. தலைவனைப் பிரிந்து வாடும் தலைவிக்கு, பெருமுதுபெண்டிர் நெல்லும், முல்லை மலரும் தூவி, தெய்வத்தை வணங்கி விரிச்சி பார்த்துத் தலைவனது வருகையை உணர்த்துவதனை முல்லைப்பாட்டு விரிவாக விளக்குகின்றது (முல்லைப்பாட்டு, 9-20). 'திருந்திழை மகளிர் விரிச்சி நிற்ப' என நற்றிணையும் (பா. 40:4), 'நென்னீ ரெறிந்து விரிச்சி யோர்க்கும் செம்முது பெண்டின் சொல்லும்' எனப் புறநானூறும் (பா. 280:6-7) இவ்வழக்கத்தைக் குறிப்பிடு கின்றன.

வேலன் அமைத்த வெறியர் களத்தில் 'வெண்சிறு கடுகு தூவி, கொழுமலர் சிதறி, கொழுவிடைக் குருதியொடு வெண் பொரி, தூவெள்ளரிசி, சில்பலிச் செய்து, குருதிச் செந்தினை பரப்பிக் குறமகள் முருகன் உவக்கும் இசைக்கருவிகளை ஒலிக்கச் செய்து இறைவன் இலன் என்பார் அஞ்சும்படியாக அம்முருகக் கடவுள் வரும்படி வழிப்படுத்தின நகர்' (221-224) என்று திருமுருகாற்றுப்படை, பழமுதிர்சோலையைக் குறிப் பிடும். குறமகள் தெய்வமேறி ஆடும் நிகழ்ச்சியையும், வேல னுக்கு வெறியாட்டு எடுக்கும்பொழுது குருதிப்பலியிட்டுப் படைக்கும் வழக்கத்தையும் இப்பகுதி எடுத்துக் காட்டு கின்றது.

சிலப்பதிகார வேட்டுவ வரியில் சாலினி, 'தெய்வத் தன்மையுற்று, மெய்ம்மயிர் சிலிர்த்து, மூரி நிமிர்ந்த கைகளை ஒற்றையும் இரட்டையும் ஆக்கி விட்டெறிந்து, கானவர் வியப்புறும்படி அவ்வூரினது நடுவண் அமைந்த மன்றத்தின் கண்ணே, தாளத்திற்கொப்பத் தன் அடிகளைப் பெயர்த்திட்டு' ஆடுகின்றாள். அப்பொழுது 'வண்ணம்' சுண்ணம், சந்தனம், அவரை, துவரை முதலியவற்றின் அவியல், எட்கசியும் நிணங் கலந்து துழந்தட்ட சோறு, மலர்கள், பிற மணப்பொருட்கள்' (வேட்டுவவரி: 36-44) ஆகியவற்றைப் படைத்து வழிபடும் எயினர் வழக்கம் கூறப்பட்டுள்ளது.

சிலப்பதிகாரக் குன்றக் குரவையில் வெறியாட்டின்மூலம் தலைவியின் நோய்க்குக் காரணம் அறிந்துகொள்ள நினைக் கின்றாள் தாய். 'உன்னிடம் ஏற்பட்ட மாற்றத்திற்குத் தெய்வக் குறைதான் காரணம் என்று சொல்லி வெறியாடி, உன் குறையைத் தீர்ப்பதாகக் கூறிவரும் வேலனை மடவன் என்றுதானே சொல்லவேண்டும். அந்த வேலனின் வேண்டு கோளுக்கு இணங்கி முருகனும் வருவதாக வைத்துக்

கொண்டால், வேலனைக் காட்டிலும் அவனே மடவன்' (குன்றக்குரவை: பா. 11-13) என்று தோழி தலைவியிடம் கூறுவது வெறியாட்டினை நகையாடுவதாக அமைந்துள்ளது.

இடைக்கால இலக்கியங்களில் குறிபார்க்கும் மகளிர் 'கட்டுவித்தி', 'கட்டுவிச்சி', 'கட்டறி மகடூஉ' என்னும் பெயர் களால் குறிக்கப் பெற்றுள்ளனர்.

'கட்டுவித்தி' என்னும் சொல்லை முதன்முதலில் கையாண்டவர் மாணிக்கவாசகர். நானூறு காதல் துறைகளால் அமைந்த திருக்கோவையாரில் 283-285ஆது துறைகள் கட்டு வைப்பித்தல், கலக்கமுற்று நிற்றல், கட்டுவித்தி கூறல் என்பனவாகும். தலைவியின் மெலிவு கண்டு செவிலி. 'தலைவி யின் நோவைத் தெரிந்து சொல்லுமின்' எனக் கட்டுவித்திக்கு உரைக்க, அதைக் கேட்டுத் தோழி கலக்கமுற்று நிற்க, 'மயில், சேவல், வேல், என்று இவை நெல்லின் வடிவில் தோன்ற உள்ள படியால், முருகணங்கு ஒழியப் பிறிதொன்றுமில்லை' எனக் கட்டுவித்தி நெற்குறி காட்டி முருகணங்கென்று கூறக்கேட்டு, 'இப்பிள்ளை இக்குடியிற் பிறந்து நம்மை இவ்வாறு நிற்பித்த பண்பினுக்கு வேலன் புகுந்து வெறியாடுக' என்று தாயர் வெறியாட்டெடுக்கும் செய்திகள் திருக்கோவையாரில் இடம் பெற்றுள்ளன.

நம்மாழ்வார் திருவாய்மொழியில் வெறியாடலைக் கடிந்து கூறுமிடத்துக் 'கட்டுவிச்சி' என்னும் சொல்லாட்சியைக் கையாண்டுள்ளார்;

"இதுகாண்மின் அன்னமீர் இக்கட்டு விச்சிசொற் கொண்டுநீர்
எதுவானும் செய்தங்கோர் கள்ளும் இறைச்சியும் தூவேன்மின்
மதுவார் துழாய்முடி மாயப் பிரான்கழல் வாழ்த்தினால்
அதுவே யிவளுற்ற நோய்க்கும் அருமருந் தாகுமே"

(திருவாய்மொழி, 4:6:3)

என்று கள்ளும் இறைச்சியும் பலியிட்டு வணங்கும் வெறி யாடலைக் கடிந்துரைக்கின்றார்.

திருமங்கையாழ்வார் பாடிய சிறிய திருமடலில் கட்டுப் பார்க்கும் முறை கூறப்பட்டுள்ளது. தலைவி உற்ற நோயைப் போக்குதற்குச் சிறந்த வழி கட்டுப் பார்த்தலேயாகும் என்று முதிய அன்னையர் கூறுகின்றனர்.

"……… ……… ………… அதுகேட்டுக்
காரார்குழல் கொண்டைக் கட்டுவிச்சி கட்டேறி
சீரார் சுளகில் சிலநெல் பிடித்தெறியா
வேரா விதிர்விதிரா மெய்சிலிராக் கைமோவா
பேரா யிரமுடையான் என்றாள்." (19-22)

இங்கே கட்டுவிச்சி, சுளகில் நெல்லைப் பரப்பிக் கட்டுப் பார்க்க முயல்கின்றாள். ஆயின் பண்டை இலக்கியங்களில் கூறப் பட்டதுபோல் ஒரு பிடி நெல்லை நந்நான்காக எண்ணிக் குறி பார்க்காமல் தெய்வமேறிக் குறியுரைக்கின்றாள். இக்கட்டு விச்சி இளைய வயதினள் என்பதைக் காரார் 'குழல் கொண்டைக் கட்டுவிச்சி' என்னும் அவளைப் பற்றிய வருணனையால் உணரலாம். திருமங்கையாழ்வார் நரை முதாட்டியை இளைய வயதினளாக்கி, வஞ்சிக்கொடி போன்ற பெண் (குறவஞ்சி) பிற்கால இலக்கியங்களில் உருவாவதற்கு வழிகாட்டியுள்ளார்.

பெருங்கதையில் 'கட்டறி மகடூஉ', நெற்குறி, வெறி யாடுதல்மூலம் குறியுரைத்த செய்தி கூறப்பட்டுள்ளது.[39]

இவ் இலக்கியங்களுக்குப் பின்னர்த் தோன்றிய கலம்பகங் களில் குறம் என்னும் ஓர் உறுப்பு இடம்பெறலாயிற்று. குறத்தி தன் குறிச்சிறப்பு, குடிச்சிறப்பு, குறி கூறும் முறை, நன்னி மித்தம் பார்த்தல் ஆகியவற்றுள் ஒன்றோ அன்றி இரண்டோ கூறித் தலைவன் விரைவில் வந்து சேர்வான் என்பதாகக் கலம்பகக் குறம் உறுப்பு அமைந்தது.[40]

இதுவரை கூறிய செய்திகளை அடிப்படையாகக் கொண்டு குற இலக்கியம் தோன்றியது. முதலில் தோன்றிய குறம் மதுரை மீனாட்சியம்மை குறம். இதில் சங்க இலக்கிய அகவன் மகள் தலைவன் மலையைப் பற்றிப் பாடுவதுபோல் குறத்தி தன் மலைவளம் பாடுவதாக அமைத்துள்ளார் புலவர். மேலும் அவர் நெற்குறி, நன்னிமித்தம் ஆகிய சங்க இலக்கியச் செய்திகளோடு கைக்குறி, மெய்க் குறி பார்த்தல், குடியியல்பு உரைத்தல் ஆகிய கலம்பகச் செய்திகளை இணைத்து, 'இறப்பு நிகழ்வு எதிர்வு எனும் முக்காலமும் திறப்பட உரைப்பது குறத்திப்பாட்டே' என்னும் குறத்திப்பாட்டின் இலக்கணத்தைப் பின்பற்றி, ஒரு புதிய இலக்கிய வகையைப் படைத்துள்ளார்.

குறத்தில் கூறப்பட்ட குறத்தியின் இயல்புகளோடு 'வெண் கடைச் சிறுகோல் அகவன் மகளிர்' என்னும் சங்க இலக்கியத்

தைப் பின்பற்றிக் குறவஞ்சிக்கு, ஒரு மாத்திரைக்கோலும், குறக்கூடையும் அளித்தார் குறவஞ்சி ஆசிரியர். திருமங்கை யாழ்வாரின் 'காரார் குழல் கொண்டைக் கட்டுவிச்சி' குறவஞ்சி யின் அன்னநடைக்கும் எழில்மிகு தோற்றத்திற்கும் வித்திட் டாள். தெய்வங்களுக்குப் படைத்து வழிபடும் சங்ககால வழக் கத்தைப் பின்பற்றி, நம்மாழ்வார் கடிந்த குருதிப் பலியை விலக்கி, அவல், பொரி, தேங்காய், பழம், சந்தனம், பிற மணப் பொருட்களைப் படைத்து வழிபடும் வழக்கத்தை உருவாக்கி னார் குறவஞ்சி ஆசிரியர். இவ்வாறு குறி கூறும் வழக்கம் சங்க காலம் முதலாகப் படிப்படியாக வளர்ச்சி பெற்றுக் கலம்பகத் தில் குறம் என்னும் உறுப்பாக இடம்பெற்று, பின்னர்க் குறம் என்னும் தனியொரு இலக்கிய வகையாக மலர்ந்து, குறவஞ்சி யைத் தோற்றுவித்தது.

குறவஞ்சியில் குறவனின் பறவை வேட்டை எவ்வாறு நுழைந்தது என்ற வினா இங்கே எழுகிறது. புதுவகையான இலக்கியங்கள் தோன்றுவதற்கு, அக்காலச் சூழ்நிலையும் காரணமாகின்றது. கி.பி. 16ஆம் நூற்றாண்டில், வாணிகத்தின் பொருட்டு இந்தியாவிற்கு வந்த ஆங்கிலேயர்கள், மெல்ல மெல்ல அரசாட்சியையும் கைப்பற்றிக் கொள்ளும் போக்கைக் காண்கிறோம். "இந்நிலையில் தம்மையாதரிக்கக் கூடிய அரசர்கள் இன்மையால், சாதாரண மக்களிடம் திரும்ப வேண்டிய சூழ்நிலை புலவர்களுக்கு ஏற்படுகின்றது"[11] என்று தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் கூறுவதற்கேற்ப, சாதாரண மக்களான பள்ளர்களும், குறவர்களும் இலக்கியங்களில் தலைமை இடம் பெறத் தொடங்கிவிடுகின்றனர். குறவஞ்சியும், பள்ளும் தெய்வங்களையும் மன்னரையும் பாட்டுடைத் தலைவர் களாகக் கொண்டிருப்பினும், அவை குறவர்க்கும், பள்ளர்க் குமே சிறப்பிடம் அளிப்பதைக் காணலாம்.

அடுத்து, குறவர்கள் எவ்வாறு இலக்கியத்தில் இடம் பெற் றிருக்கக் கூடும் என ஆராய்வது இன்றியமையாததாகின்றது. மனிதனின் மிக முக்கியமான தேவையாக விளங்குவது உணவு. ஆதி மனிதன் அதனைப் பெறுவதற்குக் காட்டிலும், மேட்டிலும் வேட்டையாடித் திரிந்தான் என்று அறிகிறோம். பின்னர், நாகரிகம் வளர வளரத்தான், அவன் வேட்டை யாடுதலை விடுத்துப் பயிர்செய்து பிழைக்கத் தொடங்கினான். எனவே, மனிதனின் முதல் தொழிலாக விளங்கியது வேட்டைத் தொழிலே யாகும். வேட்டையாடிப் பிழைக்கும் மலைநாட்டு மக்கள் புலவரின் கருத்தில் தோன்றுகின்றனர். தமிழர்

நாகரிகம் தோன்றிய பகுதியாகக் குறிஞ்சி நிலத்தைக் கொள்ளும் மரபும் தமிழரிடையே உண்டு. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐவகை நிலப்பகுப்பில் முதலில் கூறப்படுவது குறிஞ்சி நிலம் ஆகும். மனிதனின் காதல் ஒழுக்கத்தைக் குறிப்பிடுமிடத்தும், குறிஞ்சி நிலத்தி லேயே களவு முகிழ்த்ததாகப் பாடும் மரபும் உண்டு. இவற்றை எண்ணி, குறிஞ்சிநில மக்களான குறவன், குறத்தி யரைத் தலைமக்களாகத் தேர்ந்தெடுத்திருப்பார் புலவர். இவ்வாறு குறவனின் பறவை வேட்டையும், குறத்தியின் குறி கூறுதலும் இணைந்து உருவானதுதான் குறவஞ்சி இலக்கியம் எனலாம்.

இவ்வாறு தோன்றிய குறவஞ்சி இலக்கியத்தில் குறத்தியின் பாத்திரப்படைப்பு செம்மையான முறையில் அமைந்திருக்க, குறவன், பிரிந்துபோன குறத்தியின் நினைவால் தன் தொழிலில் வெற்றி பெறாது தோல்வியுறுகிறான்; பறவை வேட்டையில் பறவைகளைத் தப்ப விடுகிறான். இக்குறையைத் தவிர்க்கப் பிறிதொரு இலக்கிய வகை எழுந்தது. அதுதான் குளுவ நாடகம். அதில் குளுவன் தலைமை மாந்தனாகச் சித்திரிக்கப் படுகின்றான். குறவஞ்சியில் குறவன் ‘சிங்கன்’ என்று அழைக் கப்பட, குளுவ நாடகத் தலைமை மாந்தன் எவ்வாறு ‘குளுவன்’ என்று அழைக்கப்பட்டான் என்னும் வினா ஈண்டு எழுகின்றது. குறவன் பறவைகளை வேட்டையாடுபவனாகச் சித்திரிக்கப் படுகின்றான். “ஊர்பறவை என்று குறிப்பிடப் பெறும் நீர்வாழ் பறவையைக் குளுவை என்றே கூறுவர். இவ்வகையான பறவை களைப் பெரும்பாலும் வேட்டையாடுபவரை குளுவன் என அழைத்திருக்கலாம்”[12] என்று ஏ. என். பெருமாள் கூறும் கருத்து இங்குப் பொருந்துகின்றது. ‘கறுப்பர் குளுவை நாடகம்’ என்று ஒரு நூலுக்குப் பெயர் அமைந்திருப்பதும் இக்கருத்தினை வலியுறுத்துவதாக அமைகின்றது.

குறவஞ்சி இலக்கியம் தனக்கு அடுத்ததாகக் குளுவ நாடகத்தினைத் தோற்றுவித்தாலும், காலச் சூழ்நிலைக்கேற்ப ஆதரிக்கும் மன்னர்கள் இன்மையால், நலிவடையத் தொடங் கியது; பாம்பண காங்கேயன் குறவஞ்சி போன்று வள்ளல் களைப் பாடும் நிலையினையும் பெற்றது; ஆதரிக்க வள்ளல் களும் இல்லாத நிலைமையில் தெருக்கூத்தில் ஒரு பகுதியாக இடம் பெறலாயிற்று; பின்னால் வந்த புரூரவ நாடகம், மதன கேளீவிலாச நாடகம் போன்ற இசை நாடகங்களில் ‘குறி கூறுதல்’ என்னும் ஒரு நிகழ்ச்சியாக இடம் பெறலாயிற்று;

அல்லியரசாணி மாலை போன்ற நாட்டுப்புறக் கதைப் பாடல்களில் குறத்தியாக மாறுவேடம் அணிந்து செல்வதாக அமைந்தது; திரைப்படங்கள் செல்வாக்குப் பெறத் தொடங்கிய நிலையில், குறத்தி மலைவளம் பாடிக் கதைத்தலைவிக்குக் குறி கூறுவது போன்ற நிகழ்ச்சி திரைப்படங்களில் இடம்பெறத் தொடங்கியது. இன்று, பரத நாட்டியக்கலை சிறப்புற்று விளங்குவதனால், குறவஞ்சி நாடகங்கள் இசை நாட்டிய நாடகங்களாக மீண்டும் மேடையேறத் தொடங்கியுள்ளன. இங்ஙனம் நாட்டிய நாடகங்களாக மட்டுமின்றி, பரதநாட்டிய நிகழ்ச்சிகளில் 'குறத்தி நடனம்' என்னும் ஒரு பகுதியாக வேனும் இடம்பெறும் சிறப்பினைப் பெற்றிருக்கிறது குறவஞ்சி.

## குறிப்புக்கள்

1. நூலின் பெயர் 'தஞ்சை வெள்ளைப் பிள்ளையார் குறவஞ்சி' என இருந்தாலும், அந்நூலின் அமைப்பு குற இலக்கியத்தைப் போன்றே அமைந்துள்ளது. மேலும், நூலின் முதற்பாடலில் 'வெள்ளைப் பிள்ளை குற மெனக்கு முன்னடக்க வேணும்' என்றும், இறுதிப் பாடலில் 'இக்குறத்தைக் கேட்டவரும் வாழி' என்றும் வரும் குறிப்புக்கள், இதனைக் குற இலக்கியத்துடன் இணைத்தலே பொருத்தமானதாகும் என்பதை உணர்த்துகின்றன.

2. மீனாட்சியம்மை குறம், சிவகாமியம்மை இரட்டை மணி மாலை, மீனாட்சியம்மை இரட்டைமணி மாலை ஆகிய மூன்றும் குமரகுருபரர் பாடியவையே என்றும், அவர் பாடியவை அல்ல என்றும் இருவேறு கருத்துக்கள் நிலவுகின்றன. 'இதற்குமுன் வெளிவந்துள்ள பதிப்புக்களில் இவையும் சேர்க்கப்பட்டுள்ளதை எண்ணி யானும் இவற்றைத் தனியே பின்னால் இப்பதிப்பில் சேர்த்திருக்கிறேன்'' (ப. 11) என்று குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டினைப் பதிப்பித்த டாக்டர் உ. வே. சாமிநாதையர் அதன் முகவுரையில் குறிப்பிட்டுள்ளார்.

3. அ. கி. பரந்தாமனார், மதுரை நாயக்கர் வரலாறு, ப. 160.

4. வீ. சொக்கலிங்கம் (பதிப்.), தஞ்சை வெள்ளைப் பிள்ளையார் குறவஞ்சி, முன்னுரை, ப.ii.

5. வெ. நா. ஸ்ரீநிவாஸன், திருக்குருகூர் மகிழ்மாறன் பவனிக் குறம், பதிப்புரை.

6. கா. சுப்பிரமணிய பிள்ளை, இலக்கிய வரலாறு, இரண்டாம் பாகம், ப 391.

7. மேற்கோள்: கா. முகம்மது பாருக், மெய்ஞ்ஞானி பீர் முகம்மது அப்பா இலக்கிய ஆய்வுக் கோவை, ப.45.

8. அ. கி. பரந்தாமனார், மு. நூ., ப.325.

9. உ. வே. சாமிநாதையர், நினைவு மஞ்சரி-இரண்டாம் பாகம், ப. 211.

10. வ. வேணுகோபாலன் (பதிப்.), ஐந்து தமிழிசை நாட்டிய நாடகங்கள், ப.83.

11. வே. பிரேமல்தா (பதிப்.), தியாகேசர் குறவஞ்சி. முன்னுரை, ப. 33.

12. அ. கி. பரந்தாமனார், மு. நூ., ப. 439.

13. க. பழனிச்சாமிப் புலவர் (பதிப்.), ஓதாளர் குறவஞ்சி, ப. 20.

14. உ. வே. சாமிநாதையர் (பதிப்.), 'தஞ்சைச் சரபோஜி மன்னர் சரித்திரம்', ஸ்ரீ சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தங்கள், ப. 284.

15. இரா. இளங்குமரன் (பதிப்.), சிக்கல் நவநீதேசுவர சுவாமி குறவஞ்சி, முன்னுரை, ப.19.

16. மு. அருணாசலம் (பதிப்.), பொய்யாமொழியீசர் குறவஞ்சி, ப. 90.

17. மயிலை. சீனி. வேங்கடசாமி, மறைந்துபோன தமிழ் நூல்கள், ப. 199.

18. கா. சுப்பிரமணிய பிள்ளை, மு. நூ., பக். 408, 435.

19. கலைக் களஞ்சியம், தொகுதி 4, ப. 431.

20. 'The Kuram, the story of the mountain lass reading the hands of a virgin in love is elaborated into a drama. This story is furthher expanded by adding to it an already popular song of the hunter.'

— T. P. Meenakshisundaram, A History of Tamil Literature, p. 167.

21. பிரேமலதா, 'குறவஞ்சி நாடகம்', மதுரை அங்கயற் கண்ணி சங்கீத சபா ஆண்டுவிழா மலர், ப. 10.

22. ந.வீ. செயராமன், சிற்றிலக்கியச் செல்வங்கள், ப. 171.

23. 'The Kuḷuva nāṭakam is a shorter version depicting, only one scene from the kuravanji.'
— M. Arunachalam, An Introduction to the History of Tamil Literature, p. 50.

24. மு. அருணாசலம் (பதிப்.), சிதம்பரக் குறவஞ்சி, முகவுரை, ப. 3.

25. சுவடிகளின் விளக்கம், தொகுதி எண் 2097, ப. 321.

26. ஏ. என். பெருமாள் (பதிப்.), சின்னமகிபன் குளுவ நாடகம், ப. 14.

27. கா. சுப்பிரமணிய பிள்ளை, மு. நூ., ப. 406.

28. 'சோமலெ', செட்டிநாடும் தமிழும், ப. 53.

29. ,, ,, ப. 111.

30. பன்னிரு பாட்டியல், இளவியல், நூ. 53, 54.

31. தொன்னூல் விளக்கம், ப 203.

32. இளம்பூரணர் (உரை.), தொல்காப்பியம்: பொருளதி காரம், ப. 549.

33. நச்சினார்க்கினியர் (உரை.), தொல்காப்பியம்; பொருளதிகாரம், களவியல், ப. 189.

34. பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர் (உரை.), நற்றிணை, ப 492.

35. 'நன்னுதல் பரந்த பசலைகண்டு அன்னை
செம்முது பெண்டிரொடு நெல்முன் நிறீஇக்
கட்டிற் கேட்கும்.' — நற்றிணை, 288 : 5—7.

36. சு. வித்தியானந்தன், தமிழர் சால்பு, ப. 200.

37. குறிஞ்சிப்பாட்டு, 172—175; குறுந்தொகை, பா 366; அகநானூறு, பா. 370.

38. உ. வே. சாமிநாதையர் (உரை.), குறுந்தொகை, ப. 58.

39. பெருங்கதை, உஞ்சைக் காண்டம், 235—238.

40. கலம்பகக் குற உறுப்பின் விரிவு 'குறவஞ்சியில் பிற சிற்றிலக்கியக் கூறுகள்' என்னும் நான்காவது இயலில் இடம்பெற்றுள்ளது. (பக். 102-105).

41. 'When the political power passed to the hands of the English, the poets had to turn to the general public for their patronage.'

— T. P. Meenakshisundaranar, The Pageant of Tamil Literature, p. 65.

42. ஏ. என். பெருமாள் (பதிப்.), சின்னமகிபன் குளுவ நாடகம், ப. 3.

# 3. அமைப்பாய்வு

பண்டைக் காலந்தொட்டு வழங்கி வரும் குறி கூறும் வழக்கத்தினை அடிப்படையாகக் கொண்டு குற இலக்கியம் எழுந்தது. குற இலக்கியத்தினை அடியொற்றியும், தனக்கு முன்னர்த் தோன்றிய பல்வேறு சிற்றிலக்கியங்களின் கூறுகளை உட்கொண்டும் குறவஞ்சி இலக்கியம் தோன்றியது. காலப் போக்கில் இது குளுவ நாடகம் என்னும் பிறிதொரு இலக்கிய வகையினை உருவாக்கியது. முதல் குறமான மதுரை மீனாட்சி யம்மை குறமும், இலக்கிய நயம் செறிந்த திருக்குற்றாலக் குறவஞ்சியும் தோன்றிய பின்னர்க் குறங்களும், குறவஞ்சிகளும் எண்ணிக்கையில் பெருகலாயின. விழாக் காலங்களில் நடிக்கப் பெற்றமையால் குறவஞ்சி மக்களிடையே மிகுந்த செல்வாக்குப் பெறத் தொடங்கியது. எனவே, சமய, தத்துவ, ஞானப் பொருள்களைப் புலப்படுத்துவதற்கும் புலவர்கள் இவ் இலக்கிய வகைகளைக் கையாளத் தொடங்கினர். அவர்கள் முதலில் தோன்றிய குறம், குறவஞ்சி ஆகிய இலக்கிய வகைகளைப் பின்பற்றி எழுதினாலும், தம் படைப்புக்களில் தனித் தன்மையைப் பதிக்கவும் தவறவில்லை. எனவே, கதைக்கரு ஒன்றாக இருப்பினும் இவ் இலக்கியங்களின் அமைப்பு முறையில் சிற்சில மாறுபாடுகள் அமைந்திருக்கக் காண்கிறோம். இவ் அமைப்பாய்வு ஆய்வாளர்க்குக் கிடைத்துள்ள குறம், குறவஞ்சி, குளுவ நாடகம் ஆகியவற்றினிடையே காணப்படும் பொதுப் பண்புகளையும் தனித் தன்மைகளையும் ஆராய்கின்றது.

## குறம்

குறம் என்னும் இலக்கிய வகையின் இலக்கணம் எந்தப் பாட்டியல் நூலிலும் கூறப்பெறவில்லை. ஆயின், அறிஞர்

சிலர், குறத்திற்கும் குறவஞ்சிக்கும் இடையே உள்ள வேறு பாட்டினை ஆங்காங்கே சுட்டிக் காட்டியுள்ளனர். "ஒரு குறத்தி குறி கூறுவதாக அமையும் பிரபந்தம் குறமென்று வழங்கும்"[1] என்பார் உ. வே. சாமிநாதையர். "குறத்தி ஒருத்தியின் கூற்றோடு வேறு பலர் கூற்றுக்களும் உள்ள நூல் குறவஞ்சி எனப்படும்"[2] என்பார் மொ. அ. துரை அரங்கசாமி. இவ்விருவரது கூற்றுக்களும் மீனாட்சியம்மை குறத்தை அடியொற்றியே அமைந்துள்ளன எனலாம். ஏனெனில் மகிழ்மாறன் பவனிக் குறத்தில் குறத்தியின் கூற்றோடு, தலைவியின் கூற்றம் இடம் பெற்றுள்ளது. துரோபதை குறம், மின்னொளியாள் குறம். தர்மாம்பாள் குறம், இலக்கணையார் குறம், வேதாந்தக் குறம், அகண்ட வெளிக் குறம், குறமாது ஆகிய பிற குறங்களில் குறத்தியின் கூற்றோடு வேறு பலரது கூற்றுக்களும் இடம் பெற்றுள்ளன. வித்துவான் குறம், பிஸ்மில் குறம் ஆகியவற்றில் குறத்தி வரவில்லை; குறியும் கூறவில்லை. இவை விதிவிலக்குகளாக அமைந்துள்ளன.

## பொதுக் கூறுகள்

### பெயர் பெறும் முறை

சில குறங்கள் பாட்டுடைத் தலைவரது பெயரால் வழங்கப் பெறுகின்றன. திருக்குருகூர் மகிழ்மாறன் பவனிக் குறம், நெல்லை நாயகர் குறம், வேதபுரீசர் குறம் ஆகியன இவ் வகையைச் சாரும். மதுரை மீனாட்சியம்மை குறம், மின்னொளியாள் குறம், இலக்கணையார் குறம் ஆகியன பாட்டுடைத் தலைவியின் பெயரைச் சார்ந்து வழங்குவன ஆகும். குறத்தியின் பெயரால் அழைக்கப்பெறும் குறங்கள் மூன்று. அவையாவன: துரோபதை குறம், குறமாது, தர்மாம்பாள் குறம். ஞானக் குறம், வேதாந்தக் குறம், அகண்டவெளிக் குறம் ஆகியன பொருள் அடிப்படையில் பெயர் பெற்றுள்ளன. எனவே, பாட்டுடைத் தலைவரின் பெயர் அல்லது தலைவியின் பெயர் அல்லது குறத்தியின் பெயர் அல்லது பொருள் அடிப்படை ஆகியவற்றின் அடிப்படையில் குற இலக்கியங்கள் பெயர் பெற்றிருக்கக் காண்கிறோம்.

### காப்பு

எந்த ஓர் இலக்கியமாயினும், கடவுள் காப்புடன் தொடங்குவது தமிழர் மரபு. ஞாயிறு, திங்கள், மாமழை ஆகியவற்றைப் போற்றும் இயற்கை வாழ்த்து சிலப்பதி

காரத்தில் விளங்குவதைக் காண்கிறோம். திருக்குறளிலும் 'கடவுள் வாழ்த்'தே முதல் அதிகாரமாக அமைந்திருக்கக் காண்கிறோம். பக்தி இயக்கம் மேலோங்கிய காலத்தில் சைவ, வைணவக் கடவுளரைப் போற்றத் தொடங்கும் மரபைக் காண்கிறோம். வடநாட்டிற்குப் படையெடுத்துச் சென்று மீண்ட பின்னர், வாதாபிப் பிள்ளையாரைக் கொண்டு வந்து பிள்ளையார் வழிபாட்டைப் பல்லவர் தொடங்கி வைத்தனர் என்னும் கர்ண பரம்பரைச் செய்தி ஒன்று நிலவி வருகின்றது. ஐங்கரனைக் காப்புக் கடவுளாகப் பாடும் முறையினை முதன் முதலில் நந்திக் கலம்பகத்தில்தான் காண முடிகின்றது. இதனைப் பின்பற்றி, இதற்குப் பின் எழுந்த இலக்கியங்கள் விநாயகர் காப்புடன் தொடங்குதலை மரபாகக் கொண்டன. இம்மரபு மீனாட்சியம்மை குறம், துரோபதை குறம், மின்னொளியாள் குறம், தர்மாம்பாள் குறம், அகண்டவெளிக் குறம் ஆகியவற்றில் பின்பற்றப்படுகின்றது. மகிழ்மாறன் பவனிக் குறம், நம்மாழ்வாரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டிருப்பதால் கருடேசன் காப்புடன் தொடங்குகிறது. இலக்கணையார் குறம் சைன மரபிற்கேற்ப அருகதேவர், வாசுதேவி ஆகியோரை வணங்கித் தொடங்குகின்றது. வேதாந்தக் குறம் குருவை வணங்கித் தொடங்குகின்றது. ''குருகை வருமாறன் தன்னையல்லால், மனிதர்தமைப் புகழாத வயித்தியநா தன் துணைத்தாள் வழுத்துவாமே'' (பா. 2) என்று மகிழ்மாறன் பவனிக் குறமும் குரு வணக்கம் கூறுவது குறிப்பிடத்தக்கதாகும்.

### அவையடக்கம்

மகிழ்மாறன் பவனிக் குறத்தில் மட்டுமே இப்பகுதி இடம் பெற்றுள்ளது. அவையடக்கம் கூறுதல் சில குறவஞ்சிகளில் காணப்படுகின்றது.

### கதையின் வரலாறு

துரோபதை குறம், மின்னொளியாள் குறம், வித்துவான் குறம் ஆகிய மூன்றிலும் 'கதையின் வரலாறு' என்னும் பகுதி இடம்பெற்றுள்ளது. இதில் குறம் எழுவதற்குக் காரணமான சூழ்நிலை விளக்கப்பட்டுள்ளது. எடுத்துக்காட்டாக, துரோபதை குறத்தில் துரோபதை குறத்தியாக வேடம் புனைவதற்கான காரணம் கூறப்படுகின்றது; கௌரவர்கள் பாண்டவர்க்கு இழைத்த அநீதியும், அருச்சுனன் சபதமும்,

பாண்டவர் வனவாசமும் கூறப்படுகின்றன. வனவாசத்தின் பொழுது, நகர் நிலைமையை அறிய வேண்டும் என்னும் ஆவல் பாண்டவர்களுக்கு எழுகிறது. அப்பொழுது பாஞ்சாலி, தான் குற வேடம் அணிந்து நகரத்திற்குச் சென்று நிலைமையைப் பார்த்து வருவதாகக் கூறிப் புறப்படுவது இப்பகுதியில் விளக்கப் பட்டுள்ளது. இவ்வாறே பிற இரு குறங்களிலும் இப்பகுதி கதை தோன்றுவதற்கான சூழலை விளக்கிநிற்கிறது. ஞானக் குறத்திலும் 'நூலுண்ணுவன்ற வரலாறு' என்னும் பகுதி இவ்வாறு அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது. இப்பகுதி குறவஞ்சியில் இல்லை என்பது எண்ணத்தக்கது.

குறத்தி அறிமுகம்

மீனாட்சியம்மை குறத்திலும், மகிழ்மாறன் பவனிக் குறத் திலும் குறத்தியர் 'பொதிய மலைக் குறத்தி நானே' என்று தம்மைத் தாமே அறிமுகப்படுத்திக் கொண்டு வருகின்றனர்.

துரோபதை குறத்தில் துரோபதையும், மின்னொளியாள் குறத்தில் அருச்சுனனும், இலக்கணையார் குறத்தில் சிவகனும், தர்மாம்பாள் குறம், அகண்டவெளிக் குறம் ஆகியவற்றில் பார்வதிதேவியும், வேதாந்தக் குறத்தில் பரமாத்மாவும் குறத்தி வேடம் அணிந்து வருவதாகக் கூறப்பட்டுள்ளது. தியாகேசர் குறவஞ்சியில் நாரதரும், இலக்ஷணக் குறவஞ்சியில் இலக்குமியும் குறத்தி வேடமணிந்து வருகின்றனர். குறவஞ்சியின் இவ் வியல்பைப் பிற்காலத்துத் தோனறிய குறங்கள் பின்பற்றி யிருக்கலாம். அன்றியும் நாட்டுப்புறக் கதைகளிலும், கதைப் பாடல்களிலும் மாறுவேடம் அணிந்து வருதல் ஒரு பொதுப் பண்பாக விளங்குகின்றது. துரோபதை குறம், 'துரோபதை குறவஞ்சி நாடகம்' என்னும் பெயரில் தெருக்கூத்தாக நிகழ்த்தப் பெறுகின்றது. எனவே, நாட்டுப்புற இலக்கியத்தின் இவ் இயல்பு குறவஞ்சியில் பின்பற்றப்பட்டிருத்தலும் கூடும். துரோபதை, அருச்சுனன், பெருந்திருவாள், துரியோதனன் போன்ற மகாபாரதக் கதைமாந்தர் பலர் துரோபதை குறத் திலும் மின்னொளியாள் குறத்திலும் இடம்பெற்றுள்ளனர். ஆயின், இக்குறங்கள் கூறும் செய்தியைப் போன்ற நிகழ்ச்சி மகாபாரதத்தில் காணப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

குறத்தியின் தோற்றம்

துரோபதை குறம், மின்னொளியாள் குறம், தர்மாம்பாள் குறம், குறமாது ஆகியவற்றில் குறத்தியின் அழகு வருணிக்கப் பட்டுள்ளது.

" இவளழகைப் பார்ப்பதற்கு இருகண்கள் போதாது
புஸ்தகத்தை மாற்றடிக்கும் புறங்காலின் வடிவழகும்
பூஞ்சிலம்பு தண்டைகளும் புலம்பும் நடையழகும்
முத்துச்சிப்பி தன்னிறம்போல் முழங்கால் இரண்டழகும்
இளவாழைத் தண்டதுபோல் இருதுடையி னழகும்."

(து. குறம், ப. 24)

என்று துரோபதை குறத்தியின் ஒவ்வோர் உறுப்பினையும் சிறப்பித்துச் செல்கின்றார் ஆசிரியர். குறவஞ்சியில் வரும் குறத்தியின் தோற்ற வருணனையை இது நினைவுறுத்து கின்றது.

குறத்தி குறக்கூடை பெறுதல்

துரோபதை குறம், மின்னொளியாள் குறம் ஆகிய இரண்டிலும் குறத்தி இறைவனை வணங்கிக் குறக்கூடை பெறுவதாக அமைந்துள்ளது. துரோபதை குறத்தில், குறத்தி யாக வரும் துரோபதை மாயவனை மனத்தில் நினைத்து, 'முன்பு துகில் அளித்ததுபோல் இப்பொழுது குறக்கூடை அருள வேண்டும்' என்று வேண்டிக் குறக்கூடை பெறுகின்றாள். மின்னொளியாள் குறத்தில் குறத்தியாக வரும் அருச்சுனன், முன்பு சிவபெருமானை வணங்கிப் பாசுபதம் பெற்றதுபோல், இங்குக் குறக்கூடை பெறுவதாக அமைந்துள்ளது. இப்பகுதி, பிற குறங்களிலும் இல்லை, குறவஞ்சியிலும் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது.

துரோபதை குறமும், மின்னொளியாள் குறமும், குறத்தி தான் பெற்ற குறக்கூடையில் பலவித மருந்துகள், வேர் வகைகள், மூலிகைகள், கைவினைப் பொருட்கள், கிலுகிலுப்பை போன்ற விளையாட்டுப் பொருட்கள் முதலானவற்றை வைத்திருந்ததாகக் கூறுகின்றன (து. குறம், ப. 26; மி. குறம், ப. 61).

வேடம் அணிவித்தவருக்குக் குறி கூறுதல்

மின்னொளியாள் குறத்தில் அருச்சுனனுக்குக் குறத்தி வேடம் அணிவித்த துரோபதையும், அல்லியும் தமக்குக் குறி பார்த்துரைக்குமாறு வேண்டுகின்றனர். இருவருக்கும் ஏற்ற குறி சொல்லி, முத்துமணித் தாழ்வடம் பெற்றுச் செல் கின்றாள் அருச்சுனக் குறத்தி (மி. குறம், ப. 31).

இலக்கணையார் குறத்தில், சிவகனைக் குறத்தியாக வேடம் அணிவித்த காந்தருவதத்தை, குறத்தியின் அழகில் மயங்கி விழுகிறாள். உடனே தோழியர் பன்னீர் தெளித்து விசிற, மயக்கம் தெளிந்து எழுகின்றாள் தத்தை. பின்னர், 'எங்களை மயக்கினது போதும், இளையாள் (இலக்கணை) மனைக்கு ஏகிக் குறம் சொல்லி வாரும்' எனக் கூறவும் சிவகக் குறத்தி புறப்படுகின்றாள். அப்பொழுது ஆஷ்டாங்கன் திருநாளை முன்னிட்டு, அருகர் ஜின்னாதர் பல்வகை வாத்தியங்கள் முழங்க, யானை, குதிரைப்படை அணிவகுத்து வர உலா வருகின்றார். அக்காட்சியைக் கண்ட குறத்தி, அவரைக் கும்பிட்டுப் பின்னர் மற்றொரு தெருவில் நுழைந்தாள் என உலாக்காட்சி ஒன்றை இணைத்துக் கூறுகிறது இலக்கணையார் குறம். குறவஞ்சியில் தலைவனைக் கண்டு தலைவி மயங்குதல், மயங்கிய தலைவிக்குத் தோழியர் சீதளோபசாரம் செய்தல் என வரும் இரண்டு கூறுகள் இங்கு நினைவுகூரத்தக்கன.

குறத்தியின் நிலை

மீனாட்சியம்மை குறம், துரோபதை குறம், மகிழ்மாறன் பவனிக் குறம் ஆகியவற்றில் வரும் குறத்தியர் வறுமை நிலையில் உள்ளவராகச் சித்திரிக்கப்பட்டுள்ளனர். உணவு, உடை, தலைக்கு எண்ணெய் எனச் சில பொருட்களை அவர்கள் தலைவியரிடம் வேண்டுகின்றனர். ஆயின், தர்மாம்பாள் குறத்தில் வரும் குறத்தி செல்வச் செழிப்பு வாய்ந்தவளாக விளங்குகின்றாள். 'கறுப்பு ரவிக்கையும் பட்டுப் புடவையும் கச்சிதமாகவே உடுத்த அழகும்' என்று அவள் தோற்றத்தைச் சிறப்பிக்கும்போது ஆசிரியர் கூறுகிறார். மேலும், 'வேலை செய்யத் தாதியுண்டு, பாக்கியமெனக்குண்டு, விதம் விதமாய் பட்டுமுண்டு, வெகு பணதியுமுண்டு, கட்டிலுண்டு, மெத்தை யுண்டு, கிழவனருகிருப்பேன், களஞ்சியத்தில் அரிசியுண்டு, கவலை கெட இருப்பேன்' (த. குறம், ப. 11) என்று குறத்தியே கூறுவதாக வரும் பகுதியும் இதனை உணர்த்தும்.

குறத்தி மலைவளம், நாட்டுவளம் பாடுதல்

சங்க இலக்கியத்தில் குறி கூறும் அகவன் மகள், தலைவனின் மலையினைப் பாடும் வழக்கத்தினைக் குறுந்தொகைப் பாடல் ஒன்று (பா. 23) விளக்கி நிற்கின்றது. இவ்வியல்பைச் சிற்றிலக்கியத்தின் ஒரு கூறாகப் புகுத்திய பெருமை

குறத்தினையே சாரும். மீனாட்சியம்மை குறம், மகிழ்மாறன் பவனிக் குறம், தர்மாம்பாள் குறம், ஞானக்குறம், திருவரமுனி ஞானக்குறம் ஆகியவற்றில் மலையின் உயர்ச்சி, மலைச் செல்வம் ஆகியன பற்றிய மலைவளம் பாடும் பகுதி இடம் பெற்றுள்ளது. தர்மாம்பாள் குறத்தில் தலைவியாக வருபவள் காவேரி (நதி). அவள் சமுத்திரரை அடைவதற்காகத் தவம் புரிந்துகொண்டிருக்கின்றாள். இந்நிலையில், குறத்தியின் மலைவளம், கிளைவளம், நாட்டுவளம் முதலியவற்றைப் படைக்க வரும் ஆசிரியர், திருவையாற்றில் வீற்றிருக்கும் ஈசனே சுந்தர வடிவுடன் குறத்தியை அணுகி, மலைவளம் முதலியன கேட்பதாகப் படைக்கின்றார் (த. குறம், ப. 12)

ஞானக்குறத்தில் மலைவளம் பாடியபின் தலைவனது வாசல்வளம் பாடும் பகுதியும் இடம் பெற்றுள்ளது (ஞா. குறம், பக். 152—156).

மகிழ்மாறன் பவனிக்குறம், துரோபதை குறம், மின்னொளியாள் குறம், வேதாந்தக் குறம், ஞானக் குறம், திருவரமுனி ஞானக்குறம் ஆகியவற்றில் நாட்டுவளமும் பாடப் பட்டுள்ளது.

### தலைவர் பவனி வருதல்

மகிழ்மாறன் பவனிக் குறத்தில் மலைவளம் கூறுவதற்கு முன்னர், தலைவனது சிறப்புக்களைக் கூறும் 'தலைவன் வளம்,' தலைவன் உலா வரும் வேளையில் நகரை அலங்கரித்ததைக் கூறும் 'நகர் அலங்காரம்' ஆகிய பகுதிகளும் இடம் பெற் றுள்ளன. குறத்தி தலைவன் உலா வரும் சிறப்பினைக் கூறி, 'நாதமறைவாணர் புடை சூழ நாவீறர் வீதியில் வந்தார், அக் காட்சி காண வந்த நீ தற்செயலன்றி மயல்கொண்டு நின்றாய்' (த. ம. ப. குறம், பா. 23) என்றும் தலைவியிடம் கூறுகின்றாள். இவ்வாறு தலைவர் பவனியை விரிவாக எடுத்துக்கூறுவது குறவஞ்சியில் பாட்டுடைத் தலைவர் பவனி வருவதை நமக்கு நினைவூட்டுகின்றது. குறத்தி இவ்வாறு கூறவும், தலைவி அவளிடம், 'வண்டுலவு தண்ணிலஞ்சி மாறன் அன்னப்பிடர் மீதில்வந்து பண்டறியா மயலளித்து என்னிரு கைவளை பறித்தார், அன்னைவைவதனால் அன்னம் அருந்தேனே, கண்கள் பொருந்தாமல் வாடி மெலிந்தேன், மேனி வேறானேன், ஊரும் பகைத்தேன், வேறு நினையேன், மாறன் சேரானோ, ஆசை தீரானோ' (பா. 47—52) என்று கூறிப் புலம்புகிறாள். குறவஞ்சித் தலைவி நிலா, தென்றல் போன்ற அஃறிணைப்

பொருட்களை நோக்கித்தான் புலம்புகின்றாள். ஆயின் மகிழ் மாறன் பவனிக் குறத் தலைவியோ, குறத்தியிடமே தன் வருத்தத்தைப் புலப்படுத்திவிடுகிறாள். இதற்குப் பிறகே குறத்தி குறி கூறும் நிகழ்ச்சி தொடங்குகிறது.

குலப்பெருமை, குடி இயல்பு முதலியன[3]

மீனாட்சியம்மை குறம், மகிழ்மாறன் பவனிக் குறம், துரோபதை குறம், மின்னொளியாள் குறம் ஆகியவற்றில் வரும் குறத்தியர், முருகனுக்குத் தம் குறக்குலப் பெண்ணைக் கொடுத்ததனால், தம் குலம் உயர்குலம் என்று பெருமையாகக் கூறிக்கொள்கின்றனர். உணவு, தொழில் போன்ற தம் குறக் குடியின் இயல்புகளையும் இக்குறத்தியர் வெளிப்படுத்து கின்றனர்.

குறித் திறன்

குறத்தியர் குறி சொல்லத் தொடங்குமுன் உணவு, உடை, வெற்றிலை, பாக்கு போன்றவற்றைத் தருமாறு வேண்டு கின்றனர் (மீ. குறம், பா. 20; தி. ம. ப. குறம், பா. 57; து. குறம், ப. 62); தரை மெழுகிக் கோலமிட்டு அவ்விடத்தைத் தூய்மைப்படுத்திச் செய்ய வேண்டுவனவற்றை எடுத்துரைக் கின்றனர் (மீ. குறம். பா. 25; தி. ம. ப. குறம், பா. 55; து. குறம், ப. 38); பின்னர்த் தன் முன்னோர் குறித்திறனை எடுத்துக்கூறி (மீ. குறம், பா. 22), அம்மரபில் வந்த தன் குறியும் பொய்க்காது (மீ. குறம், பா. 8; தி. ம. ப. குறம், பா. 53) என்று திட்டவட்டமாக உரைத்துத் தலைவியை நம்பிக்கை கொள்ளச் செய்கின்றனர்.

கைக்குறி, மெய்க்குறி, முகக்குறி முதலியன நோக்கித் தலைவிக்கு நற்குறியுரைக்கின்றாள் குறத்தி (மீ. குறம், பா. 23; தி. ம. ப. குறம், பா, 65; ஞா. குறம், பக். 167—172).

தர்மாம்பாள் குறத்தில், குறத்தி வரும்பொழுதே, பெண்கள் எல்லோரும் அவளைச் சூழ்ந்துகொண்டு, தத்தம் குறைகளை எடுத்துக்கூறுகின்றனர். 'பெண்கள் இரண்டு பேர் புத்தியறிவில்லை, இங்கு அழைத்து வந்தேன் பாராய்: மூத்த பிள்ளைக்கு வேட்க வகையில்லை, சாஸ்திரம் பார்; இளைய பிள்ளையும் என்னுடன் பேசவில்லை, எனக்குச் சொல்; கைக் குழந்தைக்குக் காச்சலடிக்குது. காட்டவந்தேன்; நாத்தனாருக்கு ஆத்துப் புருஷன் நலமில்லை; கொழுந்தன் ஒருத்தன் கூத்தியார் வீட்டிலே குடியாய்க் கிடக்கின்றான்; தோழியொருத்தி

துர்க்கனா காண்கிறாள், திருநீறு தா; மாமனாருக்கு மண்டை யிடிக்குது, மாத்திரை தா, நாட்டுப் பெண்ணுக்குப் பேய் பிடித்தாட்டுது, நல்ல மருந்து தா' (த. குறம், பக். 7—8) என்று தத்தம் குறைகளைக் கூறி, அவற்றைத் தீர்க்கக் குறி கூறு மாறும், மருந்து தருமாறும் கேட்பது குறத்தியின் குறித் திறமையை மேலும் உயர்த்துவதாக அமைகின்றது.

தெய்வம் பராவுதல்

குறி கூறத் தொடங்குமுன் பல தெய்வங்களை வணங்கிப் போற்றும் முறை துரோபதை குறத்தில் காணப்படுகின்றது (து.குறம்,ப. 38). குறவஞ்சிகளில் காணப்படுவதுபோல் பல தெய்வங்களின் பெயர்கள் இப்பகுதியில் இடம்பெறுகின்றன.

தர்மாம்பாள் குறத்தில் வரும் குறத்தி 'கைலாஸநாதரை ஆலயஞ்சென்று கண்டு பின் வந்து குறிகளுஞ் சொல்லுவேன்' (த.குறம், ப.8) என்று கூறிச்செல்வது. சிறு தெய்வ வழிபாட்டை விடுத்துப் பெருந்தெய்வ வழிபாட்டை வலியுறுத்துவதாக அமைகின்றது எனலாம்.

நெற்குறி

மீனாட்சியம்மை குறம், துரோபதை குறம், மின்னொளி யாள் குறம், இலக்கணையார் குறம் ஆகியவற்றில் நெற்குறி இடம்பெற்றுள்ளது. இதனைக் 'கட்டுப் பார்த்தல்' என்று சங்க இலக்கியத்தில் கூறியுள்ளனர். முறத்திலுள்ள நெல்லை முக்கூறாகப் பகுத்து, அதில் ஒருகூறை எண்ணி, அது ஒற்றைப் பட்டது, ஆதலால் நன்மை என்று கூறும் முறையினை மீனாட்சியம்மை குறமும், துரோபதை குறமும் எடுத்துரைக் கின்றன.

'வைணவக் கோவில்களில் மார்கழி மாதத்தில் நடைபெறும் பகல்பத்து அரையர் சேவையின் இறுதி நாளில் முத்துக்குறி நடைபெறுகிறது; தலைவிக்கு நோய் செய்தான் யார் என்று காணும்பொருட்டு, கட்டுவிச்சி (இன்று நடைமுறையில் தாம்பாளத்தில்) முத்துக்களைப் பரப்பிக் (இன்று நடை முறையில் அரிசி முத்துக்களைப் பரப்பிக்) குறி' பார்ப்பதை அரையர் அபிநயித்துக் காட்டுகின்றனர்.[4] இதனைப் பின்பற்றி, இலக்கணையார் குறம் நெற்குறியினை முத்துக்குறி எனக் குறிப்பிடுவதனைக் காணலாம்.

'முத்துமணி கொண்டு மூன்றாக வையு' மென்று குறத்தி கூற, அவ்வாறே தலைவி வைக்கிறாள். இந்நிலையில்,

" முத்து வைத்தக்குறி நல்லது அதில் மெத்த மெத்த
நலஞ்சொல்லுது
வைத்த முத்தைத் தானெடுத்து பத்திபத்தியாக வைத்து
உத்த குறிதனைப் பார்த்து உண்மையா யுரைத்திடுவாள்."
(இ.குறம்,ப.8)

என்று ஆசிரியர் கூற்றாக வரும் பகுதியும் இதனை உணர்த்தும்.

## தனிக் கூறுகள்

### குறவன் வருகை

துரோபதை குறத்தில் துரோபதை குறத்தி வேடம் அணிந்து வருகிறாள். அவள் பெருந்திருவாளுக்குக் குறியுரைக்கு மிடத்து, கௌரவர்கள் பாண்டவர்க்கு இழைத்த அநீதி களையும், இனி, நடக்கப் போகும் போரில் பாண்டவர்கள் வெற்றி பெறப்போகும் நிலைமையினையும் எடுத்துரைக் கின்றாள். அவள் சொன்ன குறி கேட்டு, கௌரவர்கள் அவளை ஐயுற்றுச் சிறையில் அடைக்கின்றனர். இதை மாயவன் அறிந்து, அருச்சுனனிடம் கூறுகிறான்; உடனே, அருச்சுனன் குறவன் வேடம் பூண்டு தன் மனைவியைத் தேடி வருவதாகக் கதை அமைந்துள்ளது. அவ்வாறு மனைவியைத் தேடி வருகையில், குறவன், தன் தொழில், சாதிப்பற்று, பழிக்கஞ்சுந் தன்மை முதலானவற்றைக் கூறியவாறே வருகிறான்.

" எந்தனுட குறத்திதனை யாரழைத் தாரோடி
இழுத்தவரைக் கண்டாலே இருதுண்டாய்ப் பிளப்பேன்
அரண்மனையும் ஆஸ்தான அடங்கலும் தானிடித்து
அவனுடைய தேவிகளை அழைத்திடுவேன் பெண்டாய்."
(ப.62)

என்றும் அச்சுறுத்துகின்றான். இவன் அச்சுறுத்தலைக் கேட்டு, குறத்தியைச் சிறையில் அடைத்தால் மக்கள் பழி வந்து விடும் என்று எண்ணிக் குறத்திக்குச் செந்நெல் கொடுத்து அனுப்பி விடுகின்றனர் கௌரவர்கள். குறவன் வருகை இக்குறத்தின் கதைப்போக்கிற்குத் தேவையான ஒன்றாக இருப்பதால் இஃது இடம்பெற்றுள்ளது என்று எண்ணுவதற்கு இடமுள்ளது.

### தர்மாம்பாள் குறம்

அகத்தியரின் மனைவியாகிய லோபா முத்திரை, காவேரி நதியாகச் சமுத்திரரைத் தேடி வருகின்றாள். 'சமுத்திரரை இங்கு அழைப்பேன்' என்று பார்வதிதேவி சமுத்திரரைத் தன்

இடத்திற்கு வரவழைக்கின்றாள். பார்வதிதேவியின் சொல்லினைக் கேளாது புறப்பட்டுவந்த காவேரி நதி சமுத்திரரைக் காணாது தவம் இருக்கத் தொடங்குகிறாள். இந்நிலையில் அவளுக்குப் பார்வதிதேவியே குறத்தியாக வடிவெடுத்து வந்து குறியுரைத்த செய்தியைக் கூறுகிறது தர்மாம்பாள் குறம். இக்குறத்தில், பெண்கள் குறத்தியைக் கண்டவுடன் அவளைச் சூழ்ந்துகொண்டு, தத்தம் குறைகள் தீர வழிகள் வினவுகின்றனர். குறத்தி ஆலயஞ்சென்று கைலாசநாதரைத் தரிசித்த பின்னர் குறிகள் சொல்வேன் என்று ஆலயம் புகுகின்றாள்; பஞ்சநதீசர் குறத்தியின் வடிவில் மயங்கி மோகங் கொண்டு, கந்தர்வ வேடத்துடன் அவளை அணுகி அவள் கணவன், தாய், தகப்பன், சகோதரர்கள் ஆகியோரைப் பற்றியும், அவளுடைய சாதி, பெயர், நாடு, தேசம் ஆகியன பற்றியும் வினவுகின்றார். இவ்வினாக்களுக்கு விடையிறுக்கையில், 'குச்சுக்கு காவலாயென் கிழவனாரும் இருப்பார்' என்று குறத்தி கூறக்கேட்டு, 'கணவன் கிழவனென்று சொன்னாயே, கந்தருவன் போன்ற நானே உனக்கேற்றவன்' என்று ஈசர் தம் ஆசையை வெளிப்படுத்துகின்றார். உடனே குறத்தி சினந்து,

> " என் கணவன் குறவனெங்கள் கிழவனிதைக் கேட்டால்
> ஈட்டியினாலே குத்திஎன்னை இழுத்தெறிவார்
> ஆசை பெரிதென்று சொல்லிஉம்மை நானும் அடைந்தால்
> அறம்வளர்த்த நாயகியும் அக்கினியால் தகிப்பள்."
>
> (ப.11)

என்று மறுத்துரைக்கின்றாள். பின்னர், அவள் காவேரிக்குக் குறியுரைக்கச் செல்கின்றாள்; குறி கூறி முடித்து மீண்டும் கோவிலுக்கு வருகின்றாள். அவளுடைய துடுக்கான வார்த்தையைக் கேட்டுச் சங்கரி தான் வந்தாளோ எனச் சங்கரர் சுற்றுமுற்றும் நோக்கி, அவளைக் காணாத நிலையில் அம்பிகையைக் காணோமேயென்று அழுது புலம்புகின்றார். இப்பகுதி, குறவஞ்சியில் சிங்கன், சிங்கியைத் தேடிப் புலம்பும் பகுதியை நினைவூட்டுவதாக அமைந்துள்ளது. சங்கரரின் தவிப்பைக் கண்ட சரசுவதியும், இலட்சுமியும்,

> " சங்கரியாளைக் குறத்தியே நீயும்
> க்ஷணத்தி லழைத்தாயானால்
> செம்பொன்னும் முத்தும் ரத்தினங்களெல்லாம்
> சொர்ணத்தட்டில் கொடுப்போம். " (ப.17)

என்று கூற, குறத்தி தன்னை அறிவித்து ஈசருடன் இணை கின்றாள். பார்வதிதேவியே குறத்தியாக வருவதனால், பார்வதி—பரமேசுவரர் ஆகிய இருவரது தொடர்பினை ஒரு கிளைக்கதை போலச் சொல்லியிருப்பது இக்குறத்தின் தனிப் பண்பாகும்.

வேதாந்தக் குறம்

பரமாத்மா, குறத்தி வடிவெடுத்து வந்து, புத்தியாகிய பெண்ணிற்குக் குறி சொல்லி, பரமாத்மாவை அடைவதற்குரிய வழிகளையும் கூறி, அவள் முக்தியடையத் துணைபுரிந்ததைக் கூறுவது வேதாந்தக் குறம்.

இக்குறத்தில் பரமாத்மா குறத்தியாக வருவதனால், குறத்தி வருகையைச் சுட்டுமிடத்து, 'இடையில் ஆகாய வஸ்திரம் தரித்து, வேத வாக்கியமாகின்ற விபூதியும், பத்தியாம் ருத்ராக்ஷ மாலையும் அணிந்து, பரிபூர்ணமாம் பிரும்மவித்தை குறந்தன்னைப் படித்து, அனுபோகம் என்ற பிள்ளையை இடுக்கி' வருவதாகக் கூறப்பட்டுள்ளது. புத்தி யென்னும் பெண், தேகமென்னும் பட்டணத்தில், மோகம் என்னும் தாயைப் பெற்று, சம்ஸாரப் பேய்ப் பிடித்து ஆட்ட, அகங்காரம் கொண்டு அலைவதைச் சுட்டி, 'துக்கங்களுண்டு பண்ணும் தனதான்ய சம்பத்தை துச்சமென்று நீயும் நினைக்க வேணும்' என்று பலவாறு அவளுக்கு அறிவுறுத்தி, பரமாத் மாவைச் சேர்வதற்குத் துணைபுரிகின்றாள் குறத்தி. முக்தி அடையக் குறத்தி சொன்ன வழியையேற்று, புத்தியாகிய தலைவி 'ஸம்ஸாரக் காட்டை விட்டு, என்னை உன்னை யென் பதற்று ஏக வடிவாயிருந்து, ஜீவன் முக்தியானதோர் புரத்தில் விரக்தியாகின்ற புருஷனுடன் அத்வைதானந்தம் அடைந்தாள்' என்று கூறுவது இக்குறத்தின் தனிப்பண்பாகும்.

அகண்ட வெளிக் குறம்

பார்வதியம்மை குறத்தியாக வந்து, விவேகம் என்னும் பெண்ணிற்குக் குறி சொல்லி, அவள் ஜீவன் முக்தியடைவதைக் கூறுவது அகண்டவெளிக் குறம். இக்குறம் சக்தி வழிபாட்டின் வாயிலாகப் பரமாத்மாவை அடையலாம் என்னும் உயர் நெறியை விளக்கிநிற்கின்றது. குறத்தி வடிவில் வரும் பார்வதி தேவி, விவேகம் என்னும் பெண்ணிற்கு (தலைவிக்கு), தான் 'பிரம்மமய ஸ்வரூபம், அந்தம் ஆதி நடுவுமற்ற அகண்டவெளி' என்று வெளிப்படுத்தித் தன் சற்குருவாகிய ஈசரின் மகிமை

யுரைக்கின்றாள்; 'இருதயமதின் இருள் நீங்கி ஏக வெளியானால் உதயமாகும் அறிவுதான் சொருபம்' என்று 'ஜன்ம வேரை யறுக்கும்படி சிவன் உரைத்த வாக்கிய'த்தினைத் தலைவிக்கு எடுத்துரைக்கின்றாள். தன் குடிநலம் வினவும் தலைவிக்கு, 'எந்தனுடைய அடியாருக்கு ஈசருடைய கருணையினால் இன்ப முள்ள அகண்ட ரஸம் இச்சைதீர அளிப்பவள் யான்' என்று அவள் கூறுவது, சக்தியை வழிபடுபவர் முக்தியை அடைவர் என்னும் கருத்தை வலியுறுத்துவதாக அமைகின்றது. அகண்ட ரஸப் பழத்தின் பெருமைகளை எடுத்துரைத்து, விவேகம் என்னும் பெண்ணை முக்தியடையப் பக்குவப் படுத்துகின்றாள் பார்வதியாகிய குறத்தி. மேலும், 'இன்னவகை வேணுமென்ற இச்சைதனை யொழிப்பாய்' என அவள் தலைவிக்கு அறி வுறுத்துகின்றாள். மாயை தன்னையொழித்து, அறியாமை என்னும் மயக்கத்தை அகற்றி நின்ற தலைவிக்குக் குறத்தி அகண்ட வெளியாகக் காட்சியளித்து, அவளையும் அகண்ட வெளியில் சேர்க்கின்றாள். அகண்ட வெளியில் ஐக்கியமடைந்த விவேகப் பெண் ஜீவன் என்னும் பெயர் பெற்று, முக்தியடை வதற்குமுன் தான் இருந்த நிலையை எண்ணி வியப்படை கின்றாள். தத்துவக் கருத்துக்களை எளிமையாக, குறவகை இலக்கணத்துடன் பொருந்தும் வகையில் எடுத்துக் கூறுவது அகண்ட வெளிக் குறத்தின் தனிப் பண்பாகும்.

### திருவரமுனி ஞானக் குறம்

சென்னைக் கீழ்த்திசைச் சுவடிகள் நூல் நிலையத்தில் காகிதப் பிரதி (Paper manuscript) நிலையில் இருக்கும் திருவரமுனி ஞானக் குறம், மலைவளம் கூறுதல், நாட்டுவளம் கூறுதல், குறி கூறுதல் ஆகிய குற இலக்கணங்களைக் கையாண்டு ஞானப் பொருளை உணர்த்தி நிற்கின்றது. இக்குறத்தில் வரும் குறத்தி 'நித்தனார் அடிகள் சேரும் நிலைமையினை'ச் சொல்லக் கூடியவள் என்று தன்னைக் கூறிக் கொள்கிறாள். தலைவிக்குக் குறி கூறுமிடத்தும், 'சாதிகள் வேறானாலும், சமயம் ஒன்றே; அல்லல் என்னும் பிறவியறுத்து அடிமுடிமேற் கிட்டி அரிபிரமர் காணாத திருவுருவங் காட்டி எல்லையில்லாப் பரமபதத்து எல்லை அறிவித்து என்னை நினைந்து உன்னை அறி' யென்று உரைத்த பரம்பொருளைப் பற்றியும், 'ஓங்காரம் ஆனதுவே நாதமென்னும் ஆதி' என்றும், 'பார் அளந்த திருமாலும், படைத்த பிரமாவும், பாரிடந்து, விண்ணிடந்து காணாத பொருளை சீர் சிறந்த திருவரமுனி யோகி குரவன்

சிந்தையுள் சிந்தையாய்ச் சிறந்திருப்பாய்' என்று திருவர முனியின் சிந்தையில் நிறைந்திருக்கும் மெய்ப்பொருள் பற்றியும் எடுத்துரைக்கின்றாள் குறத்தி.

குறவஞ்சி இலக்கியம் அதன் முற்பகுதியில் ஜீவான்மா, பரமாத்மாவைத் தேடுதல் ஆகிய மதுரபக்தி அல்லது பகவத் காமா என்று சொல்லக்கூடிய பக்தி நிலையைக் கொண்டுள்ளது என்று கூறுவர்.[5] இக்கருத்திற்கு ஏற்ப, வேதாந்தக் குறம், அகண்டவெளிக் குறம், திருவரமுனி ஞானக் குறம் ஆகிய மூன்று குறங்களும் இக்கருவினை விளக்கிநிற்பது கருதத்தக்கதாகும். மேலும் வேதாந்தக் குறம், அகண்டவெளிக் குறம் ஆகிய குறங்களை இயற்றிய ஆசிரியரே முகவுரையில் "மற்றவை யிரண்டிலும் (வேதாந்தக் குறம், அகண்ட வெளிக் குறம்) ஆத்தும ஞானம் அடையப் பக்குவமான சில ஸ்திரீகளுக்கு அவர் களடைந்திருக்கும் பக்குவத்தையும், அந்த ஞானத்தையடைய வேண்டிய மார்க்கத்தையும் சொல்லியதாகவும் அமைக்கப் பட்டிருக்கிறது"[6] என்று கூறுவதும் இங்குக் குறிப்பிடத்தக்கது.

### இசுலாமியக் குறங்கள்

இசுலாமிய மதக் கருத்துக்களை விளக்கும் வகையில் எழுந்த குறங்கள் மூன்று. அவையாவன :

1. குறமாது அல்லது சொர்க்கக் குறம் அல்லது மாதுக்குறம்
2. ஞானக் குறம்
3. பிஸ்மில் குறம்

குறமாது மீறான்கனியண்ணாவி என்னும் புலவராலும், பின் இரண்டும் பீர்முகமது அப்பாவாலும் இயற்றப்பட்டுள்ளன. இம்மூன்று குறங்களும் அமைப்பில் வேறுபட்டு விளங்குகின்றன.

### குறமாது

இக்குறம் ஹக்கன் காப்புடன் தொடங்குகின்றது. 'சொர்க்கமாது சொன்ன நியதி யாவுந் துகளறத்' தொகுப் பதையே இக்குறத்தில் நோக்கமாக எடுத்துரைக்கின்றார் ஆசிரியர் (ப. 11).

அறபாத்து மலையில் குறவனுடன் வாழ்ந்து வருகின்றாள் குறமாது. அவள் நந்நபியைக் காண வரமருள வேண்டும் என்று தினமும் தொழுது வரும் நாளில் ஒருநாள் இரவு கனவில்

இறைத்தூதரைக் காண்கின்றாள். உடனே குறவனை எழுப்பித் தன் கனவைக் கூற, அவன் அவளை நம்பாது, 'இவ்வா றெல்லாம் நடக்குமோ' என வியந்து நிற்கிறான்; 'நீ நபியைக் கண்டதுண்டேல், வானில் மழை பெய்யவேண்டும்' என்று அவன் கூறி முடிக்கு முன்னர் மழை பெய்யத் தொடங்குகிறது. உடனே குறவன் பயந்து, அவள் இறைத்தன்மை வாய்ந்தவளே என்று உணர்ந்து, தன்னைப் பொறுத்தருளுமாறு வேண்டு கிறான். பின்னர், குறமாது அவனிடம் இசைவு பெற்று நந்நபியைக் காணப் புறப்படுகிறாள்; தன்னை நன்கு அலங்கரித்துக்கொண்டு,

> "ஆதியருள் பெருகும் எங்கள் அஹ்மதனார் திருப்பாதம்
> அன்புடனே காண்பேனேற் கூடுமணல் கூடாய்." (ப. 17)

என்று கூடலிழைத்துப் பார்க்கின்றாள்; பின்னர்ப் பல மலை களையும் கடந்து செல்கின்றாள். நந்நபி இதனையறிந்து ஜிபுரீலையழைத்து, குறமாதுக்கு ஒடுக்கை'யளித்து வருமாறு அனுப்புகிறார். ஜிபுரீல் குறமாதிற்கு ஒடுக்கையளித்து மறை கின்றார். உணவு உண்ட குறமாது ஹக்கனைத் தொழுது, தான் வரும் நீண்ட வழியைச் சுருக்கி வைக்குமாறு வேண்ட அவ்வாறே செய்கின்றார் நந்நபி.

நந்நபியின் இடத்தையடைந்து அவரைப் புகழ்ந்துரைக் கிறாள் குறமாது அக்குரல் கேட்டு அபூபக்கர், உதுமான் ஆகிய 'யார்கள்' வந்து பார்த்து, அவளை அடையாளம் தெரியாது திரும்புகின்றனர். பின்னர் பிலாலை அனுப்புகின்றார் நந்நபி. அவள் யார், அவள் ஊர், பெயர் முதலியன யாவை என வினவிய பிலாலிடம், நந்நபியிடம் அன்றிப் பிறரிடம் கூறேன் என்று கூறுகிறாள்; நபிகள் அவளை உள்ளே அழைத்துவரப் பணிக்கின்றார். குறமாது நபிநாயகத்தைக் கண்டு வணங்கு கின்றாள். அவர் அவளுடைய ஊர், பெயர் ஆகியவற்றை வினவ, 'பேதமையையுடைய பெண்ணாய்ப் பிறந்த யானும் பேரறியேன், ஊர் அறியேன் நபியே' என மறுமொழி கூறுகின்றாள். இவ்வாறு அவள் கூறியதும், நந்நபி அவள் சாதி, குலம், இங்கு வந்த கருமம் என்ன என்று கேட்கிறார்; அவளும் 'சாதி குலம் நீங்கள் அறிந்ததே. உங்கள் தமைக்கண்டு அருள்பெற வந்தேன்' என்று கூறுகின்றாள். அவளை அன்னம் வழங்குமனைக்குக் கொண்டு போகுமாறு கட்டளையிடுகின்றார் நந்நபி. அப்பொழுது அவள் தன் மனம் பொருந்தும் உணவு வகையினை அளிக்கக் கூடியவரின் குணநலன் எப்படிப்பட்டதாக

இருக்க வேண்டும் என்று கூறி, இறுதியில் முகமது நபியே தனக்கு உணவளிக்க வேண்டும் என்று முடிக்கின்றாள். நபியும் அவ்வாறே செய்கின்றார். பின்னர், குறமகள், தன் சாதியைக் கூறி, நபிகள் நாயகத்தின் தோற்றம், அவர் இறைத்தூதராக வந்தது ஆகியவற்றைக் குறித்திறனாக உரைக்கின்றாள். முகமது நபி, அவளுக்கு சொர்க்கப்பட்டு அளித்து, அவளுடைய கல்வி பற்றி வினவ, குறமாது தனது கல்வித் திறனைப் புலப் படுத்தும் வகையில் தொழுகை செய்யாதவர் இயல்பு, கெடு செயலுள்ளோர் இயல்பு, நோன்பு நோற்பதற்கு இடையூறு செய்வார் இயல்பு போன்ற பலவற்றைக் கூறி, தொழுகை செய்வதனாலும், கலிமா ஓதுவதனாலும் உண்டாகும் பலன் களைப் பின்னர் எடுத்துரைக்கின்றாள். பின்னர், அவள் ஷரீஅத், தரீகத், ஹகீகத், மஹரிபத் என்னும் நான்கு வழிநிலைகளையும், இருபத்தொன்பது எழுத்துக்கள் கொண்ட கலிமாவினையறிந்து தொழுபவர்க்கு உண்டாகும் நன்னெறியினையும், குருவாகும் தன்மையுடையோரைப் பற்றியும் கூறுகிறாள்; தன் வரலாற் றையும் உரைக்கிறாள். பிறகு, தன் குறவனிடம் மீண்டு, நடந்தவற்றையுரைத்து, அவனையும் நபியின் பாதத்தில் இணைந்து முக்திபெற அழைத்துச் செல்கிறாள். இறுதியில் வாழ்த்துடன் இக்குறம் முடிவுறுகின்றது.

கூடல் இழைத்தல், குறி கூறுதல் என்னும் இரு குறம், குற வஞ்சிக் கூறுகளைப் பெற்று, இசுலாமிய மதக்கோட்பாடுகளைக் குறப்பெண்ணின் வாயிலாகப் புலப்படுத்தும் இக்குறம், குறப் பெண்ணின் கதையாக விளங்குவதனால் 'குறமாது' என அவள் பெயராலேயே அழைக்கப் பெறுகின்றது.

### ஞானக் குறம்

பீர் முகமது அப்பா இயற்றிய ஞானக்குறம், பாட்டுடைத் தலைவனான மெய்ஞ்ஞானி முகியித்தீன் அப்துல்காதிர் ஜீலானி அவர்களைப் புகழ்தல், மகுமுது மலையின் வளம், வாசல் வளம், மக்கநாட்டின் வளம், கைக்குறி கூறுதல் என்னும் ஐந்து பகுதிகளாக அமைந்துள்ளது. இப்பகுதிகள் குறம், குறவஞ்சி இலக்கியங்களின் சிலகூறுகளை அடியொற்றி அமைந் தவை என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

### பிஸ்மில் குறம்

பீர் முகம்து அப்பா பாடிய மற்றொரு குறமான பிஸ்மில் குறம், 'பிஸ்மில்லா ஹிர்றஹ்மா னிர்றஹீம், என்னும் அரபுச்

சொற்றொடரின் பெருமையையும் புகழையும் எடுத்தியம்பு கின்றது. 'அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனு மாகிய அல்லாஹ்வின் திருநாமத்தால்,[8] எனப் பொருள்படும் இவ் இறை நாமம் பத்தொன்பது எழுத்துக்களைக் கொண்டது என்றும், ஒவ்வோர் எழுத்துக்கும் ஒவ்வோர் அறிவுநிலை உண்டு என்றும் கூறி, அப்பத்தொான்பது அறிவு நிலைகளையும் விளக்கிச் செல்கின்றார் ஆசிரியர்.

ஷரீஅத், தரீகத், ஹகீகத், மஹரிபத் என்பன இந்து சமயத்தில் கூறப்படும் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு பக்தி நிலைகளைப்போல, இசுலாமிய மதத்தில் கூறப்படும் படிப்படியான பக்தி நிலைகளை எடுத்துரைப்பன வாகும் என்பர், ம. மு. உவைஸ்[9]. இந்நிலைகளில் ஒவ்வொரு வரைப் பற்றிய அடையாளமும், ஒவ்வொரு நிலையின் மொழி விபரமும்—அதாவது—இசுலாமான பேர்களின் அடையாளம், ஷரீஅத்தின் மொழி விபரம்; ஆலிம்களுடைய அடையாளம், தரீகத்தின் விபரம்; ஆபிதுகளுடைய அடையாளம், ஹக்கீகத்தின் விபரம்; குருமார்களின் அடையாளம், முஹப்பத்தின் விபரம்—ஆகியவற்றைக் கூறுவதோடு, ஒவ்வொன்றிற்கும் உரிய பாதை மக்காம், வணக்கம் ஆகியன கூறப்படுகின்றன. இசுலாமியரின் முக்கியமான கடமைகளில் ஒன்றான தொழுகையைப் பற்றியும், சரியான குருவின்கீழ் வணக்கம் செய்ய வேண்டிய முறை யையும் பல அழகிய உவமைகளின் வாயிலாக விளக்கிச் செல் கின்றார் ஆசிரியர். கலிமாவுக்கு இருபத்து நான்கு எழுத்து உண்டு என்றும், அதில் 'லாஇலாஹ் இல்லல்லாஹ்' என்னும் திருநாமமும், முஹம்மதற் றசூலுல்லாஹ்' என்னும் திரு நாமமும் அடங்கும் விதம் பற்றியும் கூறி, இறுதியில் தாம் கூறியவற்றைத் தொகுத்து முடிக்கின்றார் ஆசிரியர். இக் குறத்தில் குறம், குறவஞ்சியின் எந்தக் கூறும் இடம்பெற வில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

வித்துவான் குறம்

வித்துவான் குறத்தில், அல்லி (அருச்சுனனின் ஏழு தேவி யருள் ஒருத்தி) வித்துவானாக மாறுவேடம் அணிய நேர்ந்த சூழ்நிலை கதையின் வரலாறாகக் கூறப்பட்டுள்ளது. மின் னொளிக்கு (மற்றொரு தேவி) ஸ்ரீமந்த கல்யாணம் செய்ய நினைத்து மற்ற எல்லாத் தேவியர்க்கும் அழைப்பு அனுப்பு கின்றான் அருச்சுனன். அல்லிக்கு எழுதிய ஓலையில் 'கொச்சி துரைச்சியலரக் கும்பிட்டேன் நான் அடியேன், வண்ணத்

துரைச்சியரை வணங்கினேன் நானும் இப்போ' என்று எழுதி யிருந்த வரிகளைப் படித்துக் கோபம் கொண்ட அல்லி அருச்சுனன்மீது கூத்துக் கட்ட நினைக்கின்றாள்; மதுரை அர சாளும் ஈஸ்வரியை வணங்கி ஆண்முகம் பெற்று வித்துவானாக மாறுகின்றாள். இக்குறத்தில் குறத்தி வரவில்லை என்பதும், குறத்தின் எந்தக் கூறும் இடம்பெறவில்லை என்பதும் குறிப் பிடத்தக்கன.

இறுதி இரண்டு குறங்கள் தவிரப் பிற குறங்கள், குறத்தி வருதல், குறி கூறுதல், மலைவளம், நாட்டுவளம் முதலியன கூறுதல் என இவற்றில் ஏதேனும் ஒரிரு கூறுகளைக் கொண் டுள்ளன; அக்கூறுகளின் வாயிலாகக் குற ஆசிரியர்கள் தம் கருத்துக்களை வெளிப்படுத்தியுள்ளனர். "பொதுமக்களைக் கவர்ந்த இலக்கிய அமைப்பில் வரலாறு, வைத்தியம் போன்ற செய்திகளைக் கூறுவது பிற்கால ஆசிரியர்களிடையே வழங்கிய ஒரு வழக்கம்"[10] எனக் குறிப்பிடுகின்றார் ந வீ. செயராமன். மருத்துவம், வரலாறு மட்டுமின்றி, தத்துவம், சமயம் தொடர் பான கருத்துக்களைக் கூறுவதற்கும் அவ்வக் காலத்துப் புகழ் பெற்ற இலக்கிய வகைகளைப் புலவர்கள் கையாண்டுள்ளனர் என்பதற்குக் குற இலக்கியம் சான்று பகர்கின்றது.

### குறவஞ்சி

குறவஞ்சி இலக்கியம் கடவுளர், அரசர்கள், வள்ளல்கள் ஆகியோருள் ஒருவரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு எழுந்த இலக்கியம் ஆகும். பாட்டுடைத் தலைவர் பவனியைக் கண்ட பாட்டுடைத் தலைவி, அவர்மீது மையலுற்று மயங்கு வதும், நிலா,தென்றல் போன்றவற்றை நோக்கிப் புலம்புவதும், அவ்வாறு புலம்பும் தலைவிக்குக் குறத்தி ஒருத்தி குறிகூறுவதும், குறத்தியைக் காணாமல் அவள் கணவனான குறவன் புலம்பு வதும், பறவை வேட்டையாடிக் கொண்டே வருவதும், பின்னர்க் குறவனும் குறத்தியும் சந்தித்து உரையாடுவதும் குறவஞ்சியின் மையக் கருத்துக்களாக விளங்குகின்றன. ஆயின், அவற்றை அமைத்துச் செல்வதில் குறவஞ்சிப் புலவர்கள் சிறு சிறு மாறுதல்களையும், புதுமைகளையும் புகுத்தியுள்ளனர்.

### பெயர் பெறும் முறை

குறவஞ்சி இலக்கியம் பெயர் பெறும் முறையிலேயே சில வேறுபாடுகளைக் காண முடிகின்றது. அர்த்தநாரீசுவரர் குறவஞ்சி, அழகர் குறவஞ்சி, கும்பேசர் குறவஞ்சி, செந்தி

லாண்டவர் குறவஞ்சி, திருமலையாண்டவர் குறவஞ்சி, தியாகேசர் குறவஞ்சி, பொய்யாமொழியீசர் குறவஞ்சி முதலான குறவஞ்சிகள் கடவுளரின் பெயரால் பெயர் பெற்றுள்ளன. ஸ்ரீ கிருஷ்ணமாரி குறவஞ்சியும், மாத்தளை முத்துமாரியம்மன் குறவஞ்சியும் இறைவியின் பெயரால் பெயர் பெற்றுள்ளன. தலத்தின் பெயரால் பெயர் பெற்றுள்ள சில குறவஞ்சிகளும் உண்டு: இரிஷிவிந்தக் குறவஞ்சி, குறுக்குத் துறைக் குறவஞ்சி, சிதம்பரக் குறவஞ்சி, சிவன்மலைக் குறவஞ்சி, சிற்றம்பலக் குறவஞ்சி, சோலைமலைக் குறவஞ்சி, திருக் குற்றாலக் குறவஞ்சி, திருப்பரங்குன்றக் குறவஞ்சி, நகுலமலைக் குறவஞ்சி, பெத்லகேம் குறவஞ்சி, வருணாபுரிக் குறவஞ்சி, விராலிமலைக் குறவஞ்சி முதலியன இவ்வகையைச் சாரும். சில குறவஞ்சிகள் தலத்தின் பெயருடன் இறைவனின் பெயரும் பெற்று விளங்குகின்றன. குன்றாக்குடி சிவ சுப்பிரமண்யக் கடவுள் குறவஞ்சி, சிக்கல் நவநீதேசுவர சுவாமி குறவஞ்சி, மண்ணிப்படிக்கரை நீலகண்டர் குறவஞ்சி முதலியன இவ் வகைக்குச் சில எடுத்துக்காட்டுக்கள் ஆகும். சரபேந்திர பூபால குறவஞ்சி, சகசிராசன் குறவஞ்சி ஆகியன அரசரின் பெயரால் வழங்குபவை ஆகும். தமிழரசி குறவஞ்சி பாட்டுடைத் தலைவியின் பெயரால் அமைந்துள்ளது. பாம்பண காங்கேயன் குறவஞ்சி, காங்கேயன் குறவஞ்சி, சுப்பிரமணிய முதலியார் பேரில் குறவஞ்சி ஆகியவை வள்ளல்களின் பெயரால் அமைந்தவை ஆகும். சாதியின் பெயரால் அமைந்துள்ளது ஓதாளர் குறவஞ்சி எனும் அலகுமலைக் குறவஞ்சி, தத்துவக் குறவஞ்சி, ஞானக் குறவஞ்சி, ஞானரத்தினக் குறவஞ்சி மெஞ்ஞானக் குறவஞ்சி, முந்தானந்தர் ஞானக் குறவஞ்சி என ஞானப் பொருளால் பெயர் பெறுகின்ற சில குறவஞ்சிகளும் காணப்படுகின்றன. வள்ளியம்மன் ஆயலோட்டும் குறவஞ்சி செயலால் பெயர் பெற்றுள்ளது. கூட்டுறவுக் குறவஞ்சி, பாரத ஸ்வதந்திர குறவஞ்சி முதலியன கூட்டுறவு இயக்கம், சுதந்திர இயக்கம் என இயக்கத்தின் பெயரால் பெயர் பெற்றுள்ளன.

காப்பு

கடவுள் வாழ்த்துடன் தொடங்கும் தமிழ் இலக்கிய மரபைப் பின்பற்றி, குறவஞ்சி இலக்கியமும் கடவுள் காப்புடன் தொடங்குகின்றது. பெரும்பான்மையான குறவஞ்சிகளில் விநாயகர் காப்பே முதன்மையாக இடம்பெற்றுள்ளது. பின்னர், பாடப்பெறும் தலத்தில் குடிகொண்டுள்ள இறைவன் இறைவி

ஜயயும், அத்தலத்தில் காணப்படும் பிற கடவுள்ரையும், அத்தலத்தைச் சுற்றி எழுந்தருளியிருக்கும் பிற தெய்வங் களையும் காப்புக் கடவுளராகப் பாடுகின்றனர், குறவஞ்சிப் புலவர்கள். சரபேந்திர பூபால குறவஞ்சியில் சரபோஜி மன்னரின் குல தெய்வமான சந்திர மௌலீசருக்கும் காப்புப் பாடப்பெற்றுள்ளது (பா. 2). சோலைமலைக் குறவஞ்சியின் ஆசிரியர், 'மாதா, பிதா, குரு, தெய்வம்' என்னும் மரபினைப் பின்பற்றி, மாதா, பிதா, பிதாமகர்க்கு முதலில் வணக்கம் செலுத்திப் பின்னர் வைணவ சமயாசிரியரைப் போற்று கின்றார் (பா. 3).

தமிழரசி குறவஞ்சியும், குறுக்குத்துறைக் குறவஞ்சியும் தமிழ்த் தாயைக் காப்புக் கடவுளாக வணங்கும் புதுமையினைப் புரிந்துள்ளன.

" ஐந்துறுப்பு முடையவிலக் கணமுடியா முடிமிசைவைத்
தவளைச் சேரன்
முந்துகாண் கெனப்பரம ரெழுதுமதி மலிந்ததிரு முகத்தி
னாளை
நந்துசிந்தா மணிப்படல நுதலிலம்ப கத்தினாளை
நறுந்தேன் கைப்ப
வந்ததிரு வாசகவாய் மொழியாளர் தமிழ்த்தாயை
வணங்கு வோமால். " (பா. 6)

என்று தமிழரசி குறவஞ்சி தமிழ்த்தாயை வணங்குகின்றது.

கிறித்தவ இலக்கியமான பெத்லகேம் குறவஞ்சியில் கடவுள் வாழ்த்து இயேசு கிறித்துவின்மீது பாடப்பெற் றுள்ளது (பா. 1-7).

### தோடையம்

தோடையம் என்னும் பகுதி பெரும்பான்மையான குறவஞ்சிகளில் அமைந்துள்ளது. "தோடகம் என்னும் வட சொல் நாடகச் சிறப்புப் பாயிரத்து முதற்கவியைக் குறிக்கும். இக்கவி கடவுள் வாழ்த்தாகவே அமையும்"[11] என்பர். இது "தொகுதியாகச் சேர்ந்து பாடப்பெறும் வாழ்த்தாக-நாடகத் தொடக்கத்தில் பாடப்பெறும் குழு உப் பாட்டாக (கோரசு)- அமையும்"[12] என்பாரும் உளர். மங்கைநாயகி, சரவணபவன், தும்பிமாமுகன், விஷ்ணு, வேதாளி, கலைமகள், அமரர்கள், திருமகள், பிரமன், சூரியன், பிரகஸ்பதி ஆகியோரைத்

துதிக்கும் பகுதியாகக் கும்பேசர் குறவஞ்சியில் (பா. 7) அமைந்துள்ளது போல், பல தெய்வங்களைத் துதிப்பதாகவே பெரும்பான்மையான குறவஞ்சிகளில் இப்பகுதி அமைந்துள்ளது. ஆயின், சோலைமலைக் குறவஞ்சியில், தோடையம் என்னும் பகுதி வைணவ ஆசிரியரான திருவாய்மொழிப் பிள்ளையைத் துதிப்பதாக அமைந்துள்ளது (பா. 25, 26). பெத்லகேம் குறவஞ்சியில், பரன், சுதன், மனுவேலர், பரிசுத்தரூபி ஆகியோரைத் துதிக்கும் பகுதியாகத் தோடையம் அமைந்துள்ளது (பக். 7-8).

மங்களம்

காப்பிற்குப் பின் மங்களம் பாடப்பெறுகின்றது. பாட்டுடைத் தலைவருக்கும், பிற தெய்வங்களுக்கும், தம்மை ஆதரித்த வள்ளல்களுக்கும் மங்களம் கூறும் பகுதியாக இது விளங்குகின்றது.

நூற்பயன்

நூற்பயன் கூறப்பெறுதல் குற்றாலக் குறவஞ்சி, சோலைமலைக் குறவஞ்சி, கும்பேசர் குறவஞ்சி, குறுக்குத்துறைக் குறவஞ்சி, ஸ்ரீ கிருஷ்ணமாரி குறவஞ்சி ஆகிய சில குறவஞ்சிகளில் காணப்படுகின்றது. நாட்டுப்புற இலக்கியங்களில்-பொதுவாகக் கதைப் பாடல்களில்-இறுதியில் 'இந்தக் கதைப் பாடலைக் கேட்டவர் இன்ன பயனைப் பெறுவர்' என்று கூறும் மரபு காணப்படுகின்றது. அதைப் போலக் குறவஞ்சியில்,

"பலவளஞ்சேர் குறவஞ்சி நாட கத்தைப்
படிப்பவர்க்கும் கேட்பவர்க்கும் பலனுண் டாமே."
(குற். குற., பா. 8)

என்றும்,

"மாவலிமை யைப்புகழை வழுத்திடுமிந் நூலை
மனவொருமை யோடுபடிப் போருடன்கேட் பாரும்
தாவமெது மின்றிநலங் கொண்டுபுவி வாழ்ந்து
தாய்வயிறு சோராமல் சேயடிசேர் வாரே."
(குறு. குற., பா. 8)

என்றும் நூற்பயன் கூறப்பெறுகின்றது.

அவையடக்கம்

காப்புப் பாடி முடித்த பின்னர், அவையடக்கம் கூறுதல் சில குறவஞ்சிகளில் காணப்படுகின்றது.

**கணபதி வருகை**

காப்பும், மங்களமும் கூறியபின், கணபதி வருகை கும்பேசர் குறவஞ்சியிலும், சரபேந்திர பூபால குறவஞ்சியிலும் இடம்பெற்றுள்ளது. இது முன்னதில் கட்டியக்காரன் வருகைக்கு முன்னரும் (பா. 10), பின்னதில் கட்டியக்காரன் வருகைக்குப் பின்னரும் (பா. 8) அமைந்துள்ளது. குறவஞ்சித் தமிழைக் காக்க கணபதி தோன்றினார் என்று கணபதியையும் ஒரு கதைமாந்தராகச் சித்திரித்துள்ளமை குறிப்பிடத்தக்க தாகும். சகசி மன்னர் குறவஞ்சியில் 'விநாயகர் தருவு' எனத் தெலுங்கு மொழியில் இயற்றப்பட்ட கீர்த்தனை ஒன்று காணப் படுகின்றது (பா. 1). ''தெருக்கூத்தில் தொடக்கத்தில் விநாயகரே ஆடுபரப்பில் தோன்றுவது இன்றைக்கும் வழக்கி லுண்டு. சில சமயங்களில் தெருக்கூத்துக் குழுவில் ஆட்கள் குறைவாயிருப்பின் விநாயகர் பொம்மை வழிபடப்படும்...... விநாயகர் வேடமிட்டு ஆடுகளத்தில் தோன்றும் முறை குறவஞ்சி போன்ற நாடகங்களுக்குப் பரவியமை தெருக்கூத்தி லிருந்து பெற்ற ஒன்றென்று கூறவேண்டும்''[18] என்னும் கருத்து இங்கே மனங்கொளத்தக்கதாகும்.

**இந்திரன் வருகை**

நகுலமலைக் குறவஞ்சியில் காப்பு முடிந்தவுடன், இந்திரன் தேவசபைக்கு எழுந்தருளுகின்றான்; தெய்வத் தச்சனான விசுவகன்மனை அழைத்து, குமரக் கடவுள் பவனி வருதற் பொருட்டு நான்கு வீதிகளையும் அலங்கரித்துத் தருமாறு கூறுகிறான்; இந்திரன் ஆணையை ஏற்று, விசுவகன்மனும் நகரை அலங்கரித்துத் தருகிறான் (பா. 17-24).

**கட்டியக்காரன் வருகை**

கட்டியக்காரன் பாட்டுடைத் தலைவர் பவனி வருதலைக் கூறி எச்சரிக்கை செய்தவண்ணம் வருகின்றான். கும்பேசர் குறவஞ்சியில் பாட்டுடைத் தலைவர் பவனி, நூலின் இறுதியில் இடம்பெறுவதால், கட்டியக்காரன், கும்பேசர் மீது மையல் கொண்ட தலைவியை அறிமுகப்படுத்துகின்றான். 'செகன் மோகினியார் தேவ சபைக்கு வருகிறார், எச்சரிக்கை பராக்கு பராக்கு' (கும். குற., ப. 11) என்று கட்டியக்காரன் எச்சரித்த பின் அவள் மேடையில் தோன்றுகிறாள். இத்தகைய வசனப் பகுதிகளேயன்றி, 'நிலவே யென் னிலவரத்தை நினையாதிங் கேன்வாராய் நில்லென் பாளே' (கும். குற., பா. 22) என

விருத்தப் பாடல்களும் கட்டியக்காரன் அறிவிப்புப் போலப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

தியாகேசர் குறவஞ்சி, நவநீதேசுவரசுவாமி குறவஞ்சி, தமிழரசி குறவஞ்சி, ஞானக் குறவஞ்சி, முத்தானந்தர் ஞானக் குறவஞ்சி, மெஞ்ஞானக் குறவஞ்சி ஆகியவற்றில் கட்டியக் காரன் வருகை இடம்பெறவில்லை.

கட்டியக்காரன் வருவதைக் கூறும் பகுதியில், கையில் பிரம்பு கொண்டு, காவிச் சல்லடமும், முப்புரிநூலும் அணிந்து, சவ்வாதுப் பட்டையும் வெண்ணீறும் பூசி (அல்லது நாமம் தீட்டி), சிந்துரப் பொட்டிட்டு, தலைப்பாகையணிந்து, மேன் மீசை முறுக்கிக்கொண்டு 'கார் கொண்ட முகிலேறு' என்ன வரும் அவனுடைய தோற்றம் சிறப்பிக்கப் பெறுகின்றது.

பெத்லகேம் குறவஞ்சி குருமுனி யோவான் கட்டியக் காரனாக வந்தான் எனக் குறிப்பிடுகின்றது. யோவான் ஸ்நானிகன் (John the Baptist) இயேசுவின் பிறப்பை உலக மக்களுக்கு அறிவித்தவர் என்பது கிறித்தவ மதச் செய்தி. அதைக் குறிப்பதற்காக இங்கும், இயேசுவின் பவனியை அறிவிக்கும் கட்டியக்காரனாக யோவான் ஸ்நானிகளைக் குறிப்பிடுகின்றார் ஆசிரியர் என்று எண்ணத் தோன்றுகின்றது.

"சமஸ்கிருத நாடக சூத்திரதாரன் நாடகத்தின் ஆரம்பத்தில் மாத்திரம் வந்து பிறகு வருவதில்லை"[14] என்னும் வடமொழி மரபிற்கேற்ப, குறவஞ்சியிலும், கட்டியக்காரன் முதலில் வரும் கதைமாந்தரை மட்டும் அறிமுகப்படுத்து கின்றான். இத்துடன் அவன் பணி முடிந்துவிடுகின்றது. பிறகு அவன் வருவதில்லை. வசனங்களும், விருத்தப் பாடல்களுமே அடுத்த நிகழ்ச்சி பற்றிய அறிவிப்பாக விளங்குகின்றன. ஆயின், தெருக்கூத்தில் வரும் கட்டியக்காரனோ கூத்து முடியும்வரை, அவ்வப்பொழுது வந்து நகைச்சுவையாகப் பேசி மகிழ்விப்பான். இவ்வியல்பு முத்துக்கவிராயர் இயற்றிய சகசிமன்னர்மீது பாடப்பெற்ற குறவஞ்சியில் காணப்படுகின்றது. இந்நூல் தெருக்கூத்து அமைப்பில் பாடப்பெற்றிருப்பதே இதற்குக் காரணம் ஆகும். நூலின் தொடக்கத்தில் 'யக்ஷகானம்' எனக் குறிப்பிடப்பட்டிருப்பதும் இதற்குச் சான்று ஆகும். இக் குறவஞ்சியில் ஒவ்வொரு நிகழ்ச்சியும் 'சூத்திரக்காரன் வசன' மாக அறிவிக்கப்படுகின்றது; சிங்கனுடன் சூத்திரதாரன் உரையாடும் பகுதியில் நல்ல நகைச்சுவை காணப்படுகின்றது.

### பாட்டுடைத் தலைவர் பவனி[16]

பின்னர், பாட்டுடைத் தலைவர் பவனி வருதல் இடம் பெறுகின்றது. இறைவனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டெழுந்த குறவஞ்சிகள், இறைவனுடைய தோற்றப் பொலிவினைப் பல புராணச் செய்திகள் வாயிலாக விளக்கு கின்றன. பெத்லகேம் குறவஞ்சியும், சரபேந்திர பூபால குறவஞ்சியும் பாட்டுடைத் தலைவரின் தோற்றத்தை வருணிக்காது, அவர்தம் பண்புநலன்களை எடுத்துக்கூறிச் சிறப்பிக்கின்றன.

தியாகேசர் குறவஞ்சி, தமிழரசி குறவஞ்சி, ஞானக் குறவஞ்சி, முத்தானந்தர் ஞானக் குறவஞ்சி ஆகியவற்றில் பாட்டுடைத் தலைவரின் பவனி இடம்பெறவில்லை.

கும்பேசர் குறவஞ்சியில் பாட்டுடைத் தலைவர் தம்மைத் துதிப்பார்க்கும், பாட்டுடைத் தலைவிக்கும் காட்சி தருதற் பொருட்டு நூலின் இறுதியில் எழுந்தருளுவதாகக் கூறப் பட்டுள்ளது.

அழகர் குறவஞ்சியில், வசந்த விழா நடைபெறும் வேளையில் எட்டு நாள்கள் எட்டு அவதாரக் காட்சியுடன் உலாவந்த மாலழகர், ஒன்பதாம் நாள் உற்சவத்தில் ஜெகன் மோகன கிருஷ்ண வடிவத்துடன் பவனி வருவதாகக் குறிக்கப் பட்டுள்ளது.

### உலாக் காணப் பெண்கள் வருதல்

தலைவன் உலா வருவதைக் காணப் பெண்கள் தத்தம் வேலையை அப்படி அப்படியே விட்டு விட்டு வருகின்றனர். அப்பெண்கள் ஒரு கை வளை பூண்டு, பிறிதொரு கை வளை பூண மறந்து, ஒரு கண்ணுக்கு மையிட்டு, பிறிதொரு கண் ணுக்கு மையெடுத்த கையுமாய் வருவதும், தலைவனைக் கண்டு மயங்குவதும், உலா வரும் தலைவன் யார் என ஐயுற்று நிற்பதும், தலைவனது தோற்றத்தைக் கொண்டு ஐயந்தெளி தலுமான செய்திகள் இப்பகுதியில் இடம் பெறுகின்றன. உலாக் காண வரும் பெண்கள் ஏழு பருவ மகளிர் என்பதைச் சோலைமலைக் குறவஞ்சி ஆசிரியர் குறிப்பாக உணர்த்து கின்றார். 'எழுவகைப் பருவ மின்னார் இப்படி மகிழ்ந்து கூடிக் கும்மியாடும் வேளையில் குமரமூர்த்தி பவனி வந்தார்' (பா. 37) எனக் கூறுவதன் வாயிலாக ஏழு பருவ மகளிர் பவனி காண வந்ததைப் புலப்படுத்துகின்றார் நகுலமலைக் குறவஞ்சி ஆசிரியர்.

பாட்டுடைத் தலைவி வருதல்

பாட்டுடைத் தலைவியின் பெயர் பெரும்பான்மை வல்லி என்றோ, மோகினி என்றோ முடிவதாகக் காணப்படுகின்றது. சில எடுத்துக்காட்டுகள் வருமாறு:

| | | |
|---|---|---|
| வசந்தவல்லி | — | திருக்குற்றாலக் குறவஞ்சி |
| சுந்தரவல்லி | — | சோலைமலைக் குறவஞ்சி |
| மதனவல்லி | — | சரபேந்திரபூபால குறவஞ்சி, ஸ்ரீகிருஷ்ணமாரி குறவஞ்சி |
| காமரசவல்லி | — | திருமலையாண்டவர் குறவஞ்சி |
| அதிமோகனவல்லி | — | அழகர் குறவஞ்சி |
| இராசமோகினி | — | தியாகேசர் குறவஞ்சி, நகுலமலைக் குறவஞ்சி |
| வாலகோகில மோகினி | — | பொய்யாமொழியீசர் குறவஞ்சி |
| அதிரூபமோகினி | — | சிதம்பரக் குறவஞ்சி, சிவசுப்ரமண்யக் கடவுள் குறவஞ்சி |
| வசந்தமோகினி | — | இரிஷிவிந்தக் குறவஞ்சி |
| செகன்மோகினி | — | கும்பேசர் குறவஞ்சி |
| வால மோகினி | — | சிவன்மலைக் குறவஞ்சி |

ஓதாளர் குறவஞ்சியில் வரும் பாட்டுடைத் தலைவியின் பெயர் மோகனாங்கி; தமிழரசி குறவஞ்சி, பாட்டுடைச் தலைவியின் பெயரால் நூற்பெயர் அமையும் சிறப்பினைப் பெறுகின்றது.

பாட்டுடைத் தலைவியின் அழகைக் கேசாதிபாதமாக வருணிக்கும் இயல்பு பெரும்பான்மையான குறவஞ்சிகளில் காணப்படுகின்றது. குற்றாலக் குறவஞ்சியிலும், பெத்லகேம் குறவஞ்சியிலும் வரும் தலைவி மங்கைப் பருவத்தினளாகச் சித்திரிக்கப்படுகின்றாள்.

தலைவன் உலா வரும் வேளையில் தலைவி பந்தடித்து விளையாடுதல், சோலையில் மலர் பறித்தல், கும்மியடித்தல்,

ஊஞ்சலாடிக் கொண்டிருத்தல், அம்மானை ஆடிக் கொண்டிருத்தல் என ஏதேனும் ஒரு விளையாட்டில் ஈடுபட்டிருப்பதாகப் பெரும்பான்மையான குறவஞ்சிகள் கூறுகின்றன. எந்த விளையாட்டிலும் ஈடுபடாமல் தலைவி தலைவனைத் துதித்துக் கொண்டிருப்பதாகக் கூறுகின்றது கும்பேசர் குறவஞ்சி.

தலைவன் பவனி கண்ட தலைவி, 'இந்தச் சித்தர் ஆரோ' என வியக்க, தோழிமார் அவருக்குத் தலைவனின் புகழைக் கூற, அதனைக் கேட்ட தலைவி காதல் வயப்படுகிறாள்; மயங்கி வீழ்கிறாள். மயங்கி வீழ்ந்த தலைவிக்குத் தோழியர் சந்தனக் குழம்பு பூசுகின்றனர்; பன்னீர் தெளிக்கின்றனர்; அவளை வாழைக்குருத்திற் கிடத்துகின்றனர்; பல்வேறு பணிவிடைகளைச் செய்கின்றனர்.

மயங்கிய தலைவியைக் கண்டு இரங்கிய தாய் சகியரைக் கொண்டு உபசரிப்பதும், பின்னர் அவளைக் கோபித்து உரைப்பதும் ஆகிய செய்திகள் அழகர் குறவஞ்சியில் இடம் பெற்றுள்ளன. பின்னரே அவள் தனிமையில் புலம்பத் தொடங்குகிறாள். குறுக்குத்துறைக் குறவஞ்சியில், தலைவியின் மயக்க நிலைக்குக் காரணம் அறியாது தோழியர் திகைத்து நிற்க, முதுதாதி ஒருத்தி நடந்ததைக் கேட்டுணர்ந்து, அவள் காய்ச்சல் காமக் காய்ச்சல் என அறிந்து, சில செயல்களைச் செய்யுமாறு கூறுகின்றாள். தலைவி மயக்கம் நீங்கி எழுந்தவுடன் 'மறுகினிற் கண்ட காளை முயங்கிட வேண்டி நெஞ்சம் முனைந்தனையோ' என முதுதாதி வினவத் தலைவி தேகம் பசந்து, பாலும் தேனும் கசந்த தன் நிலையைக் கூறி வருந்துகிறாள். முதுதாதி 'தோகைமயில் வேலன் வந்தருள்வன்' (பா. 20—23) என அவளுக்கு ஆறுதல் அளிப்பதாக அமைந்துள்ளது.

சோலைமலைக் குறவஞ்சியில், தலைவி தலைவனின் பவனி கண்ட பின்னரே பந்தடித்து விளையாடுகின்றாள். அப்பொழுது மாலை நேரம் வருகின்றது; சுந்தரேசனிடம் சிந்தை சென்ற தலைவி மாலையின் கொடுமையை உணர்கின்றாள்; கங்குலை வெறுத்து உரைக்கின்றாள். அந்நிலையில் வானத்தில் நிலா எழுகின்றது. குளிர்ச்சி தரவேண்டிய நிலா அவள் மீது அழலைச் சொரிகிறது. எனவே, தலைவி அதையும் வெறுத்துரைக்கின்றாள். அவள் தென்றலையும், மன்மதனையும் வெறுத்து உரைப்பதைக் கேட்ட தோழி, அவளுடைய இந்நிலைக்குக்

காரணம் என்ன என்று வினவுகின்றாள்; அவள் 'தேவ சிகாமணியை மேவ மனம் துணிந்த சேதி'யினைத் தோழியிடம் உரைக்கின்றாள். அப்பொழுது தோழி வேண்டுமென்றே தலைவனைப் பழித்துரைக்க, தலைவி அவனுடைய பெருமை களை எல்லாம் எடுத்துக் கூறுகிறாள்; காதல் மிகுந்த நிலையில் புலம்பி மயங்குகிறாள். பின்னரே, தோழியர் அவளுக்குச் 'சீதளோபசாரம்' செய்கின்றனர். மாலை நேரந்தான் காதல் வயப்பட்ட பெண்களுக்குத் துயர் விளைவிக்கும் நேரம் என்றெண்ணி ஆசிரியர் இம்மாறுதலைச் செய்துள்ளார் போலும். 'காலை அரும்பிப் பகலெல்லாம் போதாகி, மாலை மலரும் இந்நோய்' (குறள், 1227) என்னும் வள்ளுவர் வாக்கும் இங்கே நினைவுகூரத்தக்கது.

பிற குறவஞ்சிகளில், சீதளோபசாரம் செய்ததால் மயக்கம் நீங்கி எழுந்த தலைவி, மன்மதனையும், நிலா, தென்றல், கடல், குயில், மச்சம், வங்கம், அன்னம் ஆகியவற்றையும் நோக்கித் தனக்குத் துன்பம் விளைவிப்பதாகக் கூறிப் புலம்புதல் கூறப்பட்டுள்ளது. தலைவி பாட்டுடைத் தலைவனையே விளித்து இரங்கிக் கூறுதல் தியாகேசர் குறவஞ்சியில் மட்டும் காணப்படுகின்றது.

தோழி வருகை

தலைவி காதல் வேட்கையால் நிலவு, தென்றல் முதலிய வற்றைப் பழித்துரைத்தபின், தன்னுடைய நிலையைத் தலை வருக்கு எடுத்துக்கூறத் தன் சகி இன்னும் வரக்காணோமே என்று வருந்தும் நேரத்தில் தோழி வருகின்றாள்.

சில குறவஞ்சிகள் தோழியின் பெயரைக் குறிப்பிடுகின்றன. தோழியின் பெயர் சோலைமலைக் குறவஞ்சியில் கோமளை என்றும், தியாகேசர் குறவஞ்சியில் மோகனரேகை என்றும், நவநீதேசுவரசுவாமி குறவஞ்சியில் முத்துரேகை என்றும், நகுலமலைக் குறவஞ்சியில் சுந்தரலேகை என்றும், பொய்யா மொழியீசர் குறவஞ்சியில் சரசசிந்தாமணி என்றும், இரிஷி விந்தக் குறவஞ்சியில் அம்புசவல்லி என்றும், சுப்பிரமணிய முதலியார் குறவஞ்சியில் சுரதவல்லி என்றும் குறிப்பிடப் பட்டுள்ளது.

கும்பேசர் குறவஞ்சி, நகுலமலைக் குறவஞ்சி, குன்றாக்குடி சிவசுப்பிரமண்யக் கடவுள் குறவஞ்சி, சிவன்மலைக் குறவஞ்சி, பொய்யாமொழியீசர் குறவஞ்சி, நவநீதேசுவர சுவாமி

குறவஞ்சி ஆகியன, தலைவியை வருணிப்பதுபோல் தோழியின் அழகையும் வருணிக்கக் காணலாம்.

தன் வருத்தத்திற்குக் காரணம் வினவும் தோழியிடம் தலைவி, தலைவன்மீது தான் கொண்ட காதலை வெளிப் படுத்துகின்றாள். தோழி, தலைவனின் இயல்பைப் பழித்தலும், தலைவி, அவனது பெருமைகளை இயற்பட மொழிதலும் ஆகிய செய்திகள் பின்னர் இடம்பெறுகின்றன. தோழி, தான் அவளுக்குச் செய்யக்கூடியது என்ன என்று வினவ, தலைவி தலைவனைச் சந்திக்கக்கூடிய பொழுதினைக் கூறித் தலைவன் பால் தோழியினைத் தூது விடுக்கின்றாள்.

கும்பேசர் குறவஞ்சியில் வரும் தோழி, வருந்தும் தலைவி யைக் கண்டு தானும் வருந்திக் கும்பநாதரைத் துதித்துந் தலைவிக்கு அருள்செய்ய வேண்டுகின்றாள்; பின்னர், குறி சொல்லும் குறத்தி வருவதைத் தலைவிக்கு அறிவிக்கின்றாள் (பா.32-34). தியாகேசர் குறவஞ்சியிலும், தோழி ஆரூரன் வீதியில் வரும் குறத்தியை அழைத்து வருவதாகவும், தலைவியின் மனக்குறை தீரக் குறி கேட்க வேண்டும் என்றும் கூறிச் சென்று விடுகின்றாள் (பா.19).

அழகர் குறவஞ்சியில் வரும் தோழி அழகரிடம் சென்று, மோகனவல்லியின் வனப்பையும், காதலையும் வணங்கித் தெரிவிக்கின்றாள்; பின்னர் வல்லியிடம் திரும்பி வந்து, 'அழகர் நாளையுன்பால் சேர்வர்' என்று கூறுகின்றாள். அழகர் தன்பால் வரவில்லையே என ஏங்கும் மோகனவல்லிக்கு, 'காதலை மனதில் அடக்க வேணும், கர்த்தனுக்கும் இச்சை கொடுக்க வேணும் ... உள்ளத்தில் நம்பிக்கை கொள்ள வேண்டாமோ, கிணற்று நீரை வெள்ளம் கொண்டு போமே .. ஆக்கப் பொறுத்தவர்க்காறப் பொறாதோ...எங்கள் அழகர் க்ருபையால் எப்படியும் எண்ணின காரியம் நன்மையாய் முடியும்' (தி.25) என்று கூறி அமைதிப்படுத்துகின்றாள் தோழி.

திருமலையாண்டவர் குறவஞ்சியில் மட்டும் குறத்தி குறி கூறி முடித்த பின்னர், முருகனின் கடப்பமாலையைப் பெற்று வரும் தோழியைக் காண்கிறோம்.

"தெருள்பெறு தோழி வந்து திருமலைக் கந்த நாதன்
அருளிய கடப்ப மாலை அன்பினால் கொண்டு வந்து
மருமலர்க் குழல்சேர் காம வல்லிகைக் கொடுப்பது வாங்கிப்
பெருமயல் தீரப் பூண்டு பேரின்ப மேபெற் றாளே.'

(பா.65)

என்னும் பாடலில் தோழி கொணர்ந்த மாலையைப் பெற்று மகிழும் தலைவியின் நிலை உணர்த்தப்பட்டுள்ளது.

குன்றாக்குடி சிவசுப்பிரமண்யக் கடவுள் குறவஞ்சியில் வரும் தோழி, தலைவரிடம் தூது சென்று, தலைவியிடம் திரும்பி வந்து, அவளது காதலைத் தலைவர் ஏற்றுக் கொண்டதனை வெளிப்படுத்துகின்றாள்.

"சன்னிதியின் வைபோகமென்ன சொல்லேனினிய
  தையலேநீ யதிஷ்ட சாலியடி மானே
நின்னுடைய மனம்போலு மன்னர்க்கு மிருந்தமன
  நேசமும் விசுவாசமும் விலாசமுங் கண்டேனே
கண்டுசமையம் பார்த்துக்கொண்டு நின்னெழில் சொல்வேன்
  கருத்தறிந்து மிகநோக்கிக் கருணையுட னேரே
வண்டுமது வுண்டுமயல் கொண்டுளருந்தண் கடப்ப
  மாலைதந் தாருனைப்போல் மாலையுங்கொண் டாரே"

(பா.58)

என்னும் பாடல் தோழி தலைவரிடமிருந்து மாலை பெற்று வந்ததை மட்டுமன்றித் தலைவிபால் தலைவர் மால் கொண்டதனையும் கூறுவது குறிப்பிடத்தக்கதாகும்.

யக்ஷகானம் எனப்படும் சகசி மன்னர் குறவஞ்சியில், தலைவி சகசி மன்னரை அடைவதற்காகக் கிளி, குயில், வண்டு, அன்னம் ஆகியவற்றைத் தூது விடுக்கிறாள். தூது சென்றவை திரும்பவில்லை. அதன் பின்னர், அவள் தோழியை அழைத்து, சகசி மன்னரை அடைய வழி சொல்லுமாறு கேட்கிறாள்; பின்னர் அவளும் தூது சென்றால் வருவாளோ மாட்டாளோ என்று கருதிக் குறத்தியை அழைத்து வருமாறு கூறுகிறாள்; குறத்தி குறி கூறிச் சென்ற பின்னரே தோழியைத் தலைவன்பால் தூது விடுகின்றாள்.

## தலைவி கூடலிழைத்தல்

தூது சென்ற தோழி திரும்பி வருவதற்குள், தலைவி கூடலிழைத்துப் பார்க்கின்றாள். "கூடலிழைத்தலாவது காதல் கொண்ட பெண்கள் பூமியில் மணலைப் பரப்பிக் கண்களை மூடிக்கொண்டு தம்முடைய நான்கு விரல்களையும் மடக்கிச் சுட்டு விரலால் வட்டமாகக் கீறி, கீறும்போது ஊன்றிய இடத்தில் சுட்டுவிரல் நுனி வந்து பொருந்தியதா என்று பார்த்தல். அங்ஙனம் பொருந்துவது நாயகன் வருவான்

என்பதற்கும், பொருந்தாதது நாயகன் வரமாட்டான் என்பதற்கும் அறிந்து கொள்ளும் குறி"[16] என்பர். குற்றாலக் குறவஞ்சி, அழகர் குறவஞ்சி, திருமலையாண்டவர் குறவஞ்சி, சோலைமலைக் குறவஞ்சி, ஸ்ரீகிருஷ்ணமாரி குறவஞ்சி முதலான பல குறவஞ்சிகளில் இச்செய்தி காணப்படுகின்றது.

குறத்தி வருகை

தலைவி கூடலிழைத்துப் பார்த்துக் கொண்டிருக்கும் பொழுது குறி சொல்லும் குறத்தி வருகிறாள். தலைவனைச் சேர முடியுமா என்பதை அறிந்து கொள்வதற்குக் குறத்தியை அழைத்து வருமாறு தலைவி தோழியை அனுப்புகிறாள்; தோழி சென்று குறத்தியை அழைத்து வருகிறாள்.

தியாகேசர் குறவஞ்சியில் நாரதரே குறத்தியாக வந்து தோன்றுவதாகக் கூறப்பட்டுள்ளது (பா. 20: 104—105). ஸ்ரீகிருஷ்ணமாரி குறவஞ்சியில் மாதவனே குறத்தியாகத் தோன்றி, மதனவல்லிக்கு அருள்வாக்கு இயம்பியதாகக் குறிக்கப்பட்டுள்ளது (ப. 59). இலக்ஷணக் குறவஞ்சியில் இலக்குமி குறத்தி வடிவங் கொண்டு தலைவியாகிய கங்கைக்குக் குறியுரைக்க வருவதாகவும், அவள் தன் பெயர் 'கமலி' எனக் கூறிக் கொள்வதாகவும் சித்திரிக்கப்பட்டுள்ளது (ப. 16). பெத்லகேம் குறவஞ்சியில் குறத்தியின் பெயர் 'விசுவாசம்' என்று சுட்டப்பட்டுள்ளது. (ப. 55).

குறத்தி பாட்டுடைத் தலைவியின் தசாங்கம் பாடிய வண்ணம் வருகின்றாள். குறத்தியின் தோற்றப் பொலிவு எல்லாக் குறவஞ்சிகளிலும் விரிவாகவும் சுவையாகவும் வருணிக்கப்பட்டுள்ளது.

குறத்தி தன்னை அழைக்கவரும் தோழிக்கே குறியுரைத்த செய்தி பொய்யாமொழியீசர் குறவஞ்சியில் சிறப்பிடம் பெறுகின்றது. 'எனக்கோர் குறிசொல்' என்ற தோழியின் கையைப் பார்த்து,

> " நீயுமோர் மாது நேசமாம் பாங்கி
> ஞாயமாய்த் தேடி நாடிவந் ததுவும்
> என்னையே உன்னை யிங்கனுப் பினவள்
> தன்னையும் அவள்தன் தலைவா சலையும்
> குறக்கூடை யம்மாள் கொடுத்திடும் வரத்தால்
> திறப்பட அறிந்தேன் சேடிவா." (பா. 28: 64—69)

என்று கூறி, அவளுடன் தலைவியை நோக்கிச் செல்கின்றாள் குறத்தி.

பாட்டுடைத் தலைவரின் வாசல்வளம், மலைவளம், நாட்டுவளம், தலவளம், கிளைவளம், நதிவளம், தீர்த்தவளம் எனப் பல்வேறு வளங்களைக் கூறிய பிறகு, குறத்தி தன் குறித் திறனைத் தலைவிக்கு உணர்த்துகிறாள்; பின்னர், அவளுக்குக் குறி பார்க்கத் தொடங்கினாள்; குறி சொல்லத் தொடங்குமுன் செய்ய வேண்டியவைகளைச் செய்து, தன் குல தெய்வங்களை வணங்கி, தலைவியின் மனக்குறியைப் புலப்படுத்திப் பரிசில் பெற்றுச் செல்கின்றாள். பாட்டுடைத் தலைவரின் மலை வளமும், நாட்டுவளமும், குறத்தியின் குறி வளமும், அவளது குறக்குடியின் இயல்புகளும் இப்பகுதியில் சிறப்பிடம் பெறு கின்றன.

தலைவனின் மலைவளம் முதலியன பாடும் பகுதியில், நீலகண்டர் குறவஞ்சியில் வரும் குறத்தி,

"குவலயத்தில் புண்ணியநதி மூன்றரைக் கோடியுண்டு
அவையெல்லாம் நானறிவேன்
நவிலவென்றால் அதுதான் நாலொன்பது நாள்செலும்."
(பா. 49: இ)

என்றும்,

"நலமாமிம் மலைதோறும் நாங்கள் குடில்எடுத்தே
நயத்திருந்த வகைசொல்ல நாவாயிரம் வேண்டும்."
(பா. 45: ஒ)

என்றும்,

"பாரினில் நான்கற்ற வித்தைசொல்ல வென்றால் — இரு
பத்துநாள் செலும்." (பா. 53: உ)

என்றும் கூறித் தன் உலகியல் அறிவையும், குடிப்பெருமை களையும் புலப்படுத்துகின்றாள்.

நீலகண்டர் குறவஞ்சி, சரபேந்திர பூபால குறவஞ்சி ஆகியவற்றில் வரும் குறத்தியர், தாம் வாழும் மலை நேரிமலை என்றும், அம்மலையினைத் தேர்ந்தெடுத்ததற்குக் காரணமும் கூறுகின்றனர். இவ்விரண்டு குறவஞ்சிகளும் தஞ்சாவூரை அடுத்தடுத்து அரசாண்ட துளசாஜி, அவர் மகன் சரபோஜி ஆகியோர் காலத்து எழுந்தவை என்பது இங்கே குறிப்பிடத் தக்கது.

"மைந்நாக பருவதத்தில் வந்துகுடில் தொடுத்தோம்
வாசவனுக் கஞ்சிக்கடல் வைகியதை விடுத்தோம்

மெய்ந்நாகம் நீடிவளர் விந்தியத்திற் றடுத்தோம்
மேதினியிற் குறுமுனிவன் மிதித்தழுந்த விடுத்தோம் ''
(பா. 45: ஐ)

என்று நீலகண்டர் குறவஞ்சியில் வரும் குறத்தி கூறுகிறாள், இதைப் போன்றே, சரபேந்திர பூபால குறவஞ்சியில் வரும் குறத்தியும் 'மேருமலை சாபமலை என்றுரைத்தார். தாபமொடு விடுத்தோம்; கைலைமலை சென்றோம்—தவப்பூத கணங்கள் கண்டோம், சிவப்பிரீதி என்றோம்; காளத்தி திண்ணன் கண்ணைப் பறித்ததுமுன் என்றார், பயந்தோம்; குற்றாலமலை சென்றோம்—அருவியில் மூழ்கிடுவீர் என்றார், நழுவி வரலானோம்' என்று வடவேங்கடம், பழனிமலை, ஆனைமலை, கொல்லிமலை, விராலிமலை, சோலைமலை, சுவாமிமலை, பிரான்மலை, சிராமலை ஆகியவற்றை விடுத்ததற்கான காரணத்தைக் கூறுகிறாள்; பின்னர், 'தராதலம் போற்றிட மேவும் தஞ்சையில் எந்நாளும் தங்கு சரபோஜி மன்னர் சிந்தை மகிழ்ந்தாளும் புராதன மலையாகப் புகழ் தவத்தோர் முந்தப் பொருந்திவளர் நேரி எங்கள் சிறந்த மலை—சந்தமுறு நேரி எங்கள் சொந்தமலை அம்மே' (பா. 40) என்று சொந்தமலையைத் தேர்ந்தெடுத்ததற்கான காரணத்தைக் குறிப்பிடுகின்றாள்.

மலைவளம் பாடுமிடத்து, இருபதாம் நூற்றாண்டில் எழுந்த மாத்தளை முத்துமாரியம்மன் குறவஞ்சியில் வரும் குறத்தி, இந்நூற்றாண்டின் சமூக நிலையினால் மலைவளமும் அழகும் கெட்டதைச் சுட்டிக் காட்டுகின்றாள்.

'' ஆங்கிலரென் றெங்கிருந்தோ வந்தவொரு சாதி
அந்தமலை அழகுகெடத் தேயிலையை நட்டார்
பாங்குநிறை மலைவளமும் பழுதுபட லாச்சு
பண்டிருந்த பார்வதியும் பறந்தோடிப் போச்சு
ஆங்குவொரு மாரியம்மை அவளிருப்ப தாலே
அந்தமலை மீதுமழை வந்திறங்கு தையா
நாங்களுறை அழகுமலை நல்லமலை யையா
நாகரிகங் கொள்வதிலை எவர்வரினு மையா.''
(பா. 59)

என்று ஆங்கிலேயரின் வரவால் மலைவளம் பாழ்பட்டதையும், மாரியம்மையின் அருளால் மீண்டும் அம்மலை செழித்ததையும் அவள் குறிப்பிடுகின்றாள்,

குறவஞ்சியில் மலைவளம் கூறுவதாக வரும் பகுதியை ஆராயுமிடத்து, பாடப்பட்ட தலம் மலையைச் சார்ந்து இருப்பின் அம்மலைச் சிறப்பினைப் பாடுவதையும், அவ்வாறு இல்லாதவிடத்துக் குறத்தி தான் அறிந்த மலைகளை எல்லாம் கூறுவதாகப் பாடுவதையும் காண்கிறோம். கும்பேசர் குறவஞ்சியில் வரும் குறத்தி, 'மலைவளங் கூறுதல்' என்னும் பகுதியில், கும்பநாதர் நாட்டில் உள்ள மலையின் அதிசயத் தினை உரைத்தாலும் (பா. 51), அம்மலையின் பெயரைக் குறிப்பிடவில்லை. மலைவளம் பாட வேண்டும் என்ற மரபைப் பின்பற்றித் தம் கற்பனைத் திறத்தால் ஆசிரியர் இப்பகுதியை அமைத்துள்ளார் என்று கொள்வதற்கு இது இடமளிக்கின்றது. குறத்தியர் மலைவளம் பாடும்பொழுது, மலையில் காணப்படும் பல வகையான மூலிகைகள், பச்சிலைகள் ஆகியன பற்றி எடுத் துரைக்கின்றனர்; அம்மலையின் செழிப்பையும், அங்கே விலங்குகள் ஒன்றோடொன்று ஒற்றுமையாய்க் கூடி வாழும் நிலையினையும் சிறப்பாகக் கூறுகின்றனர்.

நாட்டுவளம் கூறும் பகுதியில், குறத்தி பாட்டுடைத் தலைவரது நாட்டின் நீர்வளம், நிலவளம், செல்வச் செழிப்பு, நாட்டுமக்களின் நன்னெறி வாழ்க்கை, அங்கே காணப்படும் சைவ, வைணவத் தலங்கள் ஆகியவற்றை எடுத்துக்கூறும் பாங்கினைக் காண்கிறோம். தலவளம், தேசவளம், நதிவளம் முதலியனவற்றைக் கூறும் பகுதிகள் அவ்வத் தலத்தின், தேசத்தின், நதியின் சிறப்பைப் புலப்படுத்துவதாகவோ அன்றி, குறத்தி தான் சென்று வந்த தலங்களின், தேசங்களின் சிறப் பினையும், நீராடி வந்த புண்ணிய நதிகளைக் கூறுவதாகவும் அமைவதோடு, குறத்தியின் பரந்த அறிவையும் புலப்படுத்தும் வகையில் அமைந்துள்ளன. குறத்தி குறி கூறுவதாக வரும் பகுதி, அவளுடைய சாதிப் பிரிவுகள், குலப்பெருமை, குடி இயல்புகள், குறவரின் தொழில், குறி கூறும் முறை, முன்னோர் குறிச் சிறப்பு, அவளது குறித்திறன், கைக்குறி, மெய்க்குறி, மொழிக் குறி, விழிக்குறி, மனக்குறி ஆகியன பார்க்கும் திறன், தெய்வ வழிபாடு, தெய்வ வாக்காகக் குறியுரைத்தல் போன்ற குறவர் வாழ்வியலைப் புலப்படுத்துவதாக அமைந்துள்ளது. பின்னர், குறத்தி, தலைவி அளித்த பரிசிலைப் பெற்றுச்செல்வதாக அமைந்துள்ளது.

ஸ்ரீ கிருஷ்ணமாரி குறவஞ்சியில் வரும் குறத்தி, தலைவி தலைவனைச் சேர்வதற்குரிய மார்க்கமும் கூறுகின்றாள்; பாவை நோன்பில் கண்ணனை அடைந்த காத்யாயனி,

ஆண்டாள் ஆகியோரைப் பற்றிக் கூறி, 'திருவேற்காட்டில் வாழும் கருமாரியை-கோவிந்தன் சகோதரியைத்-துதித்துப் பூசைசெய்தால் வேதபுரிப் பெருமான் உன்னை ஆட்கொள் வான்' (பக். 54-58) என்று அருள்வாக்குக் கூறி மறைகின்றாள். இக்குறவஞ்சியில் மாதவனே குறத்தி வடிவம் கொண்டு வருவதாக ஆசிரியர் காட்டியுள்ளார். ஆதலின், 'அருள்வாக்கு', 'மறைந்தாள்' என்னும் சொல்லாட்சிகளை அவர் கையாண் டுள்ளார் போலும்.

## தலைவர் தலைவியை மணம் புரிதல்

அழகர் குறவஞ்சியில் வரும் குறத்தி தலைவிக்குக் குறி கூறி முடித்தபின்னர். கண்ணனின் வரவையும் கூறுகின்றாள். தலைவி அதிமோகனவல்லி, தன்னை வருத்திய மன்மதனைத் தப்பிப் போகுமாறு விரட்டுகின்றாள். பின்னர், மால் அழகர், ஓமம் வளர்த்து, ஆகமம், மந்திரம் உச்சரித்து மறைமுறை யோடு வேதியர் சொல்மொழியின்படி நன்னயமாகத் தலைவி யைத் திருமணம் புரிகின்றார் (கீ. 42).

## சிங்கன் வருகை

குறத்தி குறி சொல்லிப் பரிசில் பெற்றுச் சென்ற பின்னர், அவளைத் தேடிக்கொண்டு அவள் கணவனாகிய சிங்கன் என்னும் குறவன் தன் கையாளுடன் வருகின்றான். வக்காமணி பூண்டு, கொக்கிறகு சூடி, கச்சை இறுக்கிக் கட்டி, தூணி தூக்கிக் கைக்கான ஆயுதங்கள் கொண்டுவரும் சிங்கனின் தோற்றம் இங்குக் கூறப்பெறுகின்றது. சைவ சமயத்தைச் சார்ந்த குறவஞ்சி ஆயின், 'சிவன் நாமம் கூறாதவர் சிகை தனைப் பிடித்துப் பலமயிர் நறுக்கிச் சில கண்ணி முறுக்கிப் பறவைகள் படுக்கும் குளுவன்' என்றும், வைணவ சமயத்தைச் சார்ந்த குறவஞ்சியாயின், 'திருமால் அழகர் பாதம் ஒரு காலும் வணங்காதவர் சிகையை நறுக்கிக் கண்ணிவகை திரிப்பேன், ஒருமையோடு எட்டெழுத்தைக் கருதா மாந்தர்கள் நாவை ஒட்ட அறுத்துக் கண்ணிக் கொட்டுகள் சேர்ப்பேன்' என்றும் கூறிச் சிங்கன் தன் வலிமையைப் புலப்படுத்து கின்றான்.

முத்தானந்தர் ஞானக் குறவஞ்சியில் சிங்கியைத் தேடி வரும் சிங்கனிடம் ஊரார் அவனுடைய குலம், ஊர் முதலியன வினவ, அவன் தன் பெருமையினையும், தான் ஆற்றூர்க் குறவன் என்பதையும் விவரிக்கின்றான். இந்நிலையில் மழை பெய்கிறது.

"இப்படிப் பாடிப் பாடி யிருக்கின்ற நேரந் தன்னில்
நற்படி மேகந் தானும் நயமுடன் குறிகள் மின்னி
சொற்படி தவறா மல்தான் சொரிந்து பூமாரி பெய்து
மெற்படி சிங்கன் கண்டு மேன்மேலும் பூரித் தானே."

(பா. 105)

என்று மழை பெய்வதையும், அதனால் சிங்கனுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியையும் இக்குறவஞ்சி எடுத்துரைக்கின்றது. மழை பெய்ததால் ஆற்றூரில் நீர் பெருக, நீர்வாழ் பட்சிகள் தங்க இடமின்றி ஏங்குவதாகவும், அதைக்கண்ட சிங்கன் கண்ணி பசிப்பதாகவும் இக்குறவஞ்சியின் கதையை அமைத்துச் செல்கின்றார் ஆசிரியர். மழை பெய்தல் இக்குறவஞ்சியில் மட்டுமே காணக்கூடிய புதுமையாகும்.

மாத்தளை முத்துமாரியம்மன் குறவஞ்சி கூட்டுறவுக் குறவஞ்சி, பாரத ஸ்வதந்திர குறவஞ்சி போன்ற சில குறவஞ்சிகளில் சிங்கன் வருகையும், பறவை வேட்டையும் இடம்பெறவில்லை. தமிழரசி குறவஞ்சியில் வரும் சிங்கன் பறவைகள் வருவதைக் கூறுகிறான். பின்னர், சிங்கனும் சிங்கியும் தமிழ்த் தாயை வணங்கி வாழ்த்துகின்றனர் (பா. 62, 63). தியாகேசர் குறவஞ்சி, காங்கேயன் குறவஞ்சி, ஆகியவற்றில் வரும் குறவர்கள் பறவை வேட்டையாடவில்லை; சிங்கியைத் தேடி மட்டுமே வருகின்றனர்.

ஸ்ரீ கிருஷ்ணமாரி குறவஞ்சியில் மூலன் வடிவு கொண்டு வரும் ஐயப்பன் ஸ்ரீ கிருஷ்ணமாரியின் வரலாற்றைச் சிங்கனுக்குக் கூறுகின்றான் (பக். 70-71). 'திருப்பாற்கடலைக் கடைந்தபோதும் பதுமாசுரன் சிவனைத் துரத்தியபோதும் மோகினியாக வடிவெடுத்தவர் திருமால் ஆதலின் கலிகாலத்தில் குறவஞ்சியாக வடிவெடுத்தார்' (ப. 82) என்று திருமாலின் பெருமைகளையும் அவன் எடுத்துரைக்கின்றான். இலக்ஷணக் குறவஞ்சியில், குறத்தியாகிய இலக்குமியைத் தேடித் திருமால், குறவன் வடிவங்கொண்டு வருகின்றார் (ப. 22).

பெத்லகேம் குறவஞ்சியில் மனிதர்களைப் பட்சிகளாக உருவகித்துள்ளார் வேதநாயக சாஸ்திரியார். இக்குறவஞ்சியில் மனிதனாகிய பட்சிகளைப் பிடிப்பதற்கு, குருவென்னும் சிங்கன், உபதேசி என்னும் நூவனுடன் பழைய ஏற்பாடு, புதிய ஏற்பாடு என்னும் வலைகளைக் கொண்டு வருகின்றான் என்று தம் சமயக் கருத்துக்களை உருவகித்துக் கூறுகின்றார் ஆசிரியர் (பக். 93-94). முத்தானந்தர் ஞானக் குறவஞ்சியில்

வரும் சிங்கன், 'ஆணவ காமிய மாயை எனும் பட்சி' என்று பறவைகளை ஆணவம், கன்மம், மாயை என்னும் முக்குணங்களுக்கு ஒப்புமைப்படுத்துவதும் இங்குக் கருதத்தக்கது (பா. 117: 3). ஞானக் குறவஞ்சியிலும் குறவன் ஞானப்புள்ளையும், சில பட்சிகளையும் பிடிப்பவனாக விளங்குகின்றான் (பக். 18, 26).

கச்சிப்பிள்ளையம்மாள் இயற்றிய மெஞ்ஞானக் குறவஞ்சியும், பீர்முகம்மது அப்பா இயற்றிய ஞானரத்தினக் குறவஞ்சியும் சிங்கன்—சிங்கி உரையாடல் என்னும் அமைப்பில் தத்துவப் பொருளை எடுத்தியம்புகின்றன. பெயரிலேயே தத்துவத்தைக் கொண்டு விளங்கும் தத்துவக் குறவஞ்சியில் குறவனும் இல்லை; குறத்தியும் இல்லை. கணபதி காப்புடன் தொடங்கும் இக்குறவஞ்சி,

"ஆங்காரந் தனைடக்கி — அருணிலையே நோக்கி
அகிலபுவ னங்களெல்லா — மறியமனந்தாக்கி
பேய்க் குணத்தைச் சுட்டல்லவோ — பிரமநிலை கண்டோம்
பிரமபதிதான் கடந்து சுழியேற்றங் கொண்டோம்."
(கண். 12, 13)

என இறைவனை அடைவதற்குரிய வழிமுறைகளைச் சுட்டுகின்றது.

இவற்றை நோக்குமிடத்து, குறவஞ்சி ஆசிரியர்கள் குறவன் வருகைப் பகுதியைத் தத்தம் கருத்துக்களை வெளிப்படுத்தும் ஒரு கருவியாகப் பயன்படுத்தியுள்ளனர் என்பதை உணரலாம். பறவைகள் வயல்களில் மேயும் பகுதியில் அவர்கள் தம்மை ஆதரித்த வள்ளல்களின் பெயர்களைச் சுட்டிக் கூறுவது, அவ்வள்ளல்களுக்கு அவர்கள் காட்டும் நன்றியறிவிப்பேயாகும்.

### குறவனின் கையாள்

குறவஞ்சியில் குறவனின் கையாளாக வருபவன் 'குளுவன்' (சர. குற., அழ. குற., பொய். குற., குறு. குற., தியா. குற., சித. குற.) என்றும், 'குழுவன்' (கும். குற.) என்றும், 'நூவன்' (குற். குற., பெத். குற., கிரு. குற., நகு. குற. பாம். குற.) என்றும், 'புலியன்' (திரு. குற.) என்றும், 'சின்னன்' (முத். குற.) என்றும், 'சின்னான்' (சோலை. குற.) என்றும், 'மூலன்' (கிரு. குற.) என்றும், 'வங்கணச் சிங்கன்' (நவ. குற,) என்றும் அழைக்கப்படுகின்றான். காங்கேயன் குறவஞ்சியில் கையாளாக எவரும் கூறப் பெறவில்லை. 'கொட்டகைத் தூண்போல்

காலிலங்க, ஒட்டகம் போலே மேலிலங்கக் கட்டான திரிகூடச் சிங்கன் முன்னே மட்டீவாய் நூவனும் வந்தான்' (பா 87) என்று குற்றாலக் குறவஞ்சி ஆசிரியர் நூவனின் தோற்றத்தை நகைச்சுவையாகக் கூறும் போக்கினைப் பின்னால் வந்த குறவஞ்சி ஆசிரியர்களும் பின்பற்றியுள்ளனர். சரபேந்திர பூபால குறவஞ்சி, குளுவன், நீடானைச் செவியன், குதிரைவாலன், புலிவாயன் என்னும் வேட்டை நாய்களையும் உடன் அழைத்து வந்ததாகக் கூறுகிறது.

ஸ்ரீகிருஷ்ணமாரி குறவஞ்சியில் ஐயப்பன் மூலனாகவும், பெருங்காத்தன் நூவனாகவும், மதுரைவீரன் குளுவனாகவும் வருவதாகக் கூறப்பட்டுள்ளது (பக். 66, 82).

பறவை வேட்டை

கையாள் வந்து சேர்ந்தவுடன் அவனிடம் பறவை பிடிப் பதற்காகக் கண்ணியூன்றும் முறையினைக் கூறிக் கண்ணியூன்றச் செய்கின்றான் சிங்கன். பறவைகள் கூட்டம் கூட்டமாகப் பறந்து வருவதையும், நகரப் பிரமுகர்களின் வயல்களில் இறங்கி இரை மேய்வதையும், கண்ணியில் சிக்கிக் கொண்டிருப் பதையும் பல அழகிய உவமைகளால் வெளிப்படுத்துகின்றான் சிங்கன்.

பறவைகள் கண்ணியில் சிக்கிக்கொண்டிருக்கும் வேளையில் சிங்கன் சிங்கியின் நினைவு வரப் பெற்றவனாய்ப் புலம்பத் தொடங்குகின்றான். இதனால் அவனால் பறவை வேட்டையில் ஈடுபட இயலவில்லை; இந்நிலையில் பறவைகள் பறந்துபோய் விடுகின்றன. சிங்கனின் கையாள், அவனுடைய இச்செயலை ஏளனமாக எடுத்துரைத்துச் சிங்கியைத் தேடுமாறு கூற, சிங்கனும் சிங்கியைத் தேடத் தொடங்குகின்றான். பல இடங் களிலும் சிங்கியைத் தேடியலைந்த சிங்கன் அவளைக் காணாது புலம்புகின்றான்; சிங்கியைத் தேடித் தந்தால் பல வகையான மருந்துகள் தருவதாகவும், வித்தைகள் கற்றுத் தருவதாகவும் கையாளிடம் கூறுகிறான்; கையாள் அவளுடைய அடையாளம் வினவ, 'நகை முகமும், நாணயக் கைவீச்சும், பெண்கள் மயக்கும் விரகப்பார்வை'யும் உடைய அவள் அழகை வருணிக் கிறான்; கையாள், சிங்கி இருக்குமிடத்தைக் கூற, அவளைக் கண்டு மகிழ்கிறான்.

பல்வேறு அணிகலன்களை அணிந்து உருமாறித் தோன்றும் குறத்தியின் எழில் தோற்றம் அவள்மீது அவனுக்கு ஐயத்தைத் தோற்றுவிக்கின்றது. சிங்கன்-சிங்கி உரையாடல் தொடங்கு

கின்றது. ஒவ்வொரு அணிகலனையும், பறவை, விலங்கு, புழு, பூச்சி போன்ற ஏதேனும் ஒன்றுடன் ஒப்புமை காட்டி வினவும் சிங்கனுக்குச் சிங்கி, அவ் அணிகலனின் பெயரைக் கூறி, அதனைப் பெற்ற முறையினையும் விளக்குகிறாள்; அவன் ஐயத்தினையும் போக்குகின்றாள். பின்னர் இருவரும் தலைவனை வாழ்த்திச் செல்கின்றனர்.

இது குறவஞ்சி இலக்கியத்தின் பொதுவான அமைப்பு ஆகும். எனினும், இவ்வமைப்பினின்றும் மாறுபட்டுச் சில குறவஞ்சிகள் சிறு சிறு வேறுபாடுகளைக் கொண்டு விளங்கு கின்றன. நவநீதேசுவர சுவாமி குறவஞ்சியில் வரும் சிங்கன், பறவைகளை வேட்டையாடி முடித்த பின்னரே சிங்கியைத் தேடத் தொடங்குகின்றான்.

" சிக்கிய பக்கி யெல்லாம் சேத்துமே வெவ்வே றாகச்
சிக்கத்தில் அடைத்த பின்னர்ச் சிங்கியை நினைத்துச்
சிங்கன்
பக்குவ மாக ஆக்கிப் பகருவாள் எனக்கை யையே
தக்கவள் அவளே என்று தயங்கியே தேடி னானே."
(பா. 81)

என்று கூறுவது குளுவ நாடகச் சிங்கனை நமக்கு நினைவூட்டி நிற்கின்றது.

அர்த்தநாரீசுவரர் குறவஞ்சியில் வரும் சிங்கன், 'சிங்கியைக் கூட்டி வருவார் யாரையுங் காணேன், சிங்கி தன் இருப்பிடம் சொல்வீர்' என வண்டுகளை நோக்கி வினவுகின்றான்:

" மருவுஞ் சிங்கிதனை வண்டுகாள் கூட்டி
வருவா ராருங் காணேன் வண்டுகாள்
இருபது குதிரையை வண்டுகாள் பணையம்
ஏற்கவே யீந்தேன் வண்டுகாள்
தனம்மெத்த வுண்டு வண்டுகாள் சிங்கி
தன்னிருப்பிடம் சொல்வீர் வண்டுகாள்."[17]

இப்பகுதி, தலைவி, தலைவன் மீது மையலுற்று நிலா, தென்றல் போன்றவற்றை நோக்கிப் புலம்பும் பகுதியினை ஒத்து விளங்கு கிறது.

முத்தானந்தர் ஞானக் குறவஞ்சி (பா. 130) சுப்பிரமணிய முதலியார் குறவஞ்சி[16] ஆகியவற்றில், குறவனின் கையாளாக வருபவனே சிங்கியைத் தேடிக் கண்டுபிடித்துச் சிங்கனிடம் அழைத்து வருவதாகக் கூறப்பட்டுள்ளது. அழகர் குறவஞ்சியில்,

வாரார், சிங்கி இருக்கும் இடத்தைச் சிங்கனுக்குக் கூறுவதாக அமைந்துள்ளது (பா. 70).

காங்கேயன் குறவஞ்சி, பிரிந்த சிங்கனும் சிங்கியும் ஒன்று கூடிப் புதல்வரைப் பெற்றுச் சிறக்க வாழ்ந்தமையை எடுத்துக்கூறுகிறது:

" சிங்கியைக் கூடியணைந்து சுகித்தேனே—அய்யே
சிறுமான் கன்றினைப்போல மைந்தரைப் பெற்றேனே—
அய்யே
பொங்கிய வாழ்வுப் புதல்வரைப் பெற்றேனே—அய்யே
பொன்மாரியில் நாதரைப் போற்றி வணங்கினேன்—
அய்யே. "
(பா. 40)

சகசி மன்னர் குறவஞ்சியில், பிரிந்த சிங்கனும் சிங்கியும் கூடி மகிழ்ந்திருக்கும் வேளையில் தலைவி அங்கு வருகிறாள்; 'எனக்குச் சொன்ன காரியமெல்லாம் இன்னும் சுலபமாக வில்லை, நீ என்ன குறத்தியடி போ' என்று கூறுகிறாள். குறத்தி அவளுக்கு,

" அம்மே, சொல்றேன் கேள் அம்மே! இப்போதே சகசி மகாராசன் வந்து உன்னைக் கல்யாணம் பண்ணிக் கொள்வானடியம்மே. அம்மட்டும் நானும் சிங்கனும் இங்கே தானே இருந்து உங்கள் கல்யாணத்தைப் பார்த்து எங்கள் தேசத்துக்குப் போகிறோம் அடியம்மே. " (ப. 152)

என்று மறுமொழி கூறுகின்றாள். 'அப்படியானால், அந்தச் சகசி ராச தேவேந்திரன் என்னை எத்தனை நாழிகையில் கல்யாணம் பண்ணிக்கொள்வான் சொல்லடி' என்று தலைவி வினவ,

" மூன்று நாழிகை தனிலே வந்து
மோகமாகி விநோதமாகவும் கல்யாணம்
முடிப்பான் காண். " (பா. 48:4)

என்று உரைக்கின்றாள் குறத்தி. அவள் கூறியவாறே, முன்பு தலைவி தூதாக அனுப்பிய கிளி, அன்னம் முதலானவை கூறிய கன்னிகையின் விரகதாபம் கேட்டு, மனம் இரங்கிய சகசி மன்னர் தம் பரிவாரத்துடன் வந்து தலைவியை மணம் புரிந்து கொள்கிறார்.

இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தோன்றியுள்ள குறவஞ்சிகள் ஆறு. அ. வரதநஞ்சையபிள்ளை 'தமிழரசி குறவஞ்சி' என்னும் நூலை 1951ஆம் ஆண்டில் வெளியிட்டுள்ளார். இந்நூல் தமிழ்த்தாயைச் சிறப்பிப்பதற்காகவே எழுந்தது போல் அமைந்துள்ளது. தலைவி, குறத்தி ஆகியோர் வருணனை, தமிழ்த்தாய்க் காப்பு, சிங்கன் தமிழ்த்தாயைப் பராவுதல் ஆகிய செய்திகள் தமிழன்னையின்மீது ஆசிரியர் கொண்ட பற்றினைத் தெள்ளிதின் புலப்படுத்துகின்றன. நவாலியூர் சு. சொக்கநாதன் என்னும் யாழ்ப்பாணக் கவிஞர் மாத்தளை முத்துமாரியம்மன் குறவஞ்சியை 1964ஆம் ஆண்டில் வெளியிட்டுள்ளார். கவிஞர் தஞ்சைவாணன் இயற்றிய கூட்டுறவுக் குறவஞ்சி 1968 ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. பிருந்தா வரதராஜன் பாரத ஸ்வதந்திர குறவஞ்சி என்னும் நூலை வெளியிட்டுள்ளார். இந்நூலில் ஆண்டு குறிக்கப்படவில்லை. எனினும இந்நூல் பாரதம் சுதந்திரம் பெற்றதற்குப் பின்னர் எழுதப்பட்டதாகக் கொள்ளலாம். ஸ்ரீதேவி கருமாரி தாசர் எழுதிய திருவேற்காடு ஸ்ரீகிருஷ்ணமாரி குறவஞ்சி 1971 ஆம் ஆண்டிலும், வித்துவான் தி.சு.ஆறுமுகம் இயற்றிய குறுக்குத்துறைக் குறவஞ்சி 1972 ஆம் ஆண்டிலும் வெளிவந்துள்ளன. இவற்றுள் குறுக்குத்துறைக் குறவஞ்சி தவிரப் பிற அனைத்தும் அமைப்பில் பல புதுமைகளைக் கொண்டு விளங்குகின்றன.

மாத்தளை முத்துமாரியம்மன் குறவஞ்சி, சிங்க வாகனம் ஏறி உலா வரும் முத்துமாரியைக் கண்டு இருமலச்செட்டி என்பான் காதல் கொண்டு வருந்துவதாகவும், அவன் தன் காதல் நோய் தீரக் குறத்தியை அழைத்துக் குறி கேட்பதாகவும், அக்குறத்தி, முத்துமாரியம்மன் திருவடியை அடையும் வழியை அவனுக்கு உணர்த்துவதாகவும், இறுதியில் அவன் அம்மன் அருள் பெறுவதாகவும் அமைந்துள்ளது. இதில் 'சனம் விலத்தல்' என்னும் பகுதியில், முத்துமாரியைக் கண்டு காதல் கொண்டு நிற்கும் ஆடவரைப் பெண்கள் தள்ளி நிற்கும்படி கூறுவதாக அமைந்துள்ளது. இப்பகுதி 'உலாக் காணப் பெண்கள் வருதல்' என்று பிற குறவஞ்சிகளில் வரும் பகுதிக்கு மாறானது என்பது இங்கே குறிப்பிடத்தக்கது.

கூட்டுறவுக் குறவஞ்சி இன்றைய சமுதாயத்தில் பரவலாகக் காணப்படும் கூட்டுறவு இயக்கத்தை அடிப்படையாகக் கொண்டதாகும். இதில் மக்கள் அரசைக் குறிக்கும் 'நாட்டரையன்' என்னும் தலைவன் உலா வருகையில் 'கூட்டுறவாள்' என்னும்

தலைவி கண்டு மோகம் கொள்கின்றாள். கூட்டுறவுத் தலைவியின் நிலை பற்றிக் கேட்டறிய விழையும் ஊரவராகப் பெருமாள், நல்லான், முத்து, மாதவன் என்னும் நால்வரைப் படைத்து, அவர்களைக் குறத்தியிடம் குறிகேட்க விடுக்கின்றார் ஆசிரியர். அதற்குக் குறத்தி,

> " மக்களெல்லாம் அன்னையென்று மண்டியிட்டுத் தொழுவர்
> மாநிலத்தில் நிகரிவட்கு மற்றெவரும் ஆகார்
> தக்கதெலாம் செய்துமக்கள் தழைக்கவழி செய்வாள்
> தகுமுறையில் கூடிமக்கள் தாமுயரச் செய்வாள்." (ப.10)

என்று கூறுகிறாள்; நால்வரும் சேர்ந்து, கூட்டுறவுச் சங்கம் ஒன்றை ஏற்படுத்தி, கூட்டுறவு இயக்கத்தின் நன்மைகளை எடுத்துரைக்கின்றனர். குறத்தியின் மகள் அல்லி என்னும் குறமகளையும் இக்குறவஞ்சியில் குறி கூற வைக்கின்றார் ஆசிரியர். சிங்கன்—சிங்கி வாதம் நூலின் இறுதியில் இடம் பெறுகின்றது. இறுதியில், சிங்கி கூட்டுறவு இயக்கத்தைப் பற்றிப் பாடுவதாக முடிக்கின்றார் ஆசிரியர்.

பாரத ஸ்வதந்திர குறவஞ்சி சுதந்திர இயக்கத்தை அடிப்படையாகக் கொண்டு எழுந்துள்ளது. இக் குறவஞ்சி நாடகத்தில் பாரத தேவி அரசிளங்குமரியாகவும், சுதந்திர தேவன் தலைவனாகவும் சித்திரிக்கப்படுகின்றனர். சுதந்திர தேவன் பவனி கண்டு மயங்கிய பாரத தேவிக்குக் குறி கூற வரும் குறத்தி, முதல் சுதந்திர முழக்கம் செய்த வீரன் கட்டபொம்மன் முதல் தொண்டர் காமராசர் வரை விடுதலை இயக்கத்தில் ஈடுபட்ட வீரர்களின் செயல்களைப் பாடுகிறாள்; ருக்மணிக்கு ஏழை அந்தணன் தூது சென்றதைப் போல, பாரத தேவிக்கு அண்ணல் காந்தியடிகள் தூது சென்று சுதந்திர தேவனை அழைத்து வருவார் என்று குறி கூறுகிறாள். இக்குறவஞ்சியில் கட்டியக்காரன் தொடக்கத்தில் மட்டுமன்றி நடுவிலும் தோன்றுகிறான்; பாரதம் 'கத்தியின்றி ரத்த மின்றி'ச் சுதந்திரம் அடைந்த பெருமையைப் பாடுகிறான். பாரத தேவிக்கும் சுதந்திர தேவனுக்கும் திருமணம் நடை பெறுகிறது. ஐந்தாண்டுத் திட்டங்களால் நாடு வளம் பெறுவதைப் பெண்கள் பாடி மகிழ்ச்சியுடன் கும்மியடிக் கின்றனர். தேவியையும் தேவனையும் வணங்கி வாழ்த்திப் பாடுவதுடன் நாடகம் நிறைவுறுகின்றது.

பாரத ஸ்வதந்திர குறவஞ்சியிலும், கூட்டுறவுக் குறவஞ்சி யிலும் இன்றைய நாடகங்களைப் போலக் களம், காட்சி என்ற அமைப்பு காணப்பெறுகின்றது.

ஸ்ரீகிருஷ்ணமாரி குறவஞ்சியில் குறத்தி குறி கூறும் பகுதியும், சிங்கன் வரும் பகுதியும் பிற குறவஞ்சிகளின் அமைப்பினின்று வேறுபட்டு விளங்குகின்றமை முன்பே சுட்டப் பட்டது. இக் குறவஞ்சி திருவேற்காட்டில் எழுந்தருளியிருக்கும் கருமாரியம்மன் புகழை எடுத்தியம்புவதற்காக மட்டுமே எழுந்துள்ளது போல் தோன்றுகிறது. 'ஸ்ரீகிருஷ்ணனே குறவஞ்சி யாகி மாரியின் பிரபாவத்தைப் பிரபஞ்சத்தில் வெளிப் படுத்தலால் ஸ்ரீகிருஷ்ணமாரி குறவஞ்சி, (ப.66) என ஆசிரியர் நூலின் பெயர்க்காரணம் கூறுவதும் இதற்கு அரண் செய்கின்றது.

இவ்வாறு இருப்தாம் நூற்றாண்டில் குறவஞ்சியின் போக்கு புதுமையை நோக்கி அடியெடுத்து வைத்துள்ளது.

## குளுவ நாடகம்

குறவஞ்சி இலக்கிய வளர்ச்சிக்குப் பின்னர்த் தோன்றிய சிற்றிலக்கிய வகை குளுவ நாடகம். இது குறவஞ்சி இலக்கி யத்தின் பிற்பகுதியைப் பெரிதும் ஒத்துள்ளது. இன்று நம்மால் அறியப்படும் குளுவ நாடகங்கள் ஐந்து. அவையாவன:

1. சின்ன மகிபன் குளுவ நாடகம்
2. அருணாசலம் செட்டியார் குளுவ நாடகம்
3. கோட்டூர் நயினார் குளுவ நாடகம்
4. கறுப்பர் குளுவை நாடகம்.
5. ஏழு நகரத்தார் குழுவ நாடகம்

இவ்வைந்து குளுவ நாடகங்களுள் முதல் நான்கும் அமைப்பில் ஒன்றுபட்டு விளங்குகின்றன. ஏழு நகரத்தார் குழுவ நாடகம் முழுமையாகக் கிடைக்கவில்லை; கிடைத்துள்ள பகுதி நகரத்தார் வரலாறு கூறுவதாகவே அமைந்துள்ளது. எனவே, இக்குளுவ நாடகம் பற்றிய ஆய்வு இறுதியில் தனியாக மேற்கொள்ளப்பட்டுள்ளது.

குளுவ நாடகம், 'குளுவன் பனுவல்', 'குளுவ நாடகத் தமிழ்', 'குளுவன் சொல்', 'குளுவன் தமிழ்' (சி.ம.கு.நா.), 'தமிழ்க் குளுவ நாடகம்', 'செஞ்சொல் நாடகம்' (ஏ.ந.கு.நா.), 'இசைத்தமிழ்ப் பாமாலை', 'தமிழிசை', 'நலம் பெருகும் குளுவ நாடகம்', 'தமிழிசையு நாடகம்', 'துய்ய தமிழ் நாடகம்', 'சித்திர விஸ்தார கவிச் செந்தமிழ்' (அ.செ.கு.நா.), தெய்வ மலைக் குளுவ நாடகம்', 'தமிழினிசையில் குளுவ நாடகம்' (கோ.ந.கு.நா.) என முத்தமிழுடன் இணைத்துச் சிறப்பிக்கப் பெறுகின்றது.

காப்பு

அருணாசலம் செட்டியார் குளுவ நாடகம், கோட்டூர் நயினார் குளுவ நாடகம், கறுப்பர் குளுவை நாடகம் ஆகிய மூன்றும் விநாயகர் காப்புடன் தொடங்குகின்றன; சின்னமகிபன் குளுவ நாடகம் மட்டும் திருக்கோளலிங்கர் காப்புடன் தொடங்கிப் பிறகு விநாயகர் காப்புப் பாடுகின்றது

அருணாசலம் செட்டியார் குளுவ நாடகத்தில் செட்டி நாட்டைச் சார்ந்த மாத்தூர், தேவகோட்டை, குன்றக்குடி ஆகிய இடங்களில் எழுந்தருளியுள்ள தெய்வங்களுக்கும் காப்பு இயற்றப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும் (பா. 1-9).

கோட்டூர் நயினார் குளுவ நாடகம் வைணவ மரபைப் பின்பற்றி குரு நமசிவாயத்திற்கும், தமிழ்ப் பற்றினைப் போற்றும் வகையில் தமிழ் வல்லோர்க்கும் காப்புப் பாடு கின்றது (பா. 6).

தோடையம்

சின்னமகிபன் குளுவ நாடகம் தவிரப் பிற மூன்று குளுவ நாடகங்களிலும் இப்பகுதி அமைந்துள்ளது. அருணாசலம் செட்டியார் குளுவ நாடகத்தில் காப்புப் பாடப்பெற்ற தெய்வங்களே மீண்டும் இங்கும் குறிப்பிடப் பெறுகின்றன. கோட்டூர் நயினார் குளுவ நாடகம், கறுப்பர் குளுவை நாடகம் ஆகிய இரண்டிலும் இப்பகுதி காப்பில் கூறப்பெறாத பிற கடவுளரை வணங்குவதாக அமைந்துள்ளது.

மங்களம்

சின்னமகிபன் குளுவ நாடகத்தில் காப்பிற்குப் பின்னரும், பிற குளுவ நாடகங்களில் தோடையத்திற்குப் பின்னரும் மங்களம் அமைந்துள்ளது.

கட்டியக்காரன் வருகை

அருணாசலம் செட்டியார் குளுவ நாடகத்தில் மட்டும் கட்டியாக்காரன் வருகை கூறப்படுகின்றது; அவனுடைய தோற்றமும் வருணிக்கப்படுகின்றது. 'வள்ளல் அருணாசலமால் வச்சிரதேகன் தேவேந்திரன் போலிருக்குங் கொலுச்சிங்காரஞ் செப்புவேன். களறியிலே ஒப்புவேனே' (பா. 15) என்று கட்டியக் காரன் பாட்டுடைத் தலைவனின் சிறப்புக்களை எடுத்துக்கூறத் தொடங்குகின்றான். கட்டியக்காரன், முதல் கதைமாந்தரை

அறிமுகப்படுத்தும் குறவஞ்சியின் இயல்பு இங்குப் பின்பற்றப் பட்டுள்ளது எனலாம். பாட்டுடைத் தலைவனின் நாட்டையும், அவனது கல்வி, கொடை, வீரம், வாய்மை போன்ற சிறப் பியல்புகளையும் போற்றுவது பிற குளுவ நாடகங்களிலும் உண்டு. எனினும் அவை கவிக்கூற்றாகவே இடம்பெற்றுள்ளன.

### பாட்டுடைத் தலைவனின் தசாங்கம்

சின்னமகிபன் குளுவ நாடகம் சின்னன் என்னும் சிற்றரசனையும், அருணாசலம் செட்டியார் குளுவ நாடகம் தேவகோட்டைக் குறுநில மன்னராக விளங்கிய அருணாசலம் செட்டியாரையும், கோட்டூர் நயினார் குளுவ நாடகம் கோட்டூரில் நயினார் என்றழைக்கப்படும் சிவபெருமானையும், கறுப்பர் குளுவை நாடகம் திட்டாணிக் கறுப்பண்ண சுவாமி யையும் பாட்டுடைத் தலைவர்களாகக் கொண்டு விளங்கு கின்றன.

பாட்டுடைத் தலைவர் தெய்வமாகவோ அரசராகவோ இருப்பின், அவர்தம் நாட்டைச் சிறப்பிக்கும் வகையில் தசாங்கம் பாடுதல் இயல்பு.

> '' மலையே யாறே நாடே ஊரே
> பறையே பரியே களிறே தாரே
> பெயரே கொடியே என்றிவை தசாங்கம்.''
>
> (பன். பாட்., இனவியல், நூ. 55)

என்னும் பன்னிரு பாட்டியல் நூற்பா மலை, ஆறு, நாடு, ஊர், பறை, பரி, களிறு, தார், பெயர், கொடி ஆகிய பத்து உறுப்புக்களைத் தசாங்க உறுப்புக்களாக எடுத்துரைக்கின்றது. ஆயின், சிதம்பரப் பாட்டியல் கூறும் தசாங்க உறுப்புக்களில் பெயருக்குப் பதிலாகச் செங்கோல் இடம் பெற்றுள்ளது (நூ. 32). அருணாசலம் செட்டியார் குளுவ நாடகம், கோட்டூர் நயினார் குளுவ நாடகம், சின்னமகிபன் குளுவ நாடகம் ஆகிய மூன்றிலும் பெயர் என்னும் தசாங்க உறுப்பிற்குப் பதிலாகச் செங்கோல் என்னும் உறுப்பே கூறப்பட்டுள்ளது. ஆயின், தார் என்னும் உறுப்பு மூன்றிலும் இடம்பெறவில்லை. எனினும் கறுப்பர் குளுவை நாடகத்தில் மட்டும் தார் உட்படப் பத்துத் தசாங்க உறுப்புக்களும் இடம்பெற்றுள்ளன.

### குளுவன் வருகை

நான்கு குளுவ நாடகங்களிலும் பாட்டுடைத் தலைவனை யும் அவனுடைய நாட்டையும் சிறப்பித்த பின்னர், அத்தகைய

சிறப்பு மிக்க நாட்டில் பறவை வேட்டையாடுவதற்குக் குளுவன் தோன்றினான் என்று கூறப்பட்டுள்ளது. அருணாசலம் செட்டியார் குளுவ நாடகத்தில் கட்டியக்காரனே குளுவனை அவனுடைய தோற்றத்தினை வருணித்து அறிமுகப்படுத்து கின்றான். பிற மூன்றிலும் இப்பகுதி கவிக்கூற்றாக அமைந் துள்ளது.

## குளுவனின் தோற்றம்

சின்னமகிபன் நாட்டில் மிதுலை நகரில் பறவை வேட்டை யாடத் தோன்றும் குளுவன் கன்னிமாமலையில் உள்ள சுனையில் நீராடி, முருகனை வணங்கித் திருநீறணிந்து, திருநுதலில் திலகம் தரித்து, மேன்முருகு அணிந்து, சரப்பணி, கண்டி, வீரக் கணையாழி, அக்கு வக்காமணி புனைந்து கொக்கிறகு கொண்டையில் சூடி, செம்பொன் தாயத்தில் சிறுநரிக்கொம்பையடக்கி, கையில் சுண்டுவில், அம்பு, அருவாள், வளரி, (வளைந்த தடி), கண்ணிகள் ஆகியவற்றை எடுத்துக் கொண்டு, கள் குடித்தவாறே வெறித்துப் பார்த்து, மீசையைத் திருத்திச் சிலம்புகள் ஒலிக்கத் தோன்றுகின்றான் (பா. 10). கோட்டூர் நயினார் குளுவ நாடகத்தில் குளுவன் பற்பல கண்ணிகளுடன் மாத்திரைக் கோலும் வைத்திருந்த தாகக் கூறப்படுவது விந்தைக்குரியதாக உள்ளது. அருணாசலம் செட்டியார் குளுவ நாடகத்தில் வரும் குளுவன் கட்டுவார் வலையுடன், பட்சிகளை மயக்கும் பச்சிலையும் கையிற் கொண்டு வந்ததாகக் (பா. 18) கூறுவது புதுமையாகத் தோன்றுகின்றது.

நான்கு குளுவ நாடகங்களிலும் வரும் குளுவர்கள், பாட்டுடைத் தலைவரின் புகழைப் பாடுவதுடன், 'சித்திரக் குளுவன்' என்றும் (சி. ம. கு. நா., பா. 11), 'இங்கிதக் குளுவன்', 'சஞ்சீவிக் குளுவன்' (அ. செ. கு. நா., பா. 20) என்றும் 'காரணக் குளுவன்' (கோ. ந. கு. நா., பா. 11) என்றும் 'விற்பனக் குளுவன்' (கூறு. கு . நா., ஓலைச்சுவடி) என்றும் தம்மைத் தாமே அறிமுகப்படுத்திக் கொள்கின்றனர்.

## குளுவன் அறிந்த சித்தும் மருந்தும்

குளுவன் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்ட பின்னர், தான் அறிந்த சித்துவகைக் கதைகளைச் சொல்லிப் பாம்பை யெடுத்தாட்டும் பாங்கு அருணாசலம் செட்டியார் குளுவ நாடகத்திலும் (பா.21), தான் அறிந்த பச்சிலைகளைப் பற்றிக்

கூறும் பாங்கு கோட்டூர் நயினார் குளுவ நாடகத்திலும் (பா. 13), தான் அறிந்த சித்து வித்தைகளைப் பற்றிக் கூறும் பாங்கு கறுப்பர் குளுவை நாடகத்திலும் காணப்படுகின்றது.[19] அருணாசலம் செட்டியார் குளுவ நாடகத்தில், பாம்பை யெடுத்தாட்டும் பகுதி, விடுகதைப் பாங்கில் அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது.[20]

குளுவனின் கையாள்

குறவஞ்சியில் சிங்கனுக்குத் துணையாகக் குளுவன், நூவன் போன்றோர் வருவது போல, குளுவ நாடகத்தில் தலைமை இடம்பெறும் குளுவனுக்கும் பறவை வேட்டை யாடுவதற்குத் துணையாகக் கையாள் ஒருவன் வருகின்றான். அவன் சின்னமகிபன் குளுவ நாடகத்திலும் (பா. 13), கறுப்பர் குளுவை நாடகத்திலும் 'சிங்கன்' என்றும், அருணாசலம் செட்டியார் குளுவ நாடகத்தில் 'பாங்கன்' (பா. 24) என்றும், கோட்டூர் நயினார் குளுவ நாடகத்தில் 'நரசிங்கன்' (பா. 15) என்றும் அழைக்கப்படுகின்றான்.

நான்கு குளுவ நாடகங்களிலும், குளுவனின் கையாளாக வருகின்றவர்கள் தமக்குத் தெரிந்த சித்து வித்தைகளைக் கூறித் தத்தம் திறமையை வெளிப்படுத்துகின்றனர். அருணாசலம் செட்டியார் குளுவ நாடகத்தில் 'சித்துவிதக் குளுவனுக்கேத்த வங்கணப் பாங்கன்' என்று தன்னை அறிமுகப்படுத்திக் கொள்ளும் பாங்கன்,

> " சஞ்சலமே தருமாசை வெம்பாசத்தைத் தள்ளவும்
> மெய்யிலுள்ள புலன்களை நெஞ்சினில் அடக்கவும்
> அஞ்செழுத்தை நினைத்து மனத்திற் பதித்துத் துதிக்கவும்
> ஞான நானறிவேன். " (பா. 24)

என்று தான் அறிந்த ஞானப் புலமையைச் சொல்லுகின்றான். இங்குப் பாங்கன், குளுவனின் கையாளாக இருப்பினும், அறிவு நிலையில் குளுவனையும் விஞ்சி நிற்பதைக் காணலாம்.

கோட்டூர் நயினார் குளுவ நாடகத்தில் வரும் நரசிங்கனோ, பரமனின் அடிதொழுது, பரமனுக்கு ஏவற் பணிவிடைகள் செய்வதையே தன் தொழிலாகக் கருதுகின்றான் (பா. 15). அவன் பெயரளவில்தான் குளுவனின் கையாள்; அவனுடைய குறிக்கோள் முழுதும் இறைப்பணியாகவே உள்ளது.

குறவஞ்சியில் சிங்கனின் கையாளாக வருபவன் அவனு டைய ஏவலாளனாக மட்டுமே விளங்குகின்றான். குளுவ நாடகத்தில் அவன் ஏவலாளனாகவும், தோழனாகவும், இறைப் பணி புரிபவனாகவும் சித்திரிக்கப்படுகின்றான். குளுவ நாடகத்தின் வளர்ச்சிநிலை என்று இதனைக் குறிப்பிடலாம்.

### பறவை வேட்டையாடுதல்

நான்கு குளுவ நாடகங்களிலும் பறவை வேட்டை ஒரே மாதிரியாகவே காணப்படுகின்றது. குளுவர்கள் தத்தம் குல தெய்வங்களை வணங்கிக் கண்ணியூன்றுகின்றனர். கறுப்பர் குளுவை நாடகம் தவிரப் பிற மூன்று குளுவ நாடகங்களிலும் காப்பில் கூறப்பெற்ற கடவுளர் இங்கும் குறிப்பிடப்படு கின்றனர். கறுப்பர் குளுவை நாடகத்தில் திட்டாணிக் கறுப்பரை மனத்தில் துதித்துக் கண்ணியூன்றுகின்றான் குளுவன். குறவஞ்சி இலக்கியத்தைப் போன்றே, குளுவ நாடகத்திலும் பல ஊர்ப் பிரமுகர்களின் வயல்களில் பறவைகள் சேருவதும், மேய்வதும் குறிப்பிடப்படுகின்றன.

### பறவைகளைத் தெய்வங்களுக்குக் காணிக்கையாக்குதல்

பறவை வேட்டை முடிந்தவுடன், பறவைகளைத் தெய்வங் களுக்குக் காணிக்கையாக்குதலைச் சின்னமகிபன் குளுவ நாடகம், அருணாசலம் செட்டியார் குளுவ நாடகம், கோட்டூர் நயினார் குளுவ நாடகம் ஆகிய மூன்றிலும் காணலாம். பின்னர், அரசர்க்கும், வள்ளல்களுக்கும், தொழில் வல்லு நர்க்கும், தான் போற்றுகின்ற புலவர்க்கும், குரு தேசிகருக்கும் பறவைகளைக் கொடுத்துப் பரிசில் பெற்று வருமாறு குளுவன் தன் கையாளை ஏவுதல் நான்கு குளுவ நாடகங்களிலும் காணப்படுகின்றது. இப்பகுதி குறவஞ்சியில் குறத்தி குறி சொல்லிப் பரிசில் பெற்றமையை அடியொற்றி அமைந்துள்ளது எனலாம்.

### சிங்கி வருகை

எல்லாக் குளுவ நாடகங்களிலும் குளுவனின் மனைவி சிங்கி என்றே அழைக்கப்படுகின்றாள். ஆயின் சிங்கன் என்றழைக்கப்படுபவன் குளுவனின் கையாள் ஆவான். குறவஞ்சியின் பிற்பகுதியில் சிங்கி எனக் குறத்தி அழைக்கப் படுவதன் தாக்கமே குளுவ நாடகத்திலும் காணப்படுகிறது எனலாம்.

கோட்டூர் நயினார் குளுவ நாடகத்தில் குளுவனின் பறவை வேட்டை முடிந்தவுடன், குளுவனுக்கு ஏவல் செய்ய நரசிங்கி தானாகவே வந்து விடுகின்றாள். இங்கே சிங்கி நரசிங்கி என்றும், குளுவனின் கையாள் நரசிங்கன் என்றும் அழைக்கப் படுகின்றனர். இதனை நோக்குமிடத்து, இச்சிங்கி நரசிங்கனின் மனைவியோ என்ற ஐயம் எழுகின்றது. ஆயின் ''குளுவனுக்கு அங்கு ஏவல் செய்ய நரசிங்கி தோன்றினாளே'' (பா. 30) என்னுந் தொடர், அவள் குளுவனின் மனைவியே என்பதை உறுதிப்படுத்துகின்றது.

அருணாசலம் செட்டியார் குளுவ நாடகம், சின்னமகிபன் குளுவ நாடகம் ஆகிய இரண்டிலும் குறவர்கள் சிங்கி வரக் காணோமே என்று கவலை கொண்டவர்களாய், தத்தம் கையாட்களிடம் சிங்கியின் அடையாளத்தினைச் சொல்லி அவளைக் கண்டுபிடித்துத் தருமாறு வேண்டுகின்றனர். சின்னமகிபன் குளுவ நாடகத்தில் வரும் குளுவனுக்குத் தெய்வத்தை வணங்க வேண்டும் என்னும் நினைவு வரும்போது தான் சிங்கியின் நினைவு எழுகின்றது.

'' காட்டுக்கான குறத்தி மணாளனை நினைந்து நேரு
தேவியின் பூசைக்கிச் சிங்கியைத் தேடுதிடைய்யே-அவளைத்
தேடியழைத்து நீசீக்கிரம் வந்திடு மெய்யே.'' (பா. 37)

என்று அவன் சிங்கனை ஏவுகின்றான். அருணாசலம் செட்டியார் குளுவ நாடகத்தில் வரும் குளுவன், கறி தின்றாடிக் காமவெறி ஏறிய நிலையில் சிங்கியைத் தேடுவதாகக் கூறப் படுகின்றது. பின்னர் அவன் அவளுடைய அழகைப் பாதாதி கேசமாக வருணித்து, 'சிங்கியின்மீது கொண்ட ஆசை தாங்காது, எனவே எனக்கிசைந்த பாங்கா, பூங்காவனத்தைச் சுற்றிப் போய் சிங்கியைக் கண்டு அழைத்து வாடா' என்று சிங்கனை ஏவுகின்றான். தன்னைத் தேடும் குளுவனுக்கு எதிரில் சிங்கி தானாகவே தோன்றுவதையும் இக்குளுவ நாடகத்தில் காண்கிறோம்.

**சிங்கன்—சிங்கி உரையாடல்**

குறவஞ்சியில் அமைவதைப் போன்றே, நான்கு குளுவ நாடகங்களின் இறுதியிலும் சிங்கன்-சிங்கி உரையாடல் இடம் பெற்றுள்ளது. சிங்கி அணிந்திருந்த பல்வேறு அணிகலன்களைக் காட்டிச் சிங்கன் இது என்ன, இது ஏது என்று வினவ, சிங்கி அணிகலனின் பெயரையும், அதனைத் தான் குறி சொல்லிப் பரிசிலாகப் பெற்ற முறையையும் கூறுகின்றாள்.

நான்கு குளுவ நாடகங்களிலும், குளுவன் பறவைகளைப் பல வள்ளல்களுக்குப் பகிர்ந்து கொடுக்குமாறு ஏவும் பகுதியில் இடம்பெறும் மன்னர், வள்ளல், அமைச்சர், தொழில் வல்லுநர் போன்றவர்களின் பெயர்களே மீண்டும் சிங்கி கூறும் பட்டியலிலும் இடம் பெறுவது குறிக்கத்தக்தாகும்.

### வாழ்த்து

நான்கு குளுவ நாடகங்களும் குளுவனும் சிங்கியும் சேர்ந்து பாட்டுடைத் தலைவரையும், பிற தெய்வங்களையும் வாழ்த்தும் பகுதியுடன் நிறைவு பெறுகின்றன.

### ஏழு நகரத்தார் குழுவ நாடகம்

இக்குழுவ நாடகத்தை இயற்றிய ஆசிரியரின் பெயர் தெரியவில்லை. இந்நூல் முற்றுப் பெறவும் இல்லை. ஏழு நகரத்தாரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு விளங்கும் இந்நூல் அமைப்பில் பிற குளுவ நாடகங்களினின்றும் பெரிதும் மாறுபட்டுக் காணப்படுகின்றது.

### ஒன்பது கோயில்களும் அதன் உட்பிரிவுகளும்

சோழ நாட்டில் வாழ்ந்து வந்த நகரத்தார், சோழ மன்னனின் கொடுமையால் அந்நாட்டைத் துறந்து, பாண்டி நாட்டையடைந்து, ஏழு பிரிவினராகப் பிரிந்து, ஒவ்வொரு வரும் ஒரு கோயிலைத் தமக்குரியதாகக்கொண்டு வாழ்ந்தனர் என்பது நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு கூறும் செய்தி.[21] இவருள் திருவேட்பூருடையார் என்னும் அண்ணன் தம்பியர் இருவர் பிரிந்து, மூத்தவர் இரணியூரைத் தம் கோயிலாகவும், இளையவர் பிள்ளையார்பட்டியைத் தம் கோயிலாகவும் கொண்டனர் என்றும் நகரத்தார் வரலாறு கூறுகிறது.[22] ஏழு நகரத்தார் என்று பெயர் கொண்ட போதிலும், அவர்களுக்குரிய கோயில்கள் ஒன்பது. அவ் வொன்பது கோயில்களும் அதன் உட்பிரிவுகளும்[23] ஏழு நகரத்தார் குழுவ நாடகத்தில் கூறப்பட்டுள்ளன.

### காப்பு

ஏழு நகரத்தார் குழுவ நாடகம், மற்ற இலக்கியங்களைப் போல விநாயகர் காப்புடனே தொடங்குகின்றது; முருகேசர், மால், நாமகள் ஆகியோர்மீதும் காப்புப் பாடப்படுகின்றது; பின்னர் ஒன்பது கோயிலுக்குரிய தெய்வங்கள்மீதும் காப்புப்

பாடப்படுகின்றது. சைவ சமயத்தை மட்டுமே பின்பற்றக் கூடியவர்கள் நகரத்தார்[24] என்பதற்கேற்ப, அத்தலத்துக் கடவுளராகச் சிவனும் அம்மையுமே விளங்குகின்றனர்.

**நகரத்தார் பெருமை**

நகரத்தாரின் சிறப்பும், அவர்தம் கல்வி, கொடை, வாய்மை, அறம் போன்ற பண்புகளும் குளுவ நாடக அகவல் விருத்தத்தில் புலனாகின்றன. 'கல்வி அறிந்த விவேகர்' (வரி: 12); 'சொன்னசொல் தவறாத நேர்மையாளர்,' 'காய் கதிர்மதி வடக்காயினும் சொன்ன வாய்மை தப்பாமல் வளர்வணிகேசர்' (39—60); 'செந்தமிழ்ப் புலவர்க்குப் பரிசும், பொன்னும், ஆடையணிகலன்களும் அளிக்கும் வள்ளன்மை மிக்கவர்' (150—151); 'மாணிக்கம் பிச்சை வழங்கக்கூடிய செல்வச் செழிப்புடையவர்' (172); 'கம்பனார் கோயில் கனகோபுரத்தைச் செம்பொற்றகட்டாற் சிறப்புடன் வேய்ந் தோர்' (170—171): 'பூவாலயம் புனல்நிறை வாவிகள், வற்றாத ஊருணி மாறாமலர்க்கா, தண்ணீர்க் காவணஞ் சாலைகள், கிணறு, விண்ணுளோர் மதிக்க மிகவுண்டு பண்ணியவர்' (140—146) என்னும் பகுதிகள் இவ்வகையில் குறிப்பிடத்தக்கவை ஆகும்.

பாண்டிய மன்னன் தன் நாட்டில் சிறந்த குடிகள் வேண்டும் என்பதற்காகச் சோழ நாடு சென்று அழைக்க, நகரத்தார் பாண்டிய நாடு வந்தனர்[25] என்னும் கதையும் அவர்தம் பெருமையினை விளக்குகின்றது. 'மூவேந்தனுக்கு முடிபுனைந்திட்டோர்' என்பதனால் அவர்கள் மன்னர்க்கு முடிபுனையும் சிறப்புப் பெற்றிருந்தமையும் புலனாகின்றது. நகரத்தார் சரித்திரத்திலும் இச்செய்தி சொல்லப்பட்டிருக் கின்றது. 'பெற்றவர் சுற்றம் பெரியோர் குருவலால் மற்றொருவரையும் வணங்கா' (176—177) இயல்பினர் என்று கூறப்பெறுவதும் நகரத்தார் சிறப்பை உணர்த்திநிற்கின்றது.

**நகரத்தார் பற்றிய கதைகள்**

நகரத்தார் பற்றிய பல பழங்கதைகள் இந்நூலில் கூறப் பட்டுள்ளன. சோழ மன்னனின் கொடுமைக்கு ஆளாயினர் நகரத்தார். ஒருமுறை காவிரி பெருக்கெடுத்து ஓடும்பொழுது, மண் அள்ளிப் போடுமாறு அரசன் கட்டளையிட, வணிகர்கள் அரசன் ஆணைப்படி நடக்காமல், தங்கள் வியாபாரப் பண்டக சாலையில் உள்ள பஞ்சுப் பொதிகளால் தண்ணீரையடைத்துத்

தங்கள் கூறுகளை நிறைவு செய்தனர் என்பது வரலாறு இவ்வரலாறு

"மிஞ்சு காவேரி வெள்ள நீரதனைப்
பஞ்சுப் பொதியாற் பருவணை யணைத்தோர்." (158—159)

எனக் குறிக்கப்படுகின்றது. 'அது கண்ட அரசன் பெருங் கோபமும், பொறாமையும் கொண்டு அவ்வணிகர்களை அரண் மனைக்கு அழைத்துத் தன்னுடைய பட்டத்து யானையை நிறுத்து நிறை சொல்லுங்கள் பார்ப்போம்' என்று கேட்க, அவர்கள் தம் கண்ணாலேயே யானையை நிறுத்துச் சொல்லினர் என்னும் செய்தி,

ஆணிக்கையா மதயானையை நிறுத்தோர் (173)

எனக் குறிக்கப்படுகின்றது. அவ்வாறே, மோசமான தங்கத் தகட்டின் மாற்றுச் சொல்லுமாறு அரசன் வினவ, அவர்களும் மேற்பூச்சுத் தங்கத்தின் மாற்றுச் சொன்னார்கள் என்னும் செய்தியையும் இந்நூலில் குறிப்பிடுகின்றார் ஆசிரியர். பிறிதொரு முறை, கிணற்றிலிருந்து நீர் இறைக்கப் போதுமான கயிறு கொடுக்கவில்லை அரசன். இவ்வணிகர்களோ தங்கச் சவடியையே (காதில் அணியக் கூடிய வட்டமான அணிகலன்) ஒன்றோடொன்று இணைத்துத் தாம்பாக்கி நீர் இறைத்த வரலாறும் இந்நூலில் விளக்கம் பெற்றுள்ளது (166—167).

குரு வணக்கம்

முன்பு ஆண்களுக்கு மட்டும் உபதேசம் அளிக்கப்பெற்று வந்தது; இப்பொழுது பெண்களுக்கும் உபதேசம் அளிக்கப் பெறு கின்றது; இருவருக்கும் வெவ்வேறு இடங்களில் உபதேசம் அளிக்கப்பெறுகின்றது.[26] அதனைக் குறிக்கும் வகையில் "பாண்டி நாட்டாசான் பதமும்", "குருதேசிகன் பதமும் விருப்பமாய்ப் போற்றிப்" (122, 130) பூசிப்பதனை இந்நூல் எடுத்துரைக்கின்றது.

குளுவன் வருகை

நகரத்தார் பெருமை கூறும் அகவலுக்குப் பின், 'சங்கீதக் குளுவ நானே' என்று குளுவன் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டு வருகின்றான்; தான் அறிந்த சித்து வித்தைகளைக் கூறுகின்றான். இத்துடன் இந்நூல் முற்றுப் பெறுகின்றது. இதன் பிற்பகுதி ஏடு காணாமல் போயிருக்கலாம் எனத் தோன்றுகின்றது.

தெய்வங்களையோ, அரசனையோ, வள்ளலையோ பாட்டுடைத் தலைவராகப் பாடும் இலக்கிய மரபினின்றும் வேறுபட்டு, நகரத்தார் என்னும் ஒரு குறிப்பிட்ட சமூகத் தினரையே தலைவர்களாக்கி, அவர்தம் சிறப்புக் கூறும் வகையில் இந்நூல் தனித்துவம் பெறுகின்றது.

குளுவ நாடகங்களின் அமைப்பை நோக்குமிடத்து, குறத்திக்குச் சிறப்பளிக்கக் குறம் தோன்றியது போல, குறவனுக்குச் சிறப்பளிக்க வேண்டும் என்னும் நோக்கில், குளுவனைத் தலைமை மாந்தனாகக் கொண்டு குறவஞ்சியைப் பின்பற்றிப் பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியிலும், பத்தொன்பதாம் நூற்றாண்டிலும் தோன்றிய நாடக இலக்கியமே குளுவ நாடகம் எனக் கருதலாம்.

## குறிப்புக்கள்

1. உ. வே. சாமிநாதையர், ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு, குறிப்புரை, ப. 125.
2. மொ. அ. துரை அரங்கசாமி, தென்றலிலே தேன் மொழி, ப. 38.
3. குலப்பெருமை, குடி இயல்பு, குறித்திறன் பற்றிய விரிவான செய்திகள் 'வாழ்வியல் செய்திகள்' என்னும் இயலில் விளக்கப்பட்டுள்ளன (பக். 234-265).
4. சு. வேங்கடராமன், 'அரையரின் முத்துக்குறியும் மதுர பக்தியும்', தினமணி சுடர், 16. 8. 1981, ப. 1.
5. பிரேமலதா, குறவஞ்சி நாடகம், மதுரை ஸ்ரீ அங்கயற் கண்ணி சங்கீத சபா முதலாவது ஆண்டு விழா மலர், ப. 11.
6. வீ. எஸ். வாலாம்பாள், தர்மாம்பாள் குறம், வேதாந்தக் குறம், அகண்டவெளிக் குறம், முகவுரை, ப. 1.
7. ஒடுக்கு என்பது திருமண உணவு வகைகளைக் குறிக்கும்.
8. ம. மு. உவைஸ், 'பிஸ்மில் குறம்', பீர்முகம்மது அப்பா இலக்கிய ஆய்வுக் கோவை, ப. 434.
9. ஆய்வாளர் ம. மு. உவைஸ் அவர்களுடன் கலந்துரை யாடியபோது கிடைத்த தகவல்.

10. ந. வி. செயராமன், சிற்றிலக்கியச் செல்வங்கள், ப. 163.

11. கு. பரமசிவன், 'கும்பேசர் குறவஞ்சி', சிற்றிலக்கியச் சொற்பொழிவுகள் மூன்றாவது மாநாடு, ப. 256.

12. இரா. இளங்குமரன் (பதிப்.), நவநீதேசுவரசுவாமி குறவஞ்சி, குறிப்புரை, ப. 29.

13. அ. அறிவுநம்பி, 'தமிழகத்தில் தெருக்கூத்து', வெளியிடப் பெறாத அறிஞர் பட்ட (பிஎச். டி.) ஆய்வேடு, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், 1980, ப. 260.

14. கலைக்களஞ்சியம், தொகுதி 6, ப. 367.

15. பாட்டுடைத் தலைவர் உலா, உலாக் காணப் பெண்கள் வருதல் ஆகியவற்றின் விரிவு 'குறவஞ்சியில் பிற சிற்றிலக்கியக் கூறுகள்' என்னும் நான்காம் இயலில் 'உலாவும் குறவஞ்சியும்' என்னும் பகுதியில் கூறப்பட்டுள்ளது (பக். 129-136).

16. பு. சி. புன்னைவனநாத முதலியார் (உரை), திருக் குற்றாலக் குறவஞ்சி, ப. 53.

17. காகிதப் பிரதி நிலையில் இருக்கும் அர்த்த நாரீசுவரர் குறவஞ்சியினின்றும் இம்மேற்கோள் எடுக்கப் பட்டுள்ளது.

18. ஆய்வாளரிடம் ஓலைச்சுவடி நிலையில் உள்ள சுப்பிரமணிய முதலியார் குறவஞ்சியில் இவ்வாறு அமைந்துள்ளது.

19. சித்து பற்றிய விரிவு 'குறவஞ்சியில் பிற சிற்றிலக்கியக் கூறுகள்' என்னும் நான்காம் இயலிலும், பச்சிலைகள் பற்றிய விரிவு 'வாழ்வியல் செய்திகள் என்னும் ஏழாம் இயலிலும் கூறப்பட்டுள்ளன (பக். 105; 254-256).

20. 'நாட்டுப்புறக் கூறுகள்' என்னும் இயலில் விடுகதைப் பாங்கு விரிவாகக் கூறப்பட்டுள்ளது (பக். 209-212).

21. அ. இராமநாதன் செட்டியார், நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு, பக். 4-6.

22. மு. நூ., ப. 18.

23. இளையாத்தங்குடிக்குரிய உட்பிரிவு ஊர்களாக ஒக்கூர், பெருமாலூர், கிண்கிணிக்கூர், பட்டணசாமி, செந்தூர், வாசற்குடி, சிறு சேற்றூர் முதலியனவும், மாத்தூர்க் குரிய ஏழு உட்பிரிவுகளாக மண்ணூர், உறையூர்' மணலூர், குளத்தூர், கண்ணூர், அரும்பாக்கூர், கருப்பூரர் ஆகியனவும், வயிரவன் கோயிலுக்குரிய மூன்று உட்பிரிவுகளாகச் சிறுகுளத்தூர், கழனிவாசல், மருதேந்திரபுரம் ஆகியனவும் கூறப்பட்டுள்ளன.

— ஏ. ந. கு. நா., அகவல், வரிகள்; 74-77, 98-99, 106-107.

24. அ. இராமநாதன் செட்டியார், மு. நூ., ப. 48; Pamela G. Price, 'The Political Culture of a Merchant Banker Case: A Historian's View', Folklore Seminar Papers, p. 121.

25. கு. சேஷாத்திரி, நகரத்தார் சரித்திரம், ப. .3.

26. பேராசிரியர் தமிழண்ணல் அவர்களுடன் கலந்துரை யாடியபோது கிடைத்த செய்தி இது.

# 4. குறவஞ்சியில் பிற சிற்றிலக்கியக் கூறுகள்

காலந்தோறும் சமுதாயம் மாறுவதற்கேற்ப, இலக்கிய வகைகளும் மாறிக்கொண்டேயிருக்கின்றன; புதிது புதிதாய்த் தோன்றிக் கொண்டேயிருக்கின்றன. அவ்வாறு தோன்றும் இலக்கியங்களில் முன்னைய இலக்கியங்களின் சாயல் அமைந்திருத்தல் இயல்பு. இவ்வியல்பினை விளக்கும் வகையில் இவ் இயல் அமைந்துள்ளது.

கட்டு, கழங்கு, வெறியாடல் என மூவகையில் குறி கூறும் வழக்கம், காலப்போக்கில் குறத்திப்பாட்டாகவும், குறமாகவும், குறவஞ்சியாகவும் வளர்ந்துள்ளது. இவ்வளர்ச்சியில், பல்வேறு சிற்றிலக்கியக் கூறுகளைத் தன்னகத்தே கொண்டு விளங்குகின்றது குறவஞ்சி இலக்கியம். குறவஞ்சியில் காணப்படும் இச்சிற்றிலக்கியக் கூறுகளை (1) உறவுடைய இலக்கிய வகைகள், (2) தொடர்புடைய இலக்கிய வகைகள், (3) சாயலுடைய இலக்கிய வகைகள் என மூவகையாகப் பாகுபடுத்தி ஆராயலாம்.

குறவஞ்சி இலக்கியத்தின் இரண்டு முக்கியக் கூறுகளாக விளங்குவன குறி கூறுதலும் பறவை வேட்டையும் ஆகும். குறி கூறுதலை முக்கிய நிகழ்ச்சியாகக் கொண்டு விளங்கும் குறத்திப்பாட்டு, கலம்பக இலக்கியத்தில் இடம்பெறும் குறம் என்னும் உறுப்பு, குறம் ஆகியவற்றையும், பறவை வேட்டையை முக்கிய நிகழ்ச்சியாகக் கொண்டு விளங்கும் குளுவ நாடகத்தினையும் குறவஞ்சியுடன் உறவுடைய இலக்கிய வகைகள் என்னும் பகுதியில் அடக்கலாம்.

கி.பி. பதினேழு, பதினெட்டாம் நூற்றாண்டுகளில் தோன்றியநாடக இலக்கிய வகைகளுள் குறவஞ்சி, பள்ளு, நொண்டி நாடகம் ஆகியவை குறிப்பிடத்தக்கன ஆகும். கடவுளரையும், அரசரையும், வள்ளல்களையும் மட்டுமே சிறப்பித்துப் பாடி

வந்த காலச்சூழலை விடுத்து, சாதாரண மக்களுக்கு—குறவர், பள்ளர், நொண்டி போன்றோருக்கு—இலக்கியத்தில் தலைமை இடம் அளித்த பெருமை இம்மூன்று இலக்கிய வகைகளையே சாரும்: இவ்வகையில் பள்ளும் நொண்டி நாடகமும் குறவஞ்சியுடன் தொடர்புடைய இலக்கிய வகைகள் எனலாம்.

குறவஞ்சியில் தலைவன் உலா, தலைவியின் வருணனை (கேசாதிபாதம்), தலைவி விடுக்கும் தூது, தலைவி காதல் வயப்பட்டுப் புலம்பும் புலம்பல் (பவனிக் காதல்), ஏசலை ஒத்திருக்கும் சிங்கன்—சிங்கி எதிர்த்துரையாடல், தலைவனின் தசாங்கம் எனப் பல்வேறு பிற சிற்றிலக்கியக் கூறுகள் அமைந்துள்ளன. இவை உலா, தூது, கேசாதிபாதம், பவனிக்காதல், தசாங்கம், ஏசல் ஆகிய சிற்றிலக்கியங்களின் சாயலைப் பெற்று அமைவதனால், இவற்றைச் சாயலுடைய இலக்கிய வகைகள் எனலாம்

## உறவுடைய இலக்கிய வகைகள்

### குறத்திப்பாட்டும், குறவஞ்சியும்

குறத்திப்பாட்டு என்னும் இலக்கிய வகை இன்று கிடைக்கப் பெறவில்லை. ஆயின், பாட்டியல் நூல்களில் ஒன்றான பன்னிரு பாட்டியலும் தொன்னூல் விளக்கமும் இவ் இலக்கிய வகைக்கு இலக்கணம் உரைக்கின்றன. இவ்விரண்டு இலக்கணங்களும் தம்முள் மாறுபட்டுள்ளன.

'' இறப்பு நிகழ்வெதிர் வென்னுமுக் காலமும்
திறப்பட வுரைப்பது குறத்திப் பாட்டே
குறத்திப் பாட்டும் அதனோ ரற்றே. ''
(பன்னிரு பாட்டியல், இனவியல், நூ. 165, 166)

என்று முக்காலத்துக் குறியுரைக்கும் செய்தியை, உழத்திப் பாட்டைப் போன்று பத்துப் பாடல்களாகப் பாடுவது குறத்திப் பாட்டு என இலக்கணம் கூறுகிறது பன்னிரு பாட்டியல். தொன்னூல் விளக்கமோ, குறவஞ்சியில் இடம்பெற்றுள்ள நிகழ்ச்சிகளையே குறத்திப்பாட்டின் இலக்கணமாக எடுத்துரைக்கின்றது (ப. 203). தொன்னூல் விளக்கம் எழுந்த காலத்தில், குறவஞ்சி நூல்கள் தோன்றிப் புகழ் பெற்றுவிட்டன. எனவே, குறவஞ்சி இலக்கியத்தில் காணப்படும் நிகழ்ச்சிகளையே குறத்திப்பாட்டின் இலக்கணமாக ஆசிரியர் இந் நூலில் கூறியிருக்கலாம். எனினும், பன்னிரு பாட்டியல் குறிப்

பிடும் குறத்திப்பாட்டு என்னும் ஓர் இலக்கிய வகை இருந் திருத்தல் கூடும் என்பதற்கும், முக்காலக் குறியுரைத்தல் அதன் பொருளாக இருந்திருத்தல் கூடும் என்பதற்கும் குறம், குறவஞ்சி இலக்கியங்களில் வரும் சில பகுதிகள் சான்று பயக்கின்றன

'' வருகால நிகழ்காலங் கழிகாலம்
மூன்றுமொக்க வகுத்துப் பார்த்துத்
தருகாலந் தெரிந்துரைப்பது எளிதுஅரிதன்று
எங்கள்குறச் சாதிக் கம்மே.'' (பா. 24)

என்று மீனாட்சியம்மை குறத்தில் வரும் குறத்தி கூறுகிறாள். இப்பகுதியில் வரும் 'வருகாலம், நிகழ்காலம், கழிகாலம்' என்னும் தொடர் குறத்தி முக்காலக் குறியுரைத்த செய்தியினை உணர்த்தி நிற்கின்றது.

குற்றாலக் குறவஞ்சியில், குறத்தியை அறிமுகப்படுத்தும் போது,

'' காலமுன் போங்குறி கைப்பல னாங்குறி
மேலினி வருகுறி வேண்டுவார் மனக்குறி
மெய்க்குறி கைக்குறி விழிக்குறி மொழிக்குறி
எக்குறி யாயினும் இமைப்பினில் உரைக்கும்
மைக்குறி விழிக்குற வஞ்சி.'' (பா. 49)

என்று அவளுடைய குறித்திறனையும் ஆசிரியர் வெளிப்படுத்து கின்றார். இப்பகுதியில் இடம்பெற்றுள்ள 'காலமுன் போங்குறி' என்னும் தொடர் இறந்த காலத்தை உணர்த்துவதாகவும், 'மேலினி வருங் குறி' என்னும் தொடர் எதிர்காலத்தைச் சுட்டு வதாகவும், 'மெய்க்குறி, கைக்குறி, விழிக்குறி, மொழிக்குறி' என்னும் தொடர்கள் நிகழ்காலத்தைக் காட்டுவனவாகவும் அமைந்திருத்தல் குறிப்பிடத்தக்கதாகும்.

### கலம்பகமும் குறவஞ்சியும்

பாட்டியல் நூல்களுள் முதலில் தோன்றிய பன்னிரு பாட்டியல் கலம்பக இலக்கியத்தின் உறுப்புக்களாகப் பதினான்கு உறுப்புக்களைக் கூறுகின்றது. பின்னர்த் தோன்றிய வெண்பாப் பாட்டியல், சிதம்பரப் பாட்டியல், இலக்கண விளக்கப் பாட்டியல் முதலியன பதினெட்டு உறுப்புக்களைக் குறிப்பிடு கின்றன. பாட்டியல் நூல்களில் கூறப்பட்டுள்ள கலம்பக உறுப்புக்களின் எண்ணிக்கை மட்டுமன்றி, உறுப்புக்களும் வேறு

படுகின்றன. கலம்பகங்களில் காலப்போக்கில் பல்வேறு உறுப்புக்கள் புதிது புதிதாக இணைந்துள்ளன. அவ்வாறு இணைந்த உறுப்புக்களுள் குறமும் ஒன்று ஆகும்.

கி. பி. 11ஆம் நூற்றாண்டிற்கு முன்னர்க் 'குறத்திப் பாட்டு' என்னும் இலக்கிய வகை ஒன்று இருந்திருத்தல் வேண்டும். எனவே, பன்னிரு பாட்டியல் அதற்கு இலக்கணம் உரைத்துள்ளது. பல இலக்கிய வகைகள், பாதுகாக்கப்படாத காரணத்தினால் மறைந்து விட்டமை இலக்கிய வரலாறு உணர்த்தும் உண்மை. இவ்வாறு மறைந்த இலக்கியங்களுள் குறத்திப்பாட்டும் ஒன்று என எண்ணலாம். இந்நிலையில் இலக்கிய வரலாற்றில் நந்திக் கலம்பகத்தை அடியொற்றிப் பல கலம்பகங்கள் தோன்றுகின்றன. கலம்பக இலக்கியம் மரபினைப் போற்றல், மரபினை மீறல், மரபினைத் தோற்றல் ஆகிய மூவகை உத்திகளுக்கும் இடமளித்து வந்துள்ளது. இவ் வகையில், நந்திக் கலம்பகத்தில் கூறப்பெறாத 'குறம்' என்னும் ஓர் உறுப்பு பதின்மூன்றாம் நூற்றாண்டில் தோன்றிய திருப் பாதிரிப்புலியூர்க் கலம்பகத்தில் இடம்பெற்றுள்ளது. இப்புதிய மரபிற்குக் காரணம், பன்னிரு பாட்டியலில் கூறப்பெற்றுள்ள குறத்திப்பாட்டின் இலக்கணமே ஆகும். எனவே, பதினான்காம் நூற்றாண்டில் தோன்றிய நவநீதப் பாட்டியலும், அதற்குப் பின்னர்த் தோன்றிய பிற பாட்டியல் நூல்களும் 'குறம்' என்னும் உறுப்பைக் கலம்பக உறுப்புக்களுள் ஒன்றாகக் குறிப் பிட்டுள்ளன. 'இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் இயம்பல்' (நன்னூல், நூ. 141) என்னும் விதி இங்கே உண்மையாவதை அறியலாம். எனவே, கி.பி. 11ஆம் நூற்றாண்டு வரை வாழ்ந்த குறத்திப்பாட்டு மறந்துவிட்டமையால்தான் பிற பாட்டியல் நூல்கள் அவ் இலக்கிய வகைக்கு இலக்கணம் உணர்த்தவில்லை எனத் தெளியலாம். பின்னர் அது கலம்பகத்தில் குறம் என்னும் உறுப்பாக இடம்பெறத் தொடங்கி யுள்ளது.

குறிச்சிறப்பு

கலம்பகத்தில் காணப்படும் குறம் என்னும் உறுப்பு, குறத்தியின் மலைவளம், குறித்திறன், குடிவளம், குறி கூறும் முறை, நன்னிமித்தம் பார்த்தல் என இவற்றுள் ஏதேனும் ஒன்றை அல்லது இரண்டை உணர்த்திநிற்கக் காணலாம். அழகர் கலம்பகக் குறத்தி, தான் இடபமால் வரையில் வாழும் குறப்பாவை என்று தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டு,

'கிருஷ்ணனுக்கு முன்னே வெண்ணெய்க்குக் காரணமான பசுக் கூட்டம் திரளும்படி நியாயமான குறியைச் சொன்னேன்' என்றும், 'இமயமலையின் மகளாகிய பார்வதியை இவ்வாறு பிறப்பாள் என்று முன்னமே அறிந்து குறி சொன்னேன்'[1] என்றும் தன் குறிச்சிறப்புப் பற்றிக் கூறுகிறாள். ''என் குறி பொய்ப்பல, பொய்ப்பன புன்சமயத்து ஏதிலர்தம் மொழி'' (பா. 60) என்று தன் குறிச்சிறப்புக் கூறுவதோடு, பிற சமயத்தைப் பழித்துப் பேசுகின்றாள் திருக்கலம்பகத்தில் வரும் குறத்தி. 'தடாதகைப் பிராட்டிக்குச் சுந்தரபாண்டியர் உன்னை மணம் செய்து கொள்வார் என்று முன்னமே குறி சொன்ன குறத்தி யான்'[2] என்கிறாள் மதுரைக் கலம்பகத்தில் வரும் குறத்தி.

குடிச்சிறப்பு

''குழகர் மகற்கு மகட்கொடுத்த குடியிற் பிறந்த குறமகள் யான்'' (பா. 43) என்று தன் குடிச்சிறப்பைக் கூறுகிறாள் காசிக் கலம்பகத்தில் வரும் குறத்தி.

குறி கூறும் முறை

குறி கூறும் முறை சில கலம்பகங்களில் காணப்படுகின்றது. முறத்தில் இட்ட நெல்லை வறுத்துப் பார்த்துக் குறி கூறுதலும்,[3] சுளகில் இட்ட நெல்லை எண்ணிப் பார்த்து, அஃது ஒற்றை எண்ணாக வந்தால் நன்மை, இரட்டை எண்ணாக வந்தால் தீமை என்று கொள்ளுதலும்,[4] 'முறத்தில் உன் தாய் கொணர்ந்து போட்ட நெல்லை ஆராய்ந்து குறி கூறுமிடத்து நீ மனத்தில் நினைத்த பொருள் ஒன்று உண்டு' என்று கூறித் தலைவனின் அங்க அடையாளம் கூறுதலும்[5] நெற்குறியின் வாயிலாகப் புலப்படக் காண்கிறோம்.

நன்னிமித்தம் பார்த்தல்

நன்னிமித்தம் பார்த்துக் குறியுரைத்த செய்தி ''தும்மலும் நல்வரத்தே காண்'' (பா. 77) என வரும் மதுரைக் கலம்பக அடியால் அறியலாம்.

கைக்குறி, மெய்க்குறி பார்த்தல்

கைக்குறியும் மெய்க்குறியும் பார்த்துக் குறி கூறுவதும் உண்டு.

" ஒழுகு தொடிக்கைக் குறியுமுகக் குறியுந் தருமொள்
வளைக்குறியும்
புழுகு முழுகுமுலைக் குறியும் உடையாரவர் பொற்புயந்தானே."
(பா. 43)

என வரும் காசிக் கலம்பக வரிகளால் இதனை உணரலாம்.

குறத்தி வேண்டுவன

குறி கூறத் தொடங்குமுன் குறத்தி தலைவியிடம் உணவும் உடையும் வேண்டிப் பெறுவதும் உண்டு. இதனை,

" ......... வாக்கு நன்கூழ் பெலங்கஞ்சி அச்சுதர் விடார் அம்பரந்
துணிவையாய் இனியமே." (பா. 53)

எனவரும் அழகர் கலம்பக வரிகள் உணர்த்தும்.

கலம்பகக் குற உறுப்பில் காணப்படும் செய்திகள் அனைத்தும் குறம், குறவஞ்சி இலக்கியங்களில் காணப்படுகின்றன. குறவஞ்சி இலக்கிய வளர்ச்சியில் கலம்பகத்திற்கு ஓர் இன்றியமையாத இடம் உள்ளது என்பது இதனால் புலனாகும்.

கலம்பகம் பற்றிக் குறிப்பிடுமிடத்து, தெ. பொ. மீனாட்சி சுந்தரனார் 'கலம்பகம், கற்றோர் இலக்கியத்தையும் நாட்டுப்புற இலக்கியத்தையும் இணைக்கிறது'[6] எனக் குறிப்பிடுகின்றார். இக்கூற்றிற்கேற்ப, மடக்கு, புயம், தோள்வகுப்பு போன்ற மரபிலக்கியக் கூறுகளோடு, கீரையார், வலைச்சியார், இடைச்சியார் என்னும் உறுப்புக்களும் பிற்காலக் கலம்பகங்களில் இணைந்துள்ளமையை அறியலாம். வலைச்சியார் என்பது தெருவில் மீன் விற்கும் மீனவப் பெண்மீதும், கீரையார் என்பது கீரை விற்கும் பெண் மீதும், இடைச்சியார் என்பது தயிர் விற்றுச் செல்லும் இடையர் குலப்பெண்மீதும் ஆடவன் ஒருவன் காதல் கொள்வதை எடுத்துரைப்பது ஆகும். கடவுளரையும், அரசரையும், வள்ளல்களையும் மட்டுமே பாடி வந்த மரபை மாற்றிச் சாதாரண மக்களான குறவர், பள்ளர் போன்றோருக்கும் ஓர் இலக்கிய மதிப்பை ஏற்படுத்தித் தருவதற்கு இவ்வுறுப்புக்கள் காரணமாயின எனலாம்.

மேலும் கலம்பகத்தில் சித்து, சம்பிரதம் என்னும் இரு உறுப்புக்கள் இடம்பெற்றுள்ளன. சித்து என்பது சித்தர் ஒருவர் கூறுவதைப் போன்று அமைவது. சம்பிரதம் என்பது

மிகக் கடுமையான செயலைச் செய்வது போலக் கூறி, அதன் உட்பொருளாக மிக எளிய செயலை வெளிப்படுத்துதல். மதுரைக் கலம்பகத்தில் 'கடல் புவியனைத்தும் ஓர் இமைப் பினில் மறைத்து உடன் விடுத்திடுவேன், எட்டு வரையைக் கடலை முட்டியுள் அடக்கி விடுவேன்' (பா. 82) என்று சம்பிரத உறுப்பும், 'கரும்பை முன்பு கல்லானைக்கு இடுஞ் சித்தர் கையில் செங்கல் பசும்பொன்னதாக்கினேம், இருந்த வீடும்... எருத்துக் கொட்டிலும், பொன்னேய்ந்திடச் செய்தேம்' (பா. 58) என்று சித்து உறுப்பும் கூறுவதைப் போன்றே, பொய்யாமொழியீசர் குறவஞ்சியிலும், குறத்தி தான் அறிந்த வித்தைகளைப் பற்றிக் கூறுமிடத்து அமைந்துள்ளது:

" கல்லிலேயும் நாருரிப் பேன்மணற்
கயிறாகவே கையால் திரிப்பேன்
நல்ல மலைகளை யும்பேர்த் தெடுப்பேன்
நானூறு பேரெதிர்த் தாலுந் தடுப்பேன்
நன்றாக என்கையில் வைகுண்ட முங்காட்டி
நான்மறைப் பேனவ தானமும் பாராட்டி."

(பா. 41: 2)

குறமும் குறவஞ்சியும்

குறம், பதினேழாம் நூற்றாண்டில் தோன்றிய ஓர் இலக்கிய வகை ஆகும். கிடைக்கப்பெறும் குறங்களில் காலத்தால் முந்தியது குமரகுருபரர் பாடிய மீனாட்சியம்மை குறம் ஆகும். "மரம், செடி, கொடி, விலங்கு, தாது போன்றவற்றிற்குச் சரியான விளக்கம் அளித்து வகைப்படுத்திப் பார்த்தல் எளிது. ஆனால் புலவரின் கற்பனையில் தோன்றும் இலக்கிய வகைகளை அங்ஙனம் விளக்கி வகைப்படுத்துவதற்கு இயற்கை ஓர் அளவு கோலினை அமைக்கவில்லை; அவைகள் பலவகைப்பட்ட தனித்தனி அழகுப் பெட்டகங்களாகவே விளங்குகின்றன. அவற்றை வகைப்படுத்தும் முயற்சி பயனற்றதாகவே முடியும்"[7] என மேனாட்டறிஞர் ஹியூக் பிளேர் குறிப்பிடும் கருத்து குற வகை இலக்கியங்களுக்குப் பொருந்துகிறது. குற இலக்கியங்கள் அமைப்பில் ஒன்றுக்கொன்று மாறுபட்டு விளங்கு கின்றன.[8]

முதலில் தோன்றியதாகக் கருதப்படும் மீனாட்சியம்மை குறம் இலக்கியச் சிறப்பில் உயர்ந்து நிற்பதோடு குறவஞ்சி இலக்கியத்திற்கும் வழிகாட்டியாக அமைந்துள்ளது. இக் குறத்தில் காணப்படும் செய்திகளைப் பிற குறவஞ்சி இலக்கியங்

களுடன் ஒப்பிட்டுக் காண்பதன்மூலம் இதனை அறியலாம். மீனாட்சியம்மை குறத்துடன் ஒப்பிடுவதற்குக் காரணம், அக் குறம் ஒன்றே குறவஞ்சி தோன்றுவதற்கு முன்னர்த்தோன்றிய குறமாக அமைந்திருக்கிறது. பிற குறங்கள் குறவஞ்சிக்குப் பின்னரே தோன்றியுள்ளன என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

மீனாட்சியம்மை குறம் —அமைப்பு

மீனாட்சியம்மை குறம், மதுரைச் சொக்கநாதர்பால் காதல் கொண்ட தலைவியாகிய அங்கயற்கண்ணம்மைக்குக் குறத்தி ஒருத்தி குறி கூறுவதை விளக்குகின்றது. சித்தி விநாயகர் காப்புடன் தொடங்கும் அக்குறம், பின்னர்க் குறத்தியைப் பற்றிக் கூறுகிறது. 'பொதிய மலைக் குறத்தி நானே' என்று தன்னை அறிமுகம் செய்துகொண்டு வரும் குறத்தி, அங்கயற்கண்ணம்மை சொக்கலிங்கப் பெருமான்மீது காதல் கொண்டிருப்பதை அறிந்து, 'சொக்கலிங்கனைக் கூடி மேவுவாய்' என்று கூறி, அவள் காதலைத் தூண்டுகிறாள்; பின்னர், தரை மெழுகிக் கோலம் இட்டு, பிள்ளையார் உருவினைப் பிடித்து வைத்து, நிறைநாழி நெல் அளந்து வைக்கச் செய்து, அங்கயற்கண்ணம்மையின் கையைப் பார்த்துக் குறி கூறத் தொடங்குகிறாள்; கைக்குறி, முகக்குறி, பல்லி சொல், கன்னிமார் வாக்கு, இடக்கண் துடித்தல் என்னும் இவற்றையெல்லாம் ஆராய்ந்து தலைவனின் 'தோள் மேவுவாய்' என்று கூறுகிறாள்; பிறகு தன் மலைவளமும், குலப் பெருமையும், குடி இயல்பும் எடுத்துரைக்கிறாள்; தன்னுடைய வறுமை நிலையைச் சொல்லி, தான் சென்று குறி கூறி வந்த இடங்களைப் பற்றிக் குறிப்பிடுகிறாள்; தன் முன்னோர் சொன்ன குறியும், தான் சொன்ன குறியும் பலித்த வரலாறு களைக் கூறுகிறாள்; பின்னர், முக்காலமும் பார்த்துக் குறி கூறுதல் தனக்கு எளிதே என்று கூறி, குங்குமத்தைச் சந்தனக் குழம்பில் குழைத்துத் தரையை மெழுகிக் கோலமிட்டு, குங்குலியக் கொழும்புகைக் காட்டி, நவமணிகளை நாற்றிசை யும் பரப்பித் தென்மேற்கு மூலையில் பிள்ளையாரை வைக்கும் படித் தலைவிக்குச் சொல்கிறாள்; நறுமலரும் அறுகும் ஐங்கரர்க்குச் சாத்திப் புழுகு நெய் வார்த்து விளக்கேற்றி, நிறைநாழி வைத்து, முறத்தில் ஒரு படி நெல்லைக் கொணரச் செய்து, அதனை எண்ணிப் பார்த்து, நெல் அளந்திட்டபோது ஏற்பட்ட நன்னிமித்தங்களான பல்லிசொல், பத்தினிப் பெண்டிர் வாக்கு, தும்மல், ஆந்தை வீச்சு ஆகியவற்றை நோக்கித் தலைவி நினைத்த காரியம் விரைவில் கைகூடும் என்று

கூறுகிறாள்; அடுத்து, இருபது கண்ணிகளால் அங்கயற் கண்ணம்மையைப் போற்றிப் பரவுகின்றாள். இத்துடன் இக்குறம் நிறைவுறுகின்றது.

## ஒற்றுமை

### மலைவளம்

'செந்நெல் முத்தும் கன்னல் முத்தும், ஒளிதிகழ் மதுரை அங்கயற்கண்ணம்மை பொன்னும் முத்தும் சொரியும் வெள்ளருவிப் பொதியமலை' என்றும், 'கனக நவமணி விளையும் மலை' (பா.2) என்றும் தன் பொதிய மலையின் வளத்தைக் கூறுகிறாள் மீனாட்சியம்மை குறத்தில் வரும் குறத்தி. குறவஞ்சியில் வரும் குறத்தி, 'மந்தி சிந்து கனிகளுக்கு வான்கவிகள் கெஞ்சும்' வளம் மிக்கது என்றும், 'வயிரமுடன் மாணிக்கம் விளையும் மலை', அங்கு' ஆடும் அரவு ஈனும் மணி கதிரவனையே எறித்து விடும் ஆற்றல் மிக்கது' என்றும். அம்மலையில் வாழும் குறவர்களோ, 'கிம்புரியின் கொம் பொடித்து வெம்புதினை இடிப்பர்' (குற். குற., பா.54) என்றும் பல்வேறு வகையாகத் தன் மலைவளத்தை எடுத்துரைக் கின்றாள்.

'திங்கள்முடி சூடுமலை தென்றல்விளை யாடுமலை' (பா.13) என்று குறத்தில் வரும் குறத்தி மலையின் உயர்ச்சி யைப் பாடுவதுபோல், 'தேனருவித் திரையெழும்பி வானின்வழி ஒழுகும், செங்கதிரோன் பரிக்காலும் தேர்க்காலும் வழுகும்; காகம் அணுகா மலையில் மேகநிரை சாயும்' (குற்.குற., பா 54) என்று குறவஞ்சியில் வரும் குறத்தி தன் மலையுயர்ச்சியை எடுத்துரைக்கின்றாள்.

'பொதிய மலையில் ஒருபால் சிங்கமும் யானையும் இணைந்து விளையாடும்; ஒருபால் சினப்புலியும் மானும் களித்திருக்கும்; ஒருபால் வெங்கரடி மரையினொடும் விளையாடும்; ஒருபால் விடஅரவும் மடமயிலும் விருந்தயரும்' (பா.16) என்று குறத்தில் வரும் குறத்தி கூறுவதைப் போன்றே, 'ஆவின் கன்றை மடிமிசை வைத்து ஆண்புலி தாலாட்டும், அக்கன்றுக்குப் பெண்புலி வந்து அன்புடன் பாலூட்டும்' (அழ.குற., கீ. 30) என்றும், 'வரிபொரு வேங்கை தொடாது மானை; சிங்கத்தின் வாயிற் பிறாண்டிப் பிழைக்கும் குலிங்கம் (ஊர்க்குருவி)' (கும்.குற., பா.51) என்றும் குறவஞ்சியில் வரும் குறத்தியர் தம் மலைச்சிறப்பைப் புலப்படுத்துகின்றனர்.

குலப் பெருமை

குறக் குடியில் பிறந்த வள்ளியை முருகனுக்கு மணம் முடித்த செய்தி குறம், குறவஞ்சி ஆகிய இரு இலக்கியங் களிலும் குறக்குலப் பெருமையாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. 'அங்கயற்கண் பாவை பயந்த ஆறிரு தோள் செச்சைப் படலை நறுங்குஞ்சிக் சிறுவன் தனக்குப் பெருந்தடங்கண் கொச்சைச் சிறுமிதனைக் கொடுத்த குறவர் குலம்' (பா.17) என்று மீனாட்சியம்மை குறம் குலப்பெருமை பேசுகிறது. 'யானை முதலிய விலங்குகளைத் துரத்தி, வேங்கை மரமாக நின்று நிழல் தந்த நன்மைக்காக, இலஞ்சிவேலர்தமக்கு வள்ளியைக் கொடுத்து ஆதினத்து மலைகளெல்லாம் சீதனமாகக் கொடுத்தோம்' (குற்.குற., பா.54) என்று குறவஞ்சியில் வரும் குறத்தியும் இதனைப் பெருமையுடன் குறிப்பிடுகின்றாள்.

கிளைச் சிறப்பு

முருகனுக்குக் குறக்குல வள்ளியை மணமுடித்தமையின், முருகனின் தந்தையான சிவபெருமானையும் குறவனாகக் கூறும் இயல்பைக் குறத்தில் காண்கிறோம். 'வெள்ளிமலைக் குறவன் மகன் பழனிமலைக் குறவன் எங்கள் வீட்டிற் கொண்ட வள்ளி தனக்குக் குறவர் மலையாட்சியையே சீதனமாக வழங்கினோம்' (பா. 20) என்று குறத்தி கூறுமிடத்து, 'வெள்ளி மலைக் குறவன்' எனச் சிவபெருமான் சுட்டப்படுவதைக் காணலாம். இதனையே, 'ஒரு குலத்திற் கொடோம், ஒரு குலத்திற் கொள்ளோம்' (குற்.குற., பா.54) எனத் தம் குலம் தவிரப் பிற குலத்தில் பெண் கொடுத்துக் கொள்ளா இயல் பினையுடையது எனக் குலப்பெருமை பேசுகின்றாள் குறவஞ்சியில் வரும் குறத்தி. மேலும், 'குற்றாலநாதர் இமய மலையின் கொற்ற வேந்தனுக்கும், உயர்ந்த மதுரைநகர் மலையத்துவச பாண்டியனுக்கும் மருமகன் ஆவார்; பாற்கடலில் புற்றரவில் உறங்கும் வித்தகர்க்குக் கண்ணான மைத்துனர் ஆவார்; ஆகு வாகனத்தார்க்கும் (விநாயகர்), தோகை வாகனத் தார்க்கும் (முருகன்), தன் கைப்படையினால் தன் தந்தையின் காலினை வெட்டிய சண்டேசுர நாயனார்க்கும், சீர்காழி நகரின் தோன்றிய திருஞான சம்பந்தமூர்த்திக்கும் தந்தையாவார்; ஐராவத யானையால் வளர்க்கப்பட்ட தெய்வயானைக்கும், மான் ஈன்ற கொடி போன்ற வள்ளி நாயகிக்கும், தாமரை மலர் மேலிருக்கும் அயனுக்கும், மன்மதனுக்கும் மாமனார் ஆவார்' (குற். குற., பா. 64) என்று பாட்டுடைத் தலைவரின்

கிளைச்சிறப்பை விரித்துச் செல்லும் இயல்பு குறவஞ்சியில் காணப்படுகின்றது.

குறக்குடி இயல்பு

செழித்த கொடியிலிருந்து வள்ளிக் கிழங்கை அகழ்ந்தெடுத்தல், மலையின்கண் உள்ள குறிஞ்சி மலரை முல்லைக் கொடியில் வைத்துத் தொடுத்தல், பசுந்தழையும் மரவுரியும் ஆடையாக உடுத்துதல், புலித்தோலைப் படுக்கையாகக் கொண்டு துயிலுதல், பழச்சாறும், தேனும் உணவுடன் உட்கொள்ளல், வரும் விருந்தினர்க்குத் தேனும் தினையும் கொடுத்து உபசரித்தல் (பா. 18) முதலான குறக்குடி இயல்புகளை எடுத்துரைக்கிறது மீனாட்சியம்மை குறம். இவ்வாறே ஒவ்வொரு குறவஞ்சியிலும் குறக்குடி இயல்புகள் சில குறிப்பிடப்படுகின்றன. மலையின் செழிப்பைப் பாடிக்கொண்டே குரவைக் கூத்தாடுதல் (குற். குற., பா. 54: 2; சோலை. குற,, பா.88) மேன்மை மிக்க தமக்கு இழிவுவரின் அதற்குத் துடிக்கும் தன்மான உணர்வு, தம்மை எதிர்த்தோரை மேல்மிஞ்சவிடாது வெல்லும் தன்மை (சர. குற., பா. 37:2), செந்தேனும் தினை மாவும் தினம் உண்டு களித்தல் (தியா. குற., பா. 29: 3; அழ. குற., பா. 30 : 3), மானினொடு பன்றி மரையொளி விருந்து கொடுத்தல் (சர. குற., பா.37:1), தவளத்தரளம் வாரித் தளர்ந்தவருக்கு அளித்தல், மாங்கல்யம் சங்கின் மணி தன்னில் பதித்தல் (தியா. குற., பா.29:3), போதகத்தின் முத்துடன் சாதிமுத்தும் கோத்தல், பொறுக்கிவரும் முத்தையெல்லாம் ஊதிக் கலயம் சேர்த்தல், காதுகுத்திப் பெண்களுக்குக் கலன் அணியச் செய்தல், கஞ்ச முள்தாள் நூலெடுத்துத் துகில் நெய்தல், புலிநகம் எடுத்து நன்றணிபோல் வனைதல் (அழ. குற., கீ. 30:3), பின்குலத்தில் பெண் கொடுத்துக் கொள்ளாமை, மங்களஞ்சேர் தீட்சை பெற்றோர்க்குப் பெண்ணைக் கொடுத்தல் (பெத். குற., ப. 61) போன்ற குடி இயல்புகளும், குறக்குலத் தொழில்களும் குறவஞ்சியில் இடம் பெற்றுள்ளன.[9]

குறி சொல்லத் தொடங்குமுன் செய்ய வேண்டியவை

குறி சொல்லத் தொடங்கு முன்னர், தரை மெழுகிக் கோலமிட்டு, பிள்ளையார் உருப் பிடித்து வைத்து, அதற்கு நிறைகுடம் வைத்து, நிறைநாழி நெல்லளந்துவைத்து, விளக்கு ஏற்றிவைத்து, பல வகையான பொருட்களைப் படைத்து வழிபடும் வழக்கம் குறத்தில் காணப்படுவது போலவே குறவஞ்சியிலும் காணப்படுகின்றது.

**தெய்வம் பராவுதல்**

மீனாட்சியம்மை குறத்தில் வரும் குறத்தி, அங்கயற் கண்ணம்மையை மனத்துள் நினைத்துக் குறி கூறத் தொடங்கு கின்றாள் (பா. 7). குறவஞ்சியில் வரும் குறத்தி, அவ்வத் தலத்துக் கடவுளரையேயன்றிப் பல சிறு தெய்வங்களையும் மனத்தில் துதிக்கின்றாள். ஒவ்வொரு குறவஞ்சியிலும் இருப திற்கும் மேற்பட்ட சிறு தெய்வங்களின் பெயர்கள் இப்பகுதியில் இடம்பெற்றுள்ளன. இதனை நோக்குமிடத்து, குறவஞ்சிக் காலத்தில் பெருந்தெய்வ வழிபாட்டோடு, சிறு தெய்வ வழி பாடும் ஒருங்கே சிறப்புறத் தொடங்கியமையை அறிய முடிகின்றது.

## குறித்திறன்

**முன்னோர் குறிச்சிறப்பு**

தன் குறியின் சிறப்பைக் கூறத் தொடங்கும்போது, தன் முன்னோர் சொல்லிய குறி பலித்ததாகக் கூறுகின்றாள், மீனாட்சியம்மை குறத்தில் வரும் குறத்தி. அவள் தன் பாட்டி 'பூமகள் மாயவன் மார்பிற் பொலிவள்' என்று சொன்னதும் தன் பெரிய தாய், 'கலைமான் மலரயனார் திருநாவில் வாழ்வள்' என்று சொன்னதும், தன் நற்றாய், 'சுந்தரி இந்திரன் தோள் பெறும்' என்று சொன்னதும் கூறுகின்றாள்; மற்றும் 'தன் சிறிய தாய் சொன்ன குறிக்கு அளவில்லை' (பா.22) என்றும் குறிப்பிட்டுப் பிறகு தன் குறிச்சிறப்பைக் கூறத் தொடங்குகிறாள்.

முன்னோரின் குறிச்சிறப்பு உரைத்தல் குற்றாலக் குறவஞ்சி யில் மட்டுமே காணப்படுகின்றது. 'வடகிழ்த் திசையில் கொல்லம் ஆண்டு நானூற்று நாற்பத்து நான்காவதாண்டிலே தென்காசிக் கோயில் சிறந்து மேம்படும்படி செண்பகப் பாண்டியனிடத்தில் அன்பாய்க் குறி சொன்னவர்கள் எங்கள் குலத்தில் பிறந்த குறிகாரர்களேயாவர்; நல்ல பாண்டி நாடு கடைத்தேறும்படியாகச் சொக்கநாதப் பெருமான் சோமசுந்தர பாண்டியராக உருமாறித் திருமணம் செய்து கொள்வதை மதுரை மீனாட்சியம்மையாருக்கு எங்கள் குலத் துக்குரிய குறி சொல்வாரைக் குறி கேட்டு, உணர்த்தி, அவ் வாறே குறி தவறாமல் நடந்ததற்குச் சங்கப் புலவர்களே சான்று கூறுவார்கள். (குற். குற., பா. 62) என்று தன் முன்னோர் குறித்திறனை உயர்த்திக் கூறி, அதனால் தன் குறி சொல்லும் திறனும் சிறந்தது என்கிறாள் குறத்தி.

தன்குறிச் சிறப்பு

தன் முன்னோரின் குறித்திறனைச் சிறப்பித்த குறத்தி, தானே பலருக்குக் குறி சொன்னதும், அவை பலித்ததும் பற்றிப் பின்னர்க் கூறுகிறாள். மீனாட்சியம்மை குறத்தில் வரும் குறத்தி, 'முன்னொரு நாள் அம்மை தடாதகைப் பிராட்டியார் பிறந்த நாளில் அவள் முகக்குறி கண்டு இவள் உலகமுழுதும் ஆளும் என்றேன்; பின்னொரு நாள் கைக்குறி பார்த்து அம்மை உனக்கு எங்கள் பிஞ்ஞகர்தாம் மணவாளப் பிள்ளையென்று சொன்னேன். அன்னையவள் மெய்க்குறிகள் அனைத்தையும் பார்த்து உனக்கோர் ஆண்பிள்ளையுண்டு, பிறந்து அரசாளும் என்றேன். சொன்ன குறியெல்லாம் என் சொற்படியே பலிக்கும்'. (பா. 23) என்று அம்மை தடாதகைப் பிராட்டிக்குக் கைக்குறி, முகக்குறி, மெய்க்குறி பார்த்துப் பலன் சொன்ன சிறப்பை விளக்கிக் கூறுகிறாள்; அங்கயற்கண்ணம்மைக்கும் இவ்வாறே கைக்குறி, மெய்க்குறி, முகக்குறி நோக்கி,

"அம்மேநின் செங்கையைநின் கொங்கையில்வைத் ததுதான்
அபிடேகச் சொக்கருனை யணைவரென்ற குறிகாண்
இம்மேலைத் திசையினிற்கை யெடுத்ததுவு மவர்தாம்
இன்றந்திப் பொழுதினில்வந் தெய்துவரென் றதுகாண்
கைம்மேற்கை கட்டியதுந் தப்பாமல் உனக்குக்
கைகூடு நீநினைத்த காரியமென் றதுகாண்
செம்மேனி மணிவயிற்றிற் கைவைத்த தினிநீ
சிறுவர்பதி னறுவரையும் பெறுவையென்ற தம்மே."

(பா. 29)

என்று குறிப்பலன் உரைக்கின்றாள்.

மீனாட்சியம்மை குறத்தில் வரும் குறத்தி, அம்மை தடாதகைப் பிராட்டிக்குக் குறியுரைத்ததாகக் கூறியமையே, காலப்போக்கில் குறவஞ்சிகளில் திருமகள், கலைமகள், மலைமகள், இந்திராணி, கங்கைமாது போன்ற பல தெய்வங்களுக்கும் தமயந்தி, குந்தி, சந்திரமதி போன்ற பல புராண, இதிகாச மாந்தருக்கும் குறி சொல்லி, அவர்களிடம் பரிசில் பெற்றதாக விரித்துரைக்கப் படுவதற்கு இடமாயிற்று. சரபேந்திர பூபால குறவஞ்சியிலும், தியாகேசர் குறவஞ்சியிலும் வரும் குறத்தியர் பல நாட்டுப் பெண்களுக்குக் குறியுரைத்துப் பரிசில் பெற்றதாகக் கூறப்பட்டுள்ளது (சர. குற., பா. 46: 4—9; தியா. குற., பா. 45: 6—7).

மீனாட்சியம்மை குறத்தில் வரும் குறத்தி கைக்குறி, மெய்க்குறி, முகக்குறி பார்ப்பது போல் கும்பேசர் குறவஞ்சியில் வரும் குறத்தி, தலைவியின் இராசியும், ஓர் இலக்கமும் கேட்டு அவற்றை நோக்கி மெய்க்குறி உரைக்கின்றாள்; 'உன் குல தெய்வங்களை நினைந்து, ஈராறு இராசியில் ஒன்று இப்போது இயம்புவாய்' எனக் கேட்டு, கும்பராசி என்பதை அறிந்து குறிப்பலன் சொல்லத் தொடங்குகின்றாள்; 'என்னைப் பார்த்திடு என்றால் பெருமூச்சு எறிந்த சேதி—பசும் பொன்னல்ல, பூவல்ல, பூடணாதிகள் அல்ல, புருடர்மேல் ஆசை மெய்; நூற்றெட்டில் ஓர் இலக்கம் பன்னிரண்டு ஆம் என்று நுட்பம் சொன்னாய், சொன்ன வார்த்தைக்குள்ளே குறி பார்த்துப் பார்த்து, மலைமங்கை மணாளன் என்றேனே. ஆகத்தில் ஓர் இடம் நீ தொடு என்றால் முலைமேல் அங்கையை வைத்துக் கொண்டாய். உன்னை ஏகபோகமாய்ச் சேரக் குடந்தைக் கும்பலிங்கேசர் இதோ வந்தார் வந்தாரே' (கும். குற., பா. 76) என்று தலைவி நினைத்த தலைவரின் பெயரை மெய்க்குறி, சோதிடம், எண்குறி (Numerology) ஆகியவற்றின் மூலம் வெளிப்படையாக உணர்த்துகின்றாள். சரபேந்திர பூபால குறவஞ்சியில் வரும் குறத்தியும், தலைவியின் உடலில் உள்ள தழும்பு, மறு ஆகியவற்றைக் குறிப்பிட்டு, இதனால் இன்ன பயன் விளையும் என்று கூறுவதும் (சர. குற., பா. 51) இங்கே குறிப்பிடத்தக்கதாகும்.

கைரேகை பார்த்துப் பலன் உரைத்தல் மீனாட்சியம்மை குறத்தில் (பா. 30) கூறப்படுவது போல், சரபேந்திர பூபால குறவஞ்சி, கும்பேசர் குறவஞ்சி, தியாகேசர் குறவஞ்சி போன்ற பல குறவஞ்சிகளிலும் கூறப்பட்டுள்ளது, (சர. குற., பா. 52; கும். குற , பா. 71; தியா. குற., பா. 50). பல்லி சொற்குறி, பத்தினிப் பெண்கள் வாக்காகிய விரிச்சி, தும்மல், ஆந்தையின் வீச்சு ஆகியவற்றால் நன்னிமித்தம் உண்டாதலைக் குறம், குறவஞ்சி ஆகிய இரு இலக்கியங்களும் குறிப்பிடுகின்றன.

கலம்பகத்தைப் பின்பற்றி நெற்குறி கூறும் வழக்கம் மீனாட்சியம்மை குறத்தில் காணப்படுகின்றது. 'இந்நாழி நெல்லையும் முக்கூறு செய்து ஓர் கூற்றை இரட்டைப்பட எண்ணினபோது ஒற்றைப்பட்டதம்மே, உனக்குமுன் வெள்ளி மலைப் பிள்ளையார் வந்துதித்தார், உனக்கினி எண்ணின கருமம் இமைப்பினில் கைகூடும்' (பா. 26) என்று கூறும் கட்டுப்

பார்க்கும் வழக்கம் எந்தக் குறவஞ்சியிலும் காணப்படவில்லை. ஆயின் குறவஞ்சியில் தெய்வம் ஏறிக் குறி சொல்லும் முறை காணப்படுகின்றது. இது குறத்தில் இல்லை. குற்றாலக் குறவஞ்சியில் சக்கம்மாதேவியும், சரபேந்திர பூபால குறவஞ்சியில் எக்கலாதேவியும், திருமலையாண்டவர் குறவஞ்சியில் பதினெட்டாம்படிக் கறுப்பனும் குறிமுகத் தெய்வங்களாக அமைகின்றனர்.

வேற்றுமை

மீனாட்சியம்மை குறம் குறத்தியின் கூற்றினை மட்டும் பெற்று ஒருகூற்று நாடகமாக (Dramatic Monologue) விளங்க, அதன் வளர்ச்சியான குறவஞ்சி ஒரு நாட்டிய நாடக அமைப்புப் பெற்று விளங்குகிறது. நாடகத்திற்கு உரிய களம், காட்சி அமைப்புக்கள் இல்லாவிடினும், நிகழ்ச்சிகள் காட்சி களாகப் பிரிக்கத் தகுந்தவாறு அமைந்துள்ளன. எனவே, மீனாட்சியம்மை குறத்தில், தலைவன்மீது தலைவி கொண்ட காதலைக் குறத்தியின் மூலமாகத்தான் அறிகிறோம்; தலைவியை நாம் நேரில் சந்திப்பது இல்லை. ஆயின், குறவஞ்சியில் தலைவர் பவனியைக் காண வரும் தலைவியின் அழகு விரிவாக வருணிக்கப்படுகின்றது. பின்னர் அவள் தலைவன்மீது காதல் கொள்ளுதல், காதல் மிகுதியால் நிலா, தென்றல் போன்றவற்றை நோக்கிப் புலம்புதல், தோழியைத் தலைவன்பால் தூது விடுதல், தூது சென்ற தோழி திரும்பு வதற்குள் கூடல் இழைத்துப் பார்த்தல் என, நிகழ்ச்சிகள் நாடகப் பாங்கிற்கேற்ப இருவர் உரையாடலாக (Dialogue) அமைந்து விளங்குகின்றன.

குறத்தில், குறத்தி தன்னைத்தானே அறிமுகப்படுத்திக் கொண்டு வருகின்றாள். குறவஞ்சியில், குறத்தியின் வருகை கவிக்கூற்றாக அமைந்துள்ளது.

குறத்தில் வரும் குறத்தி மலைவளம் மட்டும் பாடு கின்றாள்; குறவஞ்சியில் இக்கூறு விரிவாக்கப்பட்டு, குறத்தி தன் நாட்டுவளம், தான் சென்று வந்த தலங்களின் வளம், பாட்டுடைத் தலைவனின் வாசல்வளம் எனப் பல்வேறு வளங்களை எடுத்துக்கூறுவதாக அமைக்கப்பட்டுள்ளது.

குறத்தி குறி கூறும் முறையிலும் குறத்திற்கும் குறவஞ்சிக்கும் இடையே வேறுபாட்டினைக் காண முடி கின்றது. கலம்பகக் குற உறுப்பிலும், மீனாட்சியம்மை

குறத்திலும் காணப்படும் நெற்குறி, குறவஞ்சியில் காணப் பெறவில்லை. ஆனால், குறவஞ்சியில் வரும் குறத்தி, பல சிறு தெய்வங்களை வழிபட்டு, தலைவியின் மனக்குறியை உணர்த்த வேண்டுகின்றாள்; பின்னர், ஏதேனும், ஒரு தெய்வம் ஏறப்பெற்று, தெய்வ வாக்காகவே குறியை உணர்த்து கின்றாள். இதனை நோக்குமிடத்து, பதினாறாம் நூற் றாண்டு வரை இருந்த கட்டுப் பார்க்கும் வழக்கம் மெல்ல மறைந்து, தெய்வ வாக்காகக் குறி கூறும் வழக்கம் பரவியது என உணரலாம்.

குறவஞ்சியின் பிற்பகுதிகளான குறவன் வருகை, குறவனின் பறவை வேட்டை, சிங்கன்—சிங்கி எதிர்த்துரையாடல் முதலியன குறத்தில் இல்லை.

குளுவ நாடகமும் குறவஞ்சியும்

குறவஞ்சியின் பிற்பகுதியான சிங்கனின் பறவை வேட்டையை அடிப்படையாகக் கொண்டு சிற்சில வேறுபாடு களுடன் குறவஞ்சிக்குப் பின்னர் எழுந்த ஓர் இலக்கியம் குளுவ நாடகம் ஆகும். இன்று கிடைக்கப்பெறும் ஐந்து குளுவ நாடகங்களுள் நான்கு குளுவ நாடகங்கள் அமைப்பில் ஒன்று பட்டு விளங்குகின்றன.[10]

ஒற்றுமை

குறவஞ்சியில் கட்டியக்காரன் பாட்டுடைத் தலைவனை அறிமுகப்படுத்துவதுபோல், அருணாசலம் செட்டியார் குளுவ நாடகத்தில் கட்டியக்காரனே பாட்டுடைத் தலைவனையும் குளுவனையும் அறிமுகப்படுத்துகின்றான்.

குறவஞ்சியில் வரும் சிங்கன் பாட்டுடைத் தலைவனின் புகழ் பாடுவதைப் போலவே, குளுவ நாடகத்தில் வரும் குளுவனும் பாட்டுடைத் தலைவனின் புகழைப் பாடுகின்றான்; பாட்டுடைத் தலைவனைத் துதிக்கும் 'சித்திரக் குளுவன்' என்று தன்னை அறிமுகப்படுத்திக் கொள்கின்றான்.

குறவஞ்சியில் வரும் குறத்தி, பாட்டுடைத் தலைவனின் தசாங்கமும், பிற சிறப்பியல்புகளும் கூறுவதைப் போல் குளுவ நாடகத்தில் வரும் குளுவன் (அல்லது கட்டியக்காரன் — அருணாசலம் செட்டியார் குளுவ நாடகத்தில்) பாட்டுடைத் தலைவனின் தசாங்கமும் பிற சிறப்பியல்புகளும் எடுத்துக் கூறுகின்றான்.

குறவஞ்சியில் சிங்கன் தன் வலிமையைக் கூறிக் கொள் வதைப்போல், சின்னமகிபன் குளுவ நாடகத்தில் வரும் சிங்கன், 'சின்னன் பூபமகிபன் தமிழுக்கு வரிசை தருகையில், சன்னையன் சொல்லித் தடுக்கின்ற லோபரைத் தாடியாலே பிடித்தாட்டி யுதைக்கின்ற சிங்கனும் நானே' (பா.15) என்று தன் வலிமை யைக் கூறிக் கொள்கின்றான். அருணாசலம் செட்டியார் குளுவ நாடகத்தில், குளுவனின் கையாளாக வரும் பாங்கனும் இவ்வாறே தன் வலிமையை எடுத்துரைக்கக் காணலாம் (பா. 24).

குறவஞ்சியில் வரும் குறத்தி சித்துவித்தை, மாயசித்தி, காயசித்தி, சுத்தவித்தை, கெஜகர்ணம், கோகர்ணம் போன்ற பல வித்தைகள் அறிந்தவளாக இருக்கின்றாள்.[11] குறவனும் காடுகட்டு, அக்கினிக்கட்டு, கண்கட்டு ஆகிய வித்தைகளை அறிந்தவனாக இருக்கின்றான் (குற். குற., பா. 118). அதைப் போல் குளுவ நாடகத்தில் வரும் குளுவனின் கையாள் பலவித சித்துவித்தைகளையும், சித்து வித்தைகளைப் புரிவிக்கும் பச்சிலைகளையும் பற்றி அறிந்தவனாக இருக்கின்றான்.

" பச்சிலை நானறிவேனடய்யே பார்ப்பதிபாகர்
  நயினார் தென்னாட்டினில்
உச்சிதமா யுச்சிவாசல் திறக்கவும் ஊமையெழுத்துப
  தேசங் கற்கவும்
தற்செயல்வாய் விண்ணமுதுண்ணவுந் தன்னையறிந்து
  தலைவனைப் போற்றவும்
சச்சிதானந்த வெளியொளி காணவுந் தாண்டிய
  மீண்டத்தை கண்டுவரக் கண்ணிப் —
பச்சிலை நானறிவேன்."  (பா. 13)

என்று கோட்டூர் நயினார் குளுவ நாடகத்தில் வரும் குளுவன், தான் அறிந்த சித்து வித்தைகளையும், அவற்றிற்குக் காரணமான பச்சிலைகளைப் பற்றியும் தனக்குத் தெரியும் என்று பெருமை கொள்கின்றான். கலம்பகத்தில் கூறப்படும் சித்து, சம்பிரதம் என்னும் உறுப்புக்களை அடியொற்றிக் குறவஞ்சியில் குறத்தி தன் வித்தைகளை வெளிப்படுத்தும் பொழுது கூறுவதைப் போன்றே (பொய். குற., பா. 41:2), குளுவ நாடகத்தில் வரும் குளுவனும், 'கருங்கல்லிடத்தில் நாருரிப்பேன், மணலைக் கயிறாய்த் திரிப்பேன்', 'சுத்த இரும்பைப் பசுந்தங்கமாக்குவேன்' என்பன போன்ற சித்து

வித்தைகளைக் கூறுகின்றான் (கோ. ந. கு. நா., பா. 13; சி. ம. கு. நா., பா. 17).

குறவஞ்சியில் பறவைகள் கீழிறங்கி வயல்களில் மேய்வதைச் சொல்லுமிடத்துப் பல்வேறு ஊர்ப் பிரமுகர்களின் வயல்களில் மேய்வதாகச் சொல்வதைப் போலவே, குளுவ நாடகங்களிலும் அமைந்துள்ளது.

குற்றாலக் குறவஞ்சியில் கண்ணி பதித்தபின் சிங்கன், 'கெம்பாறடையே பொறு பொறு கெம்பாறடையே' என்று உரத்துப் பேசும் நூவனை அடக்குவது போல, சின்னமகிபன் குளுவ நாடகத்திலும் குளுவன்,

" வாழைத் தோட்டத்தில் நில்லடா — அங்கே
வார ஆளை நிக்கச் சொல்லடா
கூழைப்பச்சி வலையை யெறியடா — வெள்ளைக்
குருகெல்லாம் நல்ல கறியடா." (பா.31)

என்று சிங்கனிடம் கூறுகின்றான். அருணாசலம் செட்டியார் குளுவ நாடகத்திலும் குளுவன் பாங்கனிடம்,

" பூசுரரெல்லாங் குளித்து முழுகிப்
புறத்தில் வந்தாரப் புறத்திலே போகச்சொல்." (பா.41)

என்று கூறுகின்றான். சரபேந்திர பூபால குறவஞ்சியில் 'நாய்களை ஒதுங்க வைத்திடு, நீயும் ஒதுங்கியிரு' (பா.58) என்று சிங்கன் குளுவனிடம் கூறுவதும் இங்கு நினைவுகூரத் தக்கது. இவற்றால் ஆளரவம் இன்றிப் பறவை பிடிக்கும் உத்தியைக் குறவஞ்சிச் சிங்கனும், குளுவ நாடகக் குளுவனும் அறிந்திருந்தமை புலனாகும்.

குற்றாலக் குறவஞ்சியில் வரும் குறத்தி தன் குறித் திறமையை நிலைநாட்டும் பொருட்டு,

" என்ன குறியாகிலுநான் சொல்லுவேன் அம்மே சதுர்
ஏறுவேன் எதிர்த்த பேரை வெல்லுவேன் அம்மே."
(பா.64)

என்று கூறுகின்றாள். இதைப் போலவே அருணாசலம் செட்டியார் குளுவநாடகத்தில் வரும் குளுவனை அறிமுகப் படுத்தும்பொழுது,

"சித்துவகைதனில் மிகுந்த டம்பக்காறன்
செங்கையிலேந்திய குறட்டுக்·கம்புக்காறன்
வித்தையிலே துடிக்காற னெதிர்த்தவரை
வெல்லுவான் தன்பெருமை சொல்லுவானே." (பா.29)

என்று அவனது பெருமைகளைக் குறிப்பிடுகின்றார் ஆசிரியர்.

குறவஞ்சியில் பாட்டுடைத் தலைவர் கடவுளராக இருப்பின், அவரைச் சூழ்ந்திருப்பவர் அண்டர், தொண்டர், அசுரர், முனிவர் கூட்டம் என்றும், பாட்டுடைத் தலைவர் அரசராக இருப்பின் அவரைச் சூழ்ந்திருப்பவர் மந்திரி, தந்திரி, சேனாபதி மற்றும் அறிஞர்கள் என்றும் கூறப்படுதல் உண்டு. அருணாசலம் செட்டியார் குளுவ நாடகத்தில் பாட்டுடைத் தலைவன் இராமநாதபுரம் மாவட்டக் குறுநில மன்னனாக இருப்பதால், அவரைச் சூழ்ந்து உற்றார், உறவினர், பன்னாட்டு வணிகர் இருந்தனர் என்று கூறுகின்றான் கட்டியக்காரன்:

"தனதுடன் சிறிய தந்தைய ரிருக்க
இனிய சகோதரா ளிருபுற மிருக்க
மைத்துனர் மார்களும் மைந்தர்க ளனைவரும்
பத்தியாய்க் கிளைஞரும் பண்புட னிருக்க
சென்ன பட்டணத்தார் சீன தேசத்தார்
மன்னனைக் காண வந்து காத்திருக்க." (பா.17)

முருகப் பெருமான் சூரனோடு போர் செய்ய, அவன் மாற்றுருவம் அடைந்தான்; பெருமான் அம்மரத்தை ஆறு நாளில் வேரோடு பறிய வீழ்த்தினார் என்பது வரலாறு. அவ் ஆறாவது நாளை வடமொழியில் சஷ்டி என்பர். தமிழில் இது 'சட்டி' எனப்படும். இதனைக் குறிப்பிடும் வகையில் 'முருகப் பெருமானாகிய குறவன், முதன் முதல் வேட்டைக்குச் சென்ற காலத்தில் ஆறு நாள்களுக்குப் பின் ஒரு கொக்கு (மாமரமாகி நின்ற சூரன்) பிடிபட்டது; அக்கொக்கினை ஒரு சட்டியிலிட்டு அவியவைத்துக் குழம்பு வைத்தபின் அக் குழம்பின் சுவை கண்டு வேதப் பிராமணர் உண்டனர்; சைவர்கள் உண்டனர் (சட்டித் திருநாளைச் சைவர்களும் அந்தணர்களும் முற்றத் துறந்த முனிவர்களும் கொண்டாடிக் களித்தார்கள்)' என்று கூறி, 'ஆதலால் நாம் கொக்கு முதலிய பறவைகளைப் பிடிப்பதற்குத் தடையில்லை' (பா.95) என்று குற்றாலக் குறவஞ்சியில் வரும் சிங்கன் கூறுகின்றான்.

இவ்வாறே அருணாசலம் செட்டியார் குளுவ நாடகக் குளுவனும்,

“ சட்டியிற் கொக்கை யவிப்பதற் கெப்போதும் கூசான்
ஆதிசைவப் புலிப்பாதர் பதஞ்சலி யென்பார்
தில்லை யம்பலந் தன்னில் வந்தாட்டுக் காலைக் கண்டபின்
தின்பார்
சைவர் கண்டாலவர்க் கென்னடாயிதிற் கூச்சம்
கறிரசந் தின்றவர்க் கல்லோ கிடைத்திடு மோக்ஷம்
நல்ல கறியெல்லாம் சுட்டுத் தெய்வங்கட்குப் படைப்பாயே.”
(பா.44)

என்று கறியைத் தெய்வங்கட்குப் படைப்பதில் தவறில்லை என்பதை உணர்த்துகின்றான்.

குறவஞ்சியில், பறவைகள் கண்ணியில் சிக்கிக்கொண்டு விழிப்பதைக் காணும் சிங்கன், அவை தமிழ் இலக்கணம் அறியாதவர்கள் சான்றோரது கேள்விக்குப் பதில் அளிக்கும் போது விழிப்பதைப்போல் விழிக்கின்றன என்றும், வேசையர் வலைக்குள்ளே சிக்கிய காமுகரைப் போலவும் விழிக்கின்றன என்றும் பல உவமைகளைக் கூறி விளக்குகின்றான் (சர.குற., பா.59:2) இத்தகைய அழகிய உவமைகளைக் குளுவ நாடகங் களிலும் காணலாம்:

“ கைப்பொரு ளெல்லாம் புவிக்குள் புதைத்து
கனவிலுந் தர்ம நினையாத லோபிகள்
தப்பாமற் பாச வலைக்குள் ளகப்பட்டுத்
தக்க துக்கத்தோடு சிக்கினாற் போலவும்
தையலர் ஆசை வலைக்குள்ளே காமுகர்
தாளாமலே வந்த சிக்கினாற் போலவும்
சிக்குச்சிடா ஐயே பறவைகள் சிக்குச்சிடா.”
(அ.செ.கு.நா., பா:42)

குறவஞ்சியில் குறத்தி, தன் குலத் தொழிலான குறி சொல்லுதலின்மூலம் பலரிடமிருந்தும் பரிசில் பெறுகின்றாள். குளுவ நாடகத்தில் குளுவன் தன் தொழிலான பறவை வேட்டையின்மூலம் கிடைத்த பறவைகளைப் பல வள்ளல் களுக்குக் கொடுத்துப் பரிசில் பெற்று வருமாறு சிங்கனை ஏவுகின்றான். சரபேந்திர பூபால குறவஞ்சியில், பறவை களுக்குக் கண்ணி மாட்டியபின் ஒதுங்கியிருக்கும் சிங்கன் பல

பட்சிகள் வருவதைக் குறிப்பிட்டு, தன்னைக் கூப்பிடாதிருக்குமாறு தன் கையாளிடம் கூறுகின்றான். அப்பொழுது,

" ஒருவன்பல் வகைச்சொற்க ளுரைப்ப தெனப்புட்கள்
ஒலிவகை யெலாங் கூவுங் குருவி வருகுது
வருமிக் குருவியைத் தஞ்சைச் சரபோஜி
மகராஜ னுக்கீந்தால் வெகுமானம் வாங்கலாம்." (பா.59:7)

என்று அவன் கூறுவதும் இங்கு நினைவுகூரத்தக்கது.

குறவஞ்சியின் இறுதியில் சிங்கன்-சிங்கி எதிர்த்துரையாடல் பகுதி இடம் பெற்றிருப்பது போலவே, குளுவ நாடகத்திலும் அமைந்துள்ளது.

## வேற்றுமை

'குளுவன்' என்பவன் குறவஞ்சியில் வரும் கதைமாந்தர்களுள் ஒருவன். 'குளுவன்' என்பதற்குக் 'குறவனுடைய பாங்கன்' (A fowler's attendant) என்று பொருள் கூறுகிறது, சென்னைப்பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதி (Lexicon).[12] உ.வே. சாமிநாதையர், சரபேந்திர பூபால குறவஞ்சி நாடக நூன்முகத்தில், 'குளுவன்' என்பதற்கு 'மலைவாணருள்ளே ஒருவகைச் சாதியான்' என்று விளக்கம் கூறுகிறார்.[13]

திருக்குற்றாலக் குறவஞ்சியில் வரும் சிங்கன், 'குளுவ சிங்கன்' என்றும் அழைக்கப்படுகின்றான்.

" சிங்கனெனும் குளுவன் நானே." (பா.83)

" பறவைகள் படுக்கும் குறவனும் நானே. " (பா. 84)

" திரிகூட நாமச் சிங்கனும் நானே. " (பா. 85)

என்று அவன் தன்னை அறிமுகப்படுத்திக் கொள்கின்றான். திருமலையாண்டவர் குறவஞ்சி, ஓதாளர் குறவஞ்சி ஆகியவற்றில் வரும் குறவர்கள் 'குளுவன்' என்ற பெயரால் அழைக்கப்படுகின்றனர். ஆயின், அழகர் குறவஞ்சி சரபேந்திர, பூபால குறவஞ்சி, கும்பேசர் குறவஞ்சி, தியாகேசர் குறவஞ்சி போன்ற குறவஞ்சிகளிலோ குளுவன் குறவனின் கையாளாக வருகின்றான். இதனை நோக்குமிடத்துக் குளுவன், சிங்கன் என்னும் பெயர்கள் குறவஞ்சிகளில் மிகுதியான வேறுபாடின்றிக் கையாளப்பட்டுள்ளமை புலனாகும். ஆயின் குளுவ நாடகத்தில் தலைமைப் பாத்திரமாக வருபவன் குளுவன் என்றும், அவனுடைய கையாளாக வருபவன் சிங்கன் அல்லது பாங்கன்

என்றும் அழைக்கப்படுகின்றனர். இங்கு, தலைமைப் பாத்திர மாக வரும் குளுவனுக்குச் சிறப்பளிக்கும் வகையில் 'குளுவ நாடகம்' என்னும் பெயர் நூலுக்கு அமைந்துள்ளது எனலாம்.

குறவஞ்சியில் சிங்கன், சிங்கியின் மீது கொண்ட காதல் மிகுதியினால், தன் தொழிலில் கவனம் செலுத்தாது, பறவை களைத் தப்ப விட்டு விடுகின்றான். இக்குறையை நிறைவாக்கு கின்றான் குளுவ நாடகக் குளுவன். அவன் தன் பறவை வேட்டை முடிந்த பிறகே குறத்தியைத் தேடத் தொடங்கு கின்றான்.

கோட்டூர் நயினார் குளுவ நாடகத்தில் குளுவன் மாத்திரைக் கோலும், பட்சிகளைப் பிடிக்கும் பச்சிலையும் வைத்திருந்ததாகக் கூறுதல் போல், குறவஞ்சியில் இல்லை.

இவ்வாறு குளுவ நாடகம் சிற்சில இடங்களில் குறவஞ்சி யினின்றும் மாறுபட்டு விளங்குகின்றது.

## தொடர்புடைய இலக்கிய வகைகள்—குறவஞ்சியும் பள்ளும், நொண்டி நாடகமும்

தமிழ் இலக்கிய வரலாற்றில் ஏறக்குறைய சம காலத்தில் தோன்றிய நாடக வகைகள் எனப் பள்ளு, குறவஞ்சி, நொண்டி நாடகம் ஆகியவற்றைக் குறிக்கலாம். முதலில் எழுந்த குறவஞ்சி, கும்பேசர் குறவஞ்சி ஆகும். கி.பி. (1675—1677). முதலில் தோன் றிய பள்ளு இலக்கியம் முக்கூடற்பள்ளு என்றும், கி.பி. 1676—1682 ஆம் ஆண்டிற்குள் அது தோன்றியிருக்க வேண்டும் என்றும் கூறுவர் மு. அருணாசலம்.[14] இக்கருத்தினை மறுத்து, இப் பள்ளிற்கு முன்பே கமலை ஞானப் பிரகாசர் இயற்றிய திரு வாரூர்ப்பள்ளு தோன்றிவிட்டது என்பர் ந. வி. செயராமன்.[15] நொண்டி நாடக இலக்கிய வகைகளுள் முதலில் தோன்றியது திருச்செந்தூர் நொண்டி நாடகம் என்றும், இது கி. பி. 1709-1711-க்கு இடைப்பட்ட காலத்தில் தோன்றியிருக்க வேண்டும் என்றும் கூறுவர்.[16] எனவே, இவ் இலக்கிய வகைகள் கி.பி. 17ஆம் நூற்றாண்டின் இறுதியிலும், கி.பி. 18ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் எழுந்தன என்பது தெளிவாகும்.

இம்மூன்று இலக்கிய வகைகளும் திருவிழாக் காலங்களில் கோவில்களில் நடிக்கப்பெற்று வந்துள்ளன. 'ஒரு கதையை ஒருவனே நடிகனாகவும் பாடகனாகவும் இருந்து நடிக்கும்' வரிக் கூத்து வகையைச் சார்ந்த நொண்டி நாடகம், 'ஒற்றைக்கால்

நாடகம்' என்ற பெயராலேயே இன்றும் வழங்கி வருகிறது என்பர்.[17]

" பள்ளேசலுக்கும் கள்சாராயத்துக்கும்
பத்தெருதையும் வித்தான் காணாண்டே. " (பா. 76)

என வரும் வையாபுரிப்பள்ளு வரிகள் பள்ளு நாடகம் கிராமங் களில் நடிக்கப்பெற்று வந்தமையையும், மக்களால் விரும்பிப் பார்க்கப்பட்டமையையும் உணர்த்தி நிற்கின்றன. இவ்வாறே குறவஞ்சியும் திருவிழாக் காலங்களில் நடிக்கப்பெற்று வந்துள்ளது.[18]

குறவஞ்சி, பள்ளு, நொண்டி நாடகம் ஆகிய மூன்று இலக்கியங்களும் சாதாரண மக்களைத் தலைவர்களாகக் கொண்டு எழுந்துள்ளன. "இரண்டும் (குறவஞ்சி, பள்ளு) பெயரளவில்தான் தெய்வங்கள் பற்றியன. உண்மையில் இவைகள் தாழ்ந்த மரபினர் என்று கருதப்படும் குறவர், பள்ளர் களுடைய காதல் வாழ்க்கையைச் சித்திரிக்கின்றன. எப் பொழுதும் தெய்வங்களையும், குறுநில மன்னரையும் பிரபுக் களையும் பாடி வந்த நம்மவர்க்கு இஃது ஓர் புதுமையல்லவா? மேலும் நாடக வடிவில் அமைந்து இசைப்பாட்டுக்களையும் உட் கொண்டு நடிக்கப்பட்டு வந்தமையால் பொதுமக்கள் இவற்றைப் பெரிதும் விரும்பினர்"[19] என்று எஸ். வையாபுரிப் பிள்ளை குறவஞ்சி, பள்ளு ஆகியவற்றிற்கு மக்களிடையே இருந்த செல் வாக்கிற்குக் காரணம் குறிப்பிடுகின்றார். நொண்டி நாடகத் திற்கும் இக்கூற்று பொருந்துவதேயாகும். குறவஞ்சி குறவரது வாழ்வையும், பள்ளு பள்ளரது வாழ்வையும், நொண்டி நாடகம் தனியொரு கள்ளனின் வாழ்வையும் படம்பிடித்துக் காட்டு கின்றன.

நொண்டி நாடகத்தில் வரும் நொண்டி, தன்னை அறிமுகப் படுத்திக்கொண்டு வரும் பகுதி, குறவஞ்சிச் சிங்கனின் அறிமுகப் பகுதியை ஒத்து விளங்குகின்றது.

" காதலஞ் செழுத்தார் போதநீ றணியார்
கைந்நரம் பெடுத்துக் கின்னரம் தொடுத்துப்
பாதகர் தோலால் பலதவில் அடித்துப்
பறவைகள் படுக்கும் குறவனும் நானே. " (பா. 85:2)

என்று குற்றாலக் குறவஞ்சியில் வரும் சிங்கன் பாட்டுடைத் தலைவனைப் போற்றாதவரைத் தூற்றுவேன் என்று கூறுவதைப்

போல, திருச்செந்தூர் நொண்டி நாடகத்தில் வரும் நொண்டியும்,

" முருகன்பேர் நாவிலுச் சரிப்பேன்—செந்தில்
முத்தையனை வணங்காரைக் கேலிபண்ணிச் சிரிப்பேன்
குருபரனன் பரையுப சரிப்பேன்—சற்றுங்
கூசாம லெட்டாத தேசமுஞ்சஞ் சரிப்பேன்
ஆறெழுத்தை மாத்திரஞ் செபிப்பேன் அந்த
அச்சரத்தை யுச்சரியாத் துச்சனரை வெறுப்பேன். "

(பா. 22, 23)

என்கின்றான். இவ்வாறே முக்கூடற்பள்ளனும் தன்னை அறிமுகப்படுத்திக்கொண்டு தோன்றும்பொழுது,

" ஒருபோ தழகர் தாளைக்
கருதார் மனத்தை வன்பால்
உழப் பார்க்குந் தரிசென்று
கொழுப் பாய்ச்சுவேன்
பெருமாள் பதிநூற் றெட்டும்
மருவி வலஞ் செய்யாரைப்
பேய்க்காலில் வடம் பூட்டி
ஏர்க்கால் செய்வேன்."

(பா.11)

என்று கூறிக்கொண்டு தோன்றுகின்றான்.

முக்கூடற்பள்ளில், மூத்த பள்ளி, இளையபள்ளி போன்ற கதைமாந்தர்கள் தம்மைத் தாமே அறிமுகம் செய்துகொண்டு தோன்றும் பாங்கும், குறவஞ்சியில் குறத்தி, குறவன், நூவன், கட்டியக்காரன் முதலான கதைமாந்தர்கள் தம்மைத் தாமே அறிமுகம் செய்துகொண்டு தோன்றும் பாங்கும் ஒத்து விளங்குகின்றன. முக்கூடற்பள்ளில் பள்ளன் பள்ளியர் இருவரும் சாதாரண பள்ளர் குலத்தைச் சார்ந்தவர்கள்; பண்ணைக்காரன் உயர்வகுப்பினன். பள்ளு நாடகத்தில் உயர்வகுப்பினனான பண்ணைக்காரன் தன்னைத்தானே அறிமுகம் செய்து கொள்வதில்லை; ஆசிரியரே அவனுடைய தோற்றத்தைக் கூறி அறிமுகம் செய்கின்றார். குறவஞ்சியில் உயர்வகுப்பைச் சேர்ந்த கதைமாந்தர்களான தலைவன், தலைவி, பாங்கி ஆகியோரை அறிமுகப்படுத்தும் பகுதியில் இப்பாங்கு காணப்படுகின்றது.

முக்கூடற்பள்ளில் வரும் பள்ளன் முக்கூடலில் திருமால் எழுந்தருளிய நாள்தொட்டுத் தன் குடும்பமும் அங்கிருந்த

தாகப் பெருமை பாராட்டுகின்றான்; அருகில் தான் செல்ல நேரிட்டால் 'பள்ளா பள்ளா' என்று கூறி விலகிச் செல்லும் உயர்குலத்தினர் உண்ணும் சோறு தன் வேளாண்மையால் விளைந்தது என்னும் உண்மையை அறியாதவர் என்றும், 'மைக்கடல் முத்துக்கு ஈடாய், மிக்க நெல் முத்து உண்டாக்கும் வடிவழகக் குடும்பன்' (பா.15) என்றும் தன் தொழில் திறமையை உணர்த்துகின்றான். இதைப் போலவே, குற்றாலக் குறவஞ்சிச் சிங்கனும், 'கண்ணி குத்தி வேட்டை ஆடி, நாய் போல் தடங்கண்டுபிடித்து, பூனைபோல் பதுங்கியிருந்து, நரிபோல் ஒடுங்கியிருந்து, பேய்போல் தொடர்ந்து, சிங்கம் போல் பாய்ந்து அடிக்கின்ற திரிகூடச் சிங்கன்' (பா. 84) என்று தன் தொழில் திறனை உணர்த்துகின்றான். நொண்டி நாடகத்தில் வரும் நொண்டியும் இவ்வாறே 'புலி பாய்ச்சல் பாய்வதுபோல், சூதும், பொய்யும், களவும், புரட்டும் உருட்டும். கலிகால கற்பனையால் எல்லாம் கற்றறிந்தேன் பேரும் பெற்றிருந்தேன், செறிந்த திருடருக்குள் என்போல் தீர்க்கமும், மார்க்கமும் யார்க்கும் உண்டோ' (பா. 32, 33) என்று தன் தொழில் திறமையை உணர்த்துகின்றான்.

குறவஞ்சி, பள்ளு, நொண்டி நாடகம் ஆகிய மூன்றும் மூவகையான வாழ்க்கை நிலைகளை நமக்குச் சித்திரிக்கின்றன. குறவஞ்சி குறவர் வாழ்வின் முக்கியத் தொழிலான குறி கூறுதல், பறவை வேட்டை ஆகிய இரண்டினையும், அவர்கள் கையாளும் முறைகளோடும், உத்திகளோடும் நமக்குத் தெளிவாகக் காட்டுகின்றது. அவ்வாறே பள்ளு இலக்கியம், உழவுத் தொழில் முறைகளை—மழை வேண்டிப் பொங்க விடுதல், நாற்று நடும்பொழுது கடவுளை வணங்கி நடுதல், களையெடுத்தல், அறுவடை போல்வனவற்றைக் குறிப்பிடு கிறது; மேலும், பலவகையான நெல் வகைகளையும், மாட்டு வகைகளையும் வெளிப்படுத்தி, பள்ளரின் உழவுத்திறனைப்புலப் படுத்தி நிற்கின்றது. நொண்டி நாடகம், கெட்ட தொழிலில் ஈடுபடுபவருக்கு நேரும் துன்பத்தையும், இறையருளால் எத்தகைய துன்பமும் நீங்கிவிடும் என்னும் உண்மையினையும் நொண்டியின் வாழ்க்கை அனுபவமாக உணர்த்துகின்றது.

பள்ளு இலக்கியத்தில் முதலில் சிந்து, விருத்தம் ஆகிய யாப்பு வகைகளே இடம்பெற்றிருந்தன (முக்கூடற் பள்ளு; பின்னர் பல்வேறு யாப்பு வகைகளும் இணைந்தன. குறவஞ்சியில் விருத்தம், வெண்பா, கட்டளைக் கலிப்பா போன்ற யாப்பு வகைகள் நிகழ்ச்சிகளின் இணைப்புப் பாலமாக

விளங்க, நிகழ்ச்சிகள் சிந்து, கீர்த்தனம் என்னும் இசைப்பாடல் வகைகளால் இசைந்தன. நொண்டி நாடகம் முழுவதும் நொண்டிச் சிந்து என்னும் யாப்புவகையிலேயே அமைந் திருத்தல் குறிப்பிடத்தக்கதாகும்.

குறவஞ்சி, பள்ளு, நொண்டி நாடகம் ஆகிய மூன்றின் இறுதியிலும் மனம்மாறித் திருந்துதல் என்னும் கூறு இடம் பெற்றுள்ளது. குறவஞ்சியில் சிங்கியைப் பிரிந்து, தவித்துத் திரியும் சிங்கன், அவளைக் கண்டவிடத்து, அவள் அணிந் திருந்த பல வகையான அணி வகைகளையும் நோக்கி அவள் மீது சந்தேகம் கொள்கின்றான்; அவளிடமே அதுபற்றி வினவி, அவை அவள் குறி கூறிப் பெற்று வந்த பரிசில் என்பதையறிந்து மனந் தெளிகின்றான். அதுபோலப் பள்ளில், மூத்த பள்ளி, இளைய பள்ளி ஆகிய இருவரும் தத்தம் சமயக் கடவுளரை உயர்த்தியும், பிறரைத் தாழ்த்தியும் கூறி ஏசல் புரிகின்றனர். இறுதியில், மூத்தபள்ளி 'பெருமாள் அடியானுக்கு மனைவியாக இருந்தும், பெருமாளைப் பழித்துப் பேசலாமா' என்று வினவ, 'சினத்தில் சொல்லாதது உண்டோ' என்று இளையபள்ளி விடையிறுக்க, 'மூப்பிளமை பார்த்துத் தலை சாய்ப் பாரில்லையோ' என்று மூத்தவள் வினவ, 'இந்த வார்த்தை முந்தச் சொன்னால், சண்டை இத்தனையுண்டோ' என்று மற்றவள் கூற, பிறகு மூத்தவளே, 'சொன்னாலென்ன, நீயும் பொறு, நானும் பொறுத்தேன்—கிளை சூழ்ந்திருக்க நாமே கூடி வாழ்ந்திருக்கலாம்' என்று கூற, இருவரும் வாழ்த்துப் பாடிச் சமாதானமடைகின்றனர். இவ்வாறே, நொண்டி நாடக நொண்டியும் தன் தவற்றை உணர்ந்து, முருகப் பெருமான் சன்னிதி முன்னர்ச் சென்று, அவன் அருட்செயல் களை நினைந்து, தன் குறை பகர்ந்து, மனம், மொழி, மெய்கள் ஒடுங்க வணங்கி, அருளால் தன் குறைதீரப் பெறுகின்றான்.

குறவஞ்சியில் குறி சொல்ல வரும் குறத்தியிடம், தலைவி அவள் மலைவளம், நாட்டுவளம் ஆகியவற்றை வினவ, அவளும் தன் மலைவளம், நாட்டுவளம் முதலியனவற்றைப் பாடுவதாக அமைந்துள்ளது. இப்பகுதி பள்ளு இலக்கியத்தில், பள்ளியர் தம்மை அறிமுகப்படுத்திக் கொள்ளும் பகுதியில் காணப்படும் நாட்டு வளத்தினை ஒத்திருக்கின்றது.

"கறைபட் டுள்ளது வெண்கலைத் திங்கள்
கடம்பட் டுள்ளது கம்பத்து வேழம்
சிறைபட் டுள்ளது விண்ணெழும் புள்ளு
திரிபட் டுள்ளது நெய்படுந் தீபம்

குறைபட் டுள்ளது கம்மியர் அம்மி
குழைபட் டுள்ளது வல்லியங் கொம்பு
மறைபட் டுள்ளது அரும்பொருட் செய்யுள்
வளமை ஆசூர் வடகரை நாடே. " (பா. 21)

என்று ஆசூர் நாட்டின் வளத்தை மூத்தபள்ளி பாட, அதற்கெதி ராக இளைய பள்ளியும்,

" காயக் கண்டது சூரிய காந்தி
கலங்கக் கண்டது வெண்தயிர்க் கண்டம்
மாயக் கண்டது நாழிகை வாரம்
மறுகக் கண்டது வான்சுழி வெள்ளம்
சாயக் கண்டது காய்க்குலைச் செந்நெல்
தணிப்பக் கண்டது தாபதர் உள்ளம்
தேயக் கண்டது உரைத்திடுஞ் சந்தனம்
சிவல மங்கைத் தென்கரை நாடே " (பா. 22)

என்று மருதூரின் வளத்தை எடுத்துக்காட்டுகின்றாள். இவ்வாறு இருபொருள் நயந்தோன்ற நாட்டுவளம் பாடும் பாங்கு, குறவஞ்சிகளுள் குற்றாலக் குறவஞ்சியில் முதன் முதலாகக் கையாளப்பட்டுள்ளது. குற்றாலக் குறவஞ்சிக்குப் பின்னர் எழுந்த குறவஞ்சிகளில் இது ஒரு மரபாகப் பின்பற்றப் பட்டுள்ளது. பள்ளில் இருபொருள் நயம் அமைந்த இரண்டு பாடல்கள் இடம்பெறுவதுபோலக் குறவஞ்சியிலும் இத்தகைய பாடல்கள் இரண்டு இடம் பெற்றுள்ளன (முற். குற., பா. 56: 8, 9).

" ஓடக் காண்பது பூம்புனல் வெள்ளம்
ஒடுங்கக் காண்பது யோகியர் உள்ளம்
வாடக் காண்பது மின்னார் மருங்கு
வருந்தக் காண்பது சூலுளை சங்கு
போடக் காண்பது பூமியில் வித்து
புலம்பக் காண்பது கிண்கிணிக் கொத்து
தேடக் காண்பது நல்லறம் கீர்த்தி
திருக்குற் றாலர்தென் ஆரிய நாடே. "

என்று குற்றாலர் நாட்டில் ஓடுவது, ஒடுங்குவது, வாடுவது, வருந்துவது, போடுவது, புலம்புவது முதலியனவற்றைச் செய்பவை அஃறிணைப் பொருள்களே என்றும், உயர்திணை யாகிய மக்கள் தேடுவது நல்லறம் கீர்த்தி போல்வனவற்றையே என்றும் அழகாக எடுத்துக்காட்டியுள்ளார் ஆசிரியர்.

இத்தகைய பாடல்கள் மட்டுமன்றி, பள்ளின் நாட்டுவளம் கூறும் பகுதி முழுமையும் குறவஞ்சியில் பின்பற்றப்பட்டுள்ளமை அறியத்தக்கதாகும்.

**சாயலுடைய இலக்கிய வகைகள்**

குறவஞ்சியில், சில சிற்றிலக்கியங்களின் ஓரிரு கூறுகள் மட்டும் இடம்பெற்றுள்ளன. அத்தகைய இலக்கியங்களைச் 'சாயலுடைய இலக்கிய வகைகள்' எனக் குறிக்கலாம். உலா, தூது, பவனிக்காதல், கேசாதிபாதம், தசாங்கம், கோவை, ஆற்றுப்படை ஆகிய இலக்கியங்கள் இவ்வகையில் குறிப்பிடத் தக்கவை ஆகும்.

**உலாவும் குறவஞ்சியும்**

"ஊரொடு தோற்றமும் உரித்தென மொழிப
வழக்கொடு சிவணிய வகைமை யான."
(தொல். பொருள். புறத்திணையியல், நூ. 30)

என்னும் தொல்காப்பிய மரபைப் பின்பற்றி எழுந்த ஒரு சிற்றிலக்கியம் உலா. எட்டாம் நூற்றாண்டைச் சார்ந்த சேரமான் பெருமாள் நாயனாரால் பாடப்பெற்ற திருக்கயிலாய ஞான உலா அல்லது ஆதி உலா என்னும் நூலே முதலில் எழுந்த உலா இலக்கியமாகக் கருதப்படுகின்றது. கடவுளோ அல்லது அரசனோ அல்லது உலகம் போற்றும் தலைவனோ தேர், கரி, பரி ஆகிய இவற்றுள் ஏதேனும் ஒன்றில் ஏறி, உடன்வருவோர் சூழ, மங்கல வாத்தியங்கள் முழங்க, நகர்வலம் வரும்பொழுது, பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம் பெண் முதலிய ஏழு பருவ மகளிரும், அவரைக்கண்டு காதல் கொண்டு வாடுவ தாகக் காட்டும் ஒருவகைச் சிற்றிலக்கியமே உலா. "ஏழு பருவப் பெண்டிர் என்ற பாகுபாடு சங்க இலக்கியங்களிலோ அன்றி வடமொழி இலக்கியங்களிலோ காணப்பெறாத ஒன்று"[20] என்னும் தெ. பொ. மீனாட்சிசுந்தரனாரின் கருத்து இங்கு நினைவுகூரத்தக்கது.

தமிழ்நாட்டு மூவேந்தரது படை, கொடி, புகழ், வீரம், நாடு, நகர், திறை முதலியவற்றைச் சிறப்பித்துப் பாடும் முத்தொள்ளாயிரத்திலும்[21] உலாவைக் குறிக்கும் சில பாடல்கள் இடம்பெற்றுள்ளன (பா. 1, 13, 18). திருநாவுக்கரசர். திருஞானசம்பந்தர் ஆகியோர், தம் தேவாரப் பாடல்களில்

திருத்தலப் பெருமைகளைப் பாடுமிடத்து, இறைவன் உலா வருவதைக் குறித்துள்ளனர். இறைவன் தேர்மீது ஏறி உலா வருவதனை, 'தேர்கொள் வீதி விழவார் திருப்புன்கூர்' (1: 27: 7) எனவும், 'தேராரும் நெடுவீதித் திருத்தோணிபுரம்' (1:60:5) எனவும் வருகின்ற அடிகளால் ஞானசம்பந்தர் உணர்த்துகின்றார். திருநாவுக்கரசர், திருவாரூரில் திருவாதிரைத் திருவிழா நடக்கும்பொழுது, அமரர்கள் தலை வணங்கி முன்செல்ல, வானர மங்கையர் பின் வர, தொண்டர் புடைசூழ, இறைவன் உலா வரும் வண்ணத்தையும் (4: 21: 8), திருக்குறுக்கைவீரட்டானத்தில் ஏழுநாள் விழா நடக்கும் பொழுது, இறைவன் திருத்தாண்டவக் கோலத்தோடு உலா வருவதனையும் (4:50:2) குறித்துள்ளார்.

உலாவின் பொருளமைதியை முதனிலை, பின்னெழுநிலை என இரண்டு வகையாகப் பாகுபடுத்திக் காட்டுவர் பாட்டியல் நூலார். தலைவன் குடிப்பிறப்பும், அவனது நீதிமுறை, மரபு, பொருளீட்டுந் திறம், ஈகை முதலியனவற்றையும் கூறி, அவன் உலாப் போதற்காக விடியற்காலம் நன்னீராடல், நல்லணி அணிதல், தொன்னகர் எதிர்கொளல், நன்னெடு வீதியில் களிற்றின்கண் ஊர்ந்து செல்லுதல் ஆகியவற்றைப் பாடுவது முதல்நிலை என்றும், பேதை முதலிய ஏழு பருவ மகளிரின் தன்மைகளை நுண்மையாக ஆய்ந்து கூறுதல் பின்னெழுநிலை என்றும் கூறப்படுகின்றது (பன்னிரு பாட்டியல், இனவியல், நூ,48 & 50). குறவஞ்சியிலும் தலைவன் உலா வருதல், உலாக் காணப் பெண்கள் வருதல், தலைவி வருதல் என்னும் பகுதிகளில் இவ்விரு நிலைகளையும் அடக்கிக் காட்டுவர் குறவஞ்சி ஆசிரியர்.

### பாட்டுடைத் தலைவர் உலா

பாட்டுடைத் தலைவர் உலா வருவதாகவும், உலாக் கண்ட பெண்களும் தலைவியும் மயங்குவதாகவும் பெரும்பான்மையான குறவஞ்சிகளில் கூறப்பட்டுள்ளன.

கடவுளரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்ட உலா இலக்கியத்தில், அக்கடவுளருடன் தொடர்புடைய பல புராண மரபுச் செய்திகளைக் காட்டித் தலைவரின் பெருமை, சிறப்பு போல்வனவற்றை எடுத்துக் கூறியும், மன்னரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்ட உலா இலக்கியத்தில், அம்மன்னருடைய வீரதீரச் செயல்கள், அவர் செய்த அறப்பணிகள், அவரது

முன்னோரின் வீர வரலாற்றுச் செய்திகள் போல்வனவற்றை எடுத்துக் கூறியும் பாட்டுடைத் தலைவரைச் சிறப்பிக்கும் இயல்பு காணப்படுகின்றது. இவ்வியல்பு குறவஞ்சியிலும் அவ்வாறே அமைந்துள்ளது.

குற்றாலக் குறவஞ்சியும், சோலைமலைக் குறவஞ்சியும் பாட்டுடைத் தலைவரின் தோற்றத்தைப் பல புராண மரபுச் செய்திகளுடன் இயைபுபடுத்தி எடுத்துரைக்கின்றன. குற்றால நாதருக்கு நான்கு கரங்கள்: அடியார் துன்பம் தடுக்க ஒரு கரம், அவர்க்கு அருள் வழங்க ஒரு கரம், சுடர்மழு தரிக்க ஒரு கரம், சிறிய மானைத் தாங்க ஒரு கரம் என நான்கு கரமுடையவர் அவர்; தம்மிடம் வந்தபெரும்புலி தந்த ஆடையும், பாம்பணியும், யானை தந்த மேற்போர்வையாகிய ஆடையும், நான்முகன் தந்த தலையாடாகிய உண்கலமும் பொருந்தியிருக்க உலா வந்தார் என்று குற்றாலநாதரின் தோற்றம் குற்றாலக் குறவஞ்சியில் கூறப்பட்டுள்ளது (பா.13:4). சோதிக்கலுழன் மேல் உலா வருகின்ற அழகர், வாணுதல் நாமம் பளீர் பளீரென மின்ன மலர்விழி சிவந்திருக்க, சேண்முகில் மேனி பசேரென, திருக்கையில் சக்கரம், சங்கம், வருக்கக் கங்கணம் பொலிவுடன் திகழ, குண்டலத்தோடும், தங்கம் சிறக்கப் புனைகலை யோடும், மணிமுடி மின்ன, மார்பில் கவுத்துபமும், திருமகளும், முந்நூலும் துன்ன வந்தனர் என்று கூறுகிறது சோலைமலைக் குறவஞ்சி (பா.33).

சரபேந்திர பூபால குறவஞ்சி அரசரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டுள்ளமையால், அரசர்தம் தலைநகராக விளங்கும் தஞ்சைமாநகரத்தின் சிறப்பையும், அதன் அமைப்பையும், சரபேந்திர மன்னரின் பெருமைகளையும் எடுத்துக் கூறுகின்றது. ‘அளவில்லாத செல்வத்தினை உடையதால் அளகைமாநகராய், வேதமும் வேள்வியும் மிகுந்து அயன் உலகாய், மாதவன் உறைதலின் வளரவன் பதியாய்ச் சேயுயர் கொடியோன் திகழ்தலின் கைலையாய், எழிற்சிவபுரியாய் விளங்குகிறது’ என்று தஞ்சைமாநகர்ச் சிறப்பும், ஓங்கிய வலிமைமிக்க மதில், பரவு நீரகழி, வேதியர் நியமம், வேந்தர் வீதி, வணிகர் தெருக்கள், மாட மாளிகைகள், மகிழ் அரமியங்கள், நீடுகைத் தந்திகள் நிலவிடும்பந்தி, பரிக்குலங்கள் மருவிடு சாலை, பல்பண்டத்து ஆவணநிரை முதலியன நிறைந்துள்ள நகரம் தஞ்சை என அதன் அமைப்பும் இந்நூலில் எடுத்துக் கூறப்படுகின்றன. மேலும், ‘போசலகுல வரோதயன்,

மருவுசீர்த் துளசி மன்னவன் புத்திரன்' என்று சரபேந்திர மன்னரது குலமும், 'ஆகமம், கலைகள், அருமறை புராணம், மனுநூல் பலவும் நன்கு உணர்ந்தோன்' என அவரது கல்வியும், 'படை, குடி, சூழ் அமைச்சு பகர்ந்திடும் நீதி, நட்பு, அரண் இவற்றின் நயந்திடுஞ் சிறப்பினோன்' என்று அவரது அரசியல் திறனும், 'கொடையினில் முகிலலை கொண்டிட அலைத்துத் திடமதில் மேருவைச் சிரங்குனிவிப்பவன்' என்று அவரது கொடைச் சிறப்பும், 'உலக மன்னரை உற்றுஎதிர்ப் பணிய வைப்பவன்' என்று அவரது வீரமும், 'தடையிலாது உயிர்க் கெல்லாம் தண்ணளி புரிபவன்' என்று அவரது இரக்க குணமும் இந்நூலில் சிறப்பிக்கப்படுகின்றன (பா. 9). இவ்வாறே, பெத்லகேம் குறவஞ்சியில், இயேசு கிறித்துவின் பண்பு நலன்கள் சிறப்பிக்கப்படுகின்றன (பவனிச் சிந்து, ப. 2).

பவனி வருமிடத்துச் சூழ்ந்து வருவோர்

அண்டர் கூட்டம், முனிவர் கூட்டம், அசுரர் கூட்டம், மனிதராகிய தொண்டர் கூட்டம் தொடர, பல இன்னிசைக் கருவிகள் முழங்க, தமிழ்த்திருமுறைகள், நான்மறைகள், திருப்பல்லாண்டிசை ஒலிக்க, சேனைப் பெருக்கம், தானைப் பெருக்கம், தேரின் பெருக்கம், தாரின் பெருக்கம், ஆனைப் பெருக்கம், குதிரைப் பெருக்கம், முழுவதும் நெருங்கப் பவனி வந்தார் குற்றாலநாதர் (பா. 13:3) எனப் பாடுகிறது குற்றாலக் குறவஞ்சி.

மன்னர் குழுவும், மந்திரத் தலைவரும், தந்நிகர் மந்திரி தந்திரிக்கணமும், சேனைத் தலைவரும், தானாபதிகளும் தன்புடை நெருங்க, பொன்னெடுத் தேர்களும், பொருந்து குஞ்சரங்களும், பரிகளும், பதாதியுஞ் சூடி, தூரியம் முழங்க, நாரியர் அளவிலர் நடனஞ் செய்யப் பாலெழிற் கவரிகள் பாங்கினர் இரட்ட, வெண்குடை நிழற்றக் கண்டோர் களிக்க யானைமேற் பவனி வந்தனன்' சரபேந்திர மன்னவன் எனக் கூறுகின்றது சரபேந்திர பூபால குறவஞ்சி (பா. 9: 41—52).

அப்பர், தம் தேவாரப் பதிகங்களில், திருவாதிரைத் திருநாளின்போது இறைவன் உலா வந்தார் எனவும், திருக்குறுக்கைவீரட்டானத்தில் திருத்தாண்டவ வடிவொடு உலா வந்தார் எனவும் கூறியுள்ளார். மதுரைச் சொக்கநாதர் உலா, ஏழு பருவ மகளிர் என்பதற்கேற்ப, இறைவன் ஏழு நாள்கள் உலாப் போந்தார் எனக் கூறுகின்றது. இவ்விரு இயல்புகளை அழகர் குறவஞ்சியில் காண முடிகின்றது.

மாலழகர் சிவகங்கை நகரில் தமக்கு அமைக்கப்பட் ஆலயத்தில் கொலுவீற்றிருந்த செய்தியையும் அவ் ஆலயத்தில் நடத்தப் பட்ட 'வஸந்தோற்சவத்தில் சுந்தரராஜப் பெருமாள் சுக்லபக்ஷம் சப்தமி முதல் சதுர்த்தசி பர்யந்தம் அஷ்டா வதாரக் காட்சியுடன் பவனி' வந்ததையும் கூறிய பின்னர், 'ஒன்பதாம் நாள் உற்சவத்தில் ஜெகன்மோஹன கிருஷ்ண' வடிவத்துடன் அவர் பவனி வருவதையும் எடுத்துக் கூறுகின்றது அழகர் குறவஞ்சி (கீ. 7, 8, 9).

உலாக் காணப் பெண்கள் வருதல்

தலைவர் உலா வருவதைக் காண வரும் பெண்கள் தாம் செய்யும் வேலைகளை அப்படியப்படியே விட்டுவிட்டு வருவதாகச் சில குறவஞ்சிகளில் (குற். குற., பெத். குற., சோலை. குற., அழ. குற., கிரு. குற, திரு. குற.) கூறப் பட்டுள்ளது.

குற்றாலக் குறவஞ்சியில், விடைமீது பவனி வரும் குற்றாலநாதரைக் கண்ணுற்ற பெண்கள், 'புரிநூலின் மார்பன் இவன் அயன் என்பார்; அயனாகில் பொங்கு அரவம் ஏது, தனிச்சங்கம் ஏது என்பார்; விரிகருணை மால் என்பார்; மாலாகில் விழியின்மேல் விழியுண்டோ, முடியின்மேல் முடியுண்டோ என்பார்; இருபாலும் நான்முகனும் திருமாலும் வருகையால் ஈசன் இவன் திரிகூடராசனே' (பா. 15) எனத் தம்முள் உரையாடி ஐயந் தெளிகின்றனர். இவ்வாறு, ஐயமுற்றுக் கூறுதல் ஸ்ரீ கிருஷ்ணமாரி குறவஞ்சியிலும் காணப் படுகின்றது. ஆயின் ஈசனைப் பிற தெய்வங்களோ என்று ஐயுறுதல் இன்றி, ஈசனின் திருவிளையாடல்களை ஒவ் வொன்றாகக் கூறி, அத்திருவிளையாடலைப் புரிந்தவன் இவன் தானோ என்று ஒருத்தி வினவ, மற்றொருத்தி அதற்கு விடை கூறும் வகையில், அவனே இவனாகில் நமக்கும் அருள்புரிவார் என்று கூறுவதாக இதில் அமைந்துள்ளது. மதுரை மாநகரில் வணிகர் குலப் பெண்களுக்கு வளையல் அணிவித்தது, பர்வத ராஜனின் மகளாகிய பார்வதியை மணந்தது, பாண்டிய னுக்காகக் கால் மாறி நடனம் புரிந்தது, அச்சுதனே மோகினியாய் ஐயப்பனைப் பெற்றது. பக்தனாகிய யாழ் பத்திர பாணனுக்குத் துணைபுரியவும், ஏமநாதனின் செருக்கடக்குவதற்கும், வித்தகத் தன்மை பெற்று விறகு விற்றது, அங்கயற்கண்ணிக்கு மயல் தந்தது ஆகிய புராணச் செய்திகள் இப்பகுதியில் இடம்பெற்றுள்ளன (பக். 18-20),

சிற்றில் இழைத்தல், பாவையாடல், கழங்காடல், அம்மானையாடல், ஊசல், கிள்ளைக்குச் சொற்பயிற்றுவித்தல், யாழ் மீட்டல், புனலாடல், பொழிலாடல் முதலிய மகளிர் விளையாடல்கள் அவ்வப்பருவத்திற்கேற்றவாறு உலா இலக்கியத்தில் இடம்பெறுதல் வேண்டும் எனப் பன்னிருபாட்டியல் நூற்பா (இனவியல், நூ. 52) கூறுகிறது. இவ் எழு பருவ நிலை குறவஞ்சியில் தெளிவாகக் குறிப்பிடப்படவில்லை. குற்றாலக் குறவஞ்சியும், பெத்லகேம் குறவஞ்சியும் உலாக் காண வரும் தலைவியை வருணிக்குமிடத்து, 'பிறர் அறிவை மயக்கும் ஒரு கருவம் இருக்கும் மங்கைப் பருவத்த'வளாக (குற். குற. பா. 18:2; பெத். குற., ப. 31) அவளைக் குறிப்பிடுகின்றன. சோலைமலைக் குறவஞ்சியோ, தலைவி சுந்தரவல்லி, 'மகளிர்க்கு உரிய பருவம் ஏழனுள் முன்னுள்ள பேதை, பெதும்பை, மங்கை என்னும் மூன்றும், பின்னுள்ள அரிவை, தெரிவை, பேரிளம் பெண் என்னும் மூன்றும் ஆகிய ஆறு பருவங்களும் வந்து வணங்கும் மடந்தையாகிய இளம்பருவத்தவள்' (பா. 44) எனக் கூறுகின்றது. மேலும், உலாக் காணப் பெண்கள் வருவதைக் கூறுமிடத்து, 'வீணையும் தம்புரும் விளம்பு பைங் கிள்ளையும் ஆணெனும் கழங்குடன் அம்மனை பந்துமாய் வனிதையர்' (பா. 37) வந்தனர் என அவர்கள் வைத்திருக்கும் விளையாட்டுப் பொருட்களைக் கொண்டு அவர்கள் ஏழு பருவ மகளிர் என்பதைப் புலப்படுத்துகின்றார் சோலைமலைக் குறவஞ்சி ஆசிரியர். 'ஒரு கையில் வளையணிந்த பெண்கள் மற்றொரு கையில் வளையணிய மறந்து இறைவன் உலாக் காண ஓடுவார்கள்; இதைக் கண்டு சிரிப்பவர்களைப் பார்த்துத் தலை கவிழ்வார்; இரு கொங்கைகளுக்கு அணிகின்ற கச்சினை, கச்சென மயக்கத்தால் அறியாராய் ஆடையென இடுப்பில் உடுத்துவார்கள்; பின் உணர்வு தோன்றி இவ் ஆடை கச்சென அறிந்து தம் அழகிய கொங்கைகளுக்கு அணிவார். எதையும் நினைக்கின்ற தம் மனம், உலா வரும் காட்சிப் பக்கம் போக, ஒரு கண்ணிட்ட மையுமாய், ஒரு கண்ணுக்கு மைதீட்ட மையை யெடுத்த கையுமாய் வருவார்' என்று உலாக் காண வரும் பெண்களின் நிலையைக் கூறுகிறது குற்றாலக் குறவஞ்சி (பா. 15). இவ்வாறே, அழகர் குறவஞ்சியும், சோலைமலைக் குறவஞ்சியும் அழகரைக் கண்ணுற்ற பெண்கள் கலை நெகிழ, வளை சரிய, ஒரு கையில் தொடியணிய மறந்து மயங்கி வாடிப் புலம்புவதாகக் கூறுகின்றன. இக்குறவஞ்சிகளில் உலாக் காண வரும் பெண்கள் செய்யும் செயல்களைக் கொண்டு, அவரது பருவ நிலையை உய்த்துணர முடிகின்றது.

பெரும்பான்மையான குறவஞ்சிகள் பாட்டுடைத் தலைவியை அறிமுகப் படுத்துமிடத்து, மங்கைப் பருவத்திற்குப் பொருத்தமான பந்தாடலைக் குறிக்கின்றன.

தலைவன் உலா வருகையில் தலைவி பந்தடித்தும், கும்மி யடித்தும், பாடிக் கொண்டும் இருப்பதாக அழகர் குறவஞ்சி கூறுகின்றது (கீ. 13). ஸ்ரீ கிருஷ்ணமாரி குறவஞ்சி, தலைவி சோலையில் மலர் பறித்தும், கும்மியடித்தும், ஊஞ்சலாடிக் கொண்டும் இருப்பதாகக் காட்டுகின்றது (பக். 23—25).

இவ்வாறு குறவஞ்சியில் உலாவின் முதனிலையும் பின்னெழு நிலையும் சுருங்கிய அளவில் இடம்பெற்றுள்ளன.

### தூதும் குறவஞ்சியும்

" ஓதல் பகையே தூதிவை பிரிவே."

(தொல். அகத். நூ. 25)

என்று தொல்காப்பியர் அகத்திணையியலில் தலைவன்—தலைவி பிரிவுக்குக் காரணங்களில் ஒன்றாகத் தூதினையும் குறிப்பிடுகின்றார். சங்க இலக்கியப் பாடல்களில் பல இடங்களில் தூது சுட்டப்பட்டுள்ளது. ஓர் அரசன் மற்றோர் அரசனுக்குத் தூது அனுப்புதலும் (புறம். 95), களவுக் காலத்தில் தலைவனைப் பிரிந்த தலைவி, தலைவன்மாட்டுப் பல அஃறிணைப் பொருள்களை—நண்டு (அகம். 170), நாரை (நற். 70, 54), கிளி (நற். 102), வண்டு (நற். 277; குறுந். 392), நெஞ்சம் (ஐங். 317) முதலியவற்றை—தூதாக அனுப்புதலும் உண்டு. திருவள்ளுவர் திருக்குறளில் 'தூது' என்னும் தலைப்பில் ஓர் அதிகாரத்தையே (69) படைத்துள்ளார். ஆழ்வார் நாயன்மார் பாடல்களிலும் தூதுப் பாடல்கள் இடம் பெற்றுள்ளன (தேவாரம், 1:60, 7:37; நாச்சியார் திருமொழி, 580—583; பெரிய திருமொழி, 1942—47; திருவாய்மொழி, 1:9). கலம்பகம், கோவை ஆகிய சிற்றிலக்கியங்களிலும், சீவக சிந்தாமணி, கம்பராமாயணம், பெரியபுராணம் போன்ற காப்பியங்களிலும் தூது ஓர் உறுப்பாக இடம்பெற்றுள்ளது. இவையன்றி, முத்தொள்ளாயிரப் பாடல்கள் (21, 88, 91), தாயுமானவர் பாடல்கள் (பைங்கிளிக் கண்ணி), சத்திமுற்றப் புலவர் பாடிய 'நாராய் நாராய்' எனத் தொடங்கும் தனிப் பாடல் (தனிப்பாடற்றிரட்டு I, ப. 200) ஆகியவற்றிலும் தூது இடம்பெற்றுள்ளது.

தெய்வத்தின்மீது காதல் கொண்ட தலைவி ஏதேனும் ஒரு பொருளைத் தூதாக விடுத்தல். 'கடவுள்மாட்டு மானிடப் பெண்டிர் நயந்த பக்க'த்தின் பாற்படும் என்றும், மன்னர், வள்ளல் போன்ற மானிடர்மீது கொண்ட காதலால் தலைவி தூது விடுப்பது 'மானிடர்மாட்டு மானிடப் பெண்டிர் நயந்த பக்க'த்தின் பாற்படும் என்றும் கூறுவர் ஐயனாரிதனார் (புற. வெ. மா., நூ. 9). ஈசன், திருமால், முருகன் போன்ற தெய்வங் களையும், சரபேந்திர மன்னர், பாம்பண கவுண்டன் போன்ற மானுடரையும் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு குறவஞ்சி விளங்குகின்றமையின், இவ்விரு துறைகளையும் குறவஞ்சியில் காண முடிகின்றது.

கி.பி. பதினான்காம் நூற்றாண்டில்தான் தூது ஒரு சிற்றிலக்கியமாக உருப்பெற்றது. உமாபதி சிவாசாரியாரின் நெஞ்சுவிடு தூது என்னும் நூலே முதன்முதல் எழுந்த தூது இலக்கியமாகும்.[22] பிரபந்தத் திரட்டு,

> "எகின மயில்கிள்ளை எழிலியொடு பூவை
> சகிகுயில் நெஞ்சந் தென்றல் வண்டு—தொகைபத்தை
> வேறுவேறாகப் பிரித்து வித்தரித்து மாலைகொண்டன்பு
> ஊறிவா வென்றல் தூது."[23]

என இச் சிற்றிலக்கிய வகைக்கு இலக்கணம் கூறுகின்றது. இதனை அடியொற்றியே இரத்தினச் சுருக்கமும்,

> "இயம்புகின்ற காலத் தெகினமயில் கிள்ளை
> பயம்பெறுமே கம்பூவை பாங்கி—நயந்தகுயில்
> பேதை நெஞ்சந் தென்றல் பிரமரமீ ரைந்துமே
> தூதுரைத்து வாங்குந் தொடை." (நூ. 7)

என இயம்புகின்றது.

தூது செல்லும் பொருள்களில் சகி அல்லது பாங்கியையும் ஒன்றாகக் குறிப்பர். 'பரத்தையருடன் கூடிக் கேடடைந்த செய்தியை விறலிபாற் கூறி மனைவியின் ஊடல் நீக்குமாறு விடுத்ததாகப் பொருளமைந்த, விறலிவிடுதூது ஆடவன் விடுத்த தூதாக அமைந்துள்ளது என்பர்.[24] குறவஞ்சியில், பாட்டுடைத் தலைவி தலைவன்பால் தூது செல்லுமாறு தன் தோழியை வேண்டுவதாக அமைந்துள்ளது.

தூது செல்லும் பொருளை முதலில் புகழ்ந்து கூறிப் பின்னர்ப் பாட்டுடைத் தலைவரின் பெருமை, அவரது தலச் சிறப்பு போன்ற சிறப்பியல்புகளைக் கூறி, இறுதியில் தலைவி

தலைவனைக் கண்டு மையலுற்றதைக் கூறித் தலைவனிடத்துத் தூது சென்று வருமாறு வேண்டுதல் தூது இலக்கியங்களில் கூறப்படும் செய்தியாகும். இவ்விலக்கியங்களில் அன்னம், வண்டு, மயில் போன்ற பிற பொருட்களைத் தூது விடுக்காது, அக்குறிப்பிட்ட பொருளைத் தூதாக விடுத்தற்குக் காரணமும் கூறுவாள் தலைவி.

> "ஈடுபட்ட வெள்ளை யெகினத்தைத் தூதுவிட்டாற்
> சூடுபட் டார்துணிந்து சொல்வாரோ—கூடுகட்டி
> அன்பாய் வளர்த்ததா யார்க்குதவாக் கோகிலந்தான்
> என்பால் அருள்வைத் தியம்புமோ— தன்பேர்
> அரியென்று சொன்னால் அளியென்று சொல்லும்
> வரிவண்டு பேசி வருமோ—விரகஞ்செய்
> வன்கால திக்கின் மலைவா யிருக்கின்ற
> தென்காலு மென்காதல் செப்புமோ."
>
> (கண்ணிகள், 199—203)

என்று பிற பொருள்கள் தூது சென்றால் சிறக்காது என்று கூறிய அழகர் கிள்ளைவிடு தூதில் வரும் தலைவி, கிளியைத் தூது விடுப்பதால் என்ன நன்மை என்பதனைப் பின்னர்க் கூறுகின்றாள்; "நீயோ, அங்கே போனால் அடியார்கள் இருப்பின் நீயும் அவர்களோடு சேர்ந்து கீர்த்தனம் செய்வாய். நாச்சியார் அருகில் இருந்தால் அவர் கையில் பறந்து சென்றிருப்பாய். 'எங்கிருந்து வந்தாய்?' என்று கேட்டால், 'சோலையிலிருந்து தரிசிக்க வந்தேன்' என்று சொல்வாய். சௌந்தரவல்லிக்கும் சூடிக்கொடுத்த நாச்சியாருக்கும் தெரியாமல் என்னுடைய காதலைத் தெலுங்கிலே தந்திரமாகச் சொல்வாய். என்னுடைய துன்பத்தை நீக்குவாய். சச்சிதானந்தனாகிய பெருமாள் அணிந்துள்ள மாலையைக் கொண்டு வருவாய்" (கண்ணிகள், 205—209) என்று கிளியைப் புகழ்ந்துரைக்கின்றாள். இவ்வாறு பிற பொருள்களைப் பழிப்பதும், தூதுசெல்லும் பொருளைச் சிறப்பிப்பதும் குறவஞ்சியில் விரிவாகக் கூறப்பெறவில்லை. எனினும், சரபேந்திர பூபால குறவஞ்சியில் வரும் தலைவி,

> "மனத்தினைத் தூதுவிட்டே னதன்செய்தி யோராமல்
> மகிழ்ந்தவ ரிடத்தி லிருந்தது வாராமல்
> அனத்தினை யனுப்பலா மதுசெல்லுஞ் சோராமல்
> அதுநிற்க நீயேசெல் வருத்தத்தைப் பாராமல்."
>
> (பா. 26:3)

என்றும்,

" கதியெனக் குன்னையல்லாற் காணேனே வேறுநான்
அதுதானுன் மனமறி யாததோ சகியே." (பா. 25)

என்றும், சகியைத் தூது செல்லுமாறு வேண்டுதல், தூது இலக்கியத்தின் தாக்கமாக அமைந்துள்ளது எனலாம்.

தூது இலக்கியத்தைப் போலவே, குறவஞ்சியிலும் தூதுச் செய்தியை உரைக்கும் பகுதியில் தலைவனின் சிறப்பியல்புகள் சில இடம்பெறுகின்றன. பவனிவரும் பாட்டுடைத் தலைவரைக் கண்டு மையலுற்றுப் புலம்புகிறாள் தலைவி. அவ்வேளையில் தோழி வருகின்றாள்; தலைவியின் நிலைமை கண்டு காரணம் வினவுகிறாள். தலைவி,

" கங்கைக் கொழுந்தணி தெய்வக் கொழுந்தைநான்
கண்டுகுளிர்
திங்கட் கொழுந்தையும் தீக்கொழுந் தாக்கிக் கொண்டனே
சங்கக் குழையாரைச் சங்க மறுகினிற் கண்டுஇரு
செங்கைக்குள் சங்கமுஞ் சிந்தி மறுகிவிட் டேனே."
(குற். குற., பா.26:3)

என்று விடையிறுக்க, 'நரைத்த மாடேறுவார்க்கோ நங்கைநீ மயல் கொண்டாயே' என்று பரிகசிக்கின்றாள் தோழி. அப்பொழுது தலைவி, 'குற்றாலநாதரின் ஊர்தியாகிய பெரிய எருதுக்கு உலகம் முழுவதும் ஒரே அடிதான். தேவர்கள் பெற்றுள்ள செல்வம் அவர்தம் சன்னிதியின் பேரல்லவோ! மேலும் நாள்தோறும் ஞாயிறும், திங்களும் வந்து இறங்கும் வாயிலாக விளங்குகின்றதன்றோ அவர் திருமுன்பு' என்று (குற். குற., பா. 38:1) தலைவனின் சிறப்புக்களை அவளுக்கு உணர்த்துகின்றாள். மேலும்,

" வேரிலே பழம்பழுத்துத் தூரிலே
சுளைவெடித்து வெடித்த தீந்தேன்
பாரிலே பாதாள கங்கைவந்த
தெனக்குதித்துப் பசுந்தேன் கங்கை
நீரிலே பெருகுகுறும் பலாவிலே
கொலுவிருக்கும் நிமல மூர்த்தி."
(குற். குற., பா.39)

என்றும், அவர் 'திரிபுரத்தில் தோன்றிய தீயைச் சுதன்மன், சுசீலன், சுபுத்தி என்னும் மூன்று அசுரர்களுக்குக் கொடுத்தவர்; பருத்த மேரு மலையைத் தம் கையில் வில்லாகச் சேர்த்துக் கொண்டவர்; தம் அஞ்சு தலையிடத்திலே கங்கை ஆறு வைத்

துள்ளவர்; நஞ்சை உண்டு தேவர்களுக்கு அமுதம்கொடுத்தவர்; தேவர்கட்கு அரசனாகிய இந்திரனின் சாபத்தைக் கெடுத்தவர்; உலகிலுள்ள எல்லோருக்கும் அருள்புரிபவர்' (குற். குற., பா. 41) என்றும் அவருடைய சிறப்புக்களை விளக்கு கின்றாள் தலைவி.

தூது செல்லும் தோழி தலைவனை அறிந்துகொள்வது எங்ஙனம் என்ற வினா தூதுத் தலைவியின் மனத்தில் எழுந்தது போலும். தலைவன் குடிகொண்டிருக்கும் இடத்தினையும், அவரைச் சூழ அமர்ந்திருப்பவரையும் பற்றிக் கூறத் தொடங்கி விடுகின்றாள் அவள். 'யுகந்தோறும் வேறு வேறாகிக் கலி யுகத்தில் புத்திர தீபமாகும் தரு ஒன்று உண்டு. தேவர்களுக் குரிய ஐந்து கற்பகங்களோடு ஆறாவதாக அது விளங்கும். ஒரு கோடி ஆறுகளும், ஒரு கோடிப் பூஞ்சுனையும் இருக்கின்றன. அன்றியும் யோகிகளைப் போல அல்லும் பகலும் உறங்காத உறங்காப்புளி ஒன்று இருக்கின்றது. அத்தலத்தில் பிரம தேவனும் இந்திரனும் வந்து பெருமாளை இறைஞ்சுவார்கள். சீரங்கராச பட்டரென்னும் அர்ச்சகரும், திருமாலிருஞ் சோலைச் சீயரென்னும் மாதவரும், திருமாலையாண்டா னென்னும் ஆசிரியரும், தோழப்பையங்காரும், வேதபாரகரும், அமுதாரும், திருமலைநம்பியும், சோலைமலைநம்பியும், சடகோபநம்பியும், திருமாலிருஞ்சோலைப் பிரியரென்னும் சீகருணிகரும், சீகாரியஞ் செய்யும் நாயகர்களும் தம்முடைய திருத்தாளை வணங்கி நிற்ப, எம்பெருமான் திருவோலக்கத்தில் எழுந்தருளியிருப்பார். அப்பொழுது நீ தூதுரைக்கத் தொடங்கினால் உன் வார்த்தை அவன் திருச் செவியில் ஏறாது. ஆதலின் அவன் பள்ளியறைக்கு எழுந்தருளும் வேளை பார்த்து வேறொருவர் ஒன்றை விண்ணப்பித்தற்குமுன், என்னை மன்மதன் துன்புறுத்துமுன், பெண்டிர் அலர் தூற்றுமுன், கடல் ஒலியும், தாயின் உரையும், என்னைத் துன்புறுத்தாமல் அடங்கும்படியாகத் தத்தையே, நீ என் தூதுச் செய்தியை உரைப்பாயாக' (கண். 210—233) என்று அழகர் கிள்ளை விடு தூதில் வரும் தலைவி தலைவனுடைய அடையாளத்தையும், அவனைக் காணத்தக்க பொழுதையும் உரைக்கின்றாள். தமிழ்விடு தூதிலும் தலைவி தலைவன் இருக்கும் இடத்தினையும் அவனை வணங்கும் முறையினையும் எடுத்துரைக்கின்றாள் (கண். 178—268). இம்மரபு குறவஞ்சி யிலும் பின்பற்றப்பட்டுள்ளது.

சோலைமலைக் குறவஞ்சியில் வரும் தலைவி திருமாலின் அவதாரச் சிறப்புக்களைக் கூறுவதோடு சிவபெருமானைத் தாக்கியும் பேசுகிறாள். 'கரித்தோல் பூளைப்பூக் கடுக்கை துர்க்கந்தம் எருக்கிலை மாலையும் ஏற்காத சுந்தரன்; சுடலமும் பூதமும் துட்டமும் பேய்களும் சடமெனும் குணபமும் சாராத சுந்தரன்; அம்பிகை யோனியாய் ஆண்குறி தாணுவாய் இம்பரிற் குரூரமும் எய்தாத சுந்தரன்; அயன், சங்கரன் இருவரும் துத்தியம்செயவரும் தொடைகள்சேர் சுந்தரன்' என்று சிவனைத் தாக்கியுரைக்கும் தலைவி, 'ராமனாய் லோகாபி ராமனாம் கண்ணனாய், வாமனன் ஆகி மண் வாங்கிய சுந்தரன்; சக்கரபாணியாம் சுந்தரன்; செந்தாமரை விழிச் சுந்தரன்; கத்தூரி பச்சைக் கருப்பூரம் குங்குமம் கொத்தார் சவ்வாதுக் குழம்பணி சந்திரன்; நெருங்கிய வெண்மையில் நீனிறமாகிச் சுருங்கலில் வானெனத் தோன்றுமெய்ச் சுந்தரன்' (பா. 76) என்று அழகரின் அவதாரச் சிறப்பையும் அவருடைய தோற்றச் சிறப்பையும் போற்றிக் கூறி அடையாளம் உரைக்கின்றாள்.

தலைவரைக் காணுவதற்கு ஏற்ற பொழுதினைத் தலைவி தோழியிடம் உரைத்தல் குற்றாலக் குறவஞ்சி, சரபேந்திர பூபால குறவஞ்சி ஆகியவற்றில் காணப்படுகின்றது.

குற்றாலக் குறவஞ்சியின் பாட்டுடைத் தலைவர் திரிகூட நாதர் என்பதால், அவருக்கு நடைபெறும் ஒன்பது கால வழிபாடு, ஏழு திருமுழுக்கக் காலம், மாத, வருட விழாச் சிறப்புக்கள், குழல்வாய்மொழியம்மையுடன் கொலு வீற்றிருக்கும் காலம், அக்கொலுவினைக் காணக் காத்திருக்கும் அடியவர், தேவர்கள், சித்தர்கள், தேவ கணங்கள் ஆகியோர், இளமங்கையர் தூதாக விடுத்த கிள்ளைகள் முதலானவை பற்றிக் கூறிவிட்டுப் பள்ளி எழுச்சி முதல் குழல்வாய்மொழியம்மை யினது பள்ளியறை வரை திருக்குற்றாலர் கோவிலுக்குள் செல் கின்ற தனி நேரத்தில் அவரைக் கண்டு தன் நிலையை எடுத்துக் கூறி மாலை பெற்று வருமாறு வேண்டுகின்றாள் தலைவி (பா. 45).

சரபேந்திர பூபால குறவஞ்சியின் பாட்டுடைத் தலைவர் மன்னர் என்பதற்கேற்ப, அவருடைய நித்ய நியமங்கள் நிகழும் வேளையில்—செஞ்சுடர் உதிக்குமுன் புனல் படிந்து திரு நீறணிந்து, சந்திவந்தனம், நிலைதரு சிவபூசை புரிதல், தானம் செய்தல், பலதேச மன்னர் பணிந்து நிற்கும் வேளை, மாதர் நடனஞ்செய் வேளை, கவிவாணர் பிரசங்கம் செய்வதைக் கேட்டல் ஆகியவற்றைச் செய்யும் காலத்தில்—தன் காதலைக்

கூறாது, மகராஜர் பவனி வரும்வேளையில், தான் மாலுற்றதைச் சொல்லி மாலை பெற்று வருமாறு கூறித் தூது அனுப்புகிறாள் தலைவி (பா. 27).

'தூதுரைத்து வாங்குந் தொடை' என்று இரத்தினச் சுருக்கம் கூறுவதற்கேற்பவும், 'மாலை கொண்டு அன்பு ஊறிவா வென்றல் தூது' என்று பிரபந்தத் திரட்டு கூறுவதற்கேற்பவும் குறவஞ்சித் தலைவியர் தோழியைத் தூது விடுக்கும்போது, தன் காதலைத் தலைவர்க்குப் புலப்படுத்தி அவரை அழைத்து வரவேண்டும் அல்லது அவருடைய மாலையையாவது பெற்று வரவேண்டும் என்று கூறி விடுக்கின்றனர். ஆனால் தூது சென்ற தோழியோ அன்றிப் பிற அஃறிணைப் பொருள்களோ தலைவரிடத்துச் சென்று தூதுரைத்த செய்தியைத் தூது இலக்கியங்கள் உரைக்கவில்லை. அழகர் குறவஞ்சி, திருமலை யாண்டவர் குறவஞ்சி முதலிய சில குறவஞ்சிகள் இதற்கு விதி விலக்குகளாக அமைந்துள்ளன.

அழகர் குறவஞ்சியில் தோழி, அழகரிடம் மோகனவல்லியின் வனப்பையும் காதலையும் வணங்கித் தெரிவிக்கின்றாள்; பின்னர் வல்லியிடம் திரும்பி வந்து, 'அழகர் நாளையுன்பால் சேர்வர்' எனக் கூறுகின்றாள். அழகர் தன்பால் வரவில்லையே என்று வருந்தும் மோகனவல்லிக்கு, தோழி, 'காதலை மனத்தில் அடக்கவேண்டும்... உள்ளத்தில் நம்பிக்கை கொள்ள வேண்டாமோ, கிணற்று நீரை வெள்ளம் கொண்டு போமோ... ஆக்கப் பொறுத்தவர்க்கு ஆறப் பொறாதோ...எங்கள் அழகர் கிருபையால் எப்படியும் எண்ணின காரியம் நன்மையாய் முடியும்... குஞ்சரத்தையென்றும் காப்பது போலே கூடியணைய வருவார் தன்னாலே' (கீ.25) என்று கூறி அமைதிப்படுத்து கின்றாள். அவள் கூறியவாறே, மாலழகர் மோகனவல்லியைத் திருமணம் செய்துகொள்வதாக அமைத்திருக்கின்றார் ஆசிரியர் (கீ. 42).

திருமலையாண்டவர் குறவஞ்சியில் குறி கூற வந்த குறத்தி, 'தூது சென்ற தோழி தலைவனின் கடப்பமாலையைக் கொண்டு வருவாள்' என்று கூறி முடிக்கவும், தோழி மாலை பெற்று வருகின்றாள்; அதைப் பெற்ற தலைவி பெரிதும் மகிழ்கின்றாள் (பா. 64, 65). தூது இலக்கியத்தினின்றும் பெற்ற வளர்ச்சி நிலையாக இதனைக் குறிப்பிடலாம்.

கேசாதிபாதமும் குறவஞ்சியும்

பாதாதிகேசம், கேசாதிபாதம் என்பன கலிவெண்பாவால் பாடப்படும் இலக்கிய வகைகள் ஆகும். பாதாதிகேசம் கடவுளுக்கும் கடவுளைப் போன்றவர்க்கும், கேசாதிபாதம் பிறருக்கும் பாடப் பெறுவதாகும் என்பர்.[25] ஆண் அல்லது பெண் உறுப்புக்களைப் பாதாதிகேசமாகவோ, கேசாதிபாத மாகவோ வெண்பா அல்லது விருத்தத்தால் பாடுவதனை அங்கமாலை எனப் பாட்டியல் நூல்கள் உரைக்கின்றன. கலிவெண்பாவில் அமைந்த பாதாதிகேசம், கேசாதிபாதம் என்னும் தனி இலக்கிய வகைகள் இதுவரை கிடைக்கப் பெறவில்லை. எனினும், கேசாதிபாத வருணனை என்பது சங்க இலக்கியந்தொட்டு இன்றுவரை காணக்கூடிய ஒன்றே ஆகும்.

முடத்தாமக்கண்ணியார் பொருநராற்றுப்படையில், பாடி னியின் எழில்நலத்தைக் கேசாதிபாதமாக வருணித்துப் பாடி யுள்ளார் :

" அறல்போல் கூந்தல் பிறைபோல் திருநுதல்
கொலைவில் புருவத்து கொழுங்கடை மழைக்கண்
இலவிதழ் புரையும் இன்மொழித் துவர்வாய்
பலவுறு முத்தின் பழிதீர் வெண்பல்
மயிர்குறை கருவி மாண்கடை அன்ன
பூங்குழை ஊசல் பொறைசால் காதின்
நாண்அடச் சாய்ந்த நலம்கிளர் எருத்தின்
ஆடுஅமைப் பணைத்தோள் அரிமயிர் முன்கை
நெடுவரை மிசைஇய கணங்கு அணிஆகத்து
ஈர்க்கு இடைபோகா ஏர்இள வனமுலை
நீர்ப்பெயர்ச் சுழியின் நிறைந்த கொப்பூழ்
உண்டுஎன உணரா உயவும் நடுவின்
வண்டு இருப்பன்ன பல்காழ் அல்குல்
இரும்பிடித் தடக்கையின் செறிந்துதிரள் குறங்கின்
பொருந்துமயிர் ஒழுகிய திருந்துதாட்கு ஒப்ப
வருந்துநாய் நாவின் பெருந்தகு சீறடி
அரக்குஉருக்கன்ன செந்நிலன் ஒதுங்கலின்
பரற்பகை உழந்த நோயொடு சிவணி
பரல்பழுத் தன்ன மறுகுநீர் மொக்குள்
நன்பகல் அந்தி நடைஇடை விலங்கலின்
பெடைமயில் உருவின் பெருந்தகு பாடினி. "

(வரி ; 25 - 47)

சிறுபாணாற்றுப்படையில் விறலியை வருணிக்குமிடத்தும் (வரி : 13 — 31), பெருங்கதையில் விசயதத்தையை வருணிக்குமிடத்தும் (4 — 11 : 64 — 83), சிலப்பதிகாரத்தில் மனையறம் படுத்த காதையில் கோவலன் கண்ணகியைப் பாராட்டுமிடத்தும் (2 : 38 — 81), கடலாடுகாதையில் மாதவி நீராடிக் கூந்தலை உலர்த்தி வாசனைச் சாந்து அணிந்தபின் கால் முதல் கூந்தல் வரை அணிந்த அணிகலன்களை எடுத்துக் கூறுமிடத்தும் (6 : 82 — 110), குறிஞ்சிப்பாட்டில் தலைவன் அணிந்திருந்த அணிவகைகள் பற்றிக் கூறுமிடத்தும் (107—128) இத்தகைய கேசாதிபாத வருணனை இடம் பெற்றுள்ளது. பக்தி மேலீட்டால் அடியார்கள் தம் உடல் உறுப்புக்களை இறைவனுக்குக் காணிக்கையாக்கிப் பாடுமிடத்தும் இவ்வமைப்பைக் காணலாம். சிலப்பதிகாரத்தில் கவுந்தியடிகள், கண்ணகி, கோவலன் ஆகிய மூவரும் மதுரைக்குச் செல்லும் வழியில், திருவரங்கத்தில் இளைப்பாறும்பொழுது, சாரணர் ஒருவர் தோன்றி அவர்களுக்கு அறிவுரை கூறுகின்றார். அதனைக் கேட்ட கவுந்தியடிகள், தம் கையைத் தலைமேல் குவித்துத் 'தம் உறுப்புக்கள் எல்லாம் அருக தேவர்க்கே பணி செய்வன' எனப் பாராட்டியுரைக்கின்றார் (10 : 192 — 207). திருநாவுக்கரசர், திருவரங்கமாலையில்,

> "தலையே நீ வணங்காய் — தலை
> மாலை தலைக்கணிந்து
> தலையா லேபலி தேரும் தலைவன்
> தலையே நீ வணங்காய்
> கண்காள் காண்மின்களோ — கடல்
> நஞ்சுண்ட கண்டன் றன்னை
> எண்டோள் வீசிநின் றாடும்பிரான் றன்னைக்
> கண்காள் காண்மின்களோ
> மூக்கே நீ முரலாய்
> வாயே வாழ்த்து கண்டாய்
> நெஞ்சே நீ நினையாய்
> கைகாள் கூப்பித் தொழீர்
> ஆக்கையாற் பயனென்
> கால்களாற் பயனென்."
>
> (தேவாரம், 4 : 9 : 82 — 90)

என்று தம் தலை, கண், செவி, மூக்கு, வாய், நெஞ்சு, கைகள், ஆக்கை, கால்கள் ஆகிய உறுப்புக்களைக் கேசாதிபாதமாக இறைப்பணிக்குக் காணிக்கையாக்குவதைக் காணலாம்.

பாதாதிகேச வருணனை, பெரியாழ்வார் திருமொழி முதற்பத்து இரண்டாம் பதிகத்தில் இடம்பெற்றுள்ளது. கண்ணனைக் குழந்தையாகக் கண்டு மகிழ்ந்து, பிள்ளைத்தமிழ் என்னும் இலக்கிய வகைக்கு அடித்தளம் இட்டவர் பெரியாழ்வார். அவர் முதல் திருமொழியில் கண்ணனின் திருவவதாரச் சிறப்பைக் கூறியபின், இரண்டாம் திருமொழியில் கண்ணனின் திருப்பாதம் தொடங்கிக் குழல்கள் வரையுள்ள ஒவ்வோர் உறுப்பின் அழகையும் அனுபவித்துப் பிற பெண்களையும் வந்து காணுமாறு அழைக்குமுகமாகப் பாதாதிகேச வருணனையை அமைத்துள்ளார்.

"சீதக் கடலுள் ளமுதன்ன தேவகி
கோதைக் குழலாள் அசோதைக்குப் போத்தந்த
பேதைக் குழவி பிடித்துச் சுவைத்துண்ணும்
பாதக் கமலங்கள் காணீரே பவளவாயீர் வந்துகாணீரே."

(பெரி. திருமொழி, 1 : 2 : 1)

என்று தொடங்கிக் கண்ணனின் பாதங்கள், கணைக்கால், முழந்தாள், குறங்குகள், மருங்கு, உந்தி, உதரம், மார்பு, தோள்கள், கைத்தலங்கள், கண்டம், செந்தொண்டைவாய், மூக்கு, கண்கள், புருவம், நெற்றி, குழல்கள் என ஒவ்வோர் உறுப்பின் அழகையும் அவர் சிறப்பித்துப் பாடியுள்ளார்.

குறவஞ்சியில், பாட்டுடைத் தலைவியின் அழகு, கேசாதி பாதமாக வருணிக்கப்பட்டுள்ளது. 'கருநிற மேகங்கள் ஒன்று திரண்டு சுருண்டு சுழியெறிவதுபோல் காட்சியளிக்கின்ற கூந்தல் முடியினாள்; காதுகள் வரை நீண்டு சென்று விளையாடி ஆடவர் நெஞ்சைக் கொள்ளை கொள்கின்ற கெண்டை மீனையொத்த கண்களையுடையாள்; பூமுருக்கின் அரும்பு போல் இருக்கும் இதழினாள்; வில்லைப் போல் வளைந்து மூன்றாம்பிறைத் திங்களைப் போல் ஒளிவிடும் நுதலினாள்; விண்ணுலகில் தோன்றும் வானவில்லும்கூட, ஆசைமொழி பேசும்படி அமைந்த புருவத்தாள்; பிறர் அறிவை மயக்குகின்ற இறுமாப்புமிக்க மங்கைப் பருவத்தாள்; கரும்பு போல் இனித்து அமிழ்தம் போல் தெளிவாக எடுக்கும் சொல்லினாள்; கடலலைகளால் ஒதுக்கப்பட்ட முத்துக்களைப் பதித்து வைத்தாலொத்த வரிசையான பற்களையுடையாள்; பல்லின் அழகை எட்டிப் பார்ப்பது போல் மூக்கில் புல்லாக்காக இட்ட முத்தினையுடையாள்; அழகு குடிகொள்ளும் முகத்தினாள்; பல்வகை அணிகளைப் பூண்டு, கொடிகள் சுற்றுகின்ற கமுகினையும் வெற்றி

கொண்ட கழுத்தினாள்; அழகிய வளையல்களை அணிந்துள்ள சிவந்த கைகளை உடையாள்; கச்சுக் கிடக்கினும் தித்திச்சுக் கிடக்கும் இரு கொங்கையாள்; முனிவர்தம் கல் மனத்தையும் கரைந்துருக்கும் எழில் உந்தியாள்; ஆடவர் மனத்தைத் தன்பால் அடக்குகின்ற சிறிய ரோமபந்தியாள்; துடிக்குள் அடங்கி ஒரு பிடிக்குள் அடங்கும் சின்ன இடையினாள்; காமத்துட்டன் அரண்மனைக்குக் கட்டி வைத்துள்ள கதலி வாழை போன்ற தொடையினாள்; மட அன்ன நடையில் ஒரு சின்ன நடை பயிலும் நடையினாள்; வெடித்த கடல்முதை எடுத்து வடிவு செய்த மேனியாள்; ஒரு வீமப்பாகம் பெற்ற காமப்பாலுக் கொத்த சினியாள்; சுகந்தவல்லிக் கொடி போன்ற வசந்த வல்லியின் அழகு, திரிகூடநாதரின் சித்தத்தையும் உருகும்படிச் செய்ய வல்லது' (குற். குற., பா. 18) என்று குறவஞ்சி இலக்கியங்கள் தலைவியின் தோற்றத்தை எழிலுற வருணித்துக் காட்டுகின்றன.

குறவஞ்சி நூலின் இறுதியில் வரும் சிங்கன்—சிங்கி எதிர்த் துரையாடல் என்னும் பகுதி, சிங்கி அணிந்திருக்கும் அணிவகை களைக் கண்டு ஐயுற்ற சிங்கன், ஒவ்வோர் அணியையும் ஒவ் வோர் உயிரினத்துடன் ஒப்பிட்டு வினவுவதும், அவனுக்குச் சிங்கி விடை கூறுவதுமாக அமைந்துள்ளது. இப்பகுதி, கால் தொடங்கி, ஒவ்வோர் அங்கத்தில் இட்ட அணிவகை பற்றி வின வுவதாக—பாதாதிகேசமாகச் செல்கிறது. 'காலுக்கு மேலே பெரிய விரியன் கடித்துக் கிடப்பானேன் சிங்கி' என்று சிங்கன் வினவ, அது 'சேலத்து நாட்டில் குறி சொல்லிப் பெற்ற சிலம்பு 'என விடை கூறுகின்றாள் சிங்கி. சிலம்புக்கு மேலே முறுக்கிட்ட தண்டை, நாங்கூழ்ப் போல நெளிந்த பாடகம் மாண்ட தவளை போல விளங்கும் சதங்கை மணி, சுண்டு விரலில் குண்டலப்பூச்சி போலச் சுருண்டு கிடக்கும் காலாழிபீலி, நெல்வேலியார் தந்த சல்லாச் சேலை, சாரைப் பாம்பு போல் இருக்கும் செம்பொன் அரைஞாண், மார்பில் முத்தாரம், கழுத்தில் தங்கச்சவடி, காதில் வள்ளிக்கொடியில் துத்திப்பூப் பூத்ததுபோல் விளங்கும் சிங்காரக் கொப்பு, கள்ளிப்பூப் பூத்ததுபோல் நீளமாக விளங்கும் மாணிக்கத் தண்டொட்டி, மூக்கின்மீது புன்னை யரும்புபோல விளங்கும் முத்து மூக்குத்தி, செருகி முடித்த கூந்தலில் தூக்கணங் குருவிக்கூடு போல் இருக்கும் குப்பி (தலைச் சூளாமணி), மயிர்மாட்டி என்று கால் முதல் தலை வரை அணிந்துள்ள அணிவகைகள் பாதாதிகேசமாக அமைந் துள்ளன. தலைவியைக் கேசாதிபாதமாக வருணித்த

ஆசிரியர், குறத்தி அணிந்திருந்த அணிவகைகளைப் பாதாதி கேசமாக வருணித்திருப்பது வியப்பிற்குரிய ஒன்றாக அமை கின்றது. கடவுளுக்கு மட்டுமே பாதாதிகேசம் பாடப்பெற வேண்டும் என்னும் மரபை மீறியுள்ளமை இதனால் புலனா கின்றது. குறவஞ்சியில் மரபினைப் போற்றல், மரபினை மீறல், மரபினைத் தோற்றல் ஆகிய மூன்று பண்புகளுமே காணப்படுவதனால், இவ்விலக்கியம் மக்களிடையே பெரும் செல்வாக்குப் பெற்றிருந்தது எனலாம்.

### பவனிக் காதலும் குறவஞ்சியும்

இலக்கண நூல்களான சுவாமிநாதம், முத்துவீரியம், தொன்னூல் விளக்கம் ஆகியனவும், சதுரகராதியும் பவனிக் காதல் என்னும் இலக்கிய வகையினைச் சிற்றிலக்கியங்களுள் ஒன்றாகக் குறிப்பிடுகின்றன; 'தலைவன் உலா வருதலைக் கண்ட தலைவி உலாக் காட்சியால் எய்திய காமம் மிக்கு, அதைப் பிறரோடு உரைத்து வருந்துதல்' என இவ் இலக்கிய வகைக்கு இலக்கணம் உரைக்கின்றன. கூளப்ப நாயக்கன் காதல் என்னும் நூல் பதினேழாம் நூற்றாண்டில், திருமலை நாயக்கர் காலத்து வாழ்ந்த சுப்பிரதீபக் கவிராயர் என்னும் புலவரால் பாடப் பெற்றுள்ளது.[26] மிகப் பிற்காலத் தெழுந்த 'திருமலைக் கறுப்பன் பேரில் காதல்' என்னும் நூல் ஒன்றும் கிடைத்துள்ளது. பாட்டுடைத் தலைவனின் சிறப் பியல்புகளை எடுத்துக் கூறிய பின்னர், அத்தலைவன் காவல் காக்கும் தோட்டத்தில் மலர் கொய்ய மங்கை ஒருத்தி வருவ தாகவும், இருவரும் ஒருவர் அழகில் மற்றவர் ஈடுபட்டு மையல் கொண்டு சில காலம் கூடி இருந்து, பின்னர்த் தலைவன் பிரிந்துவிட, தலைவனை நினைத்துத் தலைவி மையலுற்றுப் புலம்புவதாகவும் அவ்வேளையில் குறி கூறும் குறத்தி வர, அவளை அழைத்துக் குறிகள் கேட்பதாகவும், குறத்தி, குறவஞ்சியில் கூறியதுபோல் பிள்ளையார் உருவினைப் பிடித்து வைத்துப் பல பொருட்களையும் படைத்து வைத்து வணங்கி, தலைவன் பெயரைக் கூறி, தலைவி வளர்க்கும் அன்னத்தைத் தலைவர்பால் தூது விடுக்கச் சொல்லிப் பரிசில் பெற்றுச் செல்வதாகவும், பின்னர், தலைவி தலைவனைச் சந்திக்கும் நல்வேளையை அன்னத்திற்கு உரைத்துத் தூது விடுப்பதாகவும், தலைவியின் தூதினை ஏற்றுத் தலைவன், தலைவியை மணம் புரிவதாகவும் அந்நூல் அமைந்துள்ளது. தலைவி மையலுற்றுப் புலம்புதல், குறத்தி குறி கூறுதல்,

தலைவி தலைவனிடத்து அன்னத்தைத் தூதாக விடுத்தல் முதலியவற்றை நோக்க, திருமலைக் கறுப்பன் பேரில் காதல் என்னும் நூல் குறவஞ்சி இலக்கியம் தோன்றிய பின்னர்த் தோன்றியிருக்கக்கூடும் என்று கருத இடமுள்ளது. எனினும், குறவஞ்சியில் தலைவி, பவனி வரும் தலைவனைக் கண்டு மையலுற்றுப் புலம்பும் பகுதியினைப் பவனிக்காதல் என்னும் இலக்கிய வகையுடன் ஒப்பிடலாம்.

பந்தாடிக்கொண்டிருக்கும் தலைவி, தலைவன் பவனி வருவதைக் கண்டு, 'இந்தச் சித்தர் யாரோ, தன் அருட்கண் பார்வையால் என் அங்கமெலாம் தங்கமாக உருக்கிப் போட்டார்' என்று உருகி மயங்குகின்றாள். மயங்கிய தலைவியைக் கண்டு, 'கருகுதே, உடல் உருகுதே; மலர்ந்த பூவும் கரியுதே, முத்துமாலையும் பொரியுதே' என்று கூறித் தவித்த தோழியர், அவளை வாழைக் குருத்திற் கிடத்தி, பன்னீர் தெளித்து, தலைவன் பற்றிய பல கதைகளைக் கூறி, அவளுக்குச் சீதளோபசாரம் செய்கின்றனர். இதனால் மயக்கம் தெளிந்து எழுந்த தலைவி, நிலா, தென்றல், குயில் போன்றவையும், மன்மதனும் தனக்குத் துன்பம் விளைவிப்ப தாகக் கூறிப் புலம்புகின்றாள்; 'கண்ணிலே நெருப்பை வைத் திருக்கும் சிவபெருமானுடன் கூடியதால், நீயும் வானிடம் எங்கும் நெருப்பை வைத்துள்ளாயோ, இஃது முறையோ?' என்று நிலவை நோக்கிப் புலம்புகின்றாள்; 'திக்கெல்லாம் தென்றலாகிய புலி வந்து பாயுதே; குயில் என்னும் எக்காளம் ஊதியபின் எனக்கு உணவு ஏற்கமாட்டாதே; நித்திரை ஒரு சத்துருவாச்சுதே மன்மதா; சிறு பெண்ணாகிய என்மேற் பொருது நீ ஆண்மகன் என்னும் பெயர்பெற முடியுமா?' என்றெல்லாம் மன்மதனை நோக்கிப் புலம்புகின்றாள். இவ்வாறு தலைவி புலம்பிக் கொண்டிருக்கும் வேளையில் தோழி வர, அவளைத் தலைவர்பால் தூது அனுப்பத் துணி கிறாள்; தலைவரின் சிறப்பியல்புகளையும், அவரைச் சந்திக்கும் வேளையும் கூறி, அவர்பால் தூது விடுக்கிறாள்; சென்ற தோழி திரும்பி வருவதற்குள் கூடலிழைத்துப் பார்க் கிறாள்; குறத்தியை வரவழைத்துக் குறி கேட்கின்றாள். இவளுடைய செயல்களை—பவனி கண்டு, காதல் கொண்டு புலம்பும் இச் செயல்களை—பவனிக்காதல் என்று உரைப்பது பொருத்தமேயாகும்.

அரசனுக்குரிய மலை, ஆறு, நாடு, ஊர், பறை, பரி, களிறு, தார், பெயர், கொடி ஆகிய பத்து உறுப்புக்களைப் பாடுவது தசாங்கம் எனப் பன்னிருபாட்டியல் கூறுகின்றது (இனவியல், நூ. 55). ஆயின் சிதம்பரப் பாட்டியல் கூறும் தசாங்க உறுப்புக் களில் பெயருக்குப் பதிலாக செங்கோல் இடம்பெற்றுள்ளது (நூ. 32). "தசாங்கம் பெறத் தக்கவர் அமரரும் அரசருமே யாவர்" (ப. 36) என உரைக்கின்றது நவநீதப் பாட்டியல் உரை.

> " திங்களைப் போற்றுதும் திங்களைப் போற்றுதும்
> கொங்கலர்தார்ச் சென்னி குளிர்வெணன் குடைபோன்றிவ்
> வங்கண் உலகளித்த லான்." (வரி: 1—3)

என்னும் சிலப்பதிகார மங்கல வாழ்த்துப் பாடல் வரிகளும்,

> " பிறர்வேல் போலா தாகி இவ்வூர்
> மறவன் வேலோ பெருந்தகை உடைத்தே
> இரும்புற நீறும் ஆடிக் கலந்திடைக்
> குரம்பைக் கூகை கிடக்கினும் கிடக்கும்
> மங்கல மகளிரொடு மாலை சூட்டி
> இன்குரல் இரும்பை யாழொடு ததும்பத்
> தெண்ணீர்ப் படுவினுந் தெருவினும் திரிந்து
> மண்முழுது அழுங்கச் செல்லினுஞ் செல்லுமாங்கு
> இருங்கடல் தானை வேந்தர்
> பெருங்களிற்று முகத்தினுஞ் செலவா னாதே." (பா.332)

என்னும் புறநானூற்றுப் பாடலும், அரசர்க்குரிய வாள், குடை போன்றவற்றைப் போற்றிப் பாடும் மரபை உணர்த்தி நிற்கின்றன எனலாம். மாணிக்கவாசகர் 'திருத்தசாங்கம்' என்னும் பெயரில் பாடியுள்ள பகுதியில் சிவபெருமானின் பெயர், நாடு, ஊர், ஆறு, மலை, ஊர்தி, படை, பறை, தார், கொடி ஆகிய பத்து உறுப்புக்களை அமைத்து, உறுப்புக்கு ஒன்றாகப் பத்துப் பாடல்கள் பாடியுள்ளார். மாணிக்க வாசகர் பாடியுள்ள கீர்த்தித் திரு அகவலிலும் தசாங்க வருணனை இடம் பெற்றுள்ளது (வரி 103-124). அவரை அடியொற்றியே, பாரதியாரும் 'பாரத தேவியின் திருத்த சாங்கம்.[27] பாடியுள்ளார்.

"தசாங்க உறுப்புப் பத்தும் ஒரே பாட்டில் வரப் பாடுவது தசாங்க வருணனை என்று பெயர் பெறும்"[28] என்பர்.

அரசனையோ தெய்வத்தையோ பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு பாடப்பெறும் இலக்கியங்களில் இத்தகைய தசாங்க வருணனையைக் காணமுடிகின்றது. குறவஞ்சியில், குறத்தியின் வருகையைக் கூறுமிடத்து, அவள் பாட்டுடைத் தலைவனின் மலை, நதி, நாடு, நகர், பரி, யானை, கொடி, முரசு, குடை, மாலை ஆகிய தசாங்கங்களைப் பாடிக்கொண்டே வருவதாகக் கூறப்பட்டுள்ளது:

'' சைவமுத் திரையை வானின்மேல் தரிக்குந்
தெய்வமுத் தலைசேர் திரிகூட மலையான்
வான்புனல் குதட்டும் மடக்குரு கினுக்குத்
தேன்புரை ஏறுஞ் சித்திரா நதியான்
ஏரிநீர் செழிக்க வாரிநீர் கொழிக்கும்
மாரிநீர் வளர்தென் ஆரிய நாட்டான்
கன்னிமாப் பழுத்துக் கதலிதேன் கொழித்துச்
செங்நெல்காத் தளிக்கும் நல்நகர்ப் பதியான்
ஓரா யிரமறை ஓங்கிய பரியான்
ஈரா யிரமருப் பேந்திய யானையான்
சேவக விருது செயவிடைக் கொடியான்
மூவகை முரசு முழங்குமண் டபத்தான்
அண்டகோ டிகளை ஆணையா லடக்கிக்
கொண்டல்போற் கவிக்குங் கொற்றவெண் குடையான்
வாலசுந் தரிகுழல் வாய்மொழி அருட்கண்
கோலவண் டிசைக்குங் கொன்றைமா லிகையான்.''

(பா.49:1-16)

என்று குற்றாலநாதரின் தசாங்கத்தைத் திருக்குற்றாலக் குறவஞ்சி புலப்படுத்துகின்றது. இம்மரபைப் பின்பற்றி, பெத்லகேம் குறவஞ்சியும் இயேசு கிறித்துவின் தசாங்கமாக, சீனாமலை, தானுமா நதி, கலிலெய நாடு, நாசரத் நகர், குஞ்சரம், மேகவெம்பரி, சிலுவை விருதெனுங் கொடி, தோத்திர ஞானச் சுபசெபமாலை, வானில் தொனிக்கும் ஏழ்முரசு, செங்கோல் ஆகியனவற்றை 104 கண்ணிகளில் குறிப்பிடுகின்றது (பக்.44-52).

### ஆற்றுப்படையும் குறவஞ்சியும்

காலத்தால் முற்பட்ட சிற்றிலக்கிய வகை ஆற்றுப்படை இலக்கியம், பாடாண்திணைக்கு உரிய துறைகளைக் கூறும் போது தொல்காப்பியர்,

"கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்
ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்
பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிரிவுஇச்
சென்று பயனெதிரச் சொன்ன பக்கமும்." (நூ. 36)

என்று குறிப்பிடுகின்றார். இவ்வரிகள் ஆற்றுப்படை இலக்கியத்தின் இலக்கணத்தைச் சிறப்புற உணர்த்திநிற்கின்றன. பரிசுபெற்ற பாணர், பொருநர், கூத்தர் முதலானோர் தம்மைப் புரக்கும் வள்ளலைத் தேடிச்செல்லும் தம் போன்றவர் வழியில் எதிர்ப்பட்டவிடத்து, தம்மைப் புரந்த வள்ளலின் கொடைத்தன்மையையும், நாட்டு வளத்தையும், மற்றும் இன்னோரன்ன அவன் சிறப்பியல்புகளையும் எடுத்துக் கூறி, அவரையும் அவ்வள்ளலிடத்து ஆற்றுப்படுத்துவது ஆற்றுப்படையாகும். முதன் முதலில் எழுந்த ஆற்றுப்படை, கரிகாற் பெருவளத்தானைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு முடத்தாமக்கண்ணியார் பாடிய பொருநராற்றுப் படையாகும்.

குறவஞ்சி இலக்கியமும் ஒரு வகையில் ஆற்றுப்படை போன்றதே யாகும். பரிசுபெற்ற கலைஞன் நிலையில் இருக்கிறாள் குறத்தி, அவள் பாட்டுடைத் தலைவிக்குத் தலைவனுடைய சிறப்பியல்புகளையும் புகழினையும் அவன் நாட்டு வளத்தினையும் எடுத்துக்கூறித் தலைவியை வழிப் படுத்துகிறாள்; குறி சொல்லுமுன், தனக்கு விருப்பமான தெய்வத்திற்குச் செய்ய வேண்டியவற்றைச் சொல்லிப் பின் குறி கூறத் தொடங்குகிறாள்; தலைவனைச் சேரவேண்டும் என்ற தலைவியின் விருப்பம் விரைவில் நிறைவேறும் என்று கூறித் தலைவனை வாழ்த்திப் பரிசில் பெற்றுச் செல்கிறாள். 'இங்குப் பரிசில்—தலைவனின் அருளாகிய பரிசில்—பெறும் நிலையில் இருக்கிறாள் பாட்டுடைத்தலைவி என்றும், அத் தலைவியைப் பாட்டுடைத் தலைவனின் சிறப்பியல்புகள் கூறி வழிப்படுத்தும் கலைஞனாகத் தோன்றுகிறாள் குறத்தி'[29] என்றும் கூறுவர் அறிஞர்.

### கோவையும் குறவஞ்சியும்

அகப்பொருள் துறைகளை நிரல்பட அமைத்துக் கற்பனைச் செறிவுடன் பாடப்பெற்ற ஒருவகைச் சிற்றிலக்கியமே கோவை எனப்படும். முதன்முதல் எழுந்த கோவை நூல் பாண்டியன் நின்றசீர் நெடுமாறன்மீது பாடப் பெற்ற பாண்டிக்கோவை ஆகும்.[30] இஃது ஏழாம் நூற்றாண்டளவில் எழுந்த ஒன்றாகும்.

கோவையில் குறிப்பிடப்பெறும் தலைவர்கள் இருவர். ஒருவன் பாட்டுடைத் தலைவன்; மற்றொருவன் கிளவித் தலைவன். பாட்டுடைத் தலைவனின் பெயர், வரலாறு, சிறப்பியல்புகள் முதலியன நூலில் கூறப்படும். அகப்பொருள் இலக்கியங்களில் கிளவித் தலைவனின் பெயரினைக் கூறுதல் இலக்கிய மரபன்று.[31] எனவே கிளவித் தலைவன், அவ்வந் நிலத்தில் வழங்கும் பெயர்களாலேயே சுட்டப்பெறுவான்.

குறவஞ்சியும் அகப்பொருள் நூல் வகையைச் சார்ந்தது. இங்கே கிளவித் தலைவன், தலைவியாக வருபவர்கள் குறவனும் குறத்தியும் ஆவர். கிளவித் தலைவன், தலைவியின் பெயர் சுட்டப்பெறுதல் இல்லை என்னும் அகப்பொருள் மரபிற்கேற்ப, குறவனும் குறத்தியும் சிங்கன், சிங்கி என்றே பொதுவாக அழைக்கப்படுகின்றனர். குறவஞ்சியில் பாட்டுடைத் தலைவன், தலைவி பெயர்கள் சுட்டப்படுகின்றன; பாட்டுடைத் தலைவனின் புகழ், அவன் நாட்டுவளம், மலைவளம், கிளைச் சிறப்பு முதலியன கூறப்பெற்றுள்ளன.

'கோவை நூல், மேலோட்டமாகப் படிப்பதற்கு, ஒரு தலைவன் தலைவியரின் வாழ்வை நாடகப் போக்கில் விளக்குவதாக இருப்பினும், அது ஆன்மா இறைவனைத் தேடுதல் என்னும் உள்ளுறைப் பொருள் கொண்டுள்ளது'[32] என்பர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார். 'திருக்குற்றாலக் குறவஞ்சி, அழகர் குறவஞ்சி, கும்பேசர் குறவஞ்சி, தியாகேசர் குறவஞ்சி போன்ற நாடகங்களின் கருப்பொருளை ஆராய்ந்து பார்த்தால், அதன் முற்பகுதியில் ஜீவான்மா, பரமாத்மாவைத் தேடுதல் ஆகிய மதுரபக்தி அல்லது பகவத்காமா என்று சொல்லக்கூடிய பக்திநிலை இருப்பது புலப்படும். முற்பகுதியில் குறத்தியே ஜீவாத்மா, பரமாத்மாவைச் சென்று சேர்தற்குரிய வழியைக் கூறுபவளாகிறாள். இத்தகைய மதுரபக்தி குறவஞ்சி நாடகத்தின் முற்பகுதியிலும், ஸ்ரீ ஜெயதேவரின் கீத கோவிந்தத்திலும், பின்னர் மாணிக்கவாசகரின் திருக்கோவையாரிலும், ஆண்டாளின் திருப்பாவையிலும் விளக்கப்பட்டிருத்தலைக் காணலாம். குறவஞ்சியின் முற்பகுதி பேரின்பத்தை (Supreme Bliss)—தெய்விகக் காதலை (Divine Love)—வெளிப்படுத்துவதாக அமைய, பிற்பகுதியோ, குறவன் குறத்தியின் காதலை, சிற்றின்பத்தைக் (Mundane love or Physical pleasure) காட்டுவதாக அமைகிறது. பேரின்பத்திற்கும், சிற்றின்பத்திற்கும் இடையே ஓர் இணைப்புப் பாலமாக விளங்குகிறாள் குறத்தி.'[33]

சங்க காலத்தில் கட்டு, கழங்கு, வெறியாடல் என்னும் மூவகையில் குறி பார்த்த வழக்கம், காலப்போக்கில் குறத்திப் பாட்டாக உருவெடுத்தது. பதினொன்றாம் நூற்றாண்டு வரை வழங்கிவந்த குறத்திப்பாட்டு, கலம்பகத்தில் குறம் என்னும் உறுப்பாக இடம்பெற்று, பின்னர், பதினாறாம் நூற்றாண்டில் குறம் என்னும் இலக்கிய வகையாக மலர்ந்து, பதினேழாம் நூற்றாண்டில் குறவஞ்சியாக வளர்ந்து, பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியில் குளுவ நாடகமாக உருவாயிற்று. ''எந்த ஒரு இலக்கியமும் மரபைப் போற்றி வளப்படுத்துவதோடு, அதனை மாற்றவும் செய்கிறது''[34] என்பர் ஒப்பியல் அறிஞர் எஸ். எஸ். பிராவர். அவர் கூற்றுக்கிணங்க, குறவஞ்சியும் குறி கூறுதல் என்னும் பழைய மரபைப் போற்றி வளப்படுத்தியுள்ளது; தனக்கு முன் தோன்றியுள்ள பல இலக்கிய வகைகளின் மரபைப் பின்பற்றியும், அவ் இலக்கிய வகைகளின் மரபைச் சிற்சில இடங்களில் மீறியும், புதிய மரபுகளை உருவாக்கியும் தனியொரு சிற்றிலக்கிய வகையாகப் பெரும் செல்வாக்குடன் திகழ்ந்துள்ளது. கலம்பகம்,குறம் போன்ற இலக்கியங்களை அடிப்படையாகக் கொண்டு எழுந்த குறவஞ்சி, குளுவ நாடகம் என்னும் புதிய இலக்கியவகை தோன்றுவதற்கும் வித்திட்டுள்ளது.

## குறிப்புக்கள்

1. '' ஏற்ற பூங்கோதை கேள்இடப மால்வரையில்
வாழ்இளங்
குறப்பாவையான் விளங்குறப் பாவையுஞ்
சாற்றுவேன் கண்ணர்முன் வெண்ணெயாக் குவியவே
தானடுக்குறி
சொனேன் சயிலமாதினை முதற்போற்றினேன்''
—(அழகர் கலம்பகம், பா. 53.)

2. '' செல்லிட்ட பொழின்மதுரைத் தேவர்மணந்
தடாதகா தேவிக் கன்று
சொல்லிட்ட குறமகள் யான்''
—(மதுரைக் கலம்பகம், பா. 77.)

3. '' முறத்தில் இட்ட நெல்லை வறுத்துப் பார்த்துக்
குறிகூறுவேன்''
—(திருப்பாதிரிப்புலியூர்க் கலம்பகம், பா. 74.)

4. "......உதயமான சுளகு நெல்லும் ஒற்றைப்பட்ட
தாதலால்
கன்றும் ஆனும் மழுவுமாக ஒருவர் வந்து
தோன்றினார்"
— (திருவருணைக் கலம்பகம், பா. 50.)

5. "... ... ... சுளகி லம்மை
நெல்லிட்ட குறிக்குநீ நினைத்ததொரு பொருளது
நித்திலக்கச் சார்க்கும்
வல்லிட்ட குறியினொடும் வளையிட்ட குறியுள
தோர் வடிவு தானே"
— (மதுரைக் கலம்பகம், பா. 77.)

6. "......It (Kalampakam) brings together learned poetry and folk songs."
— T. P. Meenakshisundaran, A History of Tamil Literature, p. 152.

7, "We can give exact definitions and descriptions of minerals, plants, and animals and can arrange them with precision under the different classes to which they belong. But with regard to works of taste and imagination, where Nature has fixed no standard, but leaves scope for beauties of many different kinds, it is absurd to attempt defining and limiting them with the same precision."
—Hugh Blair, Critical Dissertation on the poems of Ossian. Quoted by S.S. Prawer, Comparative Literary Studies. p. 125.

8. குற இலக்கியங்களுக்கிடையே காணப்படும் மாறு பாடுகள் 'அமைப்பாய்வு' என்னும் இயலில் சுட்டப் பட்டுள்ளன. (பக். 39—58).

9. குறக்குடி இயல்புகள் 'குறவர் வாழ்வியல்' என்னும் இயலில் விரிவாக ஆராயப்பட்டுள்ளன. (பக். 234—265)

10. 'சிற்றிலக்கிய அறிமுகம்' என்னும் இரண்டாம் இயலில் குளுவ நாடகத்தில் காலம் பற்றிய ஆய்வுக் குறிப்பும், 'அமைப்பாய்வு' என்னும் மூன்றாவது இயலில் குளுவ நாடகத்தின் அமைப்பும் இடம் பெற்றுள்ளன. (பக். 23—26; 85—96).

11. தியா. குற., பா. 43; கும். குற, பா. 61; சோலை. குற., பா. 114; பெத். குற., வித்தை வளம், பக். 79—80.

12. Tamil Lexicon, Vol. II, p. 1043.

13. உ. வே. சாமிநாதையர், (பதிப்.) ஸ்ரீசிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தங்கள். ப. 279.

14. மு. அருணாசலம் (பதிப்.), முக்கூடற்பள்ளு, பள்ளுப் பிரபந்த வரலாறு, ப. 22.

15. ந. வீ. செயராமன், சிற்றிலக்கியச் செல்வங்கள், ப. 156.

16. த. அ. அருணாசலம் பிள்ளை (தொகுப்.), திருச்செந்தூர் நொண்டி நாடகம், முகவுரை, ப. ix.

17. மு. நூ., ப. iii.

18. 'நாடகத்திறன்' என்னும் இயலில் இப்பகுதி விரிவாகச் சுட்டப்பட்டுள்ளது. (பக். 160—162).

19. எஸ். வையாபுரிப்பிள்ளை, இலக்கிய விளக்கம், ப. 115.

20. "The distinction into seven stages of womanhood does not occur in the cankam poetry or in Sanskrit."
— T. P. Meenakshisunparan, op. cit., p. 141.

21. முத்தொள்ளாயிரம் கடைச்சங்க நூல்களுள் ஒன்றாகக் கருதப்படுகின்றது.

— கா. சுப்பிரமணிய பிள்ளை, இலக்கிய வரலாறு, முதல் பாகம், ப. 164.

22. T. P. Meenakshisundaran, op.cit., p. 140.

23. மேற்கோள், ந. வீ. செயராமன், சிற்றிலக்கியச் செல்வங்கள், ப. 146.

24. தி. சங்குப்புலவர் (உரை.), தமிழ்விடுதூது, முன்னுரை. ப. 7.

25. எஸ். கலியாண சுந்தரையர், எஸ். ஜி. கணபதி ஐயர் (உரை.), நவநீதப் பாட்டியல், குறிப்புரை, ப.39.

26. அ. கி. பரந்தாமனார், மதுரை நாயக்கர் வரலாறு, ப. 437.

27. பாரதியார் கவிதைகள் பக். 151—153.

28. மு. அருணாசலம் (பதிப்.), பிரபந்த மரபியல், ப. 53.

29. ''ஆற்றுப்படைகளில் வரும் வழிப்போக்கனான கலைஞனை, குறம் பாடல்களில் வரும் குறத்தியுடன் ஒப்பிடலாம். எவ்வாறெனில் இருவரும் வழிகாட்டிகளாக வருகின்றனர். வள்ளலின் கொடைத் திறனையும் வீரச் செயல்களையும் வழிகாட்டியான கலைஞன் புகழ்வது போலவே, குறத்தியும் பாட்டுடைத் தலைவனின் குண விசேஷங்களையும், வீரதீரப் பிரதாபங்களையும் புகழ்ந்து பாடி, தலைவி தலைவனை அடைவதற்கான உபாயங்களைக் கூறி வழிகாட்டுகிறாள்.''
—வே. பிரேமலதா (பதிப்.), தியாகேசர் குறவஞ்சி, முன்னுரை. ப. 29.

30. Quoted dy T. P. Meenakshisundaran, op.cit.. p.137.

31. மக்கள் நுதலிய அகன்ஐந் திணையும்
சுட்டி ஒருவர்ப் பெயர்கொளப் பெறாஅர்''
—தொல், பொருள்., அகத்திணை இயல், நூ. 54.

32. 'This Kovai is also considered to be mystic poetry. Here admittedly there is an implied allegory. This poem expresses the love of soul for the Lord.'
—T. P. Meenakshisundaran, op.cit., p. 138.

33. பிரேமலதா, 'குறவஞ்சி நாடகம்', மதுரை ஸ்ரீ அங்கயற்கண்ணி சங்கீத சபா முதலாவது ஆண்டுவிழா மலர், ப. 10.

34. "Each new work at once enriches the tradition and changes it."
—S. S. Prawer, Comparative Literary Studies, p. 125.

# 5. நாடகத் திறன்

தொன்மையான தமிழ் நாடக இலக்கண, இலக்கிய நூல்கள் பல இருந்தமை உரையாசிரியர்களின் உரைக்குறிப்புக்கள் வாயிலாக நமக்குத் தெரிய வருகின்றது. ஆயின், அந்நூல்கள் இப்போது கிடைக்கப்பெறவில்லை. "பண்டைக் காலத்தில் இசை, நாட்டியம் இவைகளின் சேர்க்கையே நாடகம் என்று வழங்கிவந்தது... காலம் செல்லச் செல்லச் சிறு நிகழ்ச்சிகளைப் பற்றிய கோவையான இசைப்பாடல்கள் மிக்க மகிழ்ச்சி தரும் என உணர்ந்து, மக்கள் நாடகங்களில் ஆடல் பாடல்களுடன் நிகழ்ச்சிகளையும் சேர்த்துக்கொண்டதனால் உண்டான மகிழ்ச்சி நீடிக்கப் புராணம், இதிகாசத்தில் உள்ள கதைகளை நாடகப் பொருளாக அமைத்துக் கொண்டனர். நாடக உரை யாடல்கள் இசை உருவிலேயே அமைந்திருந்தன"[1] என்று கலைக்களஞ்சியக் கட்டுரை, பண்டைய நாடக நிலையைத் தெளிவாக உரைக்கின்றது. நாடகம் இத்தகைய நிலையில் இருந்த காலத்து எழுந்ததே குறவஞ்சி என்னும் இசை நாட்டிய நாடகம் ஆகும். குறவஞ்சி நாடகம், குறவஞ்சிக்கு முன்னர் எழுந்த பள்ளு நாடகம், குறவஞ்சிக்குப் பின்னர் எழுந்த நொண்டி நாடகம் ஆகிய இவையே தமிழ்மொழியில் முதன் முதலாகக் கிடைக்கப்பெறும் நாடக நூல்களாகக் காணப் படுகின்றன.

குறவஞ்சி — நாடகம்

குறவஞ்சி நாடக வகையைச் சார்ந்த இலக்கியம் என்பதை,

"செழித்த குறவஞ்சி நாடகத்தைப் பாட."

(குற். குற , பா. 5)

"குறவஞ்சி நாடகத்திற்கருள் கணபதி வந்தார்."

(சர. குற., பா. 5)

" குறவஞ்சி நாடகம் தமிழில் வணங்கிப் பாட."

(சோலை. குற., பா. 5)

" பொருட்குற வஞ்சி நாட்யம் புகன்றிட விமயச் செல்வி."

(அர்த். குற.)

என வரும் பல்வேறு குறவஞ்சி இலக்கிய வரிகள் புலப்படுத்து கின்றன.

சில குறவஞ்சி நூல்களின் பெயரிலேயே நாடகம் என்னும் சொல்லாட்சி அமைந்திருக்கக் காண்கிறோம். கும்பேசர் குறவஞ்சி நாடகம், சரபேந்திர பூபால குறவஞ்சி நாடகம் முதலியன இவ்வகையில் குறிப்பிடத்தக்கவை ஆகும்.

விழாக் காலங்களில் நடிக்கப் பெற்றமை

கிரேக்கம், ரோமன், ஆங்கிலம், பிரெஞ்சு, சீனம் என எந்த மொழியாக இருப்பினும், நாடகத்தின் தொடக்கம் சமயத் தொடர்புடையதாகவே அமைந்துள்ளது.[2] இவ்வகையில் தமிழ் மொழியில் தோன்றிய நாடக வகைகளும் சமய விழாக்களுடன் இணைந்தே விளங்குகின்றன. "நாடகம் என்பது எல்லா நாட்டிலும் ஒரு தெய்வத் தொடர்புடைய இலக்கியமாகக் கருதப்படுகின்றது"[3] என்று கலைக்களஞ்சியமும் குறிப்பிடு கின்றது.

குறவஞ்சி, கோவில்களில் நடிக்கப்பெற்று வந்துள்ளது. ஏ. வி. சுப்பிரமணிய அய்யர், 'திருக்குற்றாலக் குறவஞ்சி' பற்றிய தம் ஆங்கிலக் கட்டுரையில் குறவஞ்சி இலக்கியம் சிறந்த நாட்டிய நாடகம் என்றும், நவராத்திரி விழாவின்போது நடிக்கப்பெற்று வந்தது என்றும் குறிப்பிட்டுள்ளார்.[4] சரபேந்திர பூபால குறவஞ்சி நாடகம், தஞ்சைப் பெருவுடையார் கோவிலில் திருவிழாக் காலத்தில் நடிக்கப்பெற்று வந்துள்ளது. "அஷ்டக்கொடி விழாக் காலத்தில் ஆடப்படுவதாதலின் அஷ்டக்கொடிக் குறவஞ்சியெனவும் இது வழங்கும்"[5] என்று அக் குறவஞ்சியைப் பதிப்பித்த உ. வே. சாமிநாதையர் குறிப் பிட்டுள்ளார். கும்பேசர் குறவஞ்சி நாடகத்தைக் கும்ப கோணத்தில் இருந்த கோப்பு நடராஜச் செட்டியார் என்பவர் நாட்டியக்காரர்களைக் கொண்டு மாசிமகத் திருவிழாவின் போது மிகச் சிறப்பாக நடைபெறச் செய்தார். இதனை,

'' அவனிபுகழ் முத்தமிழ்க் கவிராச சேகரன் அருள்பாப நாசநேசன்
ஆதிகும் பேசர்மேற் குறவஞ்சி நாடகம் அன்புட
னுரைத்து வைத்தான்
கவனமுட னிதையெடுத்தி யாவருங் கண்டுகண் களிகூர
வரிய பரதக்
கருவியோ ராற்பாடி யாடல்புரி வித்தனன் கருணைமிகு
பேட்டை நகர்வாழ்
குவளைமலர் மாலையணி மார்பன்வர தன்தந்த குபேரன்
பயந்த மேருக்
கொண்டல் கோப்புக் குமர பூபனருள் செல்வக் குமாரன்
மன்னவர் வசீரன்
நவரச மிகுசற்ச வசனநிச தருமநிலை நாட்டினோ னீட்டு
புகழோன்
நற்கருணை யாளன்மிகு சொற்புலவ ருக்குதவு நடராச
மகிபாலனே.'' (ப. 1)

என வரும் பாயிரச் செய்யுளால் அறியலாம். தியாகேசர் குறவஞ்சியினைப் பதிப்பித்த வே. பிரேமலதாவும் அக் 'குறவஞ்சியும் திருவாரூரில் ஸ்ரீ தியாகராஜஸ்வாமி ஆலயத்தில், இழைக் கோபுரத்திற்கு அருகில் உள்ள தேவாசிரிய மண்டபத்தில் பங்குனி மாதத்தில் நிகழும் பிரம்மோற்சவத்தின் போது நடத்தப்பட்டு வந்ததாக'க் குறிப்பிட்டுள்ளார்.[6] ''ஆலயங்களில் திருவிழா நடந்த காலத்து, மக்கள் அவ்வத் தலத்துக்குரிய பள்ளையும் குறவஞ்சியையும் பாடியும் கூத்தாக ஆடியும் அனுபவித்து வந்தார்கள். திருவாரூரிலே திருவிழா வுக்காகக் கொடியேற்றும்போதும் இறக்கும்போதும் அத் தலத்துக்குரிய பள்ளும் குறவஞ்சியும் பாடி நடிக்கப்பட்டு வந்தன. தஞ்சை இராசராசேச்சுரத்திலும் அப்படியே. திருநெல்வேலி எங்கும் முக்கூடற்பள்ளு இவ்விதம் பாடியாடப் பெற்றது; கோலாட்டத்துக்கேற்ற பாட்டாயிருந்தது அது'''[7] என்று மு. அருணாசலம் குறிப்பிடுவதும் இங்குக் கருதத்தக்கது. இதனால், குறவஞ்சி திருவிழாக் காலங்களில் நாடகமாக நடிக்கப்பெற்று வந்தமை புலனாகும். இன்றும், பல்வேறு நாட்டியக் குழுவினர், பல குறவஞ்சி இலக்கியங்களை அரங்கேற்றி வருகின்றனர்.

## நாடக அமைப்பு

குறவஞ்சி நாடகத்தில், இன்றைய நாடகங்களுக்கு இருப்பதுபோல் களம், காட்சி என்னும் பிரிவுகள் இல்லை. எனினும் அதனை மூன்று களங்களாகவும், நான்கு களங்களாக

வும், ஐந்து களங்களாகவும் அறிஞர்கள் பிரித்துக் காட்டு கின்றனர். மு. அருணாசலம் குறவஞ்சியை மூன்று காட்சி களாகப் பகுத்துக் காட்டுகின்றார். குறத்தி வரும்வரை அமைந்துள்ள தலைவியினுடைய வரலாறு முதற்காட்சி யாகவும், குறத்தி குறி கூறிப் பரிசில் பெற்றுச் செல்லுதல் வரை இரண்டாவது காட்சியாகவும், சிங்கனின் பறவை வேட்டை முதல் சிங்கன்—சிங்கி உரையாடல் வரை உள்ள பகுதிகள் மூன்றாவது காட்சியாகவும் அவர் பகுப்பில் விளங்கு கின்றன[8]. அ. இராசகோட்டியப்பன் தலைவன் உலா தொடங்கி, தலைவி தோழியைத் தூது விடுத்தல் வரை முதற் காட்சியாகவும், குறவஞ்சி குறி சொல்லிப் பரிசில் பெற்றுச் செல்லுதல் வரை இரண்டாம் காட்சியாகவும், சிங்கன் பறவை வேட்டையாடுதல் தொடங்கி சிங்கியைத் தேடியலைவது வரை மூன்றாம் காட்சியாகவும், சிங்கன் சிங்கியைச் சந்தித்து உரை யாடுதல் நான்காவது காட்சியாகவும் குற்றாலக் குறவஞ்சி நாடகத்தைப் பிரித்துக் காட்டுகின்றார்.[9] அ. திருமலை முத்துசுவாமி, 'குறவஞ்சிப் புலவர்' என்னும் தம் கட்டுரையில் குறவஞ்சியை ஐந்து களங்களாகப் பகுத்துக் காட்டுகின்றார்; கட்டியக்காரன் வரவு முதல் தலைவி பவனிவரும் தலைவனைக் காணல் வரை முதற்பகுதியாகவும், தலைவி கூடலிழைத்தல் வரை இரண்டாவது பகுதியாகவும், குறத்தி வருதல் தொடங்கி தலைவி குறத்திக்குப் பரிசளித்தல் வரை மூன்றாவது பகுதி யாகவும், சிங்கன் பறவை வேட்டையாடுதல் தொடங்கி சிங்கி யைத் தேடியலைதல் வரை நான்காவது பகுதியாகவும், சிங்கன் சிங்கியைக் கண்டு உரையாடுதல் ஐந்தாவது பகுதியாகவும் அவர் பகுப்பில் அமைந்துள்ளன.[10]

எனினும், குறவஞ்சி நாடகத்தை ஆறு களங்களாகப் பிரித்துக் காணுதல் பொருத்தமுடையதாகத் தோன்றுகிறது.

கட்டியக்காரன் வரவு

கட்டியக்காரன் தன்னை அறிமுகப்படுத்திக்கொண்ட பின்னர், பாட்டுடைத் தலைவர் பவனி வருவதை அறிவிக்கும் நிகழ்ச்சி இக்களத்தில் இடம் பெறுகின்றது.[11]

இம்முதற்களத்தில், தொடக்கத்தில் இடம்பெறும் நாடக மாந்தர் அறிமுகமும் பவனி அறிவிப்பும் சிறப்பிடம் பெறு கின்றன.

பாட்டுடைத் தலைவர் பவனி

அண்டர் கூட்டமும் தொண்டர் கூட்டமும் சூழ, பாட்டுடைத் தலைவர் உலாவரும் சிறப்பு, அதனைக் காண வரும் பெண்கள் தத்தம் வேலையை அப்படியப்படியே விடுத்து வருதல், தலைவனின் அழகில் ஈடுபட்டு, உலா வரும் தலைவன் யார் என ஐயம் கொண்டு ஒருவரை ஒருவர் வினவி ஐயந் தெளிதல் ஆகிய நிகழ்ச்சிகள் இவ் இரண்டாம் களத்தில் இடம் பெறுகின்றன.

தலைவர் உலா வருதலும், அவருடைய சிறப்பும் இக் களத்தில் விளக்கம் பெறுகின்றன.

பாட்டுடைத் தலைவி வருதல்

பாட்டுடைத் தலைவியின் எழில்நலம், அவள் பந்தடித்து விளையாடுதல், உலா வரும் தலைவரைக் கண்டு காதல் கொள்ளுதல், மயக்கம் கொண்டு மன்மதனையும், நிலா, தென்றல் ஆகியவற்றையும் நோக்கிப் புலம்புதல், தோழி வருதல், அவள் தலைவியைப் பரிகசித்தல், தலைவி தலைவனின் சிறப்புக்களைத் தோழிக்கு எடுத்துக் கூறி, அவளை அவர்பால் தூதுவிடுத்தல், தூது சென்ற தோழி திரும்பி வருவதற்குள் தலைவி கூடலிழைத்துப் பார்த்தல் ஆகிய நிகழ்ச்சிகள் இம் மூன்றாம் களத்தில் இடம் பெறுகின்றன.

இக்களத்தில் தலைவியின் அழகும், ஆற்றாமையும் நன்கு வெளிப்படுகின்றன.

குறத்தி வருகை

'கறுப்பில் அழகி' எனப் பாராட்டப்படும் குறத்தி வருதல்; தலைவி, குறத்தியின் மலைவளம், நாட்டுவளம், நகர்வளம், தலமகிமை, கிளைச்சிறப்பு போன்றன கேட்க, அவற்றிற்கு அவள் விடை கூறுதல்; குறிச் சிறப்புக் கூறுதல்; தலைவி தனக்குக் குறி சொல்லுமாறு கேட்டல்; குறத்தி குறி சொல்லு முன் சில மரபுகளைக் கடைப்பிடித்தல்; தலைவியின் காதலை வெளிப்படுத்தி 'நீ தலைவனை விரைவில் சேர்வாய்' என்று கூறிப் பரிசில் பெற்றுச் செல்லுதல் ஆகிய நிகழ்ச்சிகள் இக் களத்தில் இடம் பெறுகின்றன.

குறத்தி வளம் கூறுதலும், குறி கூறுதலும் இக்களத்தில் சிறப்பிடம் பெறுகின்றன.

சிங்கன் வருகை

சிங்கன் தன்னைத் தானே அறிமுகப்படுத்திக் கொண்டு வருதல், அவனுடைய கையாளான நூவனும் உடன் வருதல்,

பறவைகள் வருவதையும், சேழிறங்கி வயல்களில் இரை மேய் வதையும் கூறுதல், இடையிடையே சிங்கன் சிங்கியின் நினைவு வரப்பெற்றுப் புலம்புதல், நூவனிடம் கண்ணி கொண்டுவரச் சொல்லி, அதனைப் பதிக்கும் முறைபற்றிக் கூறுதல், பறவைகள் பறந்து போதல், நூவன் பழித்தல், சிங்கன் நூவனிடம் சிங்கி யைத் தேடுமாறு கூற அவன் மறுத்துரைத்தல், சிங்கன் சிங்கி யைத் தேடி வருந்துதல், அவன் நிலை கண்ட நூவன் சிங்கியின் அடையாளம் வினவ அவன் கூறல், நூவன் சிங்கியைத் தேடித் தரக் கூலி வினவல், சிங்கன் பல்வேறு மூலிகைகளையும் மருந்து களையும் தருவதாகக் கூறுதல், மீண்டும் சிங்கன் சிங்கியைத் தேடிச் செல்லுதல் ஆகிய நிகழ்ச்சிகள் இக்களத்தில் இடம் பெறுகின்றன.

இக்களத்தில் சிங்கனின் பறவை வேட்டையும், அவனுடைய காதல் வாழ்வும் சிறப்பிக்கப் பெறுகின்றன.

**சிங்கன் சிங்கி சந்திப்பு**

சிங்கன் சிங்கியைக் காணல்; அவள் அணிந்திருந்த நகை களைக் கண்டு அவள்மீது ஐயுற்று வினவல்; சிங்கி, தான் பல்வேறு நாட்டுப் பெண்களுக்குக் குறி சொல்லிப் பரிசில் பெற்றமையைப் புலப்படுத்துதல்; இறுதியில் இருவரும் இணைந்து பாட்டுடைத் தலைவரை வாழ்த்துதல்; ஆகிய நிகழ்ச்சிகள் இக்களத்தில் இடம்பெறுகின்றன.

இக்களத்தில் சிங்கன் சிங்கி சந்திப்பும், அவர்களது எதிர்த் துரையாடலும் சிறப்பிடம் பெறுகின்றன.

இங்ஙனம் ஒவ்வொரு களமும் ஒவ்வொரு முக்கிய நிகழ்ச்சியை எடுத்துரைப்பதாக அமைவதால், குறவஞ்சி நாடகத்தை ஆறு களங்களாகப் பிரித்துக் கூறுவது பொருத்த மாகத் தோன்றுகிறது. முதல் களத்தில் கட்டியக்காரன் வந்து பாட்டுடைத் தலைவர் பவனியை அறிவித்து நாடக அரங் கினின்று மறைகிறான். முதல் நாடக மாந்தரை அறிமுகப் படுத்துவதுடன் அவன் பங்கு முடிந்துவிடுகின்றது.

இரண்டாவது களத்தில் பாட்டுடைத் தலைவர் பவனி இடம்பெறுகின்றது. இக்களத்திற்குப் பிறகு பாட்டுடைத் தலைவர் கருத்தளவில் இடம்பெறுகின்றாரேயன்றிக் காட்சி யளவில் இடம்பெறவில்லை. இங்கு, பாட்டுடைத் தலைவர் பவனியைக் காண வரும் பெண்கள் தம்முள் உரையாடும்

வகையில் அமைந்த குழுப்பாடல் (Chorus) இடம்பெறுகின்றது. இப்பெண்கள் வேறு, தலைவியுடன் பந்தடித்து விளையாடும் தோழியர் வேறு என்பது குறிப்பிடத்தக்கது.

மூன்றாவது களத்தில் பாட்டுடைத் தலைவி பந்தடித்து விளையாடிக்கொண்டிருக்கிறாள்; அவ்வேளையில் பாட்டுடைத் தலைவரின் பவனி கண்டு, அவர்மீது மையலுற்று வருந்து கின்றாள். இந்நிலையில் தலைவியின் வருத்தத்தைப் பகிர்ந்து கொள்ளும் வகையில்—அவளுக்கு ஆறுதல் கூறும் நிலையில்—தோழி தோன்றுகின்றாள்; தலைவியின் பொருட்டுத் தலைவன்பால் தூது செல்கின்றாள்.

நான்காவது களத்தில் குறத்தி வருகின்றாள். அவளது மலை, நாடு, நகர் இவை வளமும், குறிச் சிறப்பும், அவள் தலைவிக்குக் குறி கூறுதலும் இங்கு இடம்பெறுகின்றன. இக்காட்சியுடன் பாட்டுடைத் தலைவியின் பங்கும் முடிவுறு கின்றது. குறத்தி, தலைவியிடம் 'நீ விரைவில் தலைவனைச் சேர்வாய்' என்று கூறுகிறாளேயன்றி, இருவரும் சேர்ந்ததைப் பற்றிய குறிப்பு பெரும்பான்மையான குறவஞ்சிகளில் இல்லை.

ஐந்தாம் களத்தில் சிங்கன் பறவை வேட்டையாடிக் கொண்டு வருகின்றான். பறவை வேட்டையாடிக் கொண்டு வந்தாலும், அவன் கவனம் முழுமையும் சிங்கியின் நினைவி லேயே உள்ளது; அதனால் பறவை வேட்டையில் கருத்தைச் செலுத்தாமல் அவற்றைத் தப்பிச் செல்ல விட்டு விடுகின்றான். இக்களத்தில் சிங்கனுக்குத் துணை புரிய ஒரு நூவன் வருகின் றான். தலைவியின் ஆற்றாமையைப் பகிர்ந்துகொள்ள ஒரு தோழி அமைந்தாற்போல, சிங்கியைப் பிரிந்து வருந்தும் சிங்கனுக்கு ஒரு தோழன் அமைகின்றான். இக்களத்திற்குப் பிறகு நூவனையும் காண இயலவில்லை.

ஆறாம் களத்தில் குறத்தி வந்து விடுகின்றாள். குறத்தியைத் தேடி வரும் சிங்கன் அவளை நகரத்தெருவில் சந்தித்து மகிழ்ச்சி அடைகின்றான். எனினும் பல்வேறு அணிகளைப் பூண்டிருக்கும் அவள் தோற்றம், அவனுக்கு ஐயத்தை விளைவிக்கின்றது. நாடகத்தின் சுவையான பகுதியாகிய எதிர்த்துரையாடல் இக்களத்தில் இடம்பெறுகின்றது. இப்பகுதி ஆண்—பெண் தர்க்கம், தாய்—மகள் ஏசல் போன்ற நாட்டுப்புற வடிவங்களை ஒத்து விளங்குகின்றது இறுதியில் சிங்கனும் சிங்கியும் இணைந்து பாட்டுடைத் தலைவரை வாழ்த்திச் செல்கின்றனர்.

குறவஞ்சி நாடக அமைப்பில் ஐந்து முக்கியமான கூறுகள் இடம்பெறுகின்றன :

### இருவர் உரையாடுதல்

தலைவி—தோழி, தலைவி—குறத்தி, சிங்கன்—நூவன், சிங்கன்—சிங்கி என இருவர் இருவராக உரையாடும் பகுதிகள் குறவஞ்சியில் தலைமையிடம் பெறுகின்றன.

### குழுவினர் வருகை

நாடக மாந்தர் ஒரு குழுவாக வரும்பொழுது உரையாடல் இன்றிச் செயற்பாடு (Action) மட்டுமே நிகழ்கின்றது. பாட்டுடைத் தலைவர் உலாக் காண வரும் பெண்கள், தம்முள் ஐயுற்று வினவிக்கொள்ளும் பகுதி ஒரு குழுப்பாடலாக அமைந்துள்ளது; பின்னணியில் தலைவர் பவனி நிகழ்கின்றது. அவ்வாறே தலைவி பந்தடித்து விளையாடுதல், அவள் மயக்கமுற்றுவிழும் நிலையில் தோழியர் அவளுக்குச் சீதளோபசாரம் செய்தல் ஆகிய நிகழ்ச்சிகளும் உரையாடலுக்கு வாய்ப்பின்றிச் செயற்பாடாக நிகழுகின்றன. அண்மையில் திருச்சி வானொலியில் (15.5 1981) ஒலிபரப்பப்பட்ட 'சோலை மலைக் குறவஞ்சி' நாட்டிய நாடகத்திலும், காட்சி அறிவிப்பாக வரும் பகுதி குழுப்பாடலாக இடம்பெற்றிருந்தமை குறிப்பிடத்தக்கதாகும்.

### காட்சி மாற்றம்

நாடக அரங்கில் ஒரு புதிய கதைமாந்தர் அறிமுகம் ஆகும் பொழுது, முந்திய கதைமாந்தர் ஒருவர் இக்காட்சியினின்றும்—அதாவது அரங்கினின்றும்—மறைந்து விடுகின்றார். 'கட்டியக்காரன் மறைய, பாட்டுடைத் தலைவர் தோன்றுகின்றார்; பாட்டுடைத் தலைவர் மறைய, பாட்டுடைத் தலைவி தோன்றுகின்றாள்; பாட்டுடைத் தலைவியுடன் உரையாடும் தோழி மறைய, குறத்தி தோன்றுகின்றாள்; அவள் பரிசில் பெற்றுச் சென்ற பின்னர் பாட்டுடைத் தலைவியும் மறைய, சிங்கனும் நூவனும் தோன்றுகின்றனர்; நூவன் மறைய, சிங்கி தோன்றுகின்றாள். இந்நாடகத்தில் காட்சி மாற்றம் (Scene-change) மிக அருமையாக அமைக்கப்பட்டிருத்தல் இதனால் புலனாகின்றது.

### இரட்டைக் கரு அமைப்பு

குறவஞ்சி இரட்டைக் கரு அமைப்பைக் (Bi-plot structure) கொண்டது. குறவஞ்சியில் பாட்டுடைத் தலைவர் பெரும்

பாலும் கடவுளாக இருப்பார்; அல்லது, மன்னராகவோ, வள்ளலாகவோ இருப்பார்; தலைவி உயர்குடிப் பிறப்பினளாக இருப்பாள். எனவே, தலைவன் தலைவி இருவரும் உயர் மட்டத்தைச் (Higher strata) சார்ந்தவர்கள் ஆவர். குறவஞ்சியில் வரும் கிளவித் தலைவன்—தலைவியாகிய சிங்கன்—சிங்கி ஆகிய இருவரும் தாழ்ந்த வகுப்பைச் (Lower strata) சார்ந்தவர்கள் ஆவர்.

தலைவனுக்கும் தலைவிக்கும் இடையே எழும் காதல், ஆன்ம உணர்வை — பேரின்பத்தை அடிப்படையாகக் கொண்ட ஜீவாத்மா பரமாத்மாவைத் தேடுதல் என்னும் தெய்வீகக் காதலை — வெளிப்படுத்துவதாக அமைய, குறவன் — குறத்தியின் காதல் சிற்றின்பத்தை அடிப்படையாகக் கொண்ட மானுடக் காதலை வெளிப்படுத்துவதாக அமைகின்றது. "மத வேறுபாடுகளைக் கடந்து எல்லா மதப் பொருள்களையும் கொண்டு குறவஞ்சி எழுந்துள்ளது. உயர்குடிப் பெண்ணின் தெய்வீகக் காதலையும் குறவர் மக்களின் மானுடக் காதலையும் இணைத்துக் காட்டும்போது இரு நிலை மக்களையும் இங்கு இணைக்க முடிகிறது. இந்நெறி சமுதாயத்தில் மதத்தின் பின்னணியில் எல்லா மக்களும் மகிழ்ச்சியாகக் கூடிக் கண்டு மகிழும் வாய்ப்பினை அளிக்கிறது"[13] என்று தா. வே. வீராசாமி கூறுவது இங்கே மனங்கொளத்தக்கதாகும்.

மேலும், இரு வேறு வகுப்பினருக்கேற்ப, இருவேறு பேச்சு மொழியும் நாடகத்தில் இடம்பெறுகின்றன. தலைவி, தோழி ஆகியோர் பேசும் மொழி செம்மொழியாகவும், குறவன், குறத்தி, நுளுவன் ஆகியோர் பேசும் மொழி சேரிமொழியாகவும் அமைகின்றன. இவ்வாறு எல்லா நிலைகளிலும் குறவஞ்சி நாடகம் இருவேறுபட்ட அமைப்பைக் கொண்டு விளங்குகின்றது.

### இயைபு

பாட்டுடைத் தலைவர் பவனி பற்றிய அறிவிப்புடன் தொடங்கிய நாடகம், பாட்டுடைத் தலைவர் வாழ்த்துடன் முடிவு பெறுவது நாடகத்திற்கு ஓர் இயைபினை (Concord) ஏற்படுத்துவதாக உள்ளது.

### நாடக மாந்தர்கள்

குறவஞ்சி நாடகத்தில் இடம்பெறும் மாந்தர்கள் கட்டியக் காரன், பாட்டுடைத் தலைவர், பாட்டுடைத் தலைவி, தோழி,

குறத்தி, குறவன், கையாள் ஆகியோர் ஆவர். இங்கே அவர்களின் பண்பு நலன்களைச் சுருங்கக் காணலாம்.

### கட்டியக்காரன்

பெரும்பாலான குறவஞ்சிகளில் கட்டியக்காரன் பாட்டுடைத் தலைவர் பவனி எச்சரிக்கையைக் கூறிக்கொண்டே நாடகத்தின் தொடக்கத்தில் வருகின்றான். 'கட்டிய கொண்டை வனப்புறு சென்னியிற் கட்டழகு உருமாலை கட்டிக் கொண்டு, கச்சையிறுக்கி, தருக்குடன் மேன்மீசை முறுக்கி, நெற்றியில் சிந்துரப் பொட்டிட்டுப் பொற்பிரம்பேந்தி ஒய்யாரமாகக் கட்டியக்காரன் வந்தானே' (சர. குற., பா. 6) என அவன் வருகை கூறப்படுகின்றது.

தெருக்கூத்தில் கட்டியக்காரனே எல்லாக் கதைமாந்தர்களையும் அறிமுகப்படுத்துவான்; நகைச்சுவைப் பாத்திரமாகவும் விளங்குவான். "நாட்டார் நாடகங்களில் குறிப்பிடத்தக்க பாத்திரமாகக் கட்டியங்காரனைக் கருத வேண்டும். அவன் ஒரு மரபுவழிப் பாத்திரமாக அனைத்து நாடகங்களிலும் உரிமையுடன் நடையிடுகிறான்"[13] என்று கூறுவர். தெருக்கூத்தின் தாக்கமாக, குறவஞ்சியில் கட்டியக்காரன் படைக்கப் பட்டுள்ளான்; எனினும், குறவஞ்சியில் அவன் பங்கு நாடகம் முழுமையும் இடம்பெறாது, முதல் கதைமாந்தரை அறிமுகப் படுத்தும் அளவிலேயே அமைந்துள்ளது.

கும்பேசர் குறவஞ்சியில் வரும் கட்டியக்காரன் பாட்டுடைத் தலைவியின் வருகையைப் பின்வரும் வசனப் பகுதியால் அறிமுகப்படுத்துகின்றான்:

> "ராச ராசேசுவர ராச பரமேசுவர ராசமார்த்தாண்ட
> ராச தூத்தண்ட ஆதி கும்பேசுவரசுவாமி வெள்ளிமால் விடை—
> மேற் பவனி வைபோகங்கண்டு மையல் கொண்ட செகன்—
> மோகினியார் தேவசபைக்கு வருகிறார்; எச்சரிக்கை,
> பராக்கு பராக்கு." (ப. 11)

இவ்வசனப் பகுதி, தெருக்கூத்தில் வரும் கட்டியக்காரன் கூறும் வசனப் பகுதியை ஒத்து விளங்குகின்றது.

### பாட்டுடைத் தலைவர்

பாட்டுடைத் தலைவர் நாடகத் தொடக்கத்தில் பவனி வருகிறார்; அப்பவனிக் காட்சியுடன் நாடகத்தில் அவரது பங்கு

முடிந்துவிடுகின்றது. ஆயினும் அவரைப் பற்றிய சிறப்புச் செய்திகள் நாடகம் முழுமையும் அங்கிங்கெனாதபடி எங்கும் நீக்கமற நிறைந்துள்ளன. பாட்டுடைத் தலைவி, குறத்தி, குறவன், நூவன் முதலிய நாடகமாந்தர் பலரும் பாட்டுடைத் தலைவரின் புகழைப் பாடுபவர்களாகவே படைக்கப் பட்டுள்ளனர். எடுத்துக்காட்டாக, குற்றாலக் குறவஞ்சியில் வரும் நூவன், சிங்கனிடம், 'சிங்கியைக் காட்டிக் கொடுத்தால் கூலி என்ன கொடுப்பாய்' என வினவுமிடத்து, 'காட்டிநிற்கும் அண்டமெலாஞ் சாட்டையிலாப் பம்பரம் போல் ஆட்டுவிக்கும் குற்றாலத்தண்ணலார்' (பா. 117) என்று பாட்டுடைத் தலைவரைச் சிறப்பித்துக் கூறுவது இங்கே மனங்கொளத்தக்க தாகும்.

### பாட்டுடைத் தலைவி

வல்லி, மோகினி என முடியும் பெயரினைக் கொண்டு விளங்கும் பாட்டுடைத் தலைவி, தன் பெயருக்கேற்பப் பேரழகியாக விளங்குகிறாள். 'மாரனைக்கண்ணாலே மருட்டிச் சிங்கார மோகனப் பெண்ணாள் வசந்தவல்லி தெய்வ ரம்பை போலவே வந்தாள்' என்றும், 'திரிகூடக் கண்ணுதலைப் பார்வையால் வெல்லப் பெண்ணுக்குப் பெண் மயங்கவே வசந்தவல்லி பேடையன்னம் போலவே வந்தாள்' என்றும், 'ஒய்யாரமாக நடந்து வசந்தவல்லி ஓவியம் போலவே வந்தாள்' என்றும், 'உல்லாச மாது ரதிபோல் வசந்தவல்லி உருவசியும் நாணவே வந்தாள்' (பா. 17) என்றும் அவளது அழகு நலத்தை விதந்து கூறுகிறது குற்றாலக் குறவஞ்சி.

பாட்டுடைத் தலைவர் உலா வருவதைக் கண்டு மயங்கி, அவர்மீது மையல் கொண்டு புலம்பும் அவள் காதல் வேட்கை நூலில் சிறப்பித்துக் கூறப்படுகிறது. பெரும்பான்மையான குறவஞ்சிகளில் பாட்டுடைத் தலைவர் இறைவனாகவும், தலைவி மானிடப் பெண்ணாகவும் படைக்கப்பட்டிருப்பதன் நோக்கம், இறைவனைத் தேடும் உயிரின் நிலையைக் காட்டுவதற்கே எனலாம். இறைவனை நாடும் உயிர்—தலைவி; இறைவனைச் சேர விழையும் உயிரின் ஏக்கக்குரல்—அவளது காதல் வேட்கை. 'பற்றற்ற இறைவனைப் பற்றும் நெறிகளுள் ஒன்று குரங்கு நெறி ஆகும். தாவிப் பாயும் தாய்க் குரங்கினைக் குட்டிக் குரங்கு கட்டிப் பிடிப்பதுபோல, பற்றற்ற இறைவனை அடியவர் பற்றிப் பிடிப்பது குரங்கு நெறி எனப்படும். இந் நெறி குறவஞ்சியில் காணப்படுகிறது. குறவஞ்சியில் வரும்

பாட்டுடைத் தலைவி இறைவனைத் தானே தேடிக் கண்டு காதலிக்கின்றாள். இது உயிர், பக்குவமும் முதிர்ச்சியும் பெறும் வரைதானே இறைவனைத் தொடர்ந்து சென்று வழி பட்டு நிற்கவேண்டும் என்பதைக் காட்டும்' எனப் பிறிதொரு வகையாகவும் இதனை விளக்கிக் கூறுவர்.[14]

தலைவி உயர்குடிப் பிறப்பினள். அவள், தனக்குக் குறி கூறிய குறத்திக்கு அளிக்கும் பரிசில் அவளுடைய செல்வச் செழிப்பையும், இரக்கச் சிந்தையையும் வெளிப்படுத்தி நிற்கின்றது. 'எந்தன் வயிற்றுக்கு இத்தனை போதும் கஞ்சி வார் அம்மே' என்றும், 'பின்னமின்றிக் கூழ் எனினும் கொண்டு வா அம்மே' என்றும் (குற். குற., பா. 64: 2, 3) வேண்டி நிற்கும் குறத்திக்குப் பல்வேறு பொன்னணிகளைப் பரிசிலாகத் தருவது அவளுடைய கொடைத்தன்மையைத் தெள்ளிதின் புலப்படுத்துகின்றது.

தோழி

தலைவர்மீது கொண்ட மையல் காரணமாகத் தலைவி துயருறும்பொழுது அவளை ஆற்றுவிக்க வருகின்றாள் தோழி. 'தாங்கருஞ் சிறப்பின் தோழி' (களவியல், நூ. 24) என்று தொல்காப்பியம் கூறுவதற்கேற்ப, அவள் பண்புநலன் அமைந் துள்ளது. அவள் தலைவியிடம் தலைவரை இயற்பழித்து மொழிந்தாலும், தலைவியின் பொருட்டுத் தலைவரிடம் தூது செல்கின்றாள். கும்பேசர் குறவஞ்சியில் வரும் தோழி, தலைவியின் நிலை கண்டு இரங்கித் தானும் கும்பநாதரைத் துதித்துத் தலைவிக்கு அருள் செய்ய வேண்டுகின்றாள் (பா. 32—34). தியாகேசர் குறவஞ்சியில் வரும் தோழி, தலைவியின் துயரைத் தீர்க்கும் பொருட்டுக் குறி கூறும் குறத்தியை அழைத்து வருகின்றாள் (பா. 19). திருமலை யாண்டவர் குறவஞ்சியில் வரும் தோழி, தலைவரிடமிருந்து மாலை பெற்று வந்து தலைவியை மகிழ்விக்கின்றாள் (பா. 65). அழகர் குறவஞ்சியில் வரும் தோழி, தலைவரிடம் சென்று தலைவியின் காதலை எடுத்துரைத்து, அவர்கள் திருமணம் நடைபெற உதவுகின்றாள் (கீ. 25).

இவ்வாறு தலைவியின் இன்பத்திலும், துன்பத்திலும் இணைபிரியாமல் விளங்குகின்றாள் தோழி.

குறத்தி

குறத்தி கறுப்பில் அழகி; குறி சொல்லுவதில் தேர்ச்சி பெற்றவள்; சொல்லாடுவதில் வல்லவள்; காமச் சுருக்கில்

கைகாரி; 'வளைக்கரம் அசைய, மாத்திரைக்கோல் ஏந்தி, மணிக்கூடை தாங்கி', பாட்டுடைத் தலைவனின் தசாங்கம் பாடி வருகின்றாள் (குற். குற., பா. 49: 1—16).

'சிங்கிக்குச் சரியான பேர் இந்தச் செகத்தில் இல்லை' (பா. 103) என்று கும்பேசர் குறவஞ்சியும், 'இன்பம் ஒரு உருக் கொண்டது இவள் வடிவு என்று மனிதர்கள் கண்டு சொல்லுவர்' (பா. 66: 2) என்று சரபேந்திர பூபால குறவஞ்சியும், 'வாலைக் கிள்ளை மொழி நீலக் கள்ள விழி சாலக் கள்ளி' (பா. 59: 3) என்று தியாகேசர் குறவஞ்சியும், 'நகையு முகமும் அவள் நாணயக் கைவீச்சும் பகைவரும் திரும்பிப் பார்ப்பாரடா' (பா. 116: 4) என்று குற்றாலக் குறவஞ்சியும் குறத்தியின் எழில் நலத்தைச் சிறப்பித்துக் கூறுகின்றன. இப்பகுதிகள் சிங்கன் தன் கையாளிடம் சிங்கியின் அடையாளம் கூறும் இடத்தில் இடம் பெறுகின்றன.

சிங்கன் மட்டுமின்றி, பாட்டுடைத் தலைவியும் குறத்தியின் அழகைச் சிறப்பித்துக் கூறக் காணலாம்:

'' சந்தமுலைத் துவளும் இடைத்தவள நகைப்
பவளஇதழ்த் தையலே. '' (குற். குற., பா. 53)

என்று அவள் குறத்தியை விளிக்கும் பகுதி இவ்வகையில் கருதத்தக்கது ஆகும்.

'எக்குறியாயினும் இமைப்பினில் உரைக்கும் மைக்குறி விழிக்குறவஞ்சி' (குற். குற.. ப. 49) என்றும், 'மன்னவர்கள் மெச்சு குறவஞ்சி நானம்மே' என்றும், 'என்ன குறியாகிலும் நான் சொல்லுவேன், சதுர் ஏறுவேன், எதிர்த்த பேரை வெல்லுவேன் அம்மே' (குற். குற., பா. 64) என்றும் குறத்தி தன்னைப்பற்றிக் கூறிக் கொள்கின்றாள். இப்குதிகள் அவளது குறி கூறும் திறத்தை உணர்த்துகின்றன; மேலும், தலைவியின் உள்ளத்தில் குறத்தியைப் பற்றிய உயர்வான எண்ணம் உருவாவதற்கும் பயன்படுகின்றன.

சரபேந்திர பூபால குறவஞ்சியில் வரும் குறத்தி பன்மொழி அறிவு படைத்தவளாகவும் விளங்குகிறாள். இதனை,

'' நண்ணிடங்கொரு தெலுங்க மானினி நாசெய்சூடெனச்
சொன்னாள்
நாடிநற்குறி யோதினே னிந்த நாசிகாபரண மீந்தாள்
வண்ணமாரொரு மராடமாது மஜ ஹாத் பஹ ஆக வென்றாள்
மற்றவட்கிசை கைக்குறிக்கவள் வச்சிரத்தொடி தந்தாள்

கண்ணியிங்கொரு கன்னடப் பெண்ணன கையின நோடே
யென்றாள்
கருதவட்கிசை குறிதனக்கவள் காதினோலை யளித்தாள்
அண்ணலங்கொளோர் துலுக்கவஞ்சிமை ஹாத் தேக்கர்
பொலாங் என்றாள்
அன்ன கைக்குறி சொன்ன தற்கவள்மின்னிடார மளித்தாள்
ஒண்ணுதல்பெறு மிங்கிலீஷ்மா தொருத்தி லுக்மைஹாண்
டென்றாள்
ஓதினேனவள் பாணிரேகைகண் டுதவினாளிந்த மேகலை''
(பா. 46: 5—9)

என்று பன்னாட்டுப் பெண்களுக்குக் குறிசொல்லிப் பரிசில் பெற்ற தன் திறமையை அவள் வெளிப்படுத்துமிடத்து அறியலாம்.

குறத்தி சொல்லாடும் திறன் மிக்கவள். 'வார்த்தை விசேடங்கள் கற்ற மலைக் குறவஞ்சிக் கொடியே' (குற். குற., பா. 59) என்று பாட்டுடைத் தலைவி குறத்தியை விளிப்பதால் இதனை அறியலாம். தலைவி விரும்பிய தலைவனின் பெயரைக் கூறுமிடத்தும் அவளது சொல்லாற்றலைக் காணலாம்.

'' பெண்ணரசே பெண்ணென்றால் திரியும் ஒக்கும்ஒரு
பெண்ணுடனே சேரஎன்றால் கூடவும் ஒக்கும்
திண்ணமாக வல்லவனும் நாதனு மொக்கும் பேரைத்
திரிகூட நாதனென்று செப்பலாம் அம்மே.'' (பா. 78)

என்று குற்றாலக் குறவஞ்சியில், பாட்டுடைத் தலைவரின் பெயரை — திரிகூடநாதன் — பெண்சேரவல்லவன் எனப் — பெறவைக்கும் திறன் அவள் சொல்லாற்றலுக்குச் சிறந்த சான்றாகும்.

'சிங்கன்—சிங்கி எதிர்த்துரையாடல்' பகுதியிலும் குறவஞ்சியின் சொல்லாற்றலைக் காண முடிகின்றது. அவளுடைய பேச்சுத்திறத்தைக் கண்டு சிங்கனே வியப்படைகிறான்; 'இல்லாத சுற்றெல்லாம் எங்கேநீ படித்தாய் சிங்கி' என்று வினவுகின்றான்; 'நாட்டில் நல்லாரைக் காண்பவர்க்கு எல்லாம் வருமடா சிங்கா' (குற். குற., பா. 126 : 8) என்று அவனுக்குச் சாதுரியமாக மறுமொழி கூறுகின்றாள் சிங்கி.

'' கருதி யொருவர்பேர் நாம மெடாளே
கலவியி லொன்றரைச் சாமம் விடாளே
பரபுரு டரைக்கையி னாலே தொடாளே
பாதகி யென்னை விட்டுத் தனியே படாளே.''
(பா. 103 : 3)

எனக் கும்பேசர் குறவஞ்சியில் சிங்கன் கூற்றாக வரும் பகுதி குறத்தியின் கற்புத் திறத்தையும் காமப் பெருக்கையும் காட்டுவதாக விளங்குகின்றது.

குறவஞ்சியில் குறத்தியின் பாத்திரப் படைப்பே முதன்மையானதாக விளங்குகின்றது. பாட்டுடைத் தலைவனும், தலைவியும் கதையின் முற்பகுதியில் மட்டுமே வருகின்றனர். கதையின் இடைப்பகுதியில் வந்தாலும், குறத்தி இறுதி வரையில் நிலைத்து நிற்கிறாள். சிங்கன் வருகைப் பகுதியிலும் சிங்கன் முதலில் சிங்கியைத் தேடிக்கொண்டே வருகின்றான்; பின்னரே பறவை வேட்டையாடத் தலைப்படுகின்றான். எனினும் அவன் நினைவு முழுவதும் சிங்கியைப் பற்றியதாகவே உள்ளது. தலைவிக்குக் குறி கூறும் பகுதியில் குறத்தி, தன் மலைவளம், நாட்டுவளம், தேசவளம், கிளைவளம், நதிவளம், வாசல்வளம் முதலியனவெல்லாம் விரிவாக எடுத்துரைப்பதோடு, தன் குலத்தொழில், குடி இயல்பு, குலப்பெருமை, குலப் பழக்கவழக்கங்கள் போன்றவற்றையெல்லாம் எடுத்துக்கூறிக் குறவர் சமுதாயத்தை நம் கண்முன் நிறுத்துகிறாள். சிங்கன் வரும் பிற்பகுதியும், சிங்கன்—சிங்கி உரையாடலும் குறவன்—குறத்தியின் இன்ப வாழ்வைப் புலப்படுத்துவதாகவே அமைகின்றன. நூலின் பெரும்பகுதியில் நீக்கமற நிறைந்திருக்கும் குறத்தியின் இயல்பு குறித்தே, நூலின் பெயரும் 'குறவஞ்சி' எனச் சுட்டப்படுகின்றது.

### சிங்கன்

சிங்கன் நாடகத்தில் அறிமுகமாகும்போது, 'மிக்கான புலி கரடி கிடுகிடுஎன நடுநடுங்க வெறித்து நோக்கி, தொக்கான நடை நடந்து' (பா.82) சிங்கியைத் தேடிக்கொண்டு வருவதாகக் குற்றாலக் குறவஞ்சி குறிப்பிடுகின்றது. 'கையினில் ஈட்டி எடுத்துக் கொண்டு, காவிச்சல்லடந் தொடுத்துக் கொண்டு, மெய்யினில் வெண்ணிறு பூசிக்கொண்டு மேன்மீசை தன்னை முறுக்கிக் கொண்டு, பறவைமேல் நாட்டமோடு, இங்கிதமே தரும் சிங்கியைத் தேடி' (பா.56) வருகின்றான் சிங்கன் எனக் கூறுகிறது சரபேந்திர பூபால குறவஞ்சி. சிங்கனின் வீரத்தையும், வலிமையையும் புலப்படுத்தும் வகையில் இவ் வருணனைப் பகுதிகள் அமைந்துள்ளன.

பறவை வேட்டையில் வல்லவன் சிங்கன். கண்ணி குத்தும் முறையையும், எந்த எந்தப் பறவைக்கு எவ்வெவ்வாறு கண்ணி குத்த வேண்டும் என்பதையும் அவன் நன்கு அறிந்து வைத்திருக்

கின்றான். 'கலந்த கண்ணியை நெருக்கிக் குத்தினால் காக்கை படும்; மலர்ந்த கண்ணிய கவிழ்த்துக் குத்தினால் வக்கா படும்; உலைந்த கண்ணியை இறுக்கிக் குத்தினால் உள்ளான் படும்' (குற். குற., பா.97) என்றும், 'கண்ணியை விரித்து வைத்தால் உழைந்தோடிப் போகும் பக்கி; கண்ணியைச் சுருக்கி வைத்தால் தலை மாட்டிக் கொள்ளாது, எனவே நீடுங் கண்ணியை மிக விரியாமல் குவியாமல் நேராகக் குத்த வேண்டும்' (சர, குற., பா. 59) என்றும் வரும் பகுதிகள் பறவை வேட்டையில் அவனுக்கு இருந்த ஆழ்ந்த பயிற்சியைக் காட்டுகின்றன.

பறவை வேட்டையை விட, சிங்கியின் மீதுகொண்ட காதல் உணர்வே சிங்கன் உள்ளத்தில் மேலோங்கி நிற்கிறது. அவன், சிங்கியின் 'கிள்ளைமொழி கேட்க ஒரு கிள்ளை யானேன் இலையே' (குற். குற., பா. 98) என்று எண்ணி வருந்து கிறான்; சிங்கியை நகரத் தெருவில் கண்டபோது,

" இங்கே வாராய் என்கண்ணே இங்கே வாராய்!
ஒருக்கால் ஊடிக்கொள்ள இருக்காற் கூடிக்கொள்ள."

(குற். குற,, பா. 123 : 5)

என்று கூறுகிறான். சிங்கியைக் கண்ட அளவில் அவன் உள்ளம் மகிழ்ச்சியில் கூத்தாடுகிறது.

" ......சீராடும் சிங்கிதனைக்
கண்டாடித் துள்ளாடிக் கள்ளாடும் தும்பியைப் போற்
கொண்டாடிக் கொண்டாடிக் கூத்தாடிக் கொண்டானே."

(பா. 124)

என்று அவனது உணர்வு நிலையைப் படம் பிடித்துக் காட்டு கிறது, குற்றாலக் குறவஞ்சி. சிங்கியைத் தேடித்தரும் பொருட்டுத் தனக்குத் தெரிந்த அரிய வித்தைகளையும் மருந்து களையும் நூவனுக்குத் தெரிவிப்பதற்கும் அவன் தயங்கவில்லை. சிங்கியின்மேல் அவன் கொண்டுள்ள ஆராக் காதலையே இது காட்டுகிறது எனலாம்.

குறவஞ்சி நாட்டிய நாடகமாக நடத்தப்பெறும்பொழுது குறவன் வரும் பகுதி இடம் பெறுவதில்லை.[15] குறத்தி குறி சொல்லிப் பரிசில் பெற்றுச் செல்வதுடன் நாடகம் முடிந்து விடும். எனவே, குறவன் வரும் பகுதி தேவையில்லாத ஒன்றோ என்னும் ஐயம் இங்கே எழக்கூடும். ஆயின், குறவஞ்சி காட்டும் குறவர் வாழ்க்கையை முழுமையாகப் புரிந்து கொள்ளுவதற்குக் குறவனின் பாத்திரப் படைப்பு இன்றியமையாதது ஆகும்.[16]

நூவன்[17]

பறவை வேட்டையில் சிங்கனுக்குத் துணைபுரிய வரும் நூவன் குறவஞ்சி நாடகத்தில் நகைச்சுவை ஊட்டுபவனவாக விளங்குகிறான். 'மதப்புலிச் சிங்கன் முன்னே எலிகளைத் துரத்தும் வீரன் நூவன் வந்தான்' (குற். குற., பா. 86) என்றும், 'கடுவன் மந்திபோற் பாய்ந்து வாரிசைத்த கண்ணி கொண்டு வாய்ப்புலியன் வந்தான்' (திரு. குற., பா. 76) என்றும் அவனது வருகையைக் குறவஞ்சி நூல்கள் நகைச்சுவையோடு சித்திரிக்கின்றன.

''சிங்கன் நூவனிடம் சிங்கியைத் தேடித் தருமாறு கூறும்போது,
கொங்கணச் சிங்கி தன்னைக் கூட்டிவா காட்டுவேனே,''
(குற். குற., பா. 109)

என்றும்,

''அடிக்கொரு நினைவேன் சிங்கா ஆசைப்பேய் உனைவிடாது
செடிக்கொரு வளையம் போட்டு சிங்கியைத் தேடுவாயே.''
(குற். குற., பா, 107)

என்றும் அவன் மறுமொழியாகக் கூறும் பகுதிகள் நகைப்பை விளைவிக்கின்றன.

பொய்யாமொழியீசர் குறவஞ்சியில் சிங்கனும் அவன் தோழனாகிய குளுவனும் உரையாடும் பகுதி வசனமாக அமைந்துள்ளது. நகைச்சுவைக்குத் தக்க சான்றாக விளங்கும் அப்பகுதி வருமாறு:

'ஏழரைக் கழுதை பரிசமிட்டேனென்கிறாயே, ஏழு கழுதைதானாச்சே! அரைக் கழுதை எப்படியிருக்குமடா சிங்கா?'

'குட்டிக் கழுதை தாண்டா அடய்யே, அதுக்குப்பேரு அரைக் கழுதை யடய்யே.'

'அப்படிப் பரிசமிட்டுக் கொண்ட சிங்கியைக் காணோமெண்ணா தேடுகிறாய்?'

'ஆமுடா அய்யே'

'அவளைக் காட்டினாலென்ன தாறாயடா சிங்கா?' (பா. 81)

தலைவன்மீது கொண்ட மையலால் புலம்பும் தலைவியைத் தோழி பழித்துப் பேசுவது போல, சிங்கியைத் தேடியலையும் சிங்கனைப் பழித்துப் பேசுகிறான் குளுவன்.

''குருகின்மேற் கண்ணி குத்திக் குறத்திமே லெண்ண முற்றிப்
பருமதம் பிடித்த நீயும் பக்கிகள் பிடித்து வாழ்ந்தாய்
விருதுகள் பேசி என்னை மிகவுநீ சிரித்த தாலே
திருமலைச் சிங்கா வுன்னை சிரித்தது மதனப் பேயே.''

(பா. 64)

என்னும் அழகர் குறவஞ்சிப் பாடல் இவ்வகையில் குறிப்பிடத் தக்கதாகும்.

குறவஞ்சி நாடகத்தின் பாட்டுடைத் தலைவர் பீடும் பெருமையும் மிக்கவராக விளங்குகிறார்; பாட்டுடைத் தலைவி கவினும் காதலும் கொண்டவளாகக் காணப்படு கிறாள்; குறத்தி சொற்சாதுரியமும், செயல்திறனும் சான்ற வளாக அமைகிறாள்; குறவன் வீரமும் வலிமையும் வாய்ந்த வனாக வருகிறான்; பாட்டுடைத் தலைவிக்கு ஆறுதல் கூற ஒரு பாங்கி வருவது போல், குறவனுக்குப் பறவை வேட்டையில் துணைபுரிய ஒரு தோழன் வருகின்றான். இவ்வாறு குறவஞ்சி நாடகத்தில் வரும் மாந்தர் அனைவரும் ஒவ்வொரு வகையில் சிறப்புற்று விளங்குகின்றனர்; ஒவ்வொரு நோக்கில் [படைக்கப் பட்டுள்ளனர்.

உரையாடற் பாங்கு

குறவஞ்சியில் தலைவி—தோழி, தலைவி—குறத்தி, குற வன்—நூவன், குறவன்—குறத்தி ஆகியோரிடையே உரையாடல் நிகழ்கின்றது. இவ் வுரையாடற் பகுதிகளில் பேச்சு வழக்குச் சொற்களும், மரபுத் தொடர்களும், பழமொழிகளும், சேரி வழக்குகளும் பயின்று வருகின்றன. "இது (குறவஞ்சி) நாடகத் தமிழ் வகையைச் சேர்ந்ததாதலின் அவ்வச் சாதியார் இடம் முதலியவற்றிற்கு ஏற்பப் பேசும் முறையிற் சில சொற்களும் சொற்றொடர்களும் மரூஉ மொழிகளாகவும் இழிசனர் மொழி களாகவும் காணப்படுகின்றன,''[18] என்றும், "குறவஞ்சியைப் போன்ற நூல்களில் சேரிவழக்கு அமைவது இயல்பு''[19] என்றும் உ. வே. சாமிநாதையர் குறிப்பிடும் கருத்துக்கள் இங்கே மனங் கொள்ளத்தக்கவை.

தலைவி—தோழி உரையாடல்

தலைவி பாட்டுடைத் தலைவர்மீது மையல் கொண்டு புலம்பிக் கொண்டிருக்கின்றாள். அவ்வேளையில் அங்கு வரும் தோழி, தலைவியின் வருத்தத்திற்குக் காரணம் கேட்கிறாள்.

அந்நிலையில், அவர்கள் இருவரிடையே நிகழும் உரையாடல் வருமாறு:

தலைவி: வெள்ளி விடையில் வியாளம் புனைந்தாரைக்
கண்டு...நானும்
ஒள்ளிய ஊணும் உறக்கமும் அற்று விட்டேனே.
(குற். குற; பா. 36:5)

தோழி: துரைப்பெண்ணே வசந்த வல்லி
சொன்னபே தைமைக்கென் சொல்வேன்
நரைத்தமா டேறு வார்க்கோ
நங்கைநீ மயல்கொண் டாயே. (பா. 37)

தலைவி: ............ ...நிமலமூர்த்தி
பேரிலே பிரமை கொண்ட பெண்களிலே
நானுமொரு பெண்கண் டாயே. (பா. 39)

தோழி: ...திருக்குற்றால நிரந்தர மூர்த்தி உன்பால்
இசைந்திடக் கருமம் ஏதோ இசையநீ
இசைத்திடாயே (பா. 40)

தலைவி: ஏவரும்புகழ் திருக்குற் றாலர்தாம் சகல பேர்க்கும்
இரங்கு வார்எனக் கிரங்கிலார் பெண்ணே.
(பா. 41:3)

தோழி: என்னிலானது நான் சொன்னேன்
இனிஉன திச்சை தானே. (பா. 42)

தலைவி: தூதுநீ சொல்லி வாராய் பெண்ணே குற்றாலர்
முன்போய்த்
தூதுநீ சொல்லி வாராய்
வந்தால்இந் நேரம் வரச்சொல்லு வராதிருந்தால்
மாலையாகிலுந் தரச்சொல்லு குற்றாலநாதர்
தந்தாலென் நெஞ்சைத் தரச்சொல்லு தராதிருந்தால்
தான்பெண்ணாகிய பெண்ணை நான்விடேன்
என்று சொல்லு' (பா. 43:5)

இவ்வுரையாடற் பகுதியில் தலைவி பாட்டுடைத் தலைவரை 'வெள்ளி விடையில் வியாளம் புனைந்தார்' என்று குறிப்பிட, தோழியோ 'நரைத்த மாடு ஏறுவார்' எனக் குறிப்பிடுகிறாள்; பேச்சுவழக்கில் 'என்னால் ஆனதைச் சொல்லி விட்டேன்; இனி உன் விருப்பம்போல் நடந்து கொள்' என்று கூறுவது போல், தோழி, 'என்னிலானது சொன்னேன், இனி உனது இச்சை தானே' எனக் கூறுகிறாள்.

பாங்கியைத் தலைவரிடம் தூது அனுப்பும் நிலையில் தலைவி, வழக்கில் 'வெட்டு ஒன்று, துண்டு இரண்'டாகப் பேசுவது போல், 'வந்தால் இந்நேரம் வரச்சொல்லு, வரா விட்டால் மாலையாகிலுந் தரச்சொல்லு; தந்தால் என் நெஞ்சைத் தரச்சொல்லு, தராதிருந்தால் நான் விடேன் என்று சொல்லு' எனப் பேசுகிறாள்.

**தலைவி—குறத்தி உரையாடல்**

தலைவி தலைவனைச் சேர இயலுமா என்பதையறியக் கூடலிழைத்துப் பார்த்துக் கொண்டிருக்கும்போது குறத்தி வருகின்றாள். அவளுடைய மலைவளம், நாட்டுவளம், கிளை வளம் முதலியவற்றைக் கேட்டறிந்த பிறகு, `தனக்குக் குறி கூறுமாறு வேண்டுகிறாள் தலைவி. குறத்தி, தெய்வம் ஏறப் பெற்றுத் தலைவிக்குக் குறி சொல்லத் தொடங்குகிறாள். இந்நிலையில் இருவரிடையே நிகழும் ஓர் உரையாடற் பகுதி வருமாறு:

குறத்தி: பைந்துளவம் பூண்டஅதி சுந்தரமுள் ளோன்தனை
பார்த்தவுடன் மையல்வந்து பூத்ததென் னம்மே...
காமப்பேயல்லாது மறுபேயல்ல வம்மேகடும்
காச்சலத னாலேவந்த காச்சல் தானம்மே உண்மை.

தலைவி: வழக்குக்கோ வந்தாய்குறி வழுத்தவோ வந்தாய்ஏ—
மாறறியென்ற னையம்பலத் தேற்றவோ வந்தாய்
உழக்குக்குள் கிழக்குமேற்குக் காட்டியேய்க்
கின்றாய்இனி
யுற்றதுசொன் னாலற்றது பொருதுமே நன்றாய்

வாய்புளித்த தோமாங் காய்புளித்ததோ வென
மட்டுமரியாதையின்றி விட்டுச் சொல்கிறாய்.

கன்னி கழியாதசிறு பெண்ணெனைக் கண்டேபெரும்
காமப்பேய் பிடித்ததென் று வாய்மதங் கொண்டேமுன்
என்னவார்த்தை சொல்ல வந்தாய் சின்னக் குறத்தியவ
னிருக்குந் தலமும் பேருமு ரைப்பாயோடி.

குறத்தி: நீயறிந்தால் போலவனை நானறிந்த துண்டோஅந்த
நிலைவர மறிந்து சொல்வா ருலகினுமுண்டோ நல்ல
தாயினு முனக்குவேண்டிச் சொல்கிறேனம்மே பாடி
ஆயர்வீட்டில் வெண்ணையுண்ட மாயன்றானம்மே.

செங்கண்மா லழகனவன் பேரென்ன லுங்குளிந்தே
சித்திரம்போல் வெட்கமுற்றவள் நிற்கமகிழ்ந்தேவஞ்சி
கண்குளிர மாயவன்புயஞ் சேருவாயென்றாள் சின்னக்
கைக்குழந்தையோ உனக்கு வெட்கமே னென்றாள்.

(அழ குற , கீ. 39)

சினந்து பேசும் நிலையில் தலைவியின் கூற்றில் பழமொழி களும், பேச்சுவழக்குச் சொற்களும், மரபுத் தொடர்களும் இயல்பாக இடம்பெறுவதைக் காண்கிறோம். 'வழக்குக்கோ வந்தாய்; உழக்குக்குள் கிழக்குமேற்குக் காட்டி ஏய்க்கின்றாய்', 'வாய் புளித்ததோ மாங்காய் புளித்ததோ', மட்டு மரியாதை', 'கன்னி கழியாத சிறுபெண்', 'வாய் மதம்', 'என்ன வார்த்தை சொல்ல வந்தாய்', 'சின்னக் குறத்தி', 'உரைப்பாயோடி.' என்னும் சொல்லாட்சிகள் இவ்வகையில் குறிப்பிடத்தக்கவை.

எள்ளி நகையாடும் நிலையில் குறத்தியின் கூற்றில் மெல்லிய நகைச்சுவை இழையோடி நிற்கக் காண்கிறோம். 'காமப் பேயல்லாது மறு பேயல்ல அம்மே', 'சின்னக் கைக்குழந்தையோ உனக்கு வெட்கம் ஏன்' என வரும் தொடர்கள் இவ்வகையில் கருதத்தக்கவை ஆகும்.

சிங்கன்—குளுவன் உரையாடல்

கண்ணிக்குள்ளே வருகிற பறவைகள் குளுவனின் பேச்சுச் சத்தத்தால் கலைந்து போகின்றன என்று அவனைப் பேசா திருக்குமாறு கூறுகின்றான் சிங்கன். ஆனால் சிங்கியின் நினை வால் சிங்கனும் பறவைகளைக் கவனிக்காது விட்டுவிடுகிறான். அவ்விருவரிடையே அப்பொழுது நிகழும் ஓர் உரையாடல் வருமாறு:

சிங்கன்: கூப்பிடாதையே பொறு பொறு
கூப்பிடாதையே ஐயே...
பரந்த சிறைப்பெருங் கம்புள் வருகுது
பச்சைப் புறாவிலொரு லெச்சம் வருகுது
கருங்குயில் வருகுது நெருங்கிடுங் கவதாரி
கள்ளத் தனங்கொண்டு மெள்ளப் பதுங்குது.

(சர. குற., பா. 59:1)

குளுவன்: காவென்றுங் கீயென்றுங் குக்கூவென்றுங்
ககவென்றுங் கிகியென்றுங் கக்கேர் வென்றும்
கூவிக்கொண் டிருந்தவெல்லாஞ் சும்மா விங்கே
குந்தியிரு நாங்கள்போய் வருவோ மென்று

போவதுபா ருனைநாப்புக் காட்டி நீயிப்
போதுபக்கி பிடித்ததினிப் போது முன்றன்
ஆவியன்ன சிங்கிதனைத் தேடு சிங்கா
அண்ணல்சர போஜிதஞ்சை யணுகித் தானே.

(பா. 60)

இப்பகுதியில் 'வருகுது', 'பதுங்குது', 'லெச்சம்', 'கள்ளத் தனம்', 'குந்தியிரு,' 'நாப்புக்காட்டி', 'பக்கி' என்னும் பேச்சு வழக்குச்சொற்கள் இடம் பெற்றுள்ளன; கா, கீ, குக்கூ, கக, கிகி, கக்கோ என்னும் ஒலிக்குறிப்புச் சொற்களால் பறவைகளின் கூவுதலைக் குளுவன் குறிப்பிடுவதும், பறவைகள் இயல்பாகப் பறந்து போவதை, 'சும்மா இங்கே குந்தியிரு, நாங்கள் போய் வருவோம்' என்று அவை சிங்கனை ஏமாற்றிவிட்டுப் பறந்து போவதாகக் கூறுவதும் நகைச்சுவை அளிப்பனவாக உள்ளன.

**சிங்கன்—சிங்கி உரையாடல்**

நீண்ட நாள்களுக்குப் பின் சிங்கியைச் சந்திக்கின்றான் சிங்கன். இருவருக்குமிடையே வாக்குவாதம் நிகழ்கின்றது; இருவரும் ஒருவரையொருவர் ஏசிக் கொள்கின்றனர். அவ் ஏசலிலிருந்து ஒரு பகுதி வருமாறு:

" தனிவழி யாகநீ போன கொழுப்பேது
சங்கையில் லாமலே சிங்கி—எக்கச்
சக்கம்பே சாதேஉன் னாண்டச்சி யார்சித்தம்
சரிய மனம்போன படிபோவேன் சிங்கா
எதிர்த்துநீ பேசினத்துக் குன்னைத் தாடையில்
எட்டிநா னடித்தாலோ சிங்கி—இந்த
ஏடா கூடங்கள் பேசாதே சண்ணப் போறேன்
ஏதிந்த வார்த்தைகள் சிங்கா
சண்ணப்போ றேனென்று தாண்டித்தாண்டி வாறாய்
சாதிக் கடுக்குமோடி சிங்கி
சல்லித் தனமெல்லாம் பேசாதே போடாவுன்
சளுக்கைநா னறியனோ சிங்கா
கள்ளைக் குடித்த மயக்கமோ பேசவுங்
காரிய மேதடி சிங்கி—அந்தக்
கள்ளைக் குடிப்பதுங் காயக்கப் பேச்சும்உன்
காரண மல்லவோ சிங்கா ."

—(பொய். குற., பா. 67)

இப்பகுதியில் 'கொழுப்பு', 'சங்கை', 'எக்கச்சக்கம்', 'மனம் போனபடி', 'பேசினத்துக்கு', 'ஏடாகூடங்கள்,

'சண்ணப் போறேன்', 'வாறாய்', 'சல்லித்தனம்' 'சளுக்கு', 'காயக்கப்பேச்சு' முதலான பேச்சுவழக்குச் சொற்கள் இடம் பெற்றுள்ளன. இப்பேச்சுவழக்குச் சொற்களின் ஆட்சி, அவர் களது ஏசலுக்கு ஒரு வேகத்தையும், விறுவிறுப்பையும் அளிக் கின்றது எனலாம். ஏசல் என்பதற்கேற்ப, இப்பகுதியில் வசைச் சொற்களும் இடம் பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

குறம், குறவஞ்சி, குளுவ நாடகம்—ஒரு குறிப்பு

குறமோ, குளுவ நாடகமோ நாடகமாக நடிக்கப் பெற்ற மைக்குச் சான்று இல்லை. குமரகுருபரர் இயற்றிய மீனாட்சி யம்மை குறமே குற இலக்கிய வகையில் முதலில் தோன்றியது ஆகும். இக்குறத்தில், குறத்தி ஒருத்தியின் கூற்று மட்டுமே இடம் பெற்றுள்ளது. குறத்தி, தலைவியை முன்னிலைப் படுத்தி உரைக்கும் பாங்கினைக் கொண்டு, அவளது உடன் இருப்பினை நாம் உய்த்துணருகிறோம். 'பொதியமலைக் குறத்தி நானம்மே' (பா. 2), 'பங்கனைக் கழலங்கனைச் சொக்கலிங்கனைக் கூடி மேவுவாய் கொல்லிப் பாவையே' (பா. 4), 'தென் பொதிய மலைகாண் மற்று எங்கள் மலை அம்மே' (பா. 16). 'எங்கள் குறச்குடிக்கடுத்த இயல்பிது காண் அம்மே' (பா. 18) என வரும் பகுதிகளால் இதனை அறியலாம். இவ்வாறு மீனாட்சியம்மை குறம் ஒரு கூற்று நாடக வகையாக (Dramatic monologue) விளங்குகிறது.

மீனாட்சியம்மை குறத்திற்குப் பின்னர்த் தோன்றிய குறங்களில் தலைவியின் கூற்றும் இடம்பெறத் தொடங்கியது. இதனால் ஒரு கூற்று நாடகம் என்னும் நிலை போய், இருவர் உரையாடும் பாங்கு குற இலக்கியத்தில் வந்து சேர்ந்தது. மகிழ்மாறன் பவனிக்குறம், துரோபதை குறம், மின்னொளி யாள் குறம், தர்மாம்பாள் குறம், வேதாந்தக் குறம், அகண்ட வெளிக் குறம், குறமாது முதலிய குறங்கள் இவ்வகையில் குறிப்பிடத்தக்கவை.

குற இலக்கிய வகையில் காணப்படும் இவ்வளர்ச்சி நிலை கிரேக்கத் துன்பியல் நாடக வளர்ச்சி நிலையினை ஒத்துக் காணப்படுகிறது எனலாம். கிரேக்க மொழியில் 'நாடகத் தந்தை' என்றழைக்கப்படும் தெஸ்பிஸ் (Thespis) ஒருவரே நடிக்கும் நாடக வகையைத் தோற்றுவித்தார். இந்நாடக வகையில் குழுப்பாடல்கள் மிகுதியாக இடம்பெற்றிருந்தன. தெஸ்பிஸுக்குப் பின்னர் வந்த ஏஸ்கிலஸ் (Aeschylus), குழுப் பாடல்களைக் குறைத்து இரண்டு கதைமாந்தரை நடிக்க

வைத்தார். சோபாகிளிஸ் (Sophocles) மூன்று கதைமாந்தரை நடிக்க வைத்தார். அவ்வாறே படிப்படியாகக் குழுப்பாடல்கள் குறைந்து வசனப் பகுதிகள் மிகுந்து இன்றைய வசன நாடகம் உருவாயிற்று.[20] கிரேக்க மொழி நாடகங்களில் வசனப் பகுதிகள் மெல்ல நுழைந்தது போலவே, குறவஞ்சி நாடகங்களிலும் ஒரு செயற்பாட்டிற்கும், மற்றொரு செயற்பாட்டிற்கும் இடையே இணைப்புப்போல் விளங்குகின்ற வசனப் பகுதிகள் இடம்பெறலாயின. கும்பேசர் குறவஞ்சி, சரபேந்திர பூபால குறவஞ்சி, திருமலையாண்டவர் குறவஞ்சி, பொய்யா மொழியீசர் குறவஞ்சி, ஓதாளர் குறவஞ்சி, சிதம்பரக் குறவஞ்சி முதலிய குறவஞ்சி நாடகங்கள் இவ்வகையில் குறிப்பிடத்தக்கவை.

குறவஞ்சி நாடகமாக நடிக்கப்பெறும்பொழுது அதில் சிங்கன் வரும் பிற்பகுதி இடம்பெறுவதில்லை. எனவே, குறவஞ்சியின் பிற்பகுதியை ஒத்து விளங்கும் குளுவ நாடகமும், நாடகமாக நடிக்கப்பெறாமையில் வியப்பில்லை எனலாம்.

## குறிப்புக்கள்

1. கலைக்களஞ்சியம், தொகுதி—6, ப. 358.
2. Buckner B. Trawick, World Literature, p. 60, 154, 175.
3. கலைக்களஞ்சியம், தொகுதி—6, ப. 352.
4. A. V. Subramania Aiyar, 'The Thirukkurralakkuravanji', Tamil Studies, First series, p.40.
5. உ. வே. சாமிநாதையர், ஸ்ரீ சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தங்கள், 'குறவஞ்சி நாடக நூன்முகம்', ப. 280.
6. வே. பிரேமலதா (பதிப்.), தியாகேசர் குறவஞ்சி, முன்னுரை, பக். 33—34.
7. மு. அருணாசலம் (பதிப்.), முக்கூடற்பள்ளு, 'முக்கூடற் பள்ளு ஆராய்ச்சி', ப. 45.
8. ......................, பொய்யாமொழியீசர் குறவஞ்சி, முன்னுரை, ப. 16.

9. அ. இராசகோட்டியப்பன், 'திருக்குற்றாலக் குறவஞ்சி', சிற்றிலக்கியச் சொற்பொழிவுகள் மூன்றாவது மாநாடு, பக். 216—17.

10. அ. திருமலை முத்துசுவாமி, 'குறவஞ்சிப் புலவர்', இலக்கிய மலர்கள், பக். 19—21.

11. பாட்டுடைத் தலைவர் பவனி நூலின் தொடக்கத்தில் இடம்பெறாத கும்பேசர் குறவஞ்சியில் பாட்டுடைத் தலைவியை அறிமுகப்படுத்துகின்றான் கட்டியக்காரன்; சரபேந்திர பூபால குறவஞ்சியில், குறவஞ்சித் தமிழைக் காக்க, கணபதி தோன்றுவதைச் சபை யோர்க்கு அறிவிக்கின்றான்.

12. தா. வே. வீராசாமி, தமிழ் நாடக வரலாற்றில் பாரதிதாசன், ப. 31.

13. ஏ. என். பெருமாள், தமிழ் நாடகம் — ஓர் ஆய்வு, ப. 285.

14. ந. சேதுரகுநாதன் 10. 2. 1974—ல் நிகழ்த்திய வானொலிச் சொற்பொழிவிலிருந்து இப்பகுதி எடுக்கப்பட்டுள்ளது.

15. திருக்குற்றாலக் குறவஞ்சி, அழகர் குறவஞ்சி முதலிய சில குறவஞ்சி நாடகங்களை அரங்கேற்றிய திருமதி கமலா அவர்களுடன் ஆய்வாளர் கலந்துரையாடிய போது கிடைத்த தகவல். அடையாறு கலாக்ஷேத்திர நாடக முறைப்படியும் திருக்குற்றாலக் குறவஞ்சியில் அதன் பிற்பகுதி இடம்பெறவில்லை என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

16. குறவஞ்சி காட்டும் குறவர் வாழ்க்கை, 'வாழ்வியல் செய்திகள்' என்னும் இயலில் விரிவாக ஆராயப் பட்டுள்ளது. (பக். 234—265)

17. சிங்கனின் கையாளாக வருபவன் நூவன், குளுவன், சின்னான், புலியன் எனப் பல்வேறு பெயர்களால் அழைக்கப்படுகிறான்.

18. உ. வே. சாமிநாதையர் (பதிப்.), ஸ்ரீ சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தங்கள், 'குறவஞ்சி நாடக நூன்முகம்'' ப. 280.

19. ..............., திருமலையாண்டவர் குறவஞ்சி, முகவுரை, ப. iii.

20. 'About the middle of the sixth century B.C., Thespis of Athens, 'the father of drama' introduced an answerer (hypocrites) or actor who addressed spoken bits to the chorus during interludes in the lyrical parts of the performance. When these bits were expanded and when new mythological elements were added, drama was born. Later Aeschylus added a second actor, and still later Sophocles added a third. From the early days of the tragedy through the time of Euripides, the importance of the chorus decreased as the parts played by the actors increased and the chorus was reduced in number from fifty in the days of Theyspis to a total ranging 12 to 15 under Aeschylus; under Sophocles the number was fixed at 15.'
—Buckner B. Trawick, World Literature, p. 60.

# 6. நாட்டுப்புறக் கூறுகள்

"எந்த இலக்கியத்திலும் வாய்மொழி இலக்கியப் பண்பு என்பதுண்டு. சில இலக்கியங்களில் அப்பண்பு வெளிப்படையாக மிக்கூர்ந்து தெரியும்; மற்றும் சிலவற்றில் மறைமுகமாக இருக்கும்"[1] என்பர் அறிஞர். இக்கூற்றிற்கு இணங்க, குறம், குறவஞ்சி, குளுவ நாடகம் ஆகியவற்றில் வாய்மொழி இலக்கியப் பண்புகள் எனப்படும் நாட்டுப்புறக் கூறுகள் மிக்கூர்ந்து காணப்படுகின்றன. இவ்வியல் அவற்றை ஆராய்வதாக அமைகின்றது.

'சிங்கா', 'சிங்கி' என்று ஒருவரையொருவர் அழைத்து, ஆடிக்கொண்டே பாடும் குறவன்—குறத்திப் பாட்டுக்கள் இன்றும் நம் கிராமங்களில் திருவிழாக்களின்போது ஆடப் பெற்று வருகின்றன. அன்றும் ஆடப்பெற்று வந்தன. குறத்தி தெருவில் பாட்டுப் பாடிக்கொண்டேசென்று குறி சொல்வது என்பது இந்நாட்டில் நெடுங்காலமாக வழக்கிலிருந்து வந்துள்ளது. குறம், குறவஞ்சி இலக்கியங்கள் தோன்றுவதற்கு இப்பாடல்கள் அடிப்படைக் காரணமாக விளங்கின எனில் மிகையாகாது.

சில கதைப்பாடல்கள் புராண, இதிகாசக் கதைமாந்தர் களைத் தலைமக்களாகக் கொண்டு விளங்குகின்றன. குற இலக்கிய வகைகளுள் துரோபதை குறம், மின்னொளியாள் குறம், வித்துவான் குறம் ஆகியன இவ்வகையில் குறிப்பிடத் தக்கவை ஆகும். இக்குறவகைகளை நாட்டுப்புறக் கதைப் பாடல்கள் என்று குறிப்பிடுவர் அறிஞர்.[2] துரோபதை குறம், பாண்டவர் வனவாசம் மேற்கொண்டிருக்கையில் நாட்டின் நடப்புகளை அறிந்து கொள்வதற்காகத் துரோபதை, குறத்தி வடிவமேற்றுச் சென்றதைக் கூறும் கதைப் பாடலாகும். மின்னொளியாள் குறம், அருச்சுனன் மனைவியர் எழுவருள்

ஒருத்தியான மின்னொளியாளின் செய்கையால் கோபமுற்று அவளை நாடாதிருக்கும் அருச்சுனனை, துரோபதையும் அல்லியும் குறத்தி வேடம் அணிவித்து அவள்பால் அனுப்பு வதைக் கூறுவதாகும். வித்துவான் குறம், தன்னை இழிவு படுத்திய அருச்சுனனை, அல்லி கற்றறிந்த ஒரு வித்துவானைப் போல வேடமணிந்து சென்று கூத்தாடி இழிவுபடுத்தும் வகையில் அமைந்ததாகும்.[3]

திரும்பத் திரும்ப வருதல், இசைப்பாங்கு, சுட்டி ஒருவர்ப் பெயர் கொளப் பெறா மரபு, புராணமரபுச் செய்திகள் (தொன்மை, பழமொழி ஆட்சி, விடுகதைப் பாங்கு, யாப்பு, வடிவ ஒற்றுமை, பேச்சுவழக்குச் சொற்கள், நாட்டுப்புற நம்பிக்கைகளும் சடங்குகளும் ஆகியவற்றை நாட்டுப்பாடற் கூறுகளாகக் குறிப்பிடலாம்.

திரும்பத் திரும்ப வருதல் (Repetition)

"மரபுத் தொடர்களும், கருத்துக்களும் மீண்டும் மீண்டும் வருதல் வாய்மொழி இலக்கியத்தின் முக்கியமான பண்புகளில் ஒன்று. அதாவது திரும்பக் கூறல் உலகெங்கிலும் வாய்மொழி யிலக்கியத்தின் இன்றியமையாத கூறாகக் கொள்ளப்படுகிறது"[4] என்பர் க. கைலாசபதி. குறம், குறவஞ்சி, குளுவ நாடகம் ஆகிய இலக்கியங்களில் சொற்கள், பெயர்த்தொடர்கள், தொடர்கள், கருத்துக்கள் ஆகியன திரும்பத் திரும்ப வருகின்றன.

சொற்கள்

குறம், குறவஞ்சி ஆகிய இரு இலக்கியங்களிலும் 'அம்மே' என்னும் சொல் திரும்பத் திரும்ப வரும் ஒரு பொதுச் சொல்லாகக் காணப்படுகின்றது. அவ்வாறே, குறவஞ்சி, குளுவ நாடகம் ஆகிய இரு இலக்கியங்களிலும் 'சிங்கா', 'சிங்கி', 'குளுவா', 'ஐயே' என்னும் சொற்கள் திரும்பத் திரும்ப வரும் பொதுச் சொற்களாக அமைகின்றன. இவை தவிர, பெயர்ச் சொற்கள், வினைச் சொற்கள் ஆகியன ஒவ்வொரு வரியின் இறுதியிலும் திரும்பத் திரும்ப வரும் பாங்கினையும் காண முடிகின்றது.

"மாத மூன்று மழையுள்ள நாடு
வருட மூன்று விளைவுள்ள நாடு
வேத மூன்றும் பலாஉள்ள நாடு
விசேட மூன்றுங் குலாவுள்ள நாடு

போத மூன்று நலஞ்செய்யும் நாடு
புவன மூன்றும் வலஞ்செய்யும் நாடு
நாத மூன்றுரு வானகுற் றால
நாதர் ஆரிய நாடெங்கள் நாடே." (பா. 56:7)

என்று குற்றாலக் குறவஞ்சியில் குறத்தி நாட்டுவளம் கூறும் பகுதியில், நாடு என்னும் பெயர்ச்சொல் ஒவ்வோர் அடியிலும் பயின்று வருவதைக் காணலாம்.

பெயர்ச் சொற்கள் திரும்பத் திரும்ப வரும்பொழுது பெரும்பான்மையும் அவை விளிச்சொல்லாக அமையும் பாங்கினையும் காண முடிகின்றது. எடுத்துக்காட்டாக, தலைவி, தலைவன்மீது மையலுற்று வெண்ணிலா, தென்றல் ஆகியவற்றையும், மன்மதனையும் நோக்கிப் புலம்பும் பகுதியைக் குறிப்பிடலாம் :

"தண்ணமுதுடன் பிறந்தாய் வெண்ணி லாவே அந்தத்
தண்ணளியை ஏன்மறந்தாய் வெண்ணி லாவே
பெண்ணுடன் பிறந்த துண்டே வெண்ணி லாவே என்றன்
பெண்மை கண்டுங் காயலாமோ வெண்ணிலாவே."
(குற். குற., பா. 32:1)

"தென்மலை தனில்வாழும் தென்றலே -உன்றன்
நன்மனை நான்தானோ தென்றலே
அலர்தளிர் களிலுறையும் தென்றலே—நீயும்
சிலர்பாவம் கொள்வ தென்னே தென்றலே
தாமரை மேலுலவு தென்றலே—நீயும்
காமனுக் கேதுறவு தென்றலே." (நவ. குற., பா. 18)

"இரதி மன்மதனே—திருமகள்
ஈன்ற மன்மதனே—வசந்தன்றேர்
ஏறு மன்மதனே—கருப்புவில்
ஏந்து மன்மதனே." (திரு. குற., பா. 25:1)

குறத்தி, தலைவிக்கு மலைவளம், நாட்டுவளம், கிளைவளம் முதலியனவற்றையும், தன் குறித் திறனையும் புலப்படுத்துமிடத்தில் 'அம்மே' என்னும் விளிச்சொல் பயின்று வருகின்றது. குறவன் குளுவனை அழைத்துக் கண்ணி குத்தச் சொல்லுமிடத்தில் 'குளுவா' என்னும் விளிச்சொல் பயின்று வருகின்றது. சிங்கனும் சிங்கியும் தம்முள் எதிர்த்துரையாடும் பகுதியில் 'சிங்கி', 'சிங்கா' என்னும் பொதுச் சொற்கள் திரும்பத் திரும்ப வருகின்றன.

"ஆருவா கனர்வந்தார்
　　　அம்பிகை தனயர் வந்தார்
பாகசா தனன்போற்றும்
　　　பாதபங் கயர் வந்தார்
வாமன ரூபர் வந்தார்
　　　மகேசுவர புத்ரர் வந்தார்
சோமசே கரர் வந்தார்
　　　சூர்ப்ப கர்ணர் வந்தார்
ஐந்து கரத்தர் வந்தார்
　　　ஆனைமா முகத்தர் வந்தார்
தொந்தி வயிற்றர் வந்தார்
　　　தொழுமொற்றைக் கொம்பர் வந்தார். " (பா. 8:1—3)

எனச் சரபேந்திர பூபால குறவஞ்சி நாடகத்தில் கணபதி வருகையைக் கூறுவதாக வரும் பகுதியில் 'வந்தார்' என்னும் வினைச்சொல் திரும்பத் திரும்ப வந்துள்ளது.

பெயர்த் தொடர்கள்

துரோபதை குறம், மின்னொளியாள் குறம், வித்துவான் குறம் போன்றவற்றில் கதைமாந்தர்கள் ஒரே வகையான அடைமொழிகளால்— பெயர்த் தொடர்களால்— குறிப்பிடப் படுகின்றனர். காட்டாக, 'தோறா வடிவழகி துரோபதை யாள்' என்னும் தொடர், துரோபதை குறத்தில் ஐந்து முறையும், மின்னொளியாள் குறத்தில் 18 முறையும் கையாளப் பட்டுள்ளது. அருச்சுனனின் மனைவியருள் ஒருத்தியான அல்லியைக் குறிப்பிடும் 'பிறவா முடிதரித்த பெண் பெருமாள்' என்னும் தொடர் மின்னொளியாள் குறத்தில் ஏழு முறை இடம் பெற்றுள்ளது. அவனது மற்றொரு மனைவியான மின்னொளியாளைக் குறிக்கும் 'விளங்கிய சீர் மாதவத்து மின்னொளியாள்' என்னும் தொடர் மின்னொளியாள் குறத்தில் பதினான்கு முறை கையாளப்பட்டுள்ளது. துரியோதனன் மனைவியாகிய பெருந்திருவாளைக் குறிக்கும் 'பேடை மயிற்கண்ணாள் பெருந்திருவாள்' என்னும் தொடர் துரோபதை குறத்தில் பத்தொன்பது முறை பயன்படுத்தப் பட்டுள்ளது. தாதியரைச் சுட்டும் 'தாமக் கருங்குழலாள் தாதி' என்னும் தொடர் மின்னொளியாள் குறத்தில் மூன்று முறையும், துரோபதை குறத்தில் இருமுறையும் எடுத்தாளப் பட்டுள்ளது.

ஒரே அடைமொழி, இரண்டு மூன்று கதைமாந்தரைக் குறிப்பிடும் வகையில் அமைந்துள்ள பாங்கினையும் இக்குறங் களில் காணமுடிகின்றது.

" ஐவருட தேவி ஆரணங்கு துரோபதையாள்."
(து. குறம், ப. 58:25)

" ஆரணங்கு குறத்தியரை அடையும் கிடங்கிலென்றான்."
(ப. 58:5)

" ஆரணங்கை யெந்தனுக்கு அருளுமென்று கேட்டான்."
(ப. 50:16)

என்னும் பகுதிகளில் வரும் 'ஆரணங்கு, என்னும் சொல் மூன்று கதை மாந்தர்களை முறையே துரோபதை, குறத்தி, காந்தாரி ஆகியோரைக் குறிப்பதாக அமைந்துள்ளது.

தொடர்கள், கருத்துக்கள் திரும்பத் திரும்ப வருதல்

'திரும்ப வரல் பண்பை (1) தொடர்ச்சியானது (Continuous), (2) இடையீடுபட்டது (Discontinuous) என இரண்டு வகையாகப் பிரிக்கலாம்'[5] என்பர்.

தொடர்ச்சியான திரும்ப வரல் (Continuous Repetition) ஒரே கருத்து இரண்டு வரிகளில் வருமிடத்து இடம்பெறுகின்றது எனலாம். துரோபதை குறத்தில், பாண்டவர் வனவாசம் மேற்கொண்டு காட்டில் வாழ்ந்து வருகின்றனர். அப்பொழுது, துரோபதை, தான் குறத்தி வேடமணிந்து சென்று நாட்டின் நிலைமையை அறிந்து வருவதாகக் கூறுகின்றாள். அவ்வேளை யில், பாண்டவர்கள் துரோபதையிடம் 'கௌரவர்களிடம் அகப் பட்டால் நீ என்ன செய்வாய்' என்று வினவ, அவள் 'மாய வனான கண்ணன் தன்னைக் காத்திடு'வார் என்று விடையிறுக் கின்றாள்:

" மன்னர்சபை நடுவே மாளாத் துகிலளித்த
மாளாத் துகிலளித்த மாயர்வந்து காத்திடுவார்
ஆலிலைமேல் பள்ளிகொண்ட ஆயர்வந்து
காத்திடுவார்." (ப. 13)

இப்பகுதியில், 'மாளாத் துகிலளித்த' என்னும் தொடர் முதல் வரியின் ஈற்றிலும், இரண்டாம் வரியின் தொடக்கத்திலும் வந்திருப்பதனைத் தொடர்ச்சியான திரும்ப வரல் என்று கூறலாம். 'மாயர் வந்து காத்திடுவார்', 'ஆயர்வந்து காத்திடு வார்' என்று கருத்துத் திரும்பவரலும் இதில் அமைந்துள்ளது.

இந்திரன் (அருச்சுனனது மைந்தர்களில் ஒருவன்) குறத்தியை நோக்கி விடுத்த அம்புகளைப் பற்றிக் கூறுமிடத்தும், இத்தகைய கருத்துத் திரும்பவரல் இடம் பெற்றுள்ளது:

" ஐப்பசி மாதத்திலே அடர்மழை வந்ததுபோல்
கார்த்திகை மாதத்திலே கனத்தமழை வந்ததுபோல்."

(மின். குறம், ப. 51)

தர்மாம்பாள் குறத்தில், பஞ்சநதீசர், குறத்தியாக வடிவெடுத்து வந்திருக்கும் பார்வதி தேவியைக் கண்டு அவள்மீது காதல் கொள்ளும் பகுதியிலும், பார்வதி குறத்தி வடிவெடுத்துச் சென்றிருப்பதையறியாமல் ஈசன் அவளைத் தேடிப் புலம்பும் பகுதியிலும் இத்தகைய கருத்துத் திரும்ப வரல் இடம் பெற்றுள்ளது:

" மன்மதனை யெரித்தசிவன் மயங்கியேதன் மனதிற்குள்ளே
காமனைநீறா யெரித்தசிவன் கலங்கியேதன் மனதிற்குள்ளே
அந்தக்குறத்தி வடிவைக்கண்டு ஆசையுடன் மோகங்
கொண்டார்." (ப. 8: 24-25)

" சித்தி விநாயகா சங்கரி யாளைக் காணோமே என்ன
செய்வேன்
சுந்தரி தேவியைக் காணா விட்டால்நான் சீவனிழப்பேன்
என்றார்
சிவ சுப்ரமண்யா உன்னுட அன்னையைக் காணோமே என்ன
செய்வேன்
அம்பிகை யாளைநான் கண்ணீற் காணாவிட்டால்
ஆவியிழந்திடுவேன்." (ப. 16: 10-11)

இரண்டாவது வகையான இடையீடுபட்ட தொடர்ந்து வரல் குறம், குறவஞ்சி இலக்கியங்களில் பெரும்பான்மையும் இடம் பெற்றுள்ளது. பொய்யாமொழியீசர் குறவஞ்சியில்,

" மருமே விதழிச் சடையார்—பொய்யாத ஈசர்
வாற பவனி நாடியே
முருகலர் அளக பின்ன—வால கோகில
மோகன மாது தோன்றினாள்
மத்த கெசவுரி யினார்—பொய்யாத ஈசர்
வாற பவனி நாடியே
முத்தை நிகரும் நகையாள்—வால கோகில
மோகன மாது தோன்றினாள்

மந்திர சொருப காரணர்—பொய்யாத ஈசர்
வாற பவனி நாடியே
முந்தும் அன்னமென் நடையாள்—வால கோகில
மோகன மாது தோன்றினாள்
மதியா மாரனை முனிவோர்—பொய்யாத ஈசர்
வாற பவனி நாடியே
முதிரும் மின்னலின் இடையாள்—வால கோகில
மோகன மாது தோன்றினாள்.'' (பா. 12)

என்று தலைவியின் வருகையைக் குறிப்பிடும் பகுதியில், 'பொய்யாத ஈசர் வாற பவனி நாடியே' என்னும் தொடரும், 'மோகன மாது தோன்றினாள்' என்னும் தொடரும் திரும்பத் திரும்ப வந்துள்ளன.

குறத்தி தன் நாட்டுவளம், மலைவளம் முதலியன கூறும் பகுதியில், இறுதி அடி பொருள் மாறுபடாது ஓரிரு சொற்கள் மட்டும் மாறி வருவதாக அமைந்துள்ளது. பாம்பண காங்கேயன் குறவஞ்சியில்,

'காங்கேயன் பூந்துறை நாடே'
'கீழ்கரைப் பூந்துறை நாடே'
'பூந்துறை நாடெங்கள் நாடே.' (ப.70)

என வரும் தொடர்களை இவ்வகையில் சுட்டலாம். இவ்வாறே குறவன் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டு வருமிடத்து, தன் வலிமையைப் புலப்படுத்திக்கொண்டே,

'' குருவிகள் படுக்கும் குளுவனும் நானே
பறவைகள் படுக்கும் குறவனும் நானே
பறவைகள் படுக்கும் குளுவனும் நானே.''
(குற். குற., பா. 85)

என்று வரும் பகுதியும் மேற்கூறிய தொடர்ந்து வரலுக்கு எடுத்துக்காட்டாகும்.

துரோபதை குறம், மின்னொளியாள் குறம் முதலியவற்றில் சில கருத்துக்களும் உவமைகளும் நூல் முழுமையும் ஒரே மாதிரியாக இடம்பெற்றுள்ளன. எடுத்துக்காட்டாக, விருந்தினர்க்கு வெற்றிலை, பாக்கு அளிக்கும் நிகழ்ச்சியைக் குறிப்பிடும் இடங்களில் எல்லாம்,

'' காச்சாக் களிப்பாக்கும் கம்மாறு வெற்றிலையும்
மோரங்கி பாக்கும் முத்துசுட்ட சுண்ணாம்பும்.''
(மின். குறம், பக். 12, 23)

என்னும் வரிகள் மாறாமல் இடம்பெற்றுள்ளன. அவ்வாறே, கதைத் தலைவனோ, தலைவியோ வருவதைக் குறிப்பிடு மிடத்து,

" முத்து மிதியடியைத் தொட்டுமிக நடந்து
பவள மிதியடியைப் பதித்துமிக நடந்து."
(மின். குறம், ப. 11; வித். குறம், பக். 4, 18)

என்னும் வரிகள் பயின்று வந்துள்ளன. கதைத் தலைவனுக்குச் சூரியனையோ சந்திரனையோ ஒப்பிட்டுக் கூறும் பகுதியும் நூல் முழுமையும் ஒரே மாதிரியாக அமைந்துள்ளது:

" இருளடைந்த சாலையிலே எழுந்திருந்த சூரியன்போல்."
(மின். குறம். பக். 18, 23, 46)

" குன்றின்மேல் சந்திரன் குதித்தெழுந்த பாவனைபோல்."
(மின். குறம். பக். 23, 46)

"இளங்குறத்திதனைப் போல இடைதுவள நகைத்தாள்" என்னும் தொடர் மின்னொளியாள் குறத்தில் பத்து இடங்களில் இடம்பெற்றுள்ளது. 'நகைத்தாள்' என்னும் சொல்லுக்குப் பதிலாக 'நடந்தாள்' என்னும் சொல் மூன்று இடங்களில் கையாளப்பெற்றுள்ளது.

### இசைப் பாங்கு (Rhythm)

குறவஞ்சி இசை நாட்டியமாக நடிக்கப்பெறும் சிறப்பு மிக்கது. நாட்டியத்திற்கேற்ற வகையில்—இசைப்பாடலுக் கேற்ற வகையில் — கீர்த்தனங்களும் சிந்துப் பாக்களும் குறவஞ்சியில் நிறைந்து விளங்குகின்றன. பாடி ஆடுவதற்கேற்ற வகையில், தாழிசை போன்ற அமைப்பில் வரும் கீர்த்தனங்கள் இசைப்பாங்கு பெற்றுத்திகழ்வதோடு, நாட்டுப்புறப் பாடல் களையும் நினைவூட்டுவனவாக உள்ளன.

" வால சந்திரனே யெவர்க்கும்
வஞ்சனை யாகாதுகண்டாய் வெண்ணிலாவே—வீணே
காலம்போம் வார்த்தைகள் நிற்கும்
கண்டகருமம் நான்சொன்னேன் வெண்ணிலாவே
சோலி செய்ய வேணுமென்று
துணிந்து விண்ணிலெழுந்து வந்தாய் வெண்ணிலாவே
— காக்கும்
வேலியே பயிரழித்தால்
விளையும்வா றெப்படி சொல்வாய் வெண்ணிலாவே

தெளியாத கலக்கமாகச்
செந்தழலை வீசலாமோ வெண்ணிலாவே—பாரில்
எளியாரை வலியார் கேட்டால்
வலியாரைத் தெய்வம் கேளாதோ வெண்ணிலாவே
சிலை மதன் தனையெரித்த தியாகரென்னைச்
சேரக் காண்பாய் வெண்ணிலாவே—நாளைத்
தலைபிடித்த பின்பல்லோ
தாழக்குனிவாய் நான்சொன்னேன் வெண்ணிலாவே.''
(தியா. குற., பா. 10)

இவ்வாறு ஒருபொருள் மேல் மூன்று அல்லது நான்கு கண்ணிகள் அடுக்கி வரும் பாங்கு, ஒரு பொருள் மேல் மூன்று அடுக்கி வரும் கலித்தாழிசைகளை ஒத்துள்ளது.

குறவஞ்சி இலக்கியத்தின் மற்றொரு சிறப்பு அதன் ஓசை நயம் ஆகும். நாற்று நடும்போதும், சுண்ணம் இடிக்கும் போதும், ஏற்றம் இறைக்கும் போதும் நாட்டுப்புற மக்கள் தாம் ஈடுபடும் வேலைக்கேற்ற சந்தநயம் அமைந்த பாடல் களைப் பாடுவதைக் காண்கின்றோம். அதைப்போன்றே, குறவஞ்சியில் பாட்டுடைத் தலைவி பந்தடித்தும், கும்மி யடித்தும், ஊஞ்சலாடியும், மலர் பறித்தும் தோழியருடன் விளையாடுவதை வருணிக்கும் ஆசிரியர், அவ்வவ் விளை யாட்டிற்கேற்ற ஓசைநயம் பொருந்திய பாடல்களைப் புனைந்துள்ளார்.

'' செங்கையில் வண்டு கலின் கலின் என்று செயஞ்செயம்
என்றாட இடை
சங்கதம் என்று சிலம்பு புலம்பொடு தண்டை
கலந்தாட இரு
கொங்கை கொடும்பகை வென்றனம் என்று குழைந்து
குழைந்தாட மலர்ப்
பைங்கொடி நங்கை வசந்த சவுந்தரி
பந்து பயின்றனளே.
இந்திரை யோஇவள் சுந்தரி யோதெய்வ ரம்பையோ
மோகினியோ மன
முந்திய தோவிழி முந்திய தோகர முந்திய
தோவெனவே உயர்
சந்திர சூடர் குறும்பல ஈசுரர் சங்கணி
வீதியிலே மணிப்
பைந்தொடி நாரி வசந்தஒய் யாரிபொற்
பந்துகொண் டாடினளே.''
(குற். குற., பா. 20; 1, 4)

என வரும் பாடல்கள் ஓசைநயம் மிகுந்து, தலைவி பந்தடித்து விளையாடும் அழகிய காட்சியை நம் மனக்கண் முன்னே கொண்டுவந்து நிறுத்துகின்றன.

தியாகேசர் குறவஞ்சியில் பாட்டுடைத் தலைவியான ராஜமோகினி, சகியிடம் தன் மனவருத்தத்தைச் சொல்லு வதாக வரும் பகுதியும் இங்கே குறிப்பிடத்தக்கதாகும். அப்பகுதி வருமாறு:

"மாலைப் பொழுதும் வந்துதேயென்—கையிலிட்ட
வளையுங் கழன்று சிந்துதே
ஆலைச்சிலை வளைப்பானே—மதனனென்தன்
அங்கமெலாம் துளைப்பானே
கோடைக் குயிலுங் கூவுதே—சகியேயெந்தன்
கொங்கை பசலை மேவுதே
வாடைப் புலிதான் கொல்லுமே—தூதுநடந்த
வண்டுதான் என்ன சொல்லுமோ
என்னால் படத்தான் தள்ளுமோ—நான் கொண்டவிரகம்
இத்தனை சிங்கி கொள்ளுமோ
முன்னால் விதித்த விதியோ—பவனிகண்டு
மோகித்த தேழை மதியோ
அய்யோ விதென்ன தொல்லையோ—உன்னை அல்லாம
லாதர வாருமில்லையே
பொய்யாசை கொண்டதல்லடி—தியாகேசருக்குப்
பொருந்தத் தெரியச் சொல்லடி." (பா. 18)

இவ்வாறு குறவஞ்சியில் வரும் பெரும்பான்மையான பாடல்கள் எளிமையாகவும் நாட்டுப்புறப் பாடல்களுக்கே உரித்தான இசைப்பாங்குடனும் காணப்படுகின்றன.[6] "குறவஞ்சி நாடகத்தில் வரும் தருக்களும் (தரு—பல்லவி, அனுபல்லவி, சரணம் என்னும் உறுப்புக்களோடு அமைந்த கீர்த்தனம்), சிந்துப் பாட்டுகளும் இசைப்பாட்டுகள். இவை நிறுத்திப் பாடுவதற்கென்றே ஏற்பட்டவை"[7] என மு. அருணா சலம், பொய்யாமொழியீசர் குறவஞ்சியின் முன்னுரையில் குறிப்பிடுவதும் இங்குக் கருதத்தக்கது.

சுட்டி ஒருவர்ப் பெயர் கொளப் பெறா மரபு

"மக்கள் நுதலிய அகன்ஐந் திணையும்
சுட்டி ஒருவர்ப் பெயர்கொளப் பெறாஅர்."
(தொல். அகத், நூ. 57)

என்பது தொல்காப்பியம் கூறும் அகத்திணை மரபு. சங்க அக இலக்கியங்களில் வரும் மாந்தர்கள் தலைவன், தலைவி, தோழி, பாங்கன் என்று பொதுவான பெயர்களாலேயே அழைக்கப்பட்டுள்ளனர்; இயற்பெயர்களால் அவர்களைச் சுட்டிச் சொல்லும் மரபு இல்லை. இங்ஙனம் அகப்பாடல் களில் காணப்படும் சுட்டி ஒருவர்ப் பெயர் கூறப் பெறாத தன்மை நாட்டுப் பாடல்களின் வழிப்பட்டது எனக் கூறுவர் அறிஞர்.[8]

'குறு' இலக்கியம் குறத்தியின் குறித்திறனையும், அவள் குறி கூறும் முறையையும், அவளுடைய வாழ்க்கை நிலை யினையும் எடுத்துக்காட்டுகிறது. தலைவி அல்லது தலைவன் சிறப்புக்கள் சில குறத்தியின் வாயிலாக வெளிப்பட்டாலும், குறம் குறத்திக்கே முக்கியத்துவம் அளித்துள்ளது. அவ்வாறே குளுவ நாடகம் குளுவனின் பறவை வேட்டைக்கே முக்கியத்துவம் அளித்துள்ளது. குறவஞ்சியின் முக்கியக் கதை மாந்தர்கள் குறவனும் குறத்தியுமே ஆவர். தலைவன், தலைவி ஆகிய கதைமாந்தர்கள் இடம் பெற்றாலும், குறவஞ்சியில் குறவர் வாழ்வியலே விரிவாகச் சித்திரிக்கப் பட்டுள்ளது. குறம், குறவஞ்சி, குளுவ நாடகம் ஆகிய மூன்று இலக்கியங்களிலும் முக்கிய இடத்தினைப் பெறும் குறவன், குறத்தி, குளுவன் ஆகியோர் இயற்பெயரால் சுட்டப் பெறவில்லை; அவர்கள் தம் குலப்பெயராலேயே அழைக்கப் படுகின்றனர்; சிங்கா, சிங்கி, குளுவா என்றே அவர்கள் ஒருவரையொருவர் விளித்து உரையாடிக் கொள்கின்றனர். இங்ஙனம் அவர்களது இயற்பெயர் சுட்டப்பெறாமை, 'சுட்டி ஒருவர்ப் பெயர் கொளப் பெறா' மரபைப் பின்பற்றியதே யாகும் எனலாம்.

புராண மரபுச் செய்திகள் (தொன்மை)

"தொன்மை தாமே சொல்லுங் காலை
உரையொடு புணர்ந்த பழமை மேற்றே."

(தொல். செய், நூ. 229)

என்று தொல்காப்பியம் கூறும். இந்நூற்பாவிற்கு உரை எழுத வந்த நச்சினார்க்கினியர், "தொன்மையாவது உரைவிராய்ப் பழமையாகிய கதை பொருளாகச் செய்யப்படுவன என்று, அவை பெருந்தேவனார் செய்த பாரதமும், தகடூர் யாத்திரையும் போல்வன சிலப்பதிகாரமும் அதன்பாற்படும்"[9] எனக் குறித்துச் செல்கின்றார். இதனால் மக்கள் வாழ்வில்

வழிவழியாக வழங்கி வந்த கதைகளே தொன்மை எனக் குறிப்பிடப்படுகின்றன என அறியலாம். புராணக் கதைகளும் இத்தொன்மையின்பாற்படும் என்பதில் ஐயமில்லை. "தொன்மை அல்லது புராணம் எனப்படுவது நாட்டுப் புறவியலின் ஒரு கூறேயாகும்"[10] என்று தமிழண்ணல் குறிப்பிடுவது இங்குக் கருதத்தக்கது ஆகும்.

குறம், குறவஞ்சி ஆகிய இலக்கியங்களில் புராணக் கருத்துக்கள் மிகுந்து காணப்படுகின்றன. இவ்விலக்கியங்கள் சமயச் சார்புடையனவாக விளங்குவன. இவை கோவில்களில் திருவிழாக் காலங்களில் நடிக்கப்பெற்று வந்துள்ளன. எனவே, இவ் இலக்கியங்கள் புராணக் கருத்துக்களை மிகுதியாகக் கொண்டிருக்கக்கூடும். மேலும், குறம், குறவஞ்சி தோன்றிய காலத்தில், வாணிகத்தின் பொருட்டு இங்கே வந்த ஆங்கிலேயர் தம் அரசை நிறுவியதோடல்லாமல், தம் கிறித்தவ சமயத்தையும் பரப்பும் முயற்சியில் ஈடுபட்டிருந்தனர். எனவே, தத்தம் சமயத்தை நிலைநிறுத்திக்கொள்ளவேண்டிய சூழலில் சமயத் தொடர்பான புராணக் கதைகளைக் குறவஞ்சி ஆசிரியர்கள் மிகுதியாகக் கையாண்டனர் எனலாம்.

திரிபுரம் எரித்தது, மேருவை வளைத்தது, நஞ்சுண்டது, பிரமன் தலையைக் கிள்ளியெடுத்தது, நரி பரியாக்கியது, தக்கன் மதத்தை அழித்தது, தாருகாவனத்து முனிவர்கள் இறைவனைக் கொல்ல மான், மழு, புலி, யானை ஆகியவற்றை விடுத்தபோது இறைவன் மழுவையும் மானையும் தம் கைகளில் தாங்கிக் கொண்டு, புலியையும் யானையையும் கொன்று அவற்றின் தோலை ஆடையாக உடுத்திக்கொண்டது போன்ற சிவனைப் பற்றிய பொதுவான புராணச் செய்திகளைச் சிவபெருமானைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்ட அல்லது சைவ சமயத்தைப் போற்றும் குறவஞ்சி இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

இவ்வாறே, பஞ்சவர்க்குத் தூது சென்றது, திரௌபதிக்குத் துகில் அளித்தது, கஞ்சனைப் போர் செய்து கொன்றது, உரலிற் கட்டுண்டது, பேயின் முலைப்பால் குடித்தது, இரு பெரு மருதையொடித்தது, ஆவினத்தைக் காத்தது, நரசிம்ம அவதாரம் எடுத்து இரணியனைக் கொன்றது, ஆதிமூலம் என்றழைத்த யானையை முதலையின் பிடியினின்றும் மீட்டது, குறளுருவாய் வந்து மாவலியிடம் மூன்றடி இரந்து உலகளந்தது, பரசுராமர்க்குச் சுயரூபம் காட்டியது, இராவண

னைக் கொன்றது, சீதையைத் தீப்புக வைத்தது, அகலிகையை உயிர்ப்பித்தது போன்ற திருமாலின் அவதாரச் செய்திகள் வைணவக் குறவஞ்சி இலக்கியங்களில் கூறப்படுகின்றன.

இவ்வாறே, கிறித்தவ சமயச் செய்திகள் பெத்லகேம் குறவஞ்சியிலும், இசுலாமிய சமயச் செய்திகள் பிஸ்மில் குறம், ஞானக் குறம், குறமாது ஆகிய இலக்கியங்களிலும் மிகுந்து காணப்படுகின்றன.

பொதுவான புராணச் செய்திகளன்றி, அவ்வத் தலத்துக்குச் சிறப்பான புராணச் செய்திகளும் குறவஞ்சி இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளன. சரபேந்திர பூபால குறவஞ்சி, கும்பேசர் குறவஞ்சி முதலிய சில குறவஞ்சிகளில், குறத்தி தான் சென்று வந்த தலங்களைப் பற்றிக் குறிப்பிடுமிடத்து, அவ்வத் தலங்களில் நிகழ்ந்த புராணச் செய்திகளை எடுத்தியம்புகின்றாள். திருவருணையில் இறைவன் அக்கினி மலையாகி நிற்க அரியும் அயனும் அடிமுடி தேடியது, காஞ்சியில் உமாதேவியார் இறைவனை அடையத் தவம் மேற்கொண்டது, கோகர்ணத்தில் சிவலிங்கப் பெருமானை இராவணன் வலிதிற் பறித்தெடுக்க முயன்றபோது அப்பெருமான் பசுவின் செவி வடிவமானது, காளத்தியில் கண்ணப்பர் சிவபெருமான் கண்ணில் கண்ணிடந்து அப்பியது, சிதம்பரத்தில் பதஞ்சலி வியாக்கிரபாதர்களின் பொருட்டு ஸ்ரீ நடராசப் பெருமான் நடனமாடியது, சீகாழி பிரளயத்தில் தோணியாக மிதந்தது, திருக்கடவூரில் சிவபெருமான் மார்க்கண்டேயருக்காக யமனைக் காலால் உதைத்தது, மாயூரத்தில் உமாதேவியார் மயில் வடிவம் கொண்டு பூசித்தது, திருவாவடுதுறையில் சிவபெருமான் அரசமரத்தின்கீழ் எழுந்தருளியிருப்பது, திருவாரூரில் திருமகள் சிவபெருமானைப் பூசித்தது, இராமேசுவரத்தில் இராமர் சிவபெருமானைப் பூசித்தது (பா. 41) ஆகிய பல்வேறு சிறப்பான தலபுராணச் செய்திகள் சரபேந்திர பூபால குறவஞ்சியில் இடம் பெற்றுள்ளன.

இவையன்றி, பாட்டுடைத் தலைவி மன்மதனையும், நிலா, தென்றல் ஆகியவற்றையும் பார்த்துப் புலம்பும் பகுதி பெரும்பான்மையான குறவஞ்சி இலக்கியங்களில் காணக்கூடிய ஒன்றாகும். இப்பகுதியில் நிலவினைப் பற்றிய புராணச் செய்திகள் பொதுவாக அமைகின்றன. தேவர்களும், அசுரர்களும் மேருமலையை மத்தாக்கி, வாசுகி என்னும் பாம்பை நாணாக்கிப் பாற்கடல் கடைந்தபொழுது அமுதத்துடன், திருமகளும், நிலாவும்தோன்றியதாகக் கூறுவர். இச்செய்தியை,

" தண்ணமுதுடன் பிறந்தாய் வெண்ணிலாவே அந்தத்
தண்ணளியை ஏன்மறந்தாய் வெண்ணிலாவே
பெண்ணுடன் பிறந்ததுண்டே வெண்ணிலாவே என்றன்
பெண்மை கண்டுங் காயலாமோ வெண்ணிலாவே. "
(பா. 32; 1)

எனக் குற்றாலக் குறவஞ்சியும்,

" சுதையுடன் கூடப் பிறந்துந்
தண்ணளி தோன்றாதென் கண்டாயே—வரு
மதியின்றிச் சிறுமதி யென்றே
அவமதியுங் கொண்டாயே பாவி. " (சி. 17: 1)

என அழகர் குறவஞ்சியும்,

" அரிவையோ டுதித்தும் பெண்ணருமை யறிந்திலையோ. "
(பா. 19: 7)

என்று சரபேந்திர பூபால குறவஞ்சியும்,

" மாதுடன் கூடப் பிறந்து மறந்தாயே திங்களே. "
(பா. 23: 4)

எனத் திருமலையாண்டவர் குறவஞ்சியும் எடுத்தியம்பு கின்றன.

பிருகஸ்பதி என்னும் முனிவர், தம் மனைவியாகிய தாரையை விரும்பியது பற்றிச் சந்திரனைக் குறைந்து போகும்படி சபித்தனர் என்றும் கூறுவர்.[11]

இச்செய்தி,

" தேவர்மந்திரியின் மனையாளால் வந்தகுறை போதாதோ. "
(பா. 19: 5)

என்று சரபேந்திர பூபால குறவஞ்சியும்,

"முன் குரு சாபத்திற் குறைந்த மதியே. " (பா. 23: 2)

எனக் கும்பேசர் குறவஞ்சியும்,

" பன்னாட் குறைமதி யானதினால் குருபத்தினியை
முன்னாள் தொடர்ந்து கறையாய் மகத்துவம் முனை
யழிந்தாய். " (பா. 56)

என்று சோலைமலைக் குறவஞ்சியும் எடுத்துரைக்கின்றன.

குறம், குறவஞ்சிகளில் பிற சமயத்தவரைத் தாக்கிக் கூறும் புராணச் செய்திகளும் காணப்படுகின்றன. சைவ

சமயத்தினர் வைணவம், சமணம் ஆகிய சமயங்களைக் குறைத்துக் கூறுவதும், வைணவ சமயத்தினர் சைவத்தைத் தாக்கிப் பேசுவதும், கிறித்தவர் இந்து சமயத்தைச் சாடி உரைப்பதும் குறவஞ்சி இலக்கியங்களின் பயின்று வரும் ஒரு போக்கு ஆகும்.

" தேசுதருந் தழன்மலையாய்ச் சிவன்விளங்க மாலும்
திசைமுகனும் பாதமுடி தேடு அருணை. "
(சர. குற., பா. 41: 1)

என்றும்,

" அரிகூட அயன்கூட மறைகூடத் தினந்தேட
அரிதாய் நின்ற திரிகூடப் பதி. " (கும். குற., பா. 57)

என்றும்,

" சைவர் மேலிடச் சமணர் கீழிடச்
சகல சமயமும் ஏற்கவே ..வந்தனன்."
(குற். குற., பா. 15: 8)

என்றும்,

" செங்கண்மால் சிவன் ஆகிய நாடு. "
(குற். குற., பா. 56: 6)

என்றும் சைவ சமயத்தை உயர்த்தியும், வைணவ, சமண் சமயங்களைத் தாழ்த்தியும் கூறும் போக்கு சைவ சமயஞ் சார்ந்த குறவஞ்சி இலக்கியங்களில் காணப்படுகின்றது.

"சிவபெருமான் சலந்தராசுரனைக் கொல்ல சக்கராயுதத்தைப் பெறுவதற்காகத் திருமால் அவரை ஆயிரம் தாமரை மலர்களைக் கொண்டு அருச்சித்தபொழுது சிவபெருமான் அவரது அன்பைச் சோதிக்கக் கருதி அம்மலர்களுள் ஒன்றை மறைத்தருளினார். அப்பொழுது திருமால் அம்மலருக்குப் பிரதியாகத் தம் கண்ணையிடந்து அருச்சிக்கவே, களிகூர்ந்த பெருமான் அவருக்குப் பதுமாட்சரென்ற பெயரை வழங்கி அந்தச் சக்கராயுதத்தையும் கொடுத்தருளினார்"[12] என்னும் சிவபுராண வரலாற்றினை,

"மால்கண் மலர்க்காழி யீந்த நாதன்." (பா. 38)

என்று கும்பேசர் குறவஞ்சி குறிப்பிடுகின்றது. இவ்வரலாறு, எதிர்மாறாகச் சோலைமலைக் குறவஞ்சியில் இடம்பெற்றுள்ளது. 'ஈசன் துதித்துத் தன் முகக்கண்களைச் சிதைத்து ஒளி விளங்கும் திருவடிகளில் செண்பகப் பூவாக அருச்சித்து'[13] வணங்கிய செய்தியை,

"சோதிக் கலுழன்மேல் வீதிவந்தார் சிவன்
துதித்துத்தன் முகக்கண்கள் சிதைத்துச்செண்பகப்பூவென்
றுதிர்த்து கும்பிடத் தேசிவர்
பதத்திற் கொண்டிடும் கேசவர்". (பா. 33)

என்று சோலைமலைக் குறவஞ்சி கூறுகிறது. மேலும், 'இரணி யனைப் பிளந்தழித்த நரசிங்கப் பெருமானை அடக்கச் சிவன் சரப உருவோடு வர, நரசிங்கப் பெருமான் அதன் தோலை யுரித்துச் செருக்கழித்து ஒழித்தார்' (பா. 30, 16) என்றும், 'பிரமன் சிரத்தைக் கிள்ளிய சிவன், பிரமகபாலம் தன் கையகத் ததாகத் திரிந்து பகவானைப் பாடிக் கபால நீக்கம் பெற்றான்' (பா. 30) என்றும், நாராயணவென்னும் நாமம் தன் காதுகளில் நுழையாவாறு காதில் இரண்டாயிரம் குண்டலங்களை அணிந் திருந்த கண்டாகர்ணனிடம், 'முக்தியளித்தற்குரியவர் திருமாலே' என்று சிவன் கூற, அவன் திருமாலை வணங்கி முத்தி பெற்றான்' (பா. 30) என்றும் திருமாலை உயர்த்தியும், சிவபெருமானைத் தாழ்த்தியும் கூறும் புராணச் செய்திகள் பல, வைணவக் குறவஞ்சி இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளன.

வேதநாயக சாஸ்திரியார் தாம் பாடிய பெத்லகேம் குற வஞ்சி முகவுரையில், "இதைத் திருநெல்வேலி இராச்சியத்திற் பிரதான பள்ளிக்கூடங்களிற் படிக்கிறதும், அவ்விடத்துக் கணியார் தேசத்திலெங்கும் நாட்டியமாடுகிறதுமான குற் றாலக் குறவஞ்சிக்கு எதிராய்ப் பாடிற்று"[14] எனக் குறிப்பிட் டுள்ளமை இங்கே கருதத்தக்கது. குறவஞ்சி ஆசிரியர்கள் தத்தம் சமயங்களை நிலைநிறுத்தும் வகையில் பிற சமயத் தாக்குதல்களைக் கையாண்டனர் என்று கூறுதல் மிகையன்று.

### பழமொழி ஆட்சி

தொல்காப்பியர் அடிவரையின்றி வரும் செய்யுள் வகை யுள் ஒன்றாக 'ஏது நுதலிய முதுமொழி' (தொல். செய்., நூ. 158) யைக் குறிப்பிடுகின்றார்.

"நுண்மையுஞ் சுருக்கமும் ஒளியு முடைமையும்
மென்மையும் என்றிவை விளங்கத் தோன்றிக்
குறித்த பொருளை முடித்தற்கு வருஉம்
ஏது நுதலிய முதுமொழி யென்ப'.
(தொல். செய்., நூ. 170)

என அவர் முதுமொழியின் இயல்பினைச் சுட்டுகின்றார். "பழமொழி இவ்விலக்கணம் பற்றிச் செய்தது"[15] என இந்

நூற்பாவின் உரை விளக்கத்தில் குறிப்பிடுகின்றார் நச்சினார்க்கினியர். எனவே, 'முதுமொழி' எனப்பட்ட இப்பழமொழிகளைப் பழங்காலந்தொட்டே புலவர்கள் கையாண்டு வந்துள்ளனர் என்பதை அறிய முடிகின்றது. குறம், குறவஞ்சி ஆகிய இலக்கியங்களிலும் பழமொழியின் ஆட்சி மிகுந்து காணப்படுகின்றது.

தியாகேசர் குறவஞ்சியில் தலைவன்மீது மையலுற்றுப் புலம்பும் தலைவி மன்மதனையும், நிலா, தென்றல் ஆகியவற்றையும் நோக்கிப் புலம்புகின்றாள். அப்பொழுது அவள் கூற்றில்,

" வேலியே பயிரழித்தால் விளையும் வாறெப்படி"

" எளியாரை வலியார் கேட்டால்
வலியாரைத் தெய்வம் கேளாதோ"

" காலம்போம் வார்த்தைகள் நிற்கும்,'

(பா. 10: 1,2 ,3)

என்னும் பழமொழிகள் இடம் பெறுகின்றன. 'காலம் போகும் வார்த்தை நிற்கும்', 'வேலியே பயிரை மேய்ந்தால் விளைவது தான் எப்படி', 'எளியாரை வலியார் அடித்தால் வலியாரைத் தெய்வம் அடிக்கும்' என்று மக்கள் வழக்கில் வழங்கும் பழமொழிகளையே இப்பகுதிகளில் ஆசிரியர் கையாண்டுள்ளார்.

'தனக்கென்று வந்தால் தெரியும் தலைவலியும் பல்வலியும்' என்னும் பழமொழியினை அடியொற்றியே,

" தனக்கென்று வரும்போது மன்மதா—அப்போ
தானே தெரியவரும் மன்மதா." (பா. 12:4)

என்றும், 'நம் வீட்டு விளக்கென்று முத்தமிட்டுக்கொள்ளுவதா' என்னும் பழமொழியினைப் பின்பற்றியே,

" தன்வீட்டு விளக்கென்று மன்மதா—முத்தம்
தானிடப் போமோசொல் மன்மதா." (பா. 12:8)

என்றும், யாப்பிற்கேற்ற வகையில் சிறிது மாற்றிக் கையாண்டுள்ளார் தியாகேசர் குறவஞ்சி ஆசிரியர்.

மேலும் தென்றலை நோக்கி,

" பார்த்தால் பசுப்போல
பாய்ந்தாற் புலியானாய் தென்றலே." (பா. 11:4)

என்றும் பாட்டுடைத் தலைவரான தியாகராஜரை நினைந்து,

" நம்பின என்னை நட்டாற்றில்
கைவிட லாமோ தியாகராஜா." (பா. 13:1)

என்றும் புலம்பும் தலைவியின் கூற்றில் பழமொழிகளின் ஆட்சி காணப்படுகின்றது.

'உலைவாயை மூடினாலும் ஊர் வாயை மூட முடியுமா' என்னும் பழமொழிக்கேற்ப, அழகர் குறவஞ்சியில் வரும் தாய் தன் மகளின் நிலைகண்டு, "ஊரினுடைய வாயை மூட உலை மூடியும் தானுண்டோடி" (கீ.19) என்று புலம்புகிறாள். இதைக் கண்ட தோழி தலைவிக்கு ஆறுதல் அளிக்க முயல்கின்றாள்; அவள் பொருட்டுத் தலைவனிடத்துத் தூது சென்று வருகிறாள்; 'தலைவர் நாளை வருவார்' எனத் தலைவியிடம் உரைக்கின்றாள். அப்படி உரைத்தும் தேறுதல் கொள்ளவில்லை தலைவி. அந்நிலையில் தோழி, "சுக்குக் கண்டவுடன் பிள்ளை பெற நினைந்து பேசுகின்றாய்' (பா.27); மோகவல்லி, இத்தனை பதட்டம் உனக்கு என்னடி, "நொய் அரிசி கொதி பொறாதென்றாற்போலே" (கீ.25) என்று அவளுக்கு அறிவுரை கூறத் தொடங்குகின்றாள்:

" காதலை மனதில் அடக்க வேணும்
கர்த்தனுக்கும் இச்சை கொடுக்க வேணும்
பாதத்தில் நீயன்பு தொடுக்க வேணும்
பதறாதிருந் தல்லோ படுக்க வேணும்
உள்ளத்தில் நம்பிக்கை கொள்ள வேண்டாமோ
... ... ... ...
கிணற்றுநீரை வெள்ளம் கொண்டு போமோ
உண்டென்று நம்பினால் தெய்வந் தராதோ
.. ... ... ...
ஆக்கப் பொறுத்தவர்க் காறப் பொறாதோ." (கீ. 24:1—3)

இவ்வாறு தோழி ஆறுதலும் அறிவுரையும் கூறியும் அவற்றை ஏற்காத தலைவி, 'கடலிற் பெருங்காயம் கரைத்ததென'த் (பா.26) தலைவன் இருப்பதையெண்ணிக் கடல், நிலவு, மன்மதன் ஆகியவற்றை நோக்கிப் புலம்பத் தொடங்குகின்றாள். இப்பகுதியில்,

' சுக்கு கண்ட இடத்திலே முக்கிப் பிள்ளை பெறுவாளா?'

' நொய்யரிசி கொதி பொறுக்குமா?'

' கிணற்றுத் தண்ணீரை வெள்ளமா கொண்டு போகும்?'

'ஆக்கப் பொறுத்தவன் ஆறப் பொறானோ'

'கடலில் இட்ட பெருங்காயத்தைப் போல.'

என்னும் பழமொழிகள் இடம் பெற்றிருக்கக் காண்கிறோம்.

'கிணற்றுத் தண்ணீரை வெள்ளமா கொண்டு போகும்?', 'ஆக்கப் பொறுத்தவன் ஆறப் பொறானோ' என்னும் இவ்விரு பழமொழிகள் பல குறவஞ்சிகளில் சிங்கன்—சிங்கி எதிர்த் துரையாடல் பகுதியில் இடம்பெற்றுள்ளன என்பது குறிப்பிடத் தக்கது.

மையலால் வருந்தும் தலைவிக்குக் குறி சொல்லி முடித்ததும் குறத்தி, தன்னைக் காணாது வருந்தும் குறவனை வந்து சேருகிறாள். இந்நிலையில் குறத்திக்கும், குறவனுக்கும் இடையே வாக்குவாதம் எழுகிறது. 'சிங்கன்—சிங்கி வாதம்', 'சிங்கன்—சிங்கி தர்க்கம்', 'சிங்கன் — சிங்கி உரையாடல்', 'சிங்கன்—சிங்கி சம்வாதம்', 'சிங்கன் சிங்கியோடு சம்பா ஷித்தல்', 'வினா—விடை', 'சிங்கன்—சிங்கி எதிர்த்துரையாடல்' என்றெல்லாம் கூறப்படும் இப்பகுதியில் சிங்கி, பேச்சு—வழக்கில் வழங்கும் பல பழமொழிகளைக் கையாளுகின்றாள். சில சான்றுகள் வருமாறு:

"ஆருயிர்க் குமருந் தல்லவோ நீயும் சிங்கி—போடா
ஆலையில் லாவூருக் கிலுப்பைப்பூச் சக்கரை சிங்கா."

(காங். குற , பா. 39)

"குன்றத்தைப் பார்த்தாற் கொடியிடை தாங்குமோ சிங்கி! தன்
கொடிக்குச் சுரைக்காய் கனத்துக் கிடக்குமே சிங்கா."

(குற். குற்., பா. 126:7)

"மானம்விட் டொருவன்பின் மயங்கிநீ வந்தாயே சிங்கி
மடியிற்கன முமில்லை வழியிற்பயமு மேதுசொல்லு சிங்கா."

(நவ. குற·, பா. 85:2)

"கையிற் கண்டதற்கு நெய்யிற்கை விடுவாரோ சிங்கி—ஏதும்
கண்ணிற் காணாமலே பெண்ணோரஞ் சொல்லாதே சிங்கா,"

(மண். குற., பா.79:௬)

"கொடியிடையே யுனது கற்புக் குலைந்த தென்னகா ரணமோ—
சிங்கி
குற்றமுள்ள நெஞ்சு உனக்குக் குறுகுறுப்பாய்த்தோ னுமடா —
சிங்கா."

(தியா. குற., பா. 65:3)

இப்பகுதிகளில் முறையே, 'ஆலையில்லா ஊருக்கு இலுப்பைப்பூச் சர்க்கரை', 'கொடிக்குக் காய் பாரமா', 'மடியிலே கனம் இருந்தால் தானே வழியிலே பயம்', 'கையில் இருக்க நெய்யிலே கை விடுவானேன்', 'மண்ணோரம் நின்று பெண்ணோரம் சொல்லாதே', 'குற்றமுள்ள நெஞ்சு குறுகுறு என்னும்' என்னும் பழமொழிகள் கையாளப்பெற்றுள்ளன.

குறவஞ்சியில் வரும் பெண்மாந்தர்களே — தலைவி, தோழி, தாய், குறத்தி ஆகியோரே — பழமொழிகளை மிகுதியாகக் கையாள்கின்றனர் என்பது குறிப்பிடத்தக்க செய்தியாகும். பெரும்பான்மையான குறவஞ்சிகளில் குறத்தியே மிகுந்த பழமொழிகளைக் கையாண்டு பேசும் மாந்தராக விளங்குகின்றாள். பல தேசங்களுக்கும், நாடுகளுக்கும் குறி சொல்லச் செல்வதனால், அவளுக்குப் பல நாட்டு மக்களுடன் பழகுவதற்கும், அவர்தம் மொழி, பண்பாடு ஆகியவற்றை அறிந்து கொள்ளுவதற்கும் வாய்ப்பு ஏற்படுகின்றது. சரபேந்திர பூபால குறவஞ்சியில் வரும் குறத்தி பன்மொழி அறிவு படைத்தவளாக விளங்குகின்றாள். குறி கேட்கும் பல நாட்டுப் பெண்களுக்கு அவரவர் மொழியிலேயே குறி சொல்லும் திறமை பெற்ற குறத்தி பல மொழிகளைக் கையாள்வதில் வியப்பே இல்லை எனலாம்.

### விடுகதைப் பாங்கு

தொல்காப்பியர் யாப்பின் எழுவகைகளைப் பற்றிக் குறிப்பிடுமிடத்தில் 'பிசி' என்னும் சொல்லாட்சியைக் கையாண்டுள்ளார் (செய். நூ. 75); அடிவரையில்லாத அறுவகை யாப்பினைப் பற்றிக் குறிப்பிடுமிடத்து 'நொடியோடு புணர்ந்த பிசி' (செய். நூ. 158)யினையும் ஒன்றாகக் குறிப்பிட்டுள்ளார்.

> " ஒப்பொடு புணர்ந்த வுவமத் தானும்
> தோன்றுவது கிளந்த துணிவினானும்
> என்றிரு வகைத்தே பிசிவகை நிலையே. "
>
> (செய். நூ. 169)

என்னும் நூற்பாவில் அவர் பிசியின் வகைகளைக் கூறியுள்ளார். "ஒப்போடே புணர்ந்த உவமை நிலையானும் பிசியாம்; தோன்றுவதனைச் சொன்ன துணிவினானும் பிசியாம் என்றவாறு" என இந்நூற்பாவிற்கு உரை விளக்கம் அளிக்கும்

இளம்பூரணர், ''அச்சுப் போல பூப்பூக்கும், அமலேயென்னக் காய் காய்க்கும்' என்பது பிசி. இது உவமை பற்றி வந்தது''[16] எனப் பிசிக்கு ஓர் எடுத்துக்காட்டும் தருகின்றார். இந்நூற்பா விற்கு உரை விளக்கம் அளிக்கும் பேராசிரியர், '' 'பிறைகவ்வி மலை நடக்கும்' என்பது ஒப்பொடு புணர்ந்த உவமம். அஃதாவது யானையென்றாம்'' என்று குறிப்பிடுகின்றார்; மேலும், பிசிக்குச் சான்றாக இரு எடுத்துக்காட்டுகளையும் தருகின்றார்:

'' முத்துப்போற் பூத்து முதிரிற் களாவண்ண
நெய்த்தோர் குருதி நிறங்கொண்டு வித்துதிர்த்து. ''

(கமுகின் மேற்று)

''நீராடான் பார்ப்பா னிறஞ்செய்யான் நீராடில்
ஊராடு நீரிற்காக் கை. '' (நெருப்பென்றாவது)

இவ் எடுத்துக்காட்டுகள் அவர் காலத்து வழங்கிய விடுகதைப் பாங்கினைப் புலப்படுத்துவனவாகும்.

'ஒப்பொடு புணர்ந்த உவமம்', 'தோன்றுவது கிளந்த துணிவு' என்னும் இவ்விரு வகையான விடுகதைப் பாங்கும் குறவஞ்சி, குளுவ நாடகம் ஆகியவற்றில் காணப்படுகின்றன. அருணாசலம் செட்டியார் குளுவ நாடகத்தில் வரும் குளுவன், தான் அறிந்த சித்துவகைக் கதைகளைச் சொல்லிப் பாம்பை யெடுத்து ஆட்டுகின்றான். அப்பொழுது அவன் பாடும் பாடல்கள் பாம்பைப் பற்றிய விடுகதைகளாக அமையக் காணலாம். ஓர் எடுத்துக்காட்டு வருமாறு:

'' ஒருமூன்று கண்ணிருக்கும் ஈசனுமல்ல தேக
மொட்டுக்கும் மஞ்சள் பூசும் பெண்களு மல்ல
அரசரிருக்குஞ் சதிரைத் தேடியே வருந்தே
வாலயங்கள் தன்னில் வெகு மேன்மையும்பெறும்
உரிமையுந் தேசமெங்கும் உணர்த்தி வருவாரெவரும்
ஓங்கியடிப்பார் மெள்ளத் தாங்கி யடிப்பார்
திருவளரு மார்பன் அருணாசலேந்திரன் தன்னைச்
செப்புகதை சொல்லச் சொல்லி யாடு பாம்பே. ''

(பா. 22: 1)

இப்பாடலின் முதல் மூன்று அடிகள் பாம்பைக் குறிப்பனவாக அமைந்துள்ளன. இத்தகைய விடுகதைகளை 'எதிர்மறை விடுபுதிர்கள்' என்னும் வகையில் அடக்கலாம் என்பர்.[18]

குற்றாலக் குறவஞ்சியில் பாட்டுடைத் தலைவிக்குக் குறி கூறவந்த குறத்தி, அவளது மையலுக்குக் காரணமானவன்' 'பெண் சேர வல்லவன்' என ஒரு புதிர் போடுகின்றாள். தலைவி சினந்து அதற்கு விளக்கம் வினவ,

" பெண்ணரசே பெண்ணென்றால் திரியுமொக்கும்ஒரு
பெண்ணுடனே சேரஎன்றாற் கூடவுமொக்கும்
திண்ணமாக வல்லவனும் நாதனு மொக்கும்பேரைத்
திரிகூட நாதனென்று செப்பலாம் அம்மே. " (பா. 78)

என்று கூறித் தலைவனின் பெயர்ப் புதிரை விடுவிக்கின்றாள் குறத்தி. இப்புதிரைத் 'தோன்றுவது கிளந்த துணிவு' எனத் தொல்காப்பியர் கூறுவதனோடு ஒப்பிடலாம். மேலும், 'நொடியோடு புணர்ந்த பிசி' என்பதற்கு விளக்கம் கூற வந்த தமிழண்ணல், "செம்முதுச் செவிலியர் பொய்ந்நொடி பகர... (பெருங்கதை) என்றும் சுட்டப்படுகிறது. 'பொய்ந்நொடி' என்பது கட்டுக்கதைகளைக் குறிக்கும். நொடி என்பது கற்பனை என்று பொருள்படும்... 'நொடியொடு புணர்ந்த பிசி' என்பதனால் இது கற்பனை கலந்ததென்பதையும் உவமை வடிவாகவும் ஒன்றைக் கூறப் பிறிதொன்றாய்த் தோன்று மாறும் அமையும் என்பதையும் ஆசிரியர் விளக்கியுள்ளார்,"[19] எனக் கூறுவதற்கேற்ப, கற்பனை கலந்த விடுகதையாக மேற் கூறிய விடுகதை அமைந்திருக்கும் பாங்கினையும் சுட்டலாம்.

பெத்லகேம் குறவஞ்சியில் 'விடுகதை' என்னும் பகுதியே அமைந்திருக்கின்றது. இப்பகுதி, தலைவி குறத்தியின் குறித் திறனை அறிந்துகொள்ளும் பொருட்டுப் பல்வேறு வினாக் களைத் தொடுப்பதும், அவற்றுக்குக் குறத்தி விடையிறுப்பது மாக அமைந்துள்ளது. ஓர் எடுத்துக்காட்டு வருமாறு:

" செய்யசுதன் சிலுவையினில் சேலையற்று நிற்பதுமேன்
வஞ்சி திருச்
சித்தமதாய்ப் பரிசுத்தர்க்கு நீதியின் வஸ்திரத்தைத்தர மெத்த
நினைத்து அபரஞ்சி. " (ப. 77)

இவ்வகையான புதிர்களை 'வினாவிடு புதிர்கள்' என்னும் வகையில் அடக்குவர்.[20] குறவன் குறத்தி எதிர்த்துரையாடல் பகுதியில் குறத்தியின் அணிவகைகளை ஒவ்வோர் உயிரினமாகக் கருதிச் சிங்கன் வினவுவதையும், அதற்கு அவள் கூறும் விடை யினையும் விடுகதைப் பாங்குடையன எனலாம். ஓர் எடுத்துக் காட்டு வருமாறு:

" காலுக்கு மேலே பெரிய விரியன் கடித்துக் கிடப்பானேன்
சிங்கி
சேலத்து நாட்டிற் குறிசொல்லிப் பெற்ற சிலம்பு கிடக்குதடா
சிங்கா. " (குற். குற., பா. 125: 5, 6)

"விடுகதை என்பது விடுவிக்கப்படவேண்டியது; பெயருக்கேற்ப, அதில் புதிரும் அடங்கியிருக்கிறது. கதைகளுக்கு ஆதாரமாகவும், சிலேடைச் செய்யுளுக்கு உயிராகவும் அது நிலை கொண்டிருக்கிறது,"[21] என்னும் கூற்றிற்கேற்ப, சிலேடைப் பாங்கில் அமையும் பாடல்களும் குறவஞ்சியில் இடம்பெற்றுள்ளன.

" ஆஞ்சு தலைக்குள் ஆறு தலைவைத்தார் எனதுமனதில்
அஞ்சு தலைக்கோர் ஆறு தலைவையார்
நஞ்சு பருகி அமுதங் கொடுத்தவர் எனதுவாள்விழி
நஞ்சு கிருய அமுதங் கொடுக்கிலார். "
(குற். குற., பா. 41: 2)

எனத் தலைவி, தலைவன் தனக்கு அருள் புரியாததை நினைந்து வருந்துகிறாள். இப்பகுதியில் அஞ்சுதலை, ஆறுதலை, நஞ்சு, அமுதம் என்னும் சொற்கள் இரு பொருள்பட நிற்றல் குறிப்பிடத்தக்கதாகும்.

யாப்பு வடிவ ஒற்றுமை

குறவஞ்சியில் நேரிசை வெண்பா, இன்னிசை வெண்பா, நேரிசையாசிரியப்பா, நிலைமண்டில ஆசிரியப்பா, கொச்சகக் கலிப்பா, தரவு கொச்சகக் கலிப்பா ஆகிய பாக்களும், ஆசிரிய விருத்தம், ஆசிரியத் துறை, கலி விருத்தம், கலித்துறை, கட்டளைக் கலித்துறை, கட்டளைக் கலிப்பா, கலித் தாழிசை, வஞ்சித் துறை, குறள்வெண் செந்துறை ஆகிய பாவினங்களும், பிற்கால யாப்பு வகைகளான சிந்து, கீர்த்தனம் ஆகிய இசைப் பாடல்களும் பயின்று வந்துள்ளன. சிந்து வகையில் இருசீரிரட்டை, முச்சீரிரட்டை, நாற்சீரிரட்டை, ஐஞ்சீரிரட்டை, நாமுச்சீரிரட்டை, சந்தச்சிந்து, ஏவல் சந்தச் சிந்து, முடுகு சந்தச் சிந்து, கப்பல் சிந்து, இலாவணி, ஆனந்தக் களிப்பு, ஜாவளி, ஆந்திர சுபத்திய சந்தம், கும்மிச் சிந்து ஆகிய பல வடிவங்கள் இடம்பெற்றுள்ளன.[22]

குறவஞ்சி பாவமைப்பில் காணப்பெறும் ஒரு வியத்தகு அமைப்பு யாப்பும், பாடற் பொருண்மையும் ஒரே தன்மைத்தாக அமைந்திருப்பதேயாகும். ஒரு நிகழ்ச்சி தொடங்குமுன்னர்

அதைப் பற்றிய அறிவிப்பாக அமையும் பாடல் பெரும்பான்மை அறுசீர் ஆசிரிய விருத்தமாகவும், சிறுபான்மை கொச்சகம், தரவு கொச்சகம், வெண்பா, கலி விருத்தம் என்னும் யாப்பு வகைகளுள் ஒன்றாகவும் அமைந்திருக்கின்றது; அறிவிப்பைத் தொடர்ந்து வரும் நிகழ்ச்சி இராக, தாளப் பகுப்புடைய தரு எனப்படும் கீர்த்தனையாகவோ, சிந்து வகையாகவோ (கண்ணிகளாக)[23] அமைந்திருக்கின்றது.

எடுத்துக்காட்டாக, பெரும்பான்மையான குறவஞ்சிகளில் பாட்டுடைத் தலைவி வருகையினை அறிவிக்கும் பாட்டு விருத்தமாக அமைந்துள்ளன;[24] அழகர் குறவஞ்சியில் அப்பகுதி கண்ணிகளாகஅமைந்துள்ளது. கும்பேசர் குறவஞ்சியில், கட்டியக்காரன் தலைவி வருகையை அறிவித்து எச்சரிக்கை விடுப்பது வசனமாக அமைந்துள்ளது. பின்னர் அவள் வருணனை அகவலாகவும், மீண்டும் வருகை அறிவிப்பு ஒரு விருத்தமாகவும் அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது. தலைவி வருகை என்னும் நிகழ்ச்சியை விளக்கும் பகுதி, குறவஞ்சிகளில் கண்ணிகளாகவோ,[25] கீர்த்தனங்களாகவோ[26] அமைந்துள்ளது. எடுத்துக்காட்டாக, குறுக்குத்துறைக் குறவஞ்சியில்,

"அலையணியுந் தண்பொருநைத் திருவுருமா
மலையருலா வதனைக் கண்டு
நிலையழியும் மங்கையருள் தலையளென
நீணிலமும் நுவலு மாறு
சிலையனைய வுடற்காட்டிச் செம்பவள
நிறங்காட்டிச் சிரிப்புங் காட்டித்
தலையதனில் முகிற்காட்டித் தரங்காட்டி
மோகினிப்பெண் தான்வந் தாளே." (பா. 7)

எனத் தலைவி வருகையை அறிவிக்கும் அறிவிப்புப் பாடல் அறுசீர் ஆசிரிய விருத்தமாக அமைந்துள்ளது; பின்னர், அவள் வரும் நிகழ்ச்சி நான்கு கண்ணிகளால் குறிக்கப்பெற்றுள்ளது.

"பேரொளிசேர் பொன்னணி பூட்டித்—தனது
பின்னலிடுங் கார்முகிலில் பாம்பினைக் காட்டி
வாரணியுங் கச்சினை மாட்டி—நகிலின்
வண்ணமெலாங் காட்டியெழில் மோகினி வந்தாள்

கைநிறையக் கங்கண மிட்டுத்—தனது
கண்சுழற்றி ஆடவரை வாடிட விட்டு
மெய்யிலொரு வங்கண மிட்டு—இடையை
மின்னலெனக் காட்டியெழில் மோகினி வந்தாள்

சின்னஞ்சிறு பொன்நடையிலே—தனது
சிங்காரச் செங்கரங்கள் தம்மசைப்பிலே
இன்னிசையுந் தாளமுங் கூட்டி—எதிர்செல்
யாவரையும் வாட்டியெழில் மோகினி வந்தாள்

கண்ணெதிரே பட்டவர் வாட—எழில்
காமனுந்தன் மாதெனவே கிட்டவு மோடத்
திண்ணமுடன் பெண்களும் நாட—வளமார்
திருவுரு மாமலையின் மோகினி வந்தாள். '' (பா. 8)

கீர்த்தனை, பல்லவி, அனுபல்லவி, சரணங்கள் என்று மூன்று உறுப்புக்களைக் கொண்டு விளங்குகின்றது. இவ்வுறுப்புக்களுக்கு எடுப்பு, தொடுப்பு, முடிப்பு எனப் பெயரிடுவார் குறுக்குத் துறைக் குறவஞ்சி ஆசிரியர். தாலாட்டு, ஒப்பாரி போன்ற எந்த நாட்டுப்புறப் பாடலாயினும் சரி, அதில் ஒவ்வொரு கருத்தும் திரும்பத் திரும்ப மூன்று நான்கு தாழிசைகளில் கூறப்பெற்றிருக்கும். எடுத்துக்காட்டாக, ஒரு தாய் தன் குழந்தைக்கு, அதன் தாய்மாமன் செய்த சீர்வரிசையைப் பற்றிக் கூறுவதாக வரும் பகுதியைச் சுட்டலாம்;

'' காலுக்குத் தண்டை—என் ஐயா!
கழுத்துக்கு வீரதண்டை
கொண்டைக்குக் குப்பி
கொண்டுவந்தார் தாய்மாமன்!

முத்தளக்க நாழி
முதலளக்கப் பொன்னாழி
வச்சளக்கச் சொல்லி
வரிசையிட்டார் தாய்மாமன்

அஞ்சு கிளியெழுதி
அம்மான்மார் பேரெழுதி
கொஞ்சுங் கிளியெழுதி
கொண்டுவந்தார் உன்மாமன்!''[27]

இவ்வாறே குறவஞ்சியில் சரணங்கள் மூன்று தாழிசைகளாகவோ நான்கு கண்ணிகளாகவோ விளங்குகின்றன. எடுத்துக்காட்டாக, நவநீதேசுவர சுவாமி குறவஞ்சியில், தலைவி வரும் நிகழ்ச்சியைச் சுட்டும் பாடலைக் கூறலாம் :

'' துரித மோகினியும் வந்தாள்—துல்லியமாகத்
துரித மோகினியும் வந்தாள்
பரிதிதவழ் சிகரைக்குரிய வெண்ணெய் லிங்கேசர்
பிரிய மிகவும் நாடும்—துரித. ''

1. "  பிடிகள் நடையி லஞ்சவே—கடிகமழு
முடியில் அளிகள் துஞ்சவே
துடியிடையை மின்கெஞ்ச நடித்துத்
தனத தித்தைத் தாவென—துரித.

2. "  மதன ரதியார் எனவே மனமகிழ்ந்து
வதன மதிபா ரெனவே பதனமடவார்
விதனம் பெறாமல் சொன்னசுதின மின்றைக் காமென
தத்தனந் தனங்கு தைதாவென—துரித."

3. "  மங்கையர் வந்து பணியக்
கொங்கைகள் இரண்டும்
பொங்கிக் கச்சதை முனியச்
செங்கண் சேலைத் துணிய
அங்கம் பொன்னே குனிய
சங்கங் கணைக்கா லெனத்
தொங்கத் திங்கத் தாதிங்கண தோமென—துரித."

இவையன்றி, குறவஞ்சி இலக்கியம் பல்வேறு வகையான புதிய சிந்து வகைகளையும் கொண்டு விளங்குகின்றது; பிற்காலச் சிந்து வகைகளுக்கும் வழிகாட்டியாக அமைகின்றது. எடுத்துக்காட்டாக, சோலைமலைக் குறவஞ்சியில் சந்தச் சிந்து, ஏவல் சந்தச் சிந்து, முடுகு சந்தச் சிந்து, கப்பல் சிந்து, இலாவணி, ஜாவளி ஆகிய சிந்து வகைகளும், குறுக்குத்துறைக் குறவஞ்சியில் ஆனந்தக் களிப்பு என்னும் சிந்து வகையும் இடம்பெற்றுள்ளன.

### பேச்சுவழக்குச் சொற்கள்

நாட்டுப்புறக் கூறுகளை உடைய இலக்கியம் என்பதை நிலைநிறுத்தும் வகையில் குறவஞ்சியில் பேச்சுவழக்குச் சொற்கள் மிகுந்து காணப்படுகின்றன.[28] இவற்றைப் பேச்சு வழக்குச் சொற்கள், தொடர்கள் என இரண்டு பிரிவாகக் காணலாம்.

### சொற்கள்

கெம்பாறடையே, கெம்பாதே, கெம்பாரே, பக்கி, பிக்கு, இத்தனை (சிறிது), படுத்தல், நாப்புக்காட்டி, பாச்சு, பெலப்பானோர், நட்டம், காசலை, கங்கணம், வெச்சென்று, சற்பனை, வில்லங்கம், கவடு, ஒலக்கம், நிலக்கம், சில்லாக் கோல், மொக்கிட போன்ற பேச்சுவழக்குச் சொற்கள்

குறவனின் பறவை வேட்டையின்போது இடம்பெறுகின்றன. குறவன் சிங்கியை நினைத்துப் புலம்பும்போது, அவள்மீது கொண்ட சினத்தால் அவளை வங்கணச் சிங்கி, மொங்கி சிங்கி, செறுக்கி, கள்ளி போன்ற வசைச் சொற்களால் (Abusive terms) சுட்டுகின்றான்.

இத்தனை, இத்துக்கிணி, சீனச்சரக்கு, சன்னை, கிறுகிறுப்பு, காமக்காச்சல், மண்டுவேன், மேக்கு, வாய்க்கிறுது, கட்டலையோ, குந்தலையோ போன்ற பல பேச்சுவழக்குச் சொற்கள் குறத்தி தலைவிக்குக் குறி சொல்லும் பகுதியிலும், குறவனுடன் உரையாடும் பகுதியிலும் இடம்பெறுகின்றன.

உயர்வகுப்பைச் சார்ந்த தலைவியின் கூற்றிலும் பேச்சு வழக்குச் சொற்கள் இடம்பெற்றுள்ளன. எடுத்துக்காட்டாக, குற்றாலக் குறவஞ்சியில் வசந்தவல்லி, குறத்தி குறி சொன்னதைத் தடுத்து வினவும் பகுதியைச் சுட்டலாம்:

" நன்றுநன்று குறவஞ்சி நாடகக்காரி இந்த
நாட்டான பேர்க்கான வார்த்தைநான் அறியேனோ
ஒன்றுபோடா மற்குறி சொல்லியே வந்தாய் பின்னை
உழப்பிப்போட் டாய்குறியைக் குழப்பிப் போட்டாய்
மன்றல்வருஞ் சேனைதனைக் கண்டுபயந்தால் இந்த
மையலும் கிறுகிறுப்பும் தையலர்க் குண்டோ
இன்றுவரை மேற்குளிருங் காய்ச்சலும் உண்டோ பின்னை
எந்தவகை என்றுகுறி கண்டு சொல்லடி." (பா.75)

தலைவியும், குறத்தியும் ஒருவரை ஒருவர் எள்ளி நகையாடிப் பேசிக்கொள்ளும் பகுதியில் பேச்சுவழக்குச் சொற்கள் இயல்பாக இடம்பெறுகின்றன

" மோகினியே உன்னுடைய கிறுகிறுப்பெல்லாம் அவன்
மோகக்கிறு கிறுப்படி மோகனக் கள்ளி!" (பா.76)

என்று குறத்தி தலைவியை எள்ளி நகையாடுகிறாள். உடனே தலைவி சினந்து,

" கன்னிஎன்று நானிருக்க நன்னகர்க் குளேஎன்னைக்
காமியென்றாய் குறவஞ்சி வாய்மதி யாமல்
சன்னையாகச் சொன்னகுறி சாதிப்பா யானால் அவன்
தாரும்சொல்லிப் பேரும்சொல்லி ஊரும் சொல்லடி."

என்று கூற, குறத்தி,

" உன்னைப்போல் எனக்கவன் அறிமுகமோ அம்மே
ஊரும் பேரும் சொல்லுவதும் குறிமுகமோ
பின்னையுந்தான் உனக்காகச் சொல்லுவே னம்மேஅவன்
பெண்சேர வல்லவன்காண் பெண்கட் கரசே!"(பா. 77)

என்று விடையிறுக்கின்றாள். உடனே தலைவி,

" வண்மையோ வாய்மதமோ வித்தை மதமோ என்முன்
மதியாமற் பெண் சேர வல்லவன் என்றாய்
கண்மயக்கால் மயக்காதே உண்மை சொல்லடி பெருங்
கானமலைக் குறவஞ்சி கள்ளி மயிலி!" (பா. 78)

என்று குறத்தியை எள்ளி நகையாடுகிறாள்.

தொடர்கள்

" நன்னகரில் ஈசருன்னை மேவ வருவார் இந்த
நாணமெல்லாம் நாளைநானும் காணவே போறேன்
கைந்நொடியிற் பொன்இதழி மாலை வருங்காண் இனிக்
கக்கத்தில் இடுக்குவாயோ வெட்கத்தை அம்மே."
(குற்.குற., பா.79)

என்று தலைவனின் பெயரைக் கேட்டு நாணித் தலை குனியும் தலைவியைக் குறத்தி கேலி செய்யும் பகுதியிலும்,

" பின்னமின்றிக் கூழெனினுங் கொண்டுவா அம்மேவந்தால்
பெரிய குடுக்கைமுட்ட மண்டுவேன் அம்மே
தின்னஇலை யும்பிளவும் அள்ளித்தா அம்மேகப்பற்
சீனச்சரக் குத்துக்கிணி கிள்ளித்தா அம்மே."
(குற். குற., பா. 64:3-4)

என்று குறத்தி தலைவியிடத்து வேண்டும் பகுதியிலும்,

" அடிக்கொரு நினைவேன் சிங்கா ஆசைப்பேய் உனைவிடாது
செடிக்கொரு வளையம் போட்டுச் சிங்கியைத் தேடுவாயே."
(குற். குற., பா. 107)

என்று நூவன் சிங்கனை எள்ளி நகையாடும் பகுதியிலும் பல்வேறு பேச்சுவழக்குத் தொடர்கள் இடம் பெற்றிருக்கக் காண்கிறோம்.

நாட்டுப்புற நம்பிக்கைகளும் சடங்குகளும்

நம்பிக்கை மனித வாழ்க்கையின் அடிப்படையாக விளங்குகின்றது. நகரத்து மக்களைவிட நாட்டுப்புற மக்கள்தாம்

பல்வேறு நம்பிக்கைகளையும், சடங்குமுறைகளையும் மிகுதியாகப் பின்பற்றுகின்றனர்; ஒவ்வோர் இயற்கை நிகழ்விற்கும் காரணமாகத் தெய்வத்தை நம்புகின்றனர். ஆன்றோரின் அனுபவ மொழிகளே, தலைமுறை தலைமுறையாக நம்பிக்கைகளாகவும், சடங்குமுறைகளாகவும், விழாக்களாகவும் விளங்கி வருகின்றன எனலாம்.

நம்பிக்கைகள்

குறம், குறவஞ்சி, குளுவ நாடகம் ஆகியவற்றில் காணப்படும் நம்பிக்கைகளை இரண்டு வகைகளாகப் பிரித்துக் கூறலாம். அவையாவன : (1) குறத்தி குறி கூறுமிடத்து இடம் பெறும் நன்னிமித்தங்கள், (2) வாழ்வியல் நம்பிக்கைகள்.

நன்னிமித்தங்கள்

பல்லி சொல், காகம் இடப்பக்கம் பறந்து செல்லல், பத்தினிப்பெண்களின் வாக்காகிய விரிச்சி, ஆந்தையின் குரல், இடக்கண்ணும் தோளும் துடித்தல், கருடன் வட்டமிடுதல், தும்மல் ஆகிய நன்னிமித்தங்கள் குறம், குறவஞ்சி ஆகிய இலக்கியங்களில் காணப்படுகின்றன.

பல்லிசொல்

"பலபலெனக் கவுளி சொல்லும் பல்லிக்காதல் நல்லதுபார்."
(தியா. குற., பா. 54)

"பல்லி பலபலென்றே உறுத்துறும் ஏவலறியாயோ."
(ஓதா. குற., ப. 175)

"பல்லியும் பலபலென்னப் பகருது." (குற். குற., பா. 65)

எனப் பல்லி பகரும் 'பலபல' ஒலியைப் படம்பிடித்துக் காட்டித் தலைவிக்கு நம்பிக்கையூட்டுகிறாள் குறத்தி.

பல்லி இடப்புறத்தில் நின்று குரல் கொடுத்தால் நன்மை உண்டாகும் என்று கூறுகிறது மீனாட்சியம்மை குறம் :

"இடத்தெழுந்த கவுளி நன்று." (பா. 11)

ஆயின், 'கௌளி சத்தமிட்டுன் வலப்புறத்திற் கத்துதல் கேளம்மே' (பா. 50) என்று சரபேந்திர பூபால குறவஞ்சியும், 'வலப்புறத்தில் கெவுளி காதல் சிறப்பும்' (பா. 51) என்று சிதம்பரக் குறவஞ்சியும் வலப்புறத்தில் பல்லியின் குரல் கேட்பதே நன்மை என எடுத்துரைக்கின்றன. மின்னொளியாள்

குறம் வலம், இடம் என்னாது, 'தலைப்புறத்தில் கெவுளி நின்று சொல்லுதடி பெண்ணே' (ப. 64) எனக் கூறுகிறது. இவற்றை நோக்குமிடத்து, மக்கள் அவ்வச் சூழ்நிலைக்குப் பொருந்தும் வகையில் பார்த்து, நன்மை என நம்பினரோ என்று எண்ணத் தோன்றுகிறது.

'கனத்த பல்லிசொல் நிமித்தம் நன்று காணம்மே' (திரு. குற., பா. 56) என்றும், 'சுகமாய்ப் பல்லி நிமித்தம் வகையுடன் சொல்லுது பாரம்மே' (அழ. குற., கீ. 35) என்றும், 'பல்லி சொல் குறியும்' (தி. ம. ப. குறம், பா. 65) என்றும் பொதுவாகக் கூறிச் செல்லும் போக்கையும் சில குறம், குறவஞ்சி இலக்கியங் களில் காணமுடிகின்றது.

ஆந்தை வீச்சு

குறம், குறவஞ்சி இலக்கியங்களில் ஆந்தை பறந்து செல்வது, கூடு கட்டுவது, குரல் கொடுப்பது ஆகியன நல்ல நிமித்தங்களாகக் குறிப்பிடப்படுகின்றன.

"பருத்த விழியாந்தை ரெண்டும் பாய்ந்து பொங்துள் செல்லுது பார்."

(தியா. குற., பா. 54)

என்றும், 'தேட்டமோரா ஆந்தை கிளை கூட்டுது அருகிற் பாரம்மே' (அழ. குற., கீ. 35) என்றும், 'மேல்புறத்தில் ஆந்தை இட்ட வீச்சுநன் 'றம்மே' (குற். குற., பா. 64) என்றும், 'ஆந்தை குறிக்குங் குறியும் எண்ணில்... நன்னிமித்தம் வழுவாதினி' (தி. ம. ப. குறம், பா. 65) என்றும், 'ஆந்தை பல்காற் சொல்லுதல் காணம்மே' (சர. குற., பா. 50) என்றும் கூறி, இதனால் தலைவன் நிச்சயமாகத் தலைவியைச் சேர்வான் எனக் குறி கூறுகின்றனர் குறத்தியர்.

காகம் பறந்து செல்லுதல்

காகம் இடப்பக்கம் பறந்து செல்வதை நல்நிமித்தமாகக் கூறுகிறது குற்றாலக் குறவஞ்சி :

"காகமுமிடம் செல்லுதே அம்மே." (பா. 64)

கருடன் வட்டமிடுதல்

கருடன் வட்டமிடுவதைக் காட்டி, அதனால் நன்மை உண்டாகும் என்கிறது சிதம்பரக் குறவஞ்சியின் வசனப் பகுதி (ப. 37). 'மிக்க கருடகீர்த்தனம் செய்ததும் வென்றி தானம்மே' (பா. 56) எனத் திருமலையாண்டவர் குறவஞ்சியும் இதனைக்

குறிப்பிடுகின்றது. கருடன் திருமாலின் வாகனம் என்பதனால் அதைக் காண்பதே பெரும் பேறு என்னும் நம்பிக்கை இன்றும் மக்களிடையே நிலவுகிறது. வெண்கழுத்துடன் வானில் பறந்து செல்லும் கருடனைக் கண்டால் அதை வணங்கும் வழக்கத்தினை இன்றும் காணலாம்.

கன்னி வாக்கு

சங்க இலக்கியத்தில் அன்றைய மக்களிடம் காணப்பட்ட 'விரிச்சி கேட்டல்' என்னும் வழக்கம் பற்றிக் கூறப்பட்டுள்ளது. 'கார் காலத்தில் திரும்பி வருவேன்' எனக் கூறித் தலைவியைப் பிரிந்து சென்ற தலைவன், கார்காலம் வந்தும் திரும்பி வராததனால் வருத்தமுற்றுக் கலங்குகிறாள் தலைவி. அவளை ஆற்றுவிக்கும் வகையில் செவிலியர் பல்வேறு கதைகளைக் கூறுகின்றனர்; நெல்லும் மலரும் தூவித் தொழுது விரிச்சி கேட்டு நிற்கின்றனர்; அந்நிலையில், இடைப்பெண்கள் கன்றுகளை நோக்கி, 'இன்னே வருகுவர் நும் தாயர்' என்று கூறியதை நல்வாக்காக எடுத்துக்கொண்டு, அதைத் தலைவிக்குத் தெரிவிக்கின்றனர் (முல்லைப்பாட்டு, 9-20). 'கன்னிப்பெண் கூறிய வாய்ச்சொல்; இது விரிச்சியென்று நூல் வழக்கிலும் அசரீரியென்று உலக வழக்கிலும் வழங்குகின்றது'[29] என்று உ. வே. சாமிநாதையர் கூறுவதும் இங்கே குறிப்பிடத்தக்கது.

இக்கன்னி வாக்கினை, 'கன்னி தான் இசைத்த வாய்ச் சொல் நன்மை' (திரு. குற., பா. 56) என்று திருமலையாண்டவர் குறவஞ்சியும், 'அங்கோர் காரிகை தான் வீதியில் வந்தேன் எனலோர் அம்மே' (பா. 50) என்று சரபேந்திர பூபால குறவஞ்சியும், 'கன்னி சொன்ன பேச்சு நன்று அம்மே' (பா. 64) என்று குற்றாலக் குறவஞ்சியும், 'கன்னிமார் வந்து இக்குறி நன்றெறன்கின்றார்' (பா. 11) என்று மீனாட்சியம்மை குறமும் எடுத்துரைக்கின்றன.

இடக்கண் துடித்தல்

பெண்களுக்கு இடக்கண் துடித்தல் நன்மை என்னும் ஒரு நம்பிக்கை மக்களிடையே நிலவி வருகின்றது. 'உன்றனுட கண்ணும் இடத்தோளும்...த்திசெய் துடிப்பு' (பா. 51) என்று சிதம்பரக் குறவஞ்சியும், 'இடக்கண்ணுந் துடிக்கின்றது' (பா. 11) என்று மீனாட்சியம்மை குறமும் இதனைக் குறிப்பிடுகின்றன.

**தும்மல்**

'தும்மலு நல்லதே காண்' (பா. 27) என்று மீனாட்சியம்மை குறமும், குற்றாலக் குறவஞ்சியும் (பா. 64) தும்மலை நன்னிமித்தமாகக் கூறுகின்றன.

**மூச்சுக்காற்று**

மூக்கிலிருந்து வருகின்ற மூச்சுக்காற்றும் நுட்பமாக நமக்கு நிறைவான நல்லவற்றையே காட்டுகின்றது என்று மூச்சுக் காற்றையும் நன்னிமித்தமாகக் கூறும் போக்கினைக் குற்றாலக் குறவஞ்சியில் காண்கிறோம்:

''சரம் சூட்சமாகப் பூரணத்தை வெல்லுதே அம்மே.'' (பா. 64)

## நம்பிக்கைகள்

**கூடலிழைத்தல்**

கூடல் இழைத்தலாவது காதல் கொண்ட பெண்கள் பூமியில் மணலைப் பரப்பிக் கண்களை மூடிக்கொண்டு தம் முடைய நான்கு விரல்களையும் மடக்கிச் சுட்டு விரலால் வட்டமாகக் கீறி, கீறும்போது ஊன்றிய இடத்தில் சுட்டுவிரல் நுனி வந்து பொருந்தியதா என்று பார்த்தல். அங்ஙனம் பொருந்துவது நாயகன் வருவான் என்பதையும், பொருந்தாதது நாயகன் வரமாட்டான் என்பதையும் காட்டும் குறி என்பர்.[30] குற்றாலக் குறவஞ்சியில், தலைவி வசந்தவல்லி, தன் கைவளை களே கிணற்றின் கரைகளாக விளங்க, நடுவே அவள் விடும் கண்ணீரே தண்ணீராகப் பெருக,

''பாடிமறை தேடியநாயகர்
பன்னகர்பணி நன்னகர்நாயகர்
பாவலர்மனுக் காவலர்நாயகர்
பதஞ்சலி பணிதாளர்
கோடியமதி சூடியநாயகர்
குழல்மொழிபுணர் அழகியநாயகர்
குறும்பலாவினிற் கூடுவர்
ஆமெனிற் கூடலே நீகூடாய்.'' (பா. 47)

என்று பாடிக் கூடல் இழைப்பதாகக் கூறப்படுகின்றது. அழகர் குறவஞ்சியில் வரும் தலைவி மனச் சோர்வுடன் கூடலிழைக் கிறாள்; கூடல்குறி சேரப் பெற்றதும் அவள் மனம் மிகவும் மகிழ்கிறது. இதனைத் 'தழைத்தாள் மகிழ்ந்து' (பா. 33) எனச் சுட்டுகின்றது அழகர் குறவஞ்சி. இவ்வாறே, சிவன்

மலைக் குறவஞ்சி (பா. 63), இரிஷிவிந்தக் குறவஞ்சி (ப. 19), திருமலையாண்டவர் குறவஞ்சி (பா. 37), சோலைமலைர் குறவஞ்சி (பா. 82, 83) முதலிய பல குறவஞ்சிகளும் தலைவியக் கூடல் இழைத்துப் பார்ப்பதைக் கூறுகின்றன.

**கண்ணேறு கழித்தல்**

திருமணம், வளைகாப்பு, பிள்ளைப்பேறு போன்ற ஒவ்வொரு சிறப்பான வாழ்க்கை நிகழ்ச்சியின்போதும் கண்ணேறு கழிக்கும் வழக்கம் மக்களிடையே நிலவி வருகின்றது. துரோபதை குறம், மின்னொளியாள் குறம் ஆகிய இரண்டிலும் இவ்வழக்கம் கூறப்பெற்றுள்ளது. கர்ப்பூரம் எரித்துத் தலையைச் சுற்றி எறிதல், கரும்புள்ளி, செம்புள்ளி குத்திப் பூசனிக்காயைத் தொங்க விடுதல், செஞ்சாந்தில் சோற்றுருண்டையை நனைத்து நாற்புறமும் வீசி எறிதல், தேங்காய் உடைத்தல் போன்ற பல வகைகளில் இக்கண்ணேறு கழித்தல் நிகழ்கின்றது.

துரோபதை குறத்தில், துரோபதை குறத்தி வேடம் அணிந்து, நாட்டின் நிலைமையை அறிந்துவரப் புறப்படு கின்றாள். அப்பொழுது பாண்டவர்கள் அவளுக்குக் கண்ணேறு கழித்ததை,

> ''பூமியைக் கிள்ளியல்லோ பொட்டிட்டார் துரோபதைக்கு
> திருஷ்டி சுழட்டியவர் தெருவெங்கும் விட்டெறிந்தார்.'' (ப. 14)

என்று கூறுகின்றது துரோபதை குறம். மின்னொளியாள் குறத்தில், குறத்தி வேடம் அணிந்த அருச்சுனனுக்கு, துரோபதையும் அல்லியும் கண்ணேறு கழிக்கின்றனர்:

> ''சீரான பொற்கலத்தில் செஞ்சோறும் வெண்சோறும்
> காட்டிச் சுழற்றியே கதிரோன்முன் விட்டெறிந்தார்
> திக்குச் சுழற்றியே திசைநான்கும் விட்டெறிந்தார்.'' (ப. 28)

மேலும், அருச்சுனக் குறத்தி மின்னொளியை நீராட்டி அலங்கரிக்கும்போது, 'நீர்காட்டி ஊதியே நிலங்கிள்ளிக் காப்பு மிட்டு'க் (ப. 76) கண்ணேறு கழித்ததை, அக்குறத்தின் பிற்பகுதியில் காணமுடிகின்றது.

துரோபதை குறமும், மின்னொளியாள் குறமும் தெரு மணலைத் திருநீறாக எண்ணிப் பூசும் மக்கள் வழக்கத்தினையே 'நிலங்கிள்ளிக் காப்புமிட்டு' எனக் குறிப்பிடுகின்றன. சிறு குழந்தையினைக் குளிப்பாட்டிய பின்னர், எஞ்சியிருக்கும் நீரில் ஓரிரு துளிகளை அதன் தலையைச் சுற்றி வாயில் ஊற்றும்

வழக்கம் இன்றும் மக்களிடையே உண்டு. இம்மரபைத்தான் 'நீர்காட்டி ஊதி' என மின்னொளியாள் குறம் குறிப்பிடு கின்றது போலும். திருஷ்டி சுழற்றியெறிதல், நிலங்கிள்ளிக் காப்பிடுதல், நீர்காட்டி ஊதுதல் ஆகிய மூன்று வகையான கண்ணேறு கழிக்கும் முறைகள் இவ்விலக்கியங்களில் கூறப் படுகின்றன.

## சடங்குகள்

குறம், குறவஞ்சி, குளுவ நாடகம் ஆகியவற்றில் காணப் படும் சடங்குகளையும் இரண்டு வகையாகப் பிரிக்கலாம். அவையாவன: (1) குறி கூறும்பொழுது கையாளப்படும் சடங்குகள், (2) பறவை வேட்டையின்பொழுது கையாளப் படும் சடங்குகள்.

### குறி கூறும்பொழுது கையாளப்படும் சடங்குகள்

நாட்டுப்புற மக்கள் தெய்வ நம்பிக்கை மிகுந்தவர்கள். 'எல்லாம் தெய்வச் செயல்' என்று நம்புவதாலேயே ஒரு செயலில் ஈடுபடுமுன்னர் தெய்வங்களை வணங்கிப் பிறகு அச் செயலில் ஈடுபடும் வழக்கம் அவர்களிடம் காணப்படுகின்றது. குறம், குறவஞ்சி இலக்கியங்களில் வரும் குறத்தியரும் சில சடங்குகளைச் செய்தபின்னரே தம் குலத் தொழிலான குறி கூறலைத் தொடங்குகின்றனர்.

'சித்திரச் செம்பொன் மேடைமீதில் செம்பவளக் கால் நிறுத்திக் கொத்து முத்துப் பந்தல் இட்டுக் கோலமிட்டு நடுவில் ஒரு பைம்பொன் கும்பம் வைத்து, நவமணியால் தோரணம் அமைத்து, கொந்தலர்ச் சரங்கள் இட்டுக் குளிரும் பன்னீர் தெளித்து, இந்திர நீலப் பலகைமேல் தந்திமுகனை அமைத்துச் சாம்பிராணி தூபம் இட்டுக் கந்த கஸ்தூரி நிறைத்துக் கற்பூர தீபமும் வைத்துக் கொப்பரை, அவல், மோதகம், கோதிலாப் பொரிவிளங்காய், முப்பழம், கற்கண்டு, சீனி படைத்து, வேலவர்க்குத் தேனும், தினைமாவும் வைத்து, ஒப்பிலாத வள்ளி காதில் ஓலை, முத்துமாலை வைத்து, தேவ தீர்த்த நீராடி, வெண்ணீறணிந்து சொர்ண வர்ணப் பட்டுடுத்திச் சென்னல் நிறைநாழி முத்துச் செங்கையால் அளந்து வைத்துச் சன்னதி முன்னே படைத்து'த் (பா. 47) தயவாய்க் குறி கேட்கு மாறு தலைவியிடம் வேண்டுகிறாள் தியாகேசர் குறவஞ்சியில் வரும் குறத்தி. தரை மெழுகிக் கோலமிடுதல், நிறைநாழி நெல்லளந்து பிள்ளையார் உருப்பிடித்து வைத்து, அதற்கு

அறுகம்புல் சார்த்தி, தூபதீபம் இட்டு, பழம், தேங்காய் முதலியன படைத்தல் ஆகியன பெரும்பான்மையான குறவஞ்சி களில் காணப்படுகின்றன.[31]

"ஓதுவித்த கூலி ஒருகாசு நின்றாலும், பாதிவித்தை தானும் பலியாது மாதாவே' என்றபடி, ஆசிரியருக்குரிய சம்பளத்தைத் தராவிட்டால் தங்களுக்குப் படிப்பு வராது என்ற நம்பிக்கையில் நாட்டுப்புற மக்கள் வாழ்ந்தனர்''[32] என்பர். அதைப்போலக் குறி கூறும் வித்தைக்கும் தட்சணை குறிக்கப் பெறுகின்றது மீனாட்சியம்மை குறத்தில் வரும் குறத்தி, முதலில் தூசும் (ஆடை), ஒரு காசும் வேண்டுகிறாள் (பா. 10). ஓதாளர் குறவஞ்சியில் வரும் குறத்தி,

" மாத்திரைக் கோலுக்குப் பூர்த்திபெற நல்ல
மாணிக்க முந்தொரு காணிக்கைவை
சேத்திய மணிக்குறக் கூடைக்கு முன்பாய்த்
தெக்ஷணை வைக்கப் பின்நிற்காதே.'' (ப. 174)

என்று தன் மாத்திரைக்கோலுக்கும், குறக்கூடைக்கும் தட்சணை வேண்டுகிறாள். பாம்பண காங்கேயன் குறவஞ்சியில் வரும் குறத்தியும் குல தெய்வமாகிய சுப்பிரமணியருக்கு ஒரு தங்கக் காசும், குறக்கூடைக்கும், மாத்திரைக்கோலுக்கும் சேர்த்து ஐந்து பணமும், கன்னிமாருக்கு மஞ்சள் சேலைதன்னில் பத்துப் பொன்னும் தட்சணையாக வேண்டுகிறாள் (ப.81). குறி கூறுதலை ஒரு வித்தையாகக் கருதியமையையும், அதற்குத் தட்சணை பெறும் வழக்கம் இருந்தமையையும் இப்பகுதிகளால் அறிய முடிகின்றது.

பின்னர், குறத்தி தன் குல தெய்வங்களைப் போற்றித் துதித்துத் தனக்குக் குறிமுகம் காட்ட வேண்டுகின்றாள். இப்பகுதியில் அவ்வத் தலத்துக் கடவுளரை முதலில் வழிபடும் குறத்தி, பின்னர்ப் பல சிறு தெய்வங்களையும் பணிகின்றாள்.

அம்பல விநாயகர், குழல்மொழி இடத்தார், குற்றால நங்கை, குறும்பலா உடையார் (குற். குற.), ஆதிகும்பேசர், குடந்தை மங்கைச்சி, கோமளவல்லி, பேராரவாரப் பிள்ளையார் (கும். குற.), இரட்டைப் பிள்ளையார், பெரிய நாயகி, பெருவுடையார், வெள்ளைப் பிள்ளையார் (சர. குற.), பதினெட்டாம்படிக் கறுப்பன், வீர ஹனுமந்தன் (அழ. குற.) போன்ற அவ்வத் தலத்துக் கடவுளரைக் குறத்தி கும்பிடுவது சைவ, வைணவ சமயத்தைச் சார்ந்த அனைத்துக் குறவஞ்சி களிலும் காணப்படுகின்றது.

இவர்களையன்றி, அருட்சொரிமுத்து, எக்கலாதேவி, ஐயனார், கனதுடிக்கறுப்பர், கால பைரவர், காளி, துர்க்கை, பன்றிமாடன், பிடாரி, வன்னியராயர் (குற்.குற.), ஆகாச வாணி, ஏகாசனத்தி, கண்ணனூர்மாரி, கால பயிரவி, குலோத்துங்க காளி, சாமாரரூபி, பாவ விநாசர், பெருத்த கோரக்கர், பேரையூர்ச் சாத்தர் (கும். குற.), அகோரருத்ரன், ஐயம்பிடாரி அம்மன், குருமதுரைவீரன், கோமளப் பவள வண்ணன், சக்கதேவி, முத்துமாரி. மொட்டைக் கோபுரத்து மாமுனி, வீரபத்ரன் (அழ. குற.), ஆலடியண்ணா; கறுப்பண்ண ராயன், குமரராயன், குலவிளக்கம்மன், குளத்தடிக்கன்னி, கொறளி, செல்லாண்டியம்மன், சென்னராயன், சொக்கநாச்சி, நாச்சியண்ண நல்லயன், பகவதியம்மன், பச்சைநாயகி. பட்டத்தலைச்சி, பட்டிநாயகன், பத்திரகாளி, பதினெட்டாம் படிக்கறுப்பணன், பிச்சாயி, மதுரைவீரன், மலைகாவலன், மலையம்மை, முனியப்பன், முத்துமாரி, வேம்படியண்ணன் (பாம். குற.), அதிகார மாதங்கி, அமுதப்ரசங்கி, எல்லம்மை, கரதல கபாலி, குறக்கூடைத்தாய், கொல்லாபுரத்தம்மா, கௌமாரி, சத்தமாரி, பகவதி, பர்வத வேதாளி, பாதாள மகமாயி, திரிசூலி, மகிடகங்காரி, மல்லிகாபரணசூரி (தியா. குற.), ஆதிநாயகன், இசக்கி, இடும்பசுவாமி, திருமலைக் கறுப்பன், துட்டராயன், பட்டராயன், பூதநாயகன், மணி கண்டன், மாடன், வன்னியராயன் (திரு. குற) என்று சிறு தெய்வங்களின் பட்டியல் ஒவ்வொரு குறவஞ்சியிலும் நீண்டு கொண்டே செல்கின்றது.

சத்த கன்னியர், முருகன், வள்ளி, காளி, விநாயகர் ஆகியோர் அனைத்துக் குறவஞ்சிகளிலும் கூறப்படும் தெய்வங்கள் ஆவர்.

பெத்லகேம் குறவஞ்சியில், இயேசு பெருமானின் ஒவ்வொரு குணநலனையும், அவர் வாழ்வில் நிகழ்ந்த வியத்தகு நிகழ்ச்சி களையும் கூறி வணங்கும் முறை காணப்படுகின்றது.

சோலைமலைக் குறவஞ்சியில் பன்னிரு ஆழ்வார்களையும், திருக்கோட்டியூர் நம்பி, திருவாய்மொழிப்பிள்ளை, சோலை மலைச் சீயர், பெரியவாச்சான்பிள்ளை, நாலூர் ஆச்சான், உய்யக்கொண்டார், மணக்கால் நம்பி, மணவாள மாமுனி, நாதமாமுனி, பராங்குசநம்பி, மதுரகவி நம்பி போன்ற வைணவப் பெரியார்களையும், சத்தகன்னிமார், சக்கதேவி,

துவார பாலகர், பதினெண்படிக் கறுப்பர், திக்கிலெட்டுப் பாலகர் ஆகியோரையும் துதிக்கின்றாள் குறத்தி.

சிறுதெய்வ வழிபாடு அக்காலத்தில் சிறப்புற்றிருந்தமை யையே இவை உணர்த்திநிற்கின்றன எனலாம்.

குறத்தி, இத்தெய்வங்களை வணங்கி முடிக்கும்தறுவாயில் ஏதேனும் ஒரு தெய்வமேறப்பட்டு, தெய்வ வாக்காகக் குறியுரைக்கின்றாள். சக்கதேவி, குறளிப்பேய், எக்கலாதேவி, கறுப்பன் ஆகிய தெய்வங்கள் இங்குக் குறிமுகத்தெய்வங்களாக விளங்குகின்றன. இன்றைய வழக்கிலும் தெய்வமேறிக் குறி சொல்லுதல் காணப்படுகின்றது. முருகன், காளி, கறுப்பன், முனியாண்டி, ஏழுமலையான் போன்ற ஒருசில தெய்வங்களே தெய்வமேறியவர் மனத்தில் தங்கிக் குறி கூறுவது இங்குப் குறிப் பிடத்தக்கது.

பறவை வேட்டையின்பொழுது கையாளப்படும் சடங்குகள்

நாட்டுப்புற மக்கள் தம் செயல் நன்கு நிறைவேறுதற் பொருட்டுத் தெய்வங்களை வணங்கி 'இன்னின்ன பொருளைக் காணிக்கையாக்குகிறேன்' என்று வேண்டிக் கொள்ளும் வழக்கம் இன்றும் உண்டு. அறுவடை முடிந்த பின்னர், குல தெய்வங் களுக்குப் பொங்கல் இடுவதும், மாவிளக்கு எடுப்பதும் இன்றும் காணப்படும் செயல்களாகும்.

> "தூரத்துக் கோயிலுக்குத் தூண்டாவிளக் கேற்றுவிப்பார்
> காதத்துக் கோயிலுக்குக் காணிக்கை போடுவிப்பார்".[33]

என்னும் நாட்டுப்புறப் பாடல் வரிகள், பிள்ளைப்பேற்றிற்காகக் காணிக்கை செலுத்தியமையை எடுத்துரைக்கின்றன. இதைப் போலவே, குறவர்கள், பறவை வேட்டையாடத் தொடங்கும் பொழுது தெய்வங்களை வேண்டுதல் குறவஞ்சி, குளுவ நாடகம் ஆகியவற்றில் காணப்படுகின்றது.

> " எண்ணிய பறவைகள் சிக்கினாற் பிரகதீசர்
> இளைய பிள்ளையா ரேறித் திரிந்திட
> வண்ண மயிலொன்று விடுவோ மெனநன்றாய்
> மனத்திற் றிடமாகக் குறித்துக்கொண் டிங்கேநீ—
> கண்ணி குத்தடா குளுவா." (பா. 58)

என்று சிங்கன் குளுவனிடம் கூறுவதனால், கோவிலுக்கு மயில் விடும் வழக்கம், அக்காலத்தில் இருந்தது என்பதை அறியலாம்.

தெய்வங்களை வணங்கியே கண்ணி பதிக்கும் வழக்கத்தை அனைத்துக் குளுவ நாடகங்களும் எடுத்துரைக்கின்றன.

> " ஆருகடன் நின்றாலும் மாரிகடன் ஆகாது
> மாரிகடன் தீர்த்தவர்க்கு மனக்கவலை தீருமம்மா."[34]

என்னும் பாடல் தெய்வக் காணிக்கையைச் செலுத்தாமல் இருத்தலாகாது என்னும் பாமர மக்களின் நம்பிக்கையை உணர்த்துகின்றது. ஒரு தாய் தன் குழந்தையைத் தாலாட்டிப் பாடும் பாடலிலும்

> "நேத்திக்கடன் நிறைவேற்றினேன்—கண்மணியே
> நெய்விளக்கு ஏற்றிவைத்தேன்."[35]

என்று தான் நேர்ந்து கொண்ட காணிக்கையைச் செலுத்திய தாகப் பாடுகின்றாள். குளுவ நாடகத்தில் வரும் குளுவனும் தான் வேண்டிக் கொண்டவாறே சில பறவைகளைத் தெய்வங் களுக்குக் காணிக்கையாக்குகின்றான்.

> "கொஞ்சும் மயில்ரெண்டு ரஞ்சிதமாக யெடுத்துவா
> முத்துக்குமரக் கடவுள் துணையுண்டென்று கொடுத்துவா."
> (பா. 33)

என்று சின்னமகிபன் குளுவ நாடகத்தில் வரும் குளுவனும்,

> "பூவுலகிலுள்ள யாவருக்கும் பக்ஷி அய்யே
> நான்சொன்னபடி நீ எடுத்துச் சில்வுதான் செய்யே
> கலங்காத கண்ட விநாயகர் சன்னிதி முன்னம்மனங்
> கலங்காமற் கொண்டுபோய் சேர்த்திடுவாய்
> வெள்ளையன்னம், அலங்காரமாகச் சடையிலணிவதற்கு
> மாதை ஐஞ்ஞூற்றீசர் தமக்குக் கொடுத்திடு ஓர்கொக்கு."
> (பா. 44)

என்று அருணாசலம் செட்டியார் குளுவ நாடகத்தில் வரும் குளுவனும் முருகன், விநாயகர், ஈசன் ஆகிய தெய்வங்களுக்குப் பறவைகளைக் காணிக்கையாக்கும் வழக்கத்தினைக் குறிப்பிடு கின்றனர்.

க. கைலாசபதி, 'சமூகவியலும் இலக்கியமும்' என்னும் நூலில் குறிப்பிடுவது போல, "உழவரும், குறவரும், பள்ளரும் இலக்கியக் கதாபாத்திரங்களாக உயர்த்தப்பட்ட அக்காலப் பகுதியிலே இசை நாடகங்கள் பல தோன்றின. குறம், குற வஞ்சி, உழத்திப்பாடல், நொண்டி நாடகம், பள்ளு முதலிய இலக்கிய வகைகள் தோன்றுதற்குப் பாமரராகக் கொள்ளப் பட்ட மக்கள் வாழ்க்கையே அடிநிலையாக அமைந்தது என்பதை எவரும் மறுக்க முடியாது. கற்றோர் மட்டுமன்றி மற்றோரும் அனுபவித்து இன்புறத்தக்க வகையில் இன்றுவரை நின்று நிலைக்கும் மதுரை மீனாட்சி குறம், திருக்குற்றாலக் குறவஞ்சி, முக்கூடற்பள்ளு முதலிய இசை தழுவிய நூல்கள் நாட்டார் இலக்கியங்களை ஆதாரமாகக் கொண்டு தோன்றி அவற்றினூடாக அவர்தம் வாழ்க்கையையும் அழகுணர்ச்சி யுடன் காட்டுகின்றன."[36]

குறிப்புக்கள்

1. தமிழண்ணல், சங்க இலக்கிய ஒப்பீடு—இலக்கியக் கொள்கைகள், ப. 186.
2. இம்மூன்று குறங்களையும் 'Ballad from folklore' என்னும் பிரிவில் அடக்குகிறார் மு. அருணாசலம்.
   —M. Arunachalam, Ballad Poetry, pp. 165—166.
3. இக்கதைக் கூறுகள் மகாபாரதத்தில் இடம்பெற வில்லை என்பது குறிப்பிடத்தக்கது. குற இலக்கியச் செல்வாக்கினையே இவை உணர்த்து கின்றன எனலாம்.
4. க. கைலாசபதி, ஒப்பியல் இலக்கியம், ப. 71.
5. "Repetition can be devided into two: 1. Continuous 2. Discontinuous."
   —S. Sakthivel, Folklore Literature in India, p. 10.
6. "குறவஞ்சிகளில் காணப்படும் இராகங்கள் யாவும் சுத்தமான நாட்டுப்பாடல் மெட்டுக்களுடன் கூடிய ரக்தி ராகங்களேயாகும்."

   —வே. பிரேமலதா (பதிப்.), தியாகேசர் குறவஞ்சி, முன்னுரை, ப. 26.
7. மு. அருணாசலம் (பதிப்.), பொய்யாமொழியீசர் குறவஞ்சி, முன்னுரை, ப. 23.
8. தமிழண்ணல், ஒப்பிலக்கிய அறிமுகம், ப. 129.
9. நச்சினார்க்கினியர் (உரை.), தொல்காப்பியம், ப. 292.
10. தமிழண்ணல், சங்க இலக்கிய ஒப்பீடு—இலக்கியக் கொள்கைகள், ப. 191.
11. உ. வே. சாமிநாதையர் (பதிப்.), ஸ்ரீ சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தங்கள், ப. 307.
12. எஸ். கல்யாணசுந்தரையர் (பதிப்.), கும்பேசர் குறவஞ்சி நாடகம், குறிப்புரை, ப. 39.
13. உ. வே. எஸ். கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் (பதிப்.), சோலைமலைக் குறவஞ்சி, விளக்கவுரை, ப. 33.

14. வேதநாயக சாஸ்திரியார், பெத்லகேம் குறவஞ்சி, முகவுரை, ப. V.

15. நச்சினார்க்கினியர் (உரை.), தொல்காப்பியம், செய் யுளியல், ப. 231.

16. இளம்பூரணர் (உரை.), தொல்காப்பியம், பொருளதி காரம், ப. 521.

17. பேராசிரியர் (உரை.), தொல்காப்பியம், பொருளதி காரம், 390.

18. 'ஒலி கொடுக்கும் விளக்கு அல்ல
சூடு கொடுக்கும் தீ அல்ல
பளபளக்கும் தங்கம் அல்ல—அது என்ன?'
(விடை: சூரியன்)
இத்தகைய விடுபுதிர்களை எதிர்மறுத்தல் விடுபுதிர் களாக விளக்குகின்றார் ஆறு. இராமநாதன். — ஆறு. இராமநாதன், தமிழில் புதிர்கள்—ஓர் ஆய்வு, ப. 44.

19. தமிழண்ணல், ஒப்பிலக்கிய அறிமுகம், ப. 133.

20. ஆறு. இராமநாதன், மு. நா. ப. 42.

21. கலைக்களஞ்சியம், தொகுதி 5, ப. 318.

22. குறவஞ்சிகளின் யாப்பு அமைப்பு ஐந்தாவது பின்னிணைப்பில் இடம் பெற்றுள்ளது

23. 'ஒரு சிந்துப் பாட்டில் வரும் ஒவ்வொரு சிந்தும் கண்ணி எனப்படும்.'
—குழந்தை, யாப்பதிகாரம், ப. 94.

24. குற். குற., பா. 16; சர. குற., பா. 10; சோலை. குற., பா. 41; திரு. குற., பா. 13. பெத். குற., ப. 27; தியா. குற., பா. 8, குறு. குற., பா. 7; கிரு. குற., ப. 22; ஒதா. குற. ப. 133; கும். குற., பா. 14.

25. குற். குற., பா. 17, 18; சர. குற., பா. 11; திரு. குற., பா. 14; பெத். குற.,பக். 27—28; குறு. குற. பா, 8.

26. அழ. குற., கீ. 12; சோலை. குற., பா. 42; தியா. குற., பா. 9; கிரு. குற., பக். 22—23; ஒதா. குற., பக். 133—134; கும். குற., பா. 15.

27. செ. அன்னகாமு, ஏட்டில் எழுதாக் கவிதைகள், பக். 82—83.

28. பேச்சுவழக்குச் சொற்பட்டியல் ஆறாவது பின்னிணைப்பில் இடம்பெற்றுள்ளது.

29. உ. வே. சாமிநாதையர் (பதிப்.), திருமலையாண்டவர் குறவஞ்சி, குறிப்புரை, ப 27.

30. பு. சி. புன்னைவனநாத முதலியார் & செ. ரெ. இராமசாமி பிள்ளை (உரை.), திருக்குற்றாலக் குறவஞ்சி, விளக்கவுரை, ப. 53.

31. குற். குற., பா. 66; கும். குற., பா. 69; சர. குற., பா. 49; இரு. குற., பக். 46—48; திரு. குற., பா. 58; சோலை. குற., பா. 117; அழ. குற. பா. 36; பா. 61.

32. அ. மு. பரமசிவானந்தம், 'நாடோடிப் பாடல்கள் காட்டும் நம்பிக்கை', நாட்டுப்புற இலக்கியப் பார்வைகள், ப. 15.

33. அ. மு. பரமசிவானந்தம், மு. நூ., ப. 14.

34. அ. மு. பரமசிவானந்தம், மு. நூ., ப. 22.

35. இ. வா. ஜகந்நாதன் (தொகுப்.), மலையருவி, ப. 253,

36. க. கைலாசபதி, சமூகவியலும் இலக்கியமும். பக். 140—141.

# 7. வாழ்வியல் செய்திகள்

குறம், குறவஞ்சி, குளுவ நாடகம் ஆகிய இலக்கிய வகைகள் மதுரை, தஞ்சாவூர், குற்றாலம், கும்பகோணம், திருவாரூர், அலகுமலை, விராலிமலை, சிவன்மலை, நகுலமலை, சோலை மலை, திருமலை, குன்றக்குடி, குறுக்குத்துறை, திருக்குருகூர், சிதம்பரம், சிக்கல், திருப்பாகை, மண்ணிப்படிக்கரை, தேவ கோட்டை, கோட்டூர் எனத் தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில் தோன்றியுள்ளன. பரந்துபட்ட நிலப்பரப்பில் எழுந்துள்ள மையின், இவை ஆங்காங்கே வாழும் குறவர் இன மக்களின் வாழ்வியலைக் கற்பனை நயத்துடன் பல்வேறு வகையாக எடுத்துக்காட்டுகின்றன. குறம், குறவஞ்சி, குளுவ நாடகம் என்னும் இலக்கியங்கள் காட்டும் குறவர் வாழ்வியலை இவ்வியலில் காணலாம்.

### சாதிப் பிரிவுகள்

குறவஞ்சியில் வரும் குறத்தியர், தம் சாதியை உயர்த்திக் கூறுவதில் பெருமை கொள்கின்றனர். குறவர்கள் அவரவர் செய்யும் தொழிலுக்கேற்ப உப்புக்குறவர், கறிவேப்பிலைக் குறவர், கூடைகட்டிக் குறவர், காவடிக் குறவர், செருப்புக் குத்திக் குறவர் எனப் பல்வேறு வகையாக அழைக்கப்படு கின்றனர்.[1] வள்ளிநாயகி குறவர் குலத்தில் தோன்றி, முருகப் பெருமானை மணந்து கொண்டதைக் கூறாத குறவஞ்சி இலக்கியம் இல்லை எனலாம்.

> " வள்ளியம்மை எங்கள்குலம் புகுந்தாள்—வேங்கை
> மரமாகி வேலவனார் மணஞ்செய்ய உகந்தோம்
> தெள்ளிசையாய் வருகருமந் தெரிந்தேநான் சொல்லுவதாம்
> தேன்மொழி கேள்நாங்கள் தெய்வக்குறச் சாதி. "
>
> (பா. 38 : ச)

என்று மண்ணிப்படிக்கரை நீலகண்டர் குறவஞ்சியில் வரும் குறத்தியும்,

" பின்னமிலாச் சிவகுலந்திற் பெண்கொடுத்த நலத்தாற்
பேருலகில் எங்குலத்தைப் பின்னஞ்சொல்லப் படுமோ."
(ப.30)

என்று இரிஷிவிந்தக் குறவஞ்சியில் வரும் குறத்தியும், தம் சாதி தெய்வக் குறச்சாதி என்பதைப் பெருமையுடன் எடுத்தியம்பு கின்றனர்; தம்மை 'ஞானக் குறத்தி' (கும். குற., பா.41) என்றும், 'தெய்வக் குறத்தி' (தியா. குற., பா.26) என்றும் கூறிக் கொள்கின்றனர்.

வள்ளியைக் கந்தவேளுக்கு மணமுடித்துக் கொடுத்தமையின் 'செந்திருமால் எனக்கு மைத்துனன், திங்களணி சிவன் தமையன், கந்தன் மருமகன்' (பா. 37:3) என்று தெய்வங் களெல்லாம் தமக்குச் சுற்றம் ஆயினமையை எடுத்துரைக் கின்றாள் சரபேந்திர பூபால குறவஞ்சியில் வரும் குறத்தி.

மண்ணிப்படிக்கரை நீலகண்டர் குறவஞ்சியில் வரும் குறத்தி, தன் சாதியைப் பற்றிக் குறிக்குமிடத்து,

" கானி லுப்புக் குறவர் நாங்க ளல்ல—பூனை
காகந் தின்று கூடைமுறங் கட்டுங்குற மல்ல
மான மில்லா நிலக்குறவ ரல்ல – மண
மாகிமறு மணம்புணரும் வசைக்குறவ ரல்ல. "
(பா. 38:அ)

என்று கூறுவதும், காங்கேயன் குறவஞ்சி, தியாகேசர் குறவஞ்சி ஆகியவற்றில் வரும் குறத்தியர், 'பொய்க்குறி சொல்லுவது பூனைக் குறச் சாதி' (காங். குற., பா. 63; தியா. குற., பா.27:3) என்று கூறுவதும் குறவர்களில் பல்வேறு வகையினர் உளர் என்பதை நிறுவுகின்றன. குற்றாலக் குறவஞ்சியில், குறவனின் கையாளான நூவன், 'பூனைகுத்தி நூவன்' என்னும் அடை மொழியால் சுட்டப்படுவதும் மேற்கூறிய கருத்திற்கு அரணாகும். மேலும் சரபேந்திர பூபால குறவஞ்சியில் வரும் குறத்தி,

" கூடைகட்டலை முறங்கட்டலையோ வென்னக்
குயில் கூவுநல் போலக் கூவிக்கொண்டும்
பச்சை குத்தலையோ அடியம்மே பிச்சை
பகர்குறி கேளுங்கள் சொல்கிறேன்." (பா. 33:2, 3)

என்று கூவிக்கொண்டும் வருவது, குறவரில் பல்வேறு பிரிவினர் உள்ளனர் என்பதை மெய்ப்பிக்கும் வகையில் அமைந்துள்ளது எனலாம். ஈ. தர்ஸ்டன், 'தென்னிந்தியப் பழங்குடியினரும் சாதியினரும்' என்னும் தம் ஆங்கில நூலில், குறவர், தாம் ஏற்கும் தொழில் முறைக்கேற்ப அழைக்கப்படுகின்றனர் என்பதனை நன்கு எடுத்துக்காட்டியுள்ளார்.[2]

பல்வேறு பிரிவினர் இருப்பினும், குறவர் இனத்தைப் போது, பெந்தி (ஆண், பெண்) என்னும் இரண்டு பெரும் பிரிவுகளில் அடக்கிவிடலாம் என்று கூறுவர்.[3] கும்பேசர் குறவஞ்சியில் வரும் குறத்தி, 'ஆண் பெண் ணிரண்டு சாதியல்லவோ' (பா. 36) எனக் குறிப்பிடுவது இக்கருத்தினை வலியுறுத்துவதாக அமைந்துள்ளது.

குடிசை

குன்றில் வாழ்ந்ததால் குறவர் என்று அழைக்கப்பட்ட இம் மக்களுக்கு யானைத் தந்தம், மான் கொம்பு, புனுகு, சவ்வாது, சந்தனம் போன்ற அரிய பொருட்கள் எளிதாகக் கிடைத்தன. இதனை மனத்திற் கொண்ட குறவஞ்சி ஆசிரியர்கள், குறவர் களின் குடிசை, கிடைத்தற்கரிய பொருள்களால் அமைக்கப் பட்டிருந்தது என்று கற்பனை நயத்தோடு கூறுகின்றனர்.

"மாணிக்கத்தால் மதிலெடுத்து மரகதத்தால் தூண்நிறுத்தி
வாசனைகள் வீசும் சந்தன வனப்பலகை சேர்த்து
ஆணித்தர மாக ஆனைக் கொம்பதனால் மேய்ந்து
அரண்மனைக ளாகநாங்கள் அமைத்துக்குடி யிருப்போம்."
(பா. 41:1, 2)

என்கின்றாள் சிதம்பரக் குறவஞ்சியில் வரும் குறத்தி.

"கழிமரங் கலைக்கொம்பு கரிக்கொம்பு மாகஅமைச்சு—மேலே
கதித்த ஆமை யோட்டினா லேமறைய முடிவைச்சு
மெழுகினாற் சுவர்செய்து மாணிக்க முத்தைப்பதிச்சு—புழுகால்
மெழுகித் தீற்றிக் கோலமிட் டிருக்கும் எங்கள்குச்சு."
(பா. 35:1)

என்கின்றாள் பொய்யாமொழியீசர் குறவஞ்சியில் வரும் குறத்தி. கலைக்கொம்பு, கரிக்கொம்பு, மாணிக்கம், முத்து முதலியவற்றைப் பதித்தல் கற்பனையாயினும், 'கழிமரம்' என அமையும் சொல்லாட்சி, குறவரின் உண்மையான குடிசை யமைப்பை ஓரளவு விளக்குகின்றது எனலாம். 'நரிக்குறவப் பழங்குடி மக்கள்' என்னும் நூலில் கோ. சீனிவாசவர்மா,

குறவர் குடிசை, சம்பு என்னும் ஒருவகைப் புல்லின் தண்டினாலும், மூங்கில் கழியினாலும் அமைக்கப்பட்டுள்ளமையை விளக்கியுள்ளார்.[4] பெரும்பாணாற்றுப்படையில் எயிற்றியரின் குடிசையமைப்பைப் பற்றிக் குறிப்பிடுமிடத்து, ஈத்தமர இலைகளாலும், மடல்களாலும் வேயப்பட்டிருந்ததாகக் கூறப்படுவது இங்குக் கருதத்தக்கது (வரி:83—86).

## வாழ்க்கை முறை

### உணவு

குறவர்கள் ஓரிடத்தில் தங்கி வாழாது, அடிக்கடி தம் இருப்பிடத்தை மாற்றித் திரியும் நாடோடி இயல்பினர் ஆவர். 'வனங்கடந்து வயல்கடந்து வரை கடந்து திரிவோம்' (ப. 45) என்று இவ்வியல்பினை உணர்த்துகின்றாள் ஸ்ரீகிருஷ்ணமாரி குறவஞ்சியில் வரும் குறத்தி. "காடுஞ் செடியுமாகக் கலந்திருக்கும் எங்கள் தேசம், புலி, காட்டானை, சிங்கம், கரடியுடன் வாசம் செய்யும் நாங்கள் அவற்றை ஆடு, மாடுகள் போல் எண்ணுவோம்' (பா. 35:2) என்று காட்டிலும், மலையிலும் வாழும் தம் குடி இயல்பினை உரைக்கின்றாள் பொய்யாமொழியீசர் குறவஞ்சியில் வரும் குறத்தி. இவ்வாறு அடிக்கடி தம் இருப்பிடத்தை மாற்றித் திரிவதால் குறவர்கள் பயிர்த் தொழில் செய்வதை அறிந்திருக்கவில்லை. சிதம்பரக் குறவஞ்சியில் வரும் குறத்தி,

> " வீணுக்கே உழைக்கும் வேளாண்மை வேண்டோம்
> வேலை செய்வது சோலி என்றுஅதைத் தீண்டோம்.''
>
> (பா. 29:2)

என்று வேளாண்மைத் தொழிலை விடுத்தமைக்குக் காரணம் கூறுகின்றாள்.

ஆயின், இதற்கு மாறாக மண்ணிப்படிக்கரை நீலகண்டர் குறவஞ்சியில் வரும் குறத்தி 'நிலம் பரவித் தினைவிதைத்து, நிரை தேனைத் தெளிப்போம், ஏனற்-புனத்திலிதன்மேல் ஏறிக் கவண் எறிவோம்' (பா. 40:அ, ஈ) என்றும் தினை விதைத்து, தினைப்புனம் காத்ததை எடுத்துரைக்கின்றாள். 'ஓங்கு தினைப்புனங் காப்போம் எங்கள் குறக்குலத்தில்' (பா. 70) என்கிறாள் சிவன்மலைக் குறவஞ்சியில் வரும் குறத்தி. 'தினைப் புனத்தில் புள்ளோச்சி ஆலோலம் இசைப்போம். செந்நெல் கதிர் களம்காத்துக் கலமெலாம் கொணர்வோம்' (ப. 44) என்கிறாள் கிருஷ்ணமாரி குறவஞ்சியில் வரும் குறத்தி.

செந்தேனும் தினைமாவும் குறவரின் முக்கிய உணவாக இருந்திருக்கின்றன என்பதைப் பல குறவஞ்சிகள் எடுத்துக் கூறுகின்றன.

> " தேனுலையில் சேர்த்துத்தினை தீட்டிச்சமைத் திடுவோம்
> தேக்கிலையில் பரிமாறித் தினந்தினமும் புசிப்போம் "
> (பா. 41:2)

எனச் சிதம்பரக் குறவஞ்சியிலும், 'மாவுந் தேனுங் குளுவர்க்கு ஊட்டுவோம்' (ப. 168) என ஒதாளர் குறவஞ்சியிலும், 'செந் தேனுந் தினைமாவுந் தினம்உண்டு களிப்போம்' (பா. 21:3) எனத் தியாகேசர் குறவஞ்சியிலும், 'தேனும் தினைமாவும் ஆறுமுக வேலவர்க்குப் படைப்போம்' (பா. 30:3) என அழகர் குறவஞ்சியிலும், 'செழுந்தினையு நறுந்தேனும் விருந்தருந்தக் கொடுப்போம்' (பா. 18) என மீனாட்சியம்மை குறத்திலும் வரும் பகுதிகள் இவ்வகையில் குறிப்பிடத்தக்கவையாகும். தினை அரிசி, தினைமாவு, தேன் ஆகியவற்றுடன் சாமை, கேழ்வரகு, மரவள்ளிக் கிழங்கு (ப. 20) போன்றவற்றையும் குறவர்கள் உணவாகக் கொண்டிருந்தமையைக் கூறுகிறது மாத்தளை முத்துமாரியம்மன் குறவஞ்சி.

பறவை, விலங்கு ஆகியவற்றை வேட்டையாடி, அவற்றின் இறைச்சியையும், கள்ளையும் உணவாகக் கொள்ளும் வழக்கமும் குறவரிடத்திலே காணப்படுவதொன்றாகும். 'புள்ளினங்களை நெய்யினிற் பொரிப்பாள்' (பா. 10 :1) எனக் கும்பேசர் குறவஞ்சியும், 'ஆனை பூனை குத்திக் கொண்டுவந்து உரிப்போம், அதனைப் பன்றி நெய்யிலே வேகப் பொரிப்போம்' (பா. 39:1) என்று பொய்யாமொழியீசர் குறவஞ்சியும், 'பூனைக் கறியைப் பச்சை தின்னோம், அவித்துத் தின்னுவோம்' (ப. 168) என்று ஒதாளர் குறவஞ்சியும் கூறுவதனால், இறைச்சியை வேக வைத்தும், நெய்யினிற் பொரித்தும் உண்ணும் குறவர் வழக்கம் புலனாகின்றது. 'குறவன் காய்கறிகள், மாமிசம் எனப்பாராது கிடைத்தவற்றையெல்லாம் உண்பான்'[5] என மார்ட்டின் பிளாக் கூறுவது இங்கே நினைவு கூரத்தக்கதாகும்.

ஆண், பெண் ஆகிய இருவருமே கள் உண்ணும் வழக்கம் குறவரிடையே உண்டு. 'குழன்மாதினைத் தேடிக் கள்ளைக் குடித்தசைந்து... வருகுவனே' (பா. 86) என்று குறவனை அறிமுகப்படுத்துகின்றது கும்பேசர் குறவஞ்சி. 'அரக்குடன் கள்ளு மறிவுடன் குடித்து, வெறிக்கெனப் பார்த்து வீசையைத்

திருத்திச் சிலம்புகள் ஒலிக்கத் திகுதிகு திகுவென'த் (பா. 10 : 95-97) தோன்றினான் எனக் குளுவனை அறிமுகப் படுத்துகின்றது சின்னமகிபன் குளுவநாடகம். 'குத்தியில் அரக்கும் கள்ளும், குடுவையில் தென்னங்கள்ளும் அத்தனையும் குடித்துப்போட்டு ஆர் பிறகே தொடர்ந்தாளோ' (பா. 120) என்று குற்றாலக் குறவஞ்சியில் வரும் குறவன் குறத்தியை நினைத்துப் புலம்புகிறான். கள் வாங்குவதற்காக, முத்துக் களைப் பண்டமாற்று செய்வதை மண்ணிப்படிக்கரைக் குறவஞ்சியும் (பா. 40: ஆ), தந்தத்தைக் கொடுப்பதைக் காங்கேயன் குறவஞ்சியும் (பா. 13) எடுத்துரைக்கின்றன. 'குறிஞ்சித் தேனுடன் கள் குடிப்போம்' (பா. 39:2) எனப் பொய்யாமொழியீசர் குறவஞ்சியும், 'சாராயங்கள் என் முன் மெத்தப் பூராயமாய் மனம் விரும்பிக் கொள்வோம்' (பா. 82) எனச் சிவன்மலைக் குறவஞ்சியும் கள்ளை விரும்பிக் குடிக்கும் குறவரின் இயல்பைக் கூறுகின்றன. குறவரின் இவ்வியல்பினைச் சுட்டும் மார்ட்டின் பிளாக், கள் இல்லாத எந்த ஒரு நிகழ்ச்சி யையும் குறவர் வாழ்வில் நினைத்துக்கூடப் பார்க்க இயலாது என்பதையும் எடுத்துக்காட்டுகிறார்.[6]

மின்னொளியாள் குறத்தில் வரும் குறத்தியும், துரோபதை குறத்தில் வரும் குறவனும், பன்றி, மான், யானை, சிங்கம், புலி, கரடி, ஆமை, கீரி, நாய், நரி, எலி, பூனை ஆகிய விலங்கு களையும், காக்கை, கழுகு, கொக்கு, வக்கா போன்ற பறவை களையும் உணவாகக் கொள்ளும் வழக்கத்தினையும், கள்ளைக் குடம், குடமாகக் குடிக்கும் இயல்பினையும் வெளிப்படுத்து கின்றனர்:

"கொச்சிமலை குடகுமலை குடியிருக்குங் குறத்தி
கொக்கு வக்காவுகளும் குட்டிகறி சமைப்போம்
பச்சைமலை பவழமலை குடியிருக்குங் குறத்தி
பன்றிகளு மான்களுங் கறியாக்கித் தின்போம்
காக்காய் கழுகுதின்போம் காட்டோணாஞ் சுடுவோம்
கள்ளுவைத்தால் குடங்குடிப்போம் கானகத்து சாதி
காட்டானை சிங்கங்களும் கரடிபுலி தின்போம்
காட்டிலே குடியிருப்போம் கள்ளக் குறச்சாதி
ஏச்சான சாதியல்ல எங்கள் குலசாதி
ஆமைகீரி தின்போம் அணிலடித்துச் சுடுவோம்
பூனைகுத்தி விருந்திடுவோம் புனக்குறவர் நாங்கள்
நுழைநரியும் மரநாயும் வெள்ளையெலி தின்போம்."

(மின். குறம், ப. 60)

நாட்டுப்புற இலக்கியமாக விளங்கும் இவ்விரு குறங்களிலும் காணப்படும் குறவர் இயல்புகள் உண்மையான குறவர்களின் வாழ்வியலைப் படம்பிடித்துக் காட்டுகின்றன என்பதில் ஐய மில்லை.

குமாரலிங்கக் குறவஞ்சியில் வரும் குறத்தி கள்ளையும், இறைச்சியையும் உண்பதனை இழிவாகக் கருதி அவற்றை விடுத்ததாகக் கூறுகின்றாள்:

" காக்கைகளுகு ஆந்தையொடு கடமானும் அருந்தோம்
கள்ளொடு சாராயம்ஒன்றும் நாங்கள் குடித்தறியோம்.'' (ப. 31)

தியாகேசர் குறவஞ்சி, காங்கேயன் குறவஞ்சி ஆகிய வற்றில்வரும் குறத்தியர், பூனைக்கறி தின்னும் குறவர்கள் இழிந்தவர்கள் என்றும், அதனால் அவர்களுடன் பொருந்தாது விடுத்ததையும் கூறுகின்றனர்:

" மானையல்லாமல் மாங்கிசங்கள்தனை யருந்தோம்.''
(காங். குற., பா. 13)

" புவனக் குறவர் பூனை பொசிக்கையால் விடுத்தோம்
பொருப்பினில் குறவரினம் பொருந்தாமல் தடுத்தோம்''
(தியா. குற., பா.29:1)

இவ்வாறு இறைச்சி, கள், சாராயம் ஆகியவற்றை விடுத்த தனால் தாம் உயர்ந்தவர் என நிலைநாட்டும் குறவர் இயல் பினை இங்குக் காண முடிகின்றது.

உடை

மீனாட்சியம்மை குறத்தில் வரும் குறத்தி, 'பசுந்தழையும் மரவுரியும் இசைந்திடவே யுடுப்போம், (பா. 18) எனக் கூறு வதைப் பின்பற்றிக் காங்கேயன் குறவஞ்சியில் வரும் குறத்தி யும் 'எங்கள் சாதியெல்லாம் மரவுரியுரித்து உடுப்போம்' (பா. 13) எனக் கூறுகின்றாள். ஆயின் குறத்தி சல்லாச்சேலை, சித்திரமென்துகில், வெண்ணிறச்சேலை, வெண்பட்டு, செம் பட்டு ஆகியவற்றை அணிந்திருந்தமையைக் குறவஞ்சி நூல்கள் காட்டுகின்றன (குற். குற., பா. 48: 21; 125: 16: மண். குற., பா. 40:ஆ).

தொழில்

குறவஞ்சியில் குறவரின் முக்கியத் தொழில்களாகக் குறி கூறுதல், வேட்டையாடுதல் ஆகியனவும், பல்வேறு சிறுசிறு தொழில்களும் கூறப்பட்டுள்ளன.

குறித்திறன்

குறத்தி 'கொட்டிய உடுக்கு கோடாங்கிக் குறி முதல் மட்டிலாக் குறிகளும் தன் மந்திரக்கட்டால் அடக்கும் திறன் கொண்டவளாக விளங்குகின்றாள்; மேலும், அவள் உடம்பின் கண் விளங்கும் மறு, தழும்பு ஆகியவற்றை நோக்கியும், குறி கூறும் பொழுதில் தலைவி செய்யும் அங்க அசைவுகளை நோக்கியும் குறிப்பலன் கூறும் ஆற்றல் வாய்ந்தவள். 'ஓர் வலஞ்சுழி உனது மார்பினில் உற்று இலங்கும். உன் தனக்கு இது என்றும் மன்னிடு நன்றியே தரும்; தார் விளங்கும் உன் வல முலைக்கண் ஓர் தழும்பு தோற்றியதம்மே. தாங்கு பெண்கள் ஓர் நான்கும், மைந்தனும் உனக்கு அளித்திடும்; தோளிலே ஒரு மறு இருக்கிறது, இதனால் உனை எவரும் மெச்சிட மகிழ்ந்திலங்குவை' (பா.51) என மெய்க்குறிகள் நோக்கிக் குறிப்பலன் சொல்லுகிறாள் சரபேந்திர பூபால குறவஞ்சியில் வரும் குறத்தி.

பன்மொழி அறிவு

கூடை கட்டலையோ, முறம் கட்டலையோ, பச்சை குத்தலையோ என்று கூவிக்கொண்டே வருவது குறத்தியர் இயல்பு. அன்னோர் எப்பகுதியில் குறி கூறச் செல்கின்றனரோ, அப்பகுதியில் வழங்கும் மொழியைக் கற்றுவிடும் திறமை வாய்ந்தவர் ஆவர். தமிழ், கன்னடம், தெலுங்கு ஆகிய மூன்று மொழிகளையும் ஓரளவு அறிந்த இக்குறத்தியர், 'தம்மை அழைத்த மக்களுக்கு அவரவர் மொழியிலேயே குறி கூறுவர்; தெய்வ மேறப்பெற்றது போல அவர்தம் மனக்குறியை அறிந்து கூறிப் பாராட்டும் பரிசும் பெறுவர்'[7] எனக் குறிப்பிடுவர் அறிஞர். இதனை, சரபேந்திர பூபால குறவஞ்சியில் வரும் குறத்தி, பன்னாட்டு மகளிருக்கு அவரவர் மொழியிலே குறியுரைக்கும் பகுதியினால் அறியலாம் (பா. 49:5—9). பொய்யாமொழியீசர் குறவஞ்சியில் வரும் குறத்தி,

"கொண்ட புருஷனுமே யிருக்கக் குச்சரத்திலே துணிந்து
கண்ட புருஷரைக் கூடிக் களிப்பர் கனிந்து
மிண்டுமலை யாளந்தன்னில் மிகுமான மெனக்கலையை
மண்டியெடுத் திடைதவிர மறைப்பர் முலையை
சயிந்துவ தேசத்திற் கள்ளைத் தண்ணீர்போலே குடிப்பர்
குயந்தனையு மறைப்பர் உச்சிக் கொண்டை முடிப்பர்."

(பா.43:1, 2)

என்று தான் பார்த்து வந்த தேசங்களில் வாழும் பெண்களின் பழக்க வழக்கங்களைக் குறிப்பிடுகிறாள்; இதனால், அவள் பல்வேறு தேசங்களுக்குச் சென்று குறியுரைத்தமை புலனாகின்றது. தியாகேசர் குறவஞ்சியில் வரும் குறத்தி, 'புவியில் உள்ள தேசம், புவியில் புண்ணிய தலம், புவியில் உள்ள மலை, புதுமையெல்லாம், செவியிற் கேட்டதல்லால் திரிந்து கண்டு வந்தோம்' (பா. 27:2) என்று தன்னை அறிமுகப்படுத்திக் கொள்ளும் பகுதியும் இதனை உணர்த்திநிற்கின்றது. 'நாடோடிகளாகத் திரியும் குறவர்கள் ஒன்றுக்கு மேற்பட்ட மொழிகளை அறிந்திருந்தனர்' என்றும், 'அவர்கள் எப்பகுதிக்குச் சென்றாலும் அப்பகுதியில் வாழும் மக்களுடன் கலந்து பழகும் ஆற்றல் பெற்றிருந்தனர்'[8] என்றும் தர்ஸ்டன் குறிப்பிடுவது இங்குக் கருதத்தக்கதாகும்.

### முட்டி வினவுதல்

மறைத்து வைத்த பொருளையும் தன் குறித்திறமையால் வெளிப்படுத்தும் ஆற்றல் கொண்டவளாக விளங்குகின்றாள் குறத்தி. சோலைமலைக் குறவஞ்சியில் வரும் தலைவி, குறத்தியின் குறித்திறனை அறிதற்பொருட்டு, அவளிடம், இந்தப் பிடி ஒன்றினுள் இருப்பது சொல்' என்று வினவுகிறாள். அதற்குக் குறத்தி, 'நீ வலக்கையில் அடக்கி வந்து கேட்பது நீ பூண்ட ஒரு சிறிய பூஷணம்; அது மாணிக்கம் இழைத்த பொற் கம்பியில் திருவணைக்குத் தெற்கே பிறந்த ஆணிமுத்துத் தொங்க இசைத்த ஒற்றைக்கல் மூக்குத்தி' (பா. 120, 121) என்று அவள் முட்டியுள் இருப்பது கூறித் தன் குறித்திறனை வெளிப் படுத்துவதனால் அறியலாம்.

### படையலும் காணிக்கையும்

குறவர்கள், தம் குல தெய்வத்திற்கு வழிபாடு நிகழ்த்தும் பொழுது, குடிசையில் உள்ள பழைய பொருட்களைத் தூக்கி யெறிந்து, சாணத்தால் மெழுகி நிலத்தைத் தூய்மைப் படுத்துவர்; தாம் உண்ணும் உணவினையே தெய்வத்திற்குப் படைத்து வழிபடுவர்; பின்னர், படைத்த உணவை அங்கு உள்ள எல்லோருக்கும் வழங்குவர்.[9] இப்பழக்கத்திலேயே குறம், குறவஞ்சியில் வரும் குறத்தியர், குறி சொல்லத் தொடங்கு முன்னர் சாணத்தால் தரை மெழுகிக் கோலமிடுதல், நிறைநாழி நெல்லளந்து வைத்தல் போன்ற சில மரபுகளைக் கடைப்பிடிக் கின்றனர்; தேங்காய், பழம், அவல், பொரி, தேன், தினைமாவு போன்ற பொருட்களைப் படைக்குமாறு கூறுகின்றனர்;

அவ்வாறு படைத்த பொருட்களைத் தமக்கு வழங்குமாறு வேண்டுகின்றனர். பிள்ளையார்க்குப் படைத்தவற்றையும், கந்தனுக்குப் படைத்த தினைமாவையும், தலைவி வைத்த நிறைநாழி நெல்லையும் வேண்டும் குறத்தி,

" இந்தவகை யெலாமெங்கட் கீந்திடுதல் அம்மே பாரில்
எங்குமுள்ள முறைமையதாம் இன்றைக்கல்ல அம்மே. "
(சர. குற., பா. 50; 6)

என்று உலக வழக்கத்தையும் எடுத்துக்காட்டுவது கருதத்தக்க தாகும்.

படையல் பொருட்களைக் கேட்பதுடன், குறக்கூடைக்கும், மாத்திரைக்கோலுக்கும் காணிக்கை கேட்கும் வழக்கமும் குறத்தியரிடம் காணப்படுகின்றது.

" சத்தியாயெங்கள் குலதெய்வமாகிய
சாமிசுப்பிர மணியருக்கொரு
தங்கக்காசு வைத்திடு
குறக்கூடைக்குங்கை மாத்திரைக்கோலுக்குங்
குணமதாயஞ் சுபணமெடுத்து நீ
கோலமாகவே வைத்திடு
சிறப்பாய்க்கன்னி மாருக்குத்தான்மஞ்சள்
சேலைதன்னிலே யொருபத்துப் பொன்னையுஞ்
சேரவே கட்டிவைத்திடு. " (ப. 81)

என்று பாம்பண காங்கேயன் குறவஞ்சியில் வரும் குறத்தி கேட்பது போல, சோலைமலைக் குறவஞ்சியில் வரும் தோழி அபரஞ்சிப் பணம் (பழைய பொன் நாணய வகையுள் ஒன்று) கேட்கின்றாள் (பா. 117); சரபேந்திர பூபால குறவஞ்சியில் வரும் குறத்தி ஒரு பொற்காசு வேண்டுகின்றாள் (பா. 49).

ஆடு, பன்றி, சேவல் போன்றவற்றை வெட்டிப் பலியிட்டுப் பொங்கலிட்டுப் படைக்கும் வழக்கத்தினையும் சில குறத்தியர் குறிப்பிடுகின்றனர்.

" ஆடுரெண்டு பன்றியொன்றும் அஞ்சுசேவலும் — மது
நீடுமொன்பது குடத்தில் நிரப்பியேவை. " (பா. 57: உ)

என மண்ணிப்படிக்கரைக் குறவஞ்சியில் வரும் குறத்தியும்,

" வடக்குவாய்ச் செல்விக்கும் பொங்கலிட்டுக் குடத்தில்
மதுவும் வைத்துக் குட்டியும் வெட்டு
நின்றநாழிமீது விளக்கேற்றிப் பசுவின்
நெய்யை விட்டுக் கொண்டுவந்தால் நேத்தி
குறைவில்லா மலேயென்றன் சாத்தி ரத்தின்
குறியை யறியலாம் பிரார்த்தி. " (பா. 52)

எனக் குன்றாக்குடிக் குறவஞ்சியில் வரும் குறத்தியும் குறையின்றிக் குறி சொல்வதற்குரிய வழிகளாகப் பலியிடுவதையும், பொங்கலிடுவதையும் குறிப்பிடுகின்றனர். விரதம் இருக்கும் குறப் பெண்கள், 'போலேரம்மா' என்னும் தம் குல தெய்வத்திற்குப் பொங்கல் இட்டு வணங்குவது இங்குக் குறிப்பிடத் தக்கது.[10]

சிறு தெய்வ வழிபாடு

சரபேந்திர பூபால குறவஞ்சியில் வரும் குறத்தி, பெருவுடையார், பெரியநாயகி, காமாட்சி, காளி, வெள்ளைப் பிள்ளையார், ஆனந்தவல்லி, இரட்டைப் பிள்ளையார், சரவண பவன், சத்தகன்னியர், வள்ளிநாயகி, எக்கலாதேவி, ஆகியோரைத் துதித்துக் குறி சொல்லத் தொடங்குகிறாள். இவர்களுள் பெருவுடையாரும், பெரியநாயகியும் தஞ்சைப் பெருவுடையார் கோயிலில் வீற்றிருக்கும் கடவுளர் ஆவர். "காமாட்சி: தஞ்சை மேலை வீதியின் மேல்பாலுள்ள கோயிலில் எழுந்தருளியுள்ள அம்பிகை; வெள்ளைப்பிள்ளை; வெள்ளைப்பிள்ளையாரென்றும், சுவேத விநாயகரென்றும் வழங்கப்படுவார்; கீழை வாசலில் எழுந்தருளியுள்ளார்; ஆனந்தவல்லி: விண்ணாற்றங்கரையிலுள்ள தஞ்சேசர் ஆலயத்திலுள்ள அம்பிகையே; இரட்டைப்பிள்ளையார்: வடவாற்றங்கரையின் தென்பக்கத்திலுள்ள கோயிலில் எழுந்தருளியிருக்கும் இரண்டு விநாயக மூர்த்திகள்; ஸப்த கன்னியர்களின் கோயில் தஞ்சைக்கு நான்கு மைலுக்கப்பாலுள்ள சூரக்கோட்டையிலுள்ளதென்று தெரிகிறது; எக்கலாதேவி: குறவர்கள் தெய்வம்"[11] என்னும் உ. வே. சாமிநாதையரின் குறிப்புரை கொண்டு, இக்குறவஞ்சியில் கூறப்பட்டுள்ள தெய்வங்கள் தஞ்சையிலும், அதன் சுற்று வட்டாரத்திலும் உள்ள தெய்வங்கள் என்பதனை அறியலாம். திருமலையாண்டவர் குறவஞ்சியில் வரும் குறத்தி, உச்சி விநாயகர், திருமலைக் குமரர், வாவிமேல் கரையில் மேவு கன்னியர், திருமலைக் காளி, கொடுவினை தீர்க்கும் வடுகநாதர், பூத நாயகன், இடும்பசுவாமி, வேடிச்சியம்மை, வன்னியராயர், முன்னடி முருகர், திருமலைக் கருப்பர் முதலான தெய்வங்களைத் துதித்துக் குறி கூறத் தொடங்குகின்றாள். அக்குறவஞ்சியின் குறிப்புரையில் 'இதில் அம்மலையிலும் அதனையடுத்த விடத்திலும் உள்ள பலவகைத் தெய்வங்களைக் குறத்தி விளித்து வேண்டுகிறாள்'[12] என உ. வே. சாமிநாதையர் குறிப்பிடுவதும் இங்கே கருதத்தக்கது.

ஏகாசனத்தி, எக்கலாதேவி, கொல்லாபுரத்தம்மன், சத்த கன்னியர், சக்கதேவி, குறக்கூடைத்தாய், வள்ளிநாயகி, முருகன், விநாயகன், கறுப்பன், துர்க்கை, பிடாரி, மாரி, காளி போன்ற சிறு தெய்வங்கள் பெரும்பான்மையான குறவஞ்சி களில் குறிக்கப்படுகின்றனர். 'குறவர்கள் சைவ அல்லது வைணவ சமயத்தைச் சார்ந்தவராக இருப்பினும், சிவன், விஷ்ணு ஆகிய கடவுளருடன், கோலாபுரியம்மா, பெருமாள் ஸ்வாமி, போலேரம்மா போன்ற சிறு தெய்வங்களையும் வணங்குகின்றனர்'[13] எனத் தர்ஸ்டன் குறிப்பிடுவது இங்கே நோக்கத்தக்கது. கோலாபுரியம்மா என்னும் சிறு தெய்வமே குறவஞ்சியில் 'கொல்லாபுரத்தம்மா' எனக் குறிப்பிடப்பட்டி ருக்கலாம். சக்கதேவி, கறுப்பன் போன்ற சிறு தெய்வங்களே குறிமுகத் தெய்வங்களாக, தலைவிக்குக் குறிப்பலன் சொல் வதும் இங்கே கருதத்தக்கது. குறவருள் ஒரு வகையினரைப் பற்றிக் குறிப்பிடுமிடத்து, 'களிமண்ணை முக்கோண வடிவில் பிடித்து வைத்து, அதனை மாரியம்மா என்று வழிபடுவார்கள்; இது காளியைக் குறிப்பதாகும்'[14] என்பர் அறிஞர். இவ்வாழ் வியல் உண்மைக்கேற்பவே, குறவஞ்சிகளில் வரும் குறத்தியர் குறி தொடங்குமுன் காளியைத் துதிக்கின்றனர் எனலாம்.

## குறிப்பலன்

### கைரேகை பார்த்தல்

குறவஞ்சி இலக்கியங்களில் வரும் குறத்தியர் சங்க ரேகை, சக்கர ரேகை, கும்ப ரேகை, குல ரேகை, கமல ரேகை, தனதானிய ரேகை, மச்சரேகை, மகுடரேகை எனப் பல்வேறு ரேகைகளைப் பற்றிக் கூறி, அவற்றால் உண்டாகும் சிறப்புக் களையும் குறிப்பிடுகின்றனர். கைரேகை பார்த்துக் குறிப் பலன் உரைக்கும் முறை பெரும்பான்மையான குறவஞ்சிகளில் காணப்படுகின்றது. 'முச்சுக்குறு' என்று அழைக்கப்படும் குறவர்கள் குறி சொல்லுவதைத் தொழிலாகக் கொண்ட வர்கள்; முச்சுக்குறு இனத்தைச் சேர்ந்த ஒவ்வொரு பெண்ணும் தன் தாயிடமிருந்து குறி சொல்லும் முறை, பச்சை குத்தும் மை தயாரிக்கும் முறை, கோலங்கள் வரையும் முறை முதலியவற்றைக் கற்றுக்கொள்கிறாள்'[15] எனக் கோ. சீனுவாச வர்மா குறிப்பிடுகின்றார்.

### நன்னிமித்தம் பார்த்தல்

எந்தச் செயலைச் செய்யத் தொடங்கும்போதும், சகுனம் பார்ப்பது குறவர்களின் வழக்கம். சகுனம் சரியில்லையெனில்,

அவர்கள் எந்தச் செயலையும் தொடங்குவதில்லை. தெய்வங்களுக்கு வழிபாடு நடத்திப் பொங்கலிடும் வேளையிலும், அரிசி கொதிக்கும் முறையை வைத்து நன்னிமித்தம், தீநிமித்தம் பார்க்கும் வழக்கம் குறவரிடையே உண்டு.[16] அவர்களுக்குப் பல்லியின் குரலைக் கேட்பதும் நிமித்த வகையுள் ஒன்றாக விளங்குகின்றது.[17] பல்லியின் குரல் நல்ல நிமித்தம் என்று கூறாத குறவஞ்சி இல்லை எனலாம். மேலும், குறவஞ்சி இலக்கியங்களில் தும்மல், கன்னி வாக்கு, ஆந்தை வீச்சு போல்வனவும் நன்னிமித்தங்களாகக் கூறப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.[18] இந்நன்னிமித்தங்களால் தலைவிக்கு நன்மை உண்டாகும் என்றும், தலைவி விரைவில் தலைவனைச் சேர்வாள் என்றும் குறத்தியர் குறிப்பலன் உரைக்கின்றனர்.

### தெய்வமேறிக் குறி சொல்லுதல்

குறத்தி தெய்வங்களை வணங்கும்பொழுது ஏதேனும் ஒரு தெய்வம் குறிமுகத் தெய்வமாக வந்து குறிப்பலன் சொல்லுவதும் உண்டு. 'சக்கதேவி என் உதட்டிலும் நாவிலும் சொல் சொல் என்று வந்து துள்ளுகின்றது. குறளிப்பேய் வந்து சொல்லும்படி என் வாயின்மேல் குத்துகின்றது. இனி நீ கேட்ட குறி சொல்லக் கேளே' (பா 73) என்று குற்றாலக் குறவஞ்சியில் வரும் குறத்தியும், 'குறி நான் சொல்வதோ, என் கருத்தில் இருந்து உரைக்கின்றாள் எக்கலாதேவி' (பா. 54:15) என்று சரபேந்திர பூபால குறவஞ்சியில் வரும் குறத்தியும், 'எடுத்து உடுக்கு அடிக்கு முன்னே இதயம் முற்று அருள் ஆவேசம் கொடுக்குது. நலம் உண்டு என்று குறிமுகத் தெய்வம் வந்து முடுக்குது சொல் என்று என்னை' (கீ. 51) என்று அழகர் குறவஞ்சியில் வரும் குறத்தியும், 'கறுப்பன் வந்து மூசு மூசென்றே யென்னுள் முன்னியே யுன்னி வந்து பேசுது குறி தானம்மே' (பா. 63) என்று திருமலையாண்டவர் குறவஞ்சியில் வரும் குறத்தியும், 'விக்கலும் கொட்டாவியுமாகுதே, மயிர் கூச்சிடுதே, மெல்ல மெல்லக் கண் சிவக்குதே, உடல் நடுக்கிதே, மயிலும் வேலுமாகத் தோணுதே மனம் விடுகிறதே' (பா. 97) என்று சிவன்மலைக் குறவஞ்சியில் வரும் குறத்தியும் தெய்வமேறப் பெற்ற நிலையை விளக்கிக் கூறுகின்றனர்.

### பிற தொழில்கள்

குறவஞ்சியில் குறத்தியின் முக்கியமான தொழிலாகக் கூறப்பட்டிருப்பது குறி கூறுதல் ஆகும். எனினும், குறத்தியர், பாட்டுடைத் தலைவியர்க்குத் தம் மலைவளம், நாட்டுவளம்

முதலியன கூறுமிடத்துத் தம் சாதியினர்க்கு இயல்பாக உள்ள வேறு சில தொழில்களையும் குறிப்பிடுகின்றனர்.

"கொழுங் கொடியின் விழுந்தவள்ளிக்
கிழங்குகல்லி யெடுப்போம்." (பா. 18)

என்று மீனாட்சியம்மை குறமும்,

"கிழங்குகிள்ளித் தேனெடுத்து வளம்பாடி நடிப்போம்
கிம்புரியின் கொம்பொடித்து வெம்புதினை இடிப்போம்."
(பா. 54:2)

என்று குற்றாலக் குறவஞ்சியும்,

"கானகத்திற் கிழங்கு ஆனை மருப்பதனாற் கெல்வோம்."
(பா. 37:1)

என்று சரபேந்திர பூபால குறவஞ்சியும்,

"போதகத்தின் முத்துடனே சாதிமுத்துங் கோர்ப்போம்
பொறுக்கிவரும் முத்தையெல்லாம் உறிக்கலயஞ் சேர்ப்போம்
கஞ்ச முள்தாள் நூலெடுத்து மிஞ்சுதுகில் நெய்வோம்."
(கீ. 30:7)

"மலைக்கொம்புத் தேனெடுப்போம்—வானவர்க்குங்
கொடுப்போம்
குலச்சங்கணி தொடுப்போம்." (கீ. 31:2, 3)

என்று அழகர் குறவஞ்சியும்,

"திறத்துடனே மலைமுழைஞ்சில் தேனெடுத்து வடிப்போம்"
(பா. 40 : இ)

என்று மண்ணிப்படிக்கரைக் குறவஞ்சியும் குறிப்பிடுவதன் வாயிலாக, கிழங்கு அகழ்தல், தேனெடுத்தல், தினை இடித்தல்,, துகில் நெய்தல், உறிக்கலயம் சேர்த்தல், சங்கணி தொடுத்தல் ஆகிய சிறுசிறு தொழில்களையும் குறத்தியர் மேற்கொண்டிருந்தனர் என அறியலாம். 'கூடை கட்டலை முறங்கட்டலையோ' 'பச்சை குத்தலையோ' (பா. 33) என்று சரபேந்திர பூபால குறவஞ்சியில் வரும் குறத்தி கூவிக்கொண்டு வருவதனால், கூடை, முறம் ஆகியன கட்டுதல், பச்சை குத்துதல் போன்றனவும் அவர்கள் தொழிலாக அமைந்திருந்தமையை அறியலாம். கூடை, முறம் கட்டும் குறவர் 'தப்பைக் குறவர்' என அழைக்கப் படுவதையும், அவர்கள் மூங்கிலைப் பிளந்து, மெல்லியதாகச் சீவிக் கூடை, முறம் கட்டுவதனையும் தர்ஸ்டன் தம் நூலில் குறிப்பிட்டுள்ளார்.[10]

**வேட்டையாடுதல்**

குறவஞ்சி, குறவனின் முக்கியத் தொழிலாக வேட்டை யாடுதலைக் குறிப்பிடுகின்றது. 'வைத்த குறி தப்பாது எய்வதில்' வல்ல குறவர்கள்,

'பொருகரியைத் தடுப்போம், புலிவாய்க்கட்டி விடுப்போம்'
(அழ. குற., கீ. 31:3)

'சிலை கொண்டு கலை எய்யச் செடியினடி ஒளிப்போம்'
(தியா. குற., பா. 29:3)

'தனுக்கொண்டு விலங்குஎய்யத் தருக்களில் ஒளிப்போம்'
(காங். குற., பா. 42:2)

'மானினொடு பன்றிமரை ஒளிவு இருந்து கொல்வோம்'
(சர. குற., பா. 37:1)

எனக் கூறுவதன்மூலம் தாம் விலங்குகளை வேட்டையாடுவதில் வல்லவர் என்பதனை நிறுவுகின்றனர். ஆயினும், குறவஞ்சியில் பறவை வேட்டையே சிறப்பிடம் பெறுகின்றது. தன்னை விட்டுப் பிரிந்து போன சிங்கியைத் தேடிக்கொண்டு வரும் சிங்கன், பறவைகள் வயல்களில் இரை மேய்வதைக் கண்டு, கண்ணி பாய்ச்சத் தொடங்குகிறான். சிங்கியின்மீது சிங்கன் கொண்ட பெருவிருப்பம் அவனைப் பறவை வேட்டையில் வெற்றி பெறவிடவில்லை; எனினும் பறவை வேட்டையைப் பற்றிய பல செய்திகளைச் சிங்கன் வாயிலாக அறிய முடிகின்றது.

குறத்தி குறி கூறத் தொடங்குவதற்கு முன்னர்த் தன் குல தெய்வங்களை எல்லாம் துதிப்பது போல் குறவனும், தன் குல தெய்வத்தை வணங்கியே கண்ணியூன்றுகின்றான் (சர. குற., பா. 58, 59; சி. ம. கு. நா., பா. 18, 19). பறவைகள் மிகுதி யாகக் கிடைத்தால், கோவிலுக்கு மயில் விடுவதாக வேண்டிக் கொள்வதும், வேண்டிக் கொண்டவாறே தன் வேண்டுகோளைக் குளுவன் நிறைவேற்றுவதும் (சி. ம. கு. நா., பா. 35:iii) குறவரிடையே சிறந்து காணப்படும் தெய்வ பக்தியைப் புலப் படுத்துகின்றன எனலாம்.

**குறவனின் ஆயுதங்கள்**

குறவன் பறவைகளையும், விலங்குகளையும் வேட்டையாடு வதற்குப் பயன்படும் வகையில் எப்பொழுதும் வில் (அம்பறாத் தூணி), சில்லிக்கோல் (வளைந்த தடி), கண்ணி, பொறி

(முக்கூடு), (குற். குற., பா. 81, 90), பக்கியைப் பிடித்தடைக்கும் குடம்பை, தக்கப் பலகறை, சிக்கச் செய்யும் வலை (இரிஷி. கு., பா. 35), முக்கூட்டு நாராக்கண்ணி, ஆலாப்படுங் கண்ணி, குட்டைத் தாராக் கண்ணி, கொக்கு நெடுங் கண்ணி, யாத்தி நார்க் கண்ணி, குதிரைமயிர்க் கண்ணி, வீச்சுவலைக் கண்ணி, வக்காவின் கண்ணி (அ. செ. கு. நா., பா. 30), சுண்டுவில், கூனருவாள், முக்கூடு, வளரி (சி. ம. கு. நா., பா. 10) முதலான ஆயுதங்களை வைத்திருக்கின்றான். அவன் வேட்டை நாய் களையும் தன்னுடன் அழைத்துச் செல்லுதல் உண்டு (சர. குற., பா. 55).

வேட்டை உத்திகள்

குறவர்கள் பறவைகளை வேட்டையாடும்பொழுது மிகுந்த கவனத்துடன் சில உத்திகளைக் கையாள்கின்றனர்.

கண்ணி குத்தும் முறை

எந்த எந்தப் பறவைக்கு என்ன என்ன வகையில் கண்ணி குத்தவேண்டும் என்பதையும், கண்ணியை எவ்வாறு குத்தினால், பறவைகள் தவறாமல் வலைக்குள் அகப்படும் என்பதையும் நன்கு அறிந்து வைத்திருக்கின்றனர் குறவர்கள்.

'கருத்தக் கண்ணிகளை இருத்திக் குத்தினால் கொடுங் காடைக் குலம் படும்; பெருத்த கண்ணிகளைப் பிரித்துக் குத்தினால் புழுப்பிறக்கி விழும் பரபரக்க; சிவத்த கண்ணிகளில் பலத்துக் குத்தினால் சிச்சிலிகள் படும்' (பா. 139) என்று சோலைமலைக் குறவஞ்சியில் வரும் சிங்கனும், 'அடர்ந்த கண்ணியைக் கலந்து குத்தினால் அன்னப்புள்ளும் படும்; படர்ந்த கண்ணியை இறுக்கிக் குத்தினால் பருங்கொக்குப்படும்; கட்டைக் கண்ணியை நிமிர்த்துக் குத்தினால் காடையும் படும்; மட்டைக் கண்ணியை முறுக்கிக் குத்தினால் வவ்வாலும் படும்; சேர்த்துக் கண்ணியை மலத்திக் குத்தினால் செம்போத்தும் படும்; கோர்த்துக் கண்ணியைக் குவித்துக் குத்தினால் குருகெல் லாம் படும்' (ப. 122) என்று பெத்லகேம் குறவஞ்சியில் வரும் சிங்கனும் ஒவ்வொரு வகைப் பறவைக்கும் உரிய கண்ணி குத்தும் முறையினை வெளிப்படுத்துகின்றனர்.

'குஞ்சு அல்லது குஞ்சில் குறவர் என்னும் பிரிவைச் சார்ந்த குறவர்கள் வேட்டையாடுவதில் வல்லவர்களாக விளங்கு கின்றனர்; மான் போன்ற விலங்கினங்களையும், வாத்து போன்ற பறவையினங்களையும் வேட்டையாடுவதில் தனித்

திறம் கொண்டவர்களாக விளங்குகின்றனர். வாத்துக்கள் வயல்களருகே இரை மேய்ந்த தடங்களைக் கண்டால், குறவர்கள் அங்கு ஒளிந்திருந்து ஒரு கொடியைக் குறுக்கும் நெடுக்கும் கட்டி, அதன் அடியில் சிறு சிறு முடிச்சுக்களாலான வலையைப் பதித்து மறைத்து வைப்பர். இரை மேய வரும் வாத்து போன்ற பறவைகள், இந்த முடிச்சுக்களில் சிக்கி விடும்'[20] எனக் குறவர்கள் நீர்ப்பறவைகளை வேட்டையாடும் முறையினைத் தர்ஸ்டன் குறிப்பிட்டுள்ளார். இது குறவஞ்சியில் கண்ணி பதிக்கும் முறையினை ஒத்து விளங்குகிறது எனலாம்.

'' செம்பசு வாலைப் பிடித்துப் பதுங்கியே
சீராய்க் கருங்கண்ணி நேராய்க் குத்திவாறேன்.'' (பா. 69)

என்று உரைக்கின்றான் மண்ணிப்படிக்கரைக் குறவஞ்சியில் வரும் சிங்கன். 'கண்ணிகுத்துவார் பசுவொடு மறைந்து போய்க் கடமை புரிதல் இன்றும் வழக்கமே. இதற்கென ஒரு மாட்டை ஓட்டிக்கொண்டு போதலும் கண்கூடே'[21] என இப் பாட்டின் குறிப்புரை கூறுகின்றது. ''தண்ணீரில் உள்ள பறவைகளை மாட்டின் மறைவில் நின்று கொண்டு மிக அருகில் சென்று சுடுகின்றனர். மாட்டினை அது சிறு கன்றுக் குட்டியாக இருக்கும்பொழுதிலிருந்தே துப்பாக்கி வெடிக்குப் பயந்து ஓடாமல் இருக்கும்படி பழக்கப்படுத்தியுள்ளனர்''[22] என்று கோ. சீனிவாசவர்மா கூறுவதும் இங்கு நினைவுகூரத்தக்கது.

'' குதிரையின் கண்ணியும் கொடுவிடைக் கண்ணியும்
எதிரெதிராய்க் குத்துவோம் மெத்த.'' (பா.138)

என்று கூறுகின்றான் சோலைமலைக் குறவஞ்சியில் வரும் சிங்கன். 'காளையின் வால் மயிரால் செய்த கண்ணி விடைக் கண்ணி' எனக் குறிப்பிடுகின்றார் அக்குறவஞ்சியின் உரை யாசிரியர் (ப. 159). 'குஞ்சுக் குறவர்கள், மான் போன்ற விலங்குகளை வேட்டையாடுவதற்கு அடர்த்தியான புதர் போன்று தோற்றமளிக்கும் ஓர் ஆயுதத்தைப் பயன்படுத்து கின்றனர்,[23] விடைக்கண்ணியும் இத்தகைய ஒன்றாக இருக்கலாம். குதிரைமயிரால் ஆன வலையைப் பறவைக் கூட்டைச் சுற்றிக் கட்டிப் பறவை பிடித்தலும் உண்டு.[24]

'நாய் போல் தடங்கண்டுபிடித்துப் பூனைபோல் பதுங்கி யிருந்து, நரிபோல் ஒடுங்கியிருந்து, பேய் போல் தொடர்ந்து சிங்கம் போல் பாய்ந்து அடிக்கின்ற திரிகூடச் சிங்கன்' (குற். குற., பா, 84) என்று தன்னை அறிமுகப்படுத்திக்

கொண்டு வரும் சிங்கன், தன் கூற்றின் ஊடே வேட்டையாடும் முறையினையும் புலப்படுத்துகின்றான். புதர் போன்ற ஒரு வகை ஆயுதத்தின் மற்றொரு முனையைப் பிடித்துக்கொண்டு, புதர்களால் தம்மை மறைத்துக்கொண்டு, மான் போன்ற விலங்குகளை வேட்டையாடுவது குஞ்சுக் குறவரின் வழக்கம்[25] என்பது இங்கு நினைவுகூரத்தக்கது.

பறவைகளைப் பிடிக்கும்பொழுது ஆளரவம் இன்றிப் பார்த்துக் கொள்கின்றனர் குறவர்கள். குற்றாலக் குறவஞ்சி யில் கண்ணி பதித்தபின் சிங்கன், 'கெம்பாறைடையே பொறு, பொறு கெம்பாறடையே' (குற். குற., பா, 99) என்று உரத்துப் பேசும் நூவனை அடக்குவதும், சரபேந்திர பூபால குறவஞ்சியில், 'நாய்களைத் தூரவே ஒதுங்க வைத்திடு, நீயும் பதுங்கியிரு குளுவா' (பா. 59) என்று சிங்கன் குளுவனுக்குக் கட்டளையிடுவதும், 'வாளைத் தோட்டத்தில் நில்லடா, அங்கே வார ஆளை நிக்கச் சொல்லடா, பச்சி வலையை யெறியடா' (பா. 31:X) என்று சின்னமகிபன் குளுவ நாடகத்தில் வரும் குளுவன் தன் கையாளுக்குக் கூறுவதும் ஆளரவம் இன்றிப் பறவை பிடிக்கின்ற குறவரின் உத்தியை நமக்குப் புலப்படுத்து கின்றன.

குறவர்கள் பறவைகளைப் பிடிப்பதற்கென்றே தீவகக் குருவிகளை வளர்ப்பார்கள். அவர்கள் கண்ணி பதித்து, தீவகக் குருவியைக் கண்ணிக்குள் வைத்து ஒதுங்கி விடுவார்கள். அக் குருவியைக் கண்ட பிற பறவைகள் இரை மேய வரும்பொழுது, அவை கண்ணிக்குள் சிக்கிவிடும். 'தீவக் குருவியைக் கண்ணிக்குள் வைத்திடு குளுவா' (பா.59) என்று சரபேந்திர பூபால குறவஞ்சியில் வரும் சிங்கன் கூறுவதனால் இதனை அறியலாம். கவுதாரியினப் பறவைகளை இம்முறையில் பிடிக்கும் குறவர் வழக்கத்தினைத் தர்ஸ்டன் குறிப்பிடு கின்றார்.[26] தாம் வளர்த்துப் பழக்கப்படுத்திய விலங்குகளைக் கொண்டு, பிற விலங்குகளை வேட்டையாடும் முறையும் குறவரிடையே காணப்படுகின்றது. 'வாவும் முயலைவிட்டு மத களிற்றைப் பிடிப்போம்' (சர. குற., பா. 37:2) என்னும் குறவஞ்சி வரி இதனை விளக்கி நிற்கின்றது.

பறவைகள் வயல்களில் வந்து சேரும்பொருட்டுப் பறவை யைப் போலக் குரலெடுத்துக் கூவும் வழக்கம் குறவரிடையே காணப்படுகின்றது. இதனை,

"பாவகம் ஆக நூவன் பறவைபோற் பறவைகூவ
மாவின்மே லேறிச் சிங்கன் வரும்பட்சி பார்க்கின் றானே."
(பா. 88)

என்னும் குற்றாலக் குறவஞ்சி வரிகளும்,

"புட்படுக்குங் கண்ணி குத்திப் புதரினிடத் தேயொ துங்கிப்
புட்குரலைப் போற் கூவிப் பூனை போலே பதுங்கும்
பெட்புறு நற்காடா கேள்." (ப. 38)

என்னும் இரிஷிவிந்தக் குறவஞ்சி வரிகளும் நமக்கு உணர்த்தி நிற்கின்றன. காடுகளில் பிரிந்து சென்ற குறவர்கள், நரி ஊளை யிடுவதுபோல் அல்லது ஆந்தை அலறுவது போல் குரலெழுப்பி ஒன்று சேரும் முறையினைத் தர்ஸ்டன் குறிப்பிடுகின்றார்.[27] இதைப் போலவே, குறவர்கள் பறவை வேட்டையின் பொழுதும், பறவையைப் போலக் குரலெழுப்பிப் பறவைகளை வயல்களில் வரவழைக்கும் வாய்ப்பு உள்ளது எனக் கருதலாம்.

பச்சிலை, மூலிகை முதலியன பற்றி அறிந்திருத்தல்

குறவர்கள்—ஆண், பெண் ஆகிய இரு பாலாரும்—பச்சிலை, மூலிகை மருந்து வகைகளையும், மந்திர, தந்திர வித்தைகளை யும் அறிந்தவராக விளங்குகின்றனர். குறத்தியர் தலைவியரிடம் தாம் அறிந்த அல்லது தாம் வாழும் மலைகளின் வளத்தினைப் பற்றிக் கூறுமிடத்தும், தம் திறமையினை வெளிப்படுத்தும் வகையில் தாம் அறிந்த சித்து வித்தைகளைப் பற்றிக் கூறுமிடத்தும், குறவன் தன் கையாளிடம் சிங்கியைத் தேடித் தந்தால் அளிக்கக்கூடிய கைக்கூலி பற்றிக் கூறுமிடத்தும், இத்தகைய பச்சிலை, மூலிகை, மந்திரம், தந்திரம், வித்தை முதலானவை பற்றிய செய்திகள் வெளிப்படுகின்றன.

செயலறச் செய்யும் வித்தையாகிய சலத்தம்பனம், வாயுத் தம்பனம், நிலத்தம்பனம் (பொய். குற., பா. 41), அக்கினித் தம்பனம் (மண். குற., பா. 53; காங். குற., பா. 19; பொய். குற., பா. 41) முதலியவற்றையும், ராசவசீகரம் (பெரியவர் களைக் கவர்தல்), நாரியர் மோகனலம்பனம் (மகளிரைக் கவர்தல்), தேச கருசணம் (பகைநாட்டை அழித்தல்) (காங். குற., பா. 19), பெந்தனங்கள் (பேய்க்கட்டு, தீக்கட்டு, அக்கினிக் கட்டு, காடுகட்டு, கண்கட்டு) (காங். குற., பா. 37; குற். குற., பா. 118), இந்திரசாலம் (மண். குற., பா. 53; குமா. குற., ப. 32; சித. குற., பா. 42), மகேந்திர சாலம் (தியா. குற., பா. 43), உச்சாடனம் (ஏவுதல்) (காங். குற., பா. 19; தியா. குற.,

பா. 43; நவ. குற., பா. 56), ரசவாத வித்தை (காங். குற., பா. 19; குமா. குற., ப. 32), கெசகர்ணம், கோகர்ணம், லோக வசியம், உபாயசூத்திரம் (சித. குற., பா. 42:1), அஷ்டாங்க யோகம் (தியா. குற., பா. 43; குமா. குற., ப. 32) முதலான வித்தைகளையும் கற்றுத் கைதேர்ந்தவராக விளங்குகின்றனர் குறவர்கள். மேலும் அவர்கள் திரண மந்திரம் (சித. குற., பா. 42), பில்லிமந்திரம் (பொய். குற., பா. 65), பொக்கிஷம், புதையல் ஆகியவற்றை எடுக்க உதவும் மை (மண். குற., பா. 77; பொய். குற., பா. 65; காங். குற., பா. 37) முதலானவற்றைப் பற்றியும் அறிந்திருந்தனர்.

"மூலிகைத் தொழிலில் எனைப்போலே யாரம்மே" (பா. 50) என்று குன்றாக்குடிக் குறவஞ்சியில் வரும் குறத்தி பெருமை கொள்வதற்கேற்ப, பலவகையான மூலிகை, பச்சிலை, மருந்து வகைகளைப் பற்றி நன்கு அறிந்து வைத்திருந்தனர் குறவர்கள்.

"செம்பைப் பொன்னாக்கும் பச்சிலை யிருக்குது
தின்றாற் பசியாப் பச்சிலை யிருக்குது
பாம்புக் கடியாப் பச்சிலை யிருக்குது
கம்பம் பிளக்கும் பச்சிலை யிருக்குது
கால்கை யசையாப் பச்சிலை யிருக்குது
நம்பிப் பின்றொடர் பச்சிலை யிருக்குது
நால்வகை யானசஞ் சீவி யிருக்குது
மண்ணுட் பொருட்காட்டு மருந்தி ருக்குது
மலடு நீங்கும் பச்சிலை யிருக்குது
விண்ணிற் பறக்கும் பச்சிலை யிருக்குது
வேந்த ரெதிற்கொள் பச்சிலை யிருக்குது
பெண்கள் தெருளும் பச்சிலை யிருக்குது
பித்தை யகற்றும் பச்சிலை யிருக்குது
கண்ணுக் குருதோற்றா மருந்தி ருக்குது
கன்னியைக் கூட்டும் பச்சிலை யிருக்குது
வெட்டுப் படாத பச்சிலை யிருக்குது
வில்லம்பு தைக்காப் பச்சிலை யிருக்குது
கட்டுத் தெறிக்கும் பச்சிலை யிருக்குது
காவலிற் சிக்காப் பச்சிலை யிருக்குது
தொட்டப் பொருள்பெறா மருந்தி ருக்குது
தூக்கங் கலையாப் பச்சிலை யிருக்குது
பெட்டித் திறக்கும் பச்சிலை யிருக்குது
பேச்சை யடக்கும் பச்சிலை யிருக்குது." (பக். 23—24)

என்று இரிஷிவிந்தக் குறவஞ்சியில் வரும் குறத்தி அம் மலையின் சிறப்பினைப் பாடுமிடத்துப் பல்வேறு பச்சிலைகளைப் பற்றிக் குறிப்பிடுகின்றாள். இப் பச்சிலை வகைகளுள் சிலவற்றைப் பற்றி — பாம்புக் கடியாப் பச்சிலை, மலடு நீங்கும் பச்சிலை, நால்வகையான சஞ்சீவி போன்றனவற்றைப் பற்றி — பயன் வகையில் — சிறிதளவு நாம் அறிந்திருத்தல் கூடும். ஆயின் இங்கே கூறப்பட்டுள்ள பச்சிலைகள் பல இருத்தல் கூடுமா என்னும் ஐயம் நமக்கு எழுதல் இயல்பு. எடுத்துக்காட்டாக, 'கால்கை அசையாப் பச்சிலை' பற்றிய ஓர் உண்மை யனுபவத்தைப் பிலோ. இருதயநாத் தம் 'காடு கொடுத்த ஏடு' என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார்.[28]

" மூன்றுலோகம் இமைக்குட் சுற்றிமுன்போல் எதிர்வரவே
முடிமேல் அணிந்திடவே ஒருமூலிகை யுண்டு
அடையார் வந்துகேட்ட சித்தைகளி யாவுமேதர
வள்ளிக் கொடியுண்டு அதன்காரணஞ்
சொல்லக் கூடாதடி யம்மே.'' (பா. 73)

என்று சிவன்மலைக் குறவஞ்சியில் வரும் குறத்தி கூறுகிறாள். இதனால் குறவர் வித்தைகளையும், மருந்து, மூலிகை பற்றிய அறிவினையும் தம் குடியினருக்கு மட்டுமே கற்பிக்கும் வழக்கம் உள்ளவர் என்பதனை அறியலாம். 'பல வகையான மூலிகை களைப் பற்றி அறிந்திருப்பது, அருகில் வாழும் மக்களுடன் கூடிப் பழகுவதற்கும், அவர்களுடன் வணிகத் தொடர்பு கொள் வதற்கும் குறவர்களுக்குத் துணைபுரிகின்றது'[29] என மார்ட்டின் பிளாக்கும் குறிப்பிட்டுள்ளார்.

### சமூக வாழ்வு

குறவர் சமூகத்தில், ஆண் பெண் ஆகிய இருவருமே தம் வாழ்விற்காக உழைத்து உண்ணும் நிலையில் உள்ளனர். குறவஞ்சியில் வரும் குறத்தி, தன் வயிற்றுக்குத் தேவையான உணவினை இரந்து பெறும் வறிய நிலையிலேயே இருக்கின்றாள்.

" உள்ளபடி குறியுனக்குக் கூறிடுவே னம்மே—முன்னம்
ஒருசிறங்கைக் கஞ்சிபசி யாறிடவா ரம்மே
பிள்ளைதலைக் கொருகரண்டி யெண்ணெயூற்றி டம்மே—
அந்தப்
பிள்ளையார்க்குப் படைத்தவெலா மெடுத்துதவிங் கம்மே. ''
(சர. குற., பா. 50:1, 2)

என்று அவள் தலைவியிடம் தனக்குக் கஞ்சியும், தன் குழந்தையின் தலைக்கு எண்ணெயும் வேண்டுகின்றாள். 'முன்பு

குறவர் மலையாட்சியையே வள்ளி தனக்குச் சீதனமாக வழங்கினோம்; ஆனால் இப்பொழுது பிள்ளையின் தலைக்கு எண்ணெய் இல்லை; அரைக்கும் ஒரு துணியில்லை; என் மாற்றாள் வந்ததன்பின் வறுமையுற்றோம்' (பா. 20) என்று தமது குடியின் வறுமை நிலைக்குக் காரணமும் கற்பிக்கின்றாள் மீனாட்சியம்மை குறத்தில் வரும் குறத்தி.

குறவஞ்சியில் குறத்தியை அறிமுகப்படுத்தும்பொழுது, அவள் காலில் பொன்மிஞ்சி, இடைக்கிடை முத்து மிசைந்த செம்பவளமும் தொடுத்த தாழ்வடம், ரத்தினம் இட்டிழைத் தமைத்த பூணணி, அக்குமணி, அம்புயமணி, வக்காமணி, மாமயிற்பீலி, புலிநகக்கோவை, பூனைக்காய்ச்சி (கும். குற., பா. 35:104—118), தமனியச் சிலம்பு, தண்டை, சதங்கை, சங்குமாமணிகள் (தியா. குற., பா. 20:98—100) போன்ற பல அணிவகைகளை அணிந்திருந்ததாகக் கூறப்பட்டுள்ளது. குறவர் குலத்தில் "ஒரு பெண் எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாக பாசிமணிச் சரங்களை அணிந்துள்ளாளோ அவ்வளவுக்கவ்வளவு வசதி படைத்தவள் என்று மதிக்கப்படுகிறாள்"[30] என்பர். இக்கருத்திற்கேற்ப, குறத்தியின் அணிவகைகளில் அக்குமணி, அம்புயவணி, வக்காமணி, சங்குமணி எனப் பல்வேறு வகையான அணிவகைகள் சுட்டப்பட்டிருத்தல் கருதத்தக்கது. பொன், இரத்தினத்தினாலான உயர்ந்த அணிகள் குறத்தி குறி சொல்லிப் பரிசு பெற்றவை என்பது குறிப்பிடத்தக்கதாகும். இதனால் அவளது குறித்திறன் சிறப்பிக்கப்படுகின்றது எனலாம். ஆயின் உண்மைக் குறத்தியரோ, "கை நிறைய ஈயக்காப்புகள், விரல் களில் ஈய மோதிரங்கள், கண்ணாடி வளையல்கள், காதணி, அட்டிகை, மயிர்மாட்டி"[31] போன்ற பல வகையான எளிய அணிகளையே அணிந்து திரிவது குறிப்பிடத்தக்கது.

திருமணம்

"ஒரு குலத்திற் கொடோம் ஒருகுலத்தில் கொள்ளோம்
உறவுபிடித் தாலும்விடோம் குறவர்குலம் நாங்கள்."

(குற். குற., பா. 54:6)

என்று குறவர் குலத்தைச் சாராதவருடன் திருமண உடன் படிக்கை செய்து கொள்ளாத தம் குடியின் இயல்பைச் சுட்டு கின்றனர் குறவஞ்சியில் வரும் குறத்தியர் (அழ. குற., பா. 30:7; சிவ. குற., பா. 70; குன்றா. குற., பா. 39). தம் சாதியைச் சாராத ஒருவரை மணந்தால், அவரைத் தம் சாதியிலிருந்தே

ஒதுக்கி வைத்து விடுவது குறவர் இயல்பு என்பதனை மார்ட்டின் பிளாக்கும் தம் நூலில் குறிப்பிடுகின்றார்.[32]

**மாமனை மணத்தல்**

மாமனை மணக்கும் முறை குறவரிடையே காணப்படுகின்றது. 'தாய் மாமனைக் கண்டபோதே தலை குனிந்து பேச நாணிக் கொள்வோம்' (சிவ. குற., பா. 82) என்றும், 'மாமனை முன்கைப்பிடிப்போம்' (சர. குற., பா. 37:3) என்றும் வரும் குறவஞ்சி இலக்கிய வரிகளால் இதனை அறியலாம். அத்தை மகளையோ, மாமன் மகளையோ மணக்கும் முறையும்,[33] ஒரு குடும்பத்தின் மூத்த இரண்டு பெண்களை, மாமன் தன் மகன்களுக்காக வேண்டிப் பெறும் உரிமையும்[34] குறவரிடையே காணப் படுவதை ஆய்வாளர்கள் எடுத்துக்காட்டியுள்ளனர்.

**கணவனை மதித்தல்**

" கருதியொரு வர்பேர் நாமம் எடாளே
கலவியில் ஒன்றரைச் சாமம் விடாளே
பரபுருடரைக் கையி னாலே தொடாளே
பாதகிஎன்னை விட்டுத் தனியே படாளே "
(கும். குற., பா. 103)

என்று சிங்கன் கூற்றாக வரும் பகுதியும், 'அன்னியப் புருடரைக் கனவு தன்னிலும் ஆசையாகச் சேர்வதில்லை' (அர்த். குற.) என்றும், 'கை கொடுத்த குறவனைத் தெய்வமென வொரு நிலைமை பிடிப்போம்' (சிவ. குற , பா. 109) என்றும் குறத்தியின் கூற்றாக வரும் பகுதிகளும் குறத்தியரின் கற்பு நிலையைப் புலப்படுத்துவதோடு கணவரைத் தெய்வமென மதிக்கும் அவர்தம் உயர்குணத்தையும் புலப்படுத்துகின்றன. 'பொதுவாக, குறத்தியர் தம் கணவன்மாருக்குத் துரோகம் நினைப்பதில்லை. ஆயின் கணவன் மனைவியரிடையே கருத்து வேற்றுமை ஏற்படும்பொழுது, அவர்கள் தம் பிரிவு எண்ணத்தைக் குழுவினருக்குத் தெரியப்படுத்திப் பிரிந்து விடுவர். இது மணவிலக்குச் செய்து கொள்வதற்கு ஒப்பாகும்'.[35] எனத் தர்ஸ்டன் குறிப்பிடுவது கருதத்தக்கது. இதனை மனத்திற் கொண்டே கும்பேசர் குறவஞ்சியில் வரும் குறவன், நீண்ட நாள் தன்னைப் பிரிந்திருந்த குறத்தியிடம் உரையாடும் பொழுது,

" சுற்றத்துக் கேமுறி யெழுதுவே னென்று
சொன்சொல் மெய்யாமோ—சிங்கி."
(கும். குற., பா. 109)

என்று வினவுகின்றான். 'மணவிலக்குச் செய்ய விரும்பும் கணவனோ மனைவியோ சாதிப் பெரியவர்கள் கூடியுள்ள ஒரு குழுவின்முன், ஒரு குச்சியை ஒடித்துப் போட்டுத் தன் பிரிவைத் தெரிவிக்கும் வழக்கம் குறவரிடையே காணப்படு கின்றது'[36] 'சுற்றத்துக்கு முறி எழுதுதல்' என்பதை மணி விலக்கிற்கு முன் நடைபெறும் நிகழ்ச்சியாகக் கொள்ளலாம்.

## உடன் பிறந்தவன் மனைவியை விரும்புதல்

தமையன் மனைவியைத் தம்பி விரும்புவதும், தம்பி மனைவியைத் தமையன் விரும்புவதும் குறவஞ்சியில் காட்டப் பெறும் ஒரு வாழ்வியல் செய்தி ஆகும். 'அன்னியப் புருடரைக் கனவு தன்னிலும் ஆசையாகச் சேர்வதில்லை' என்று கூறிய அர்த்தநாரீசுவரர் குறவஞ்சியில் வரும் குறத்தியே, பிறி தோரிடத்து, 'தம்பி மனைவி தமையன் விரும்புவோம்' (அர்த். குற., காகிதப் பிரதி) என்று கூறுகிறாள். 'பரபுருடரைக் கையினாலே தொடாளே' (பா. 103) என்று கும்பேசர் குறவஞ்சியில் வரும் குறவன் எண்ணிக்கொண்டிருக்க, குறத்தியோ, 'கொழுந்தனை யழைத்தொரு குடிசைக்குட் படுத்தோம் (பா. 47: 2) என்று கூறுகிறாள். 'கணவனறியக் கொழுந்தனையுங் கைபிடிப்போம்' (பா. 39 : 2) என்று பொய்யா மொழியீசர் குறவஞ்சியில் வரும் குறத்தி கூறுவதும் இங்கே குறிப்பிடத்தக்கது. குறவர்கள் ஒரு வனுக்கு ஒருத்தி என்னும் மரபைப் போற்றுபவர் அல்லர் என்பது இச்சான்றுகளால் புலனாகும். மணவிலக்குச் செய் வதும், மணவிலக்குச் செய்துகொண்ட கணவன் மனைவியரே மீண்டும் இணைந்து வாழ்வதும் குறவர் சமுதாயத்தில் காணக் கூடியதே ஆகும். மேலும், ஒரு குறவன், திருடும்போது அகப் பட்டுச் சிறைச்சாலைக்குச் செல்ல நேர்ந்தால், அக்குறவனின் மனைவி, தன் கணவன் திரும்பி வரும் வரை, வேறு ஒருவனுடன் இணைந்து வாழ்வதும், குழந்தை பெறுவதும் உண்டு.[37] ஒரு குறவன் இறந்துவிட்டால், அக்குறவனின் மனைவியை இறந்த வனின் அண்ணனோ அல்லது தம்பியோ மணந்துகொள்ளும் முறையும் குறவர்களுள் சில பிரிவினரிடையே காணப்படு கிறது[38] என்பதும் இங்குக் கருதத்தக்கது.

## இரு மனைவியர்

குறவர் சமுதாயத்தில் ஒன்றிற்கு மேற்பட்ட பெண்களை மணந்துகொள்ளும் வழக்கம் காணப்படுகின்றது.

"பிள்ளைதனக் கெண்ணையிலை யரைக்குமொரு
துணியிலையென் பிறகே வந்த
கள்ளிதனைக் கொண்டவன்றே குறவனுக்கும்
எனக்குமிலை கஞ்சி தானே." (பா. 20)

என்று மீனாட்சியம்மை குறத்தில் வரும் குறத்தி, தன் வறுமை நிலைக்குக் காரணம் தன் சக்களத்திதான் என்பதை எடுத்துக் கூறுகின்றாள்.

"திங்கள் முகமும் சிவந்து பங்கமுற
வைத்ததுண்டோ ஐயே—பொல்லாச்
சிரிக்கி வந்த நாளே மூத்தகுறத்தி
யாசை விட்டேன் காணையே" (ப. 186)

என்று ஓதாளர் குறவஞ்சியில் வரும் சிங்கன் தன் இளைய மனைவி ஒருத்தி இருந்த போதும், மூத்த குறத்தியின்மீது ஆசை கொண்டு அவளுக்காக ஏங்குகிறான்; அவளைக் கண்டவுடன் அவள்மீது ஐயுற்று வினாத் தொடுக்கிறான்.

"இலக்க மில்லாமலே இளையாள் மருந்தினாலே
என்மேல் வெறுப்புனக் கென்னடா சிங்கா." (பா. 125)

என்று அவனிடம் வினவுகின்றாள் மூத்த குறத்தி. இப்பகுதிகளை நோக்க, குறவன் இரண்டு மனைவியருடன் வாழ்ந்தமை புலனாகும்- "நரிக்குறவர்களிடையே ஒருவன் ஒருத்தி என்ற நியதியே பெரும்பான்மையாகக் காணப்படுகிறது. ஆனால் ஒன்றுக்கு மேற்பட்ட மனைவியுடன் வாழும் நரிக்குறவனையும் காணலாம்"[39] எனக் கோ. சீனிவாசவர்மா குறிப்பிடுவதும் இங்குக் கருதத்தக்கது.

## திருமணச் சடங்குகள்

### பரிசம் இடுதல்

குறவஞ்சியில் குறவர் மேற்கொள்ளும் சில திருமணச் சடங்குகள் குறிப்பிடப்பட்டுள்ளன. குறவர் சமுதாயத்தில், ஒரு பெண்ணைத் திருமணம் செய்து கொள்வதற்கு, மாப்பிள்ளையே பெண்ணின் தந்தையாருக்குப் பணம் கொடுக்க வேண்டும். இதனை,

"கோதையர்க்குத் தங்கக்காசு
கொடுத்து மணமுடிப்போம்." (பா. 40:இ)

என்று மண்ணிப்படிக்கரைக் குறவஞ்சியில் வரும் குறத்தி உணர்த்துகின்றாள்.

திருமண உறுதி என்றும் பரிசம் இடுதல் என்றும் இன்றும் வழங்கும் ஒரு வழக்கம் குறவரிடையே காணப்படுகின்றது. குதிரை, கழுதை போன்ற விலங்குகளைப் பரிசமிடுகின்றனர் குறவர்கள்.

"இருபது குதிரையை வண்டுகாள் பணையம்
ஏற்கவே யீந்தேன் வண்டுகாள்." (ஆர்த். குற.)

என்றும்,

"எட்டுநேருங் குறப்பரிசம் இவளுக்கிட்டேனே."
(சிவ. குற., பா. 124)

என்றும்,

"பத்தரைச்சங் கேதக்குதிரை பரிசமிட்டேனே."
(கும். குற., பா. 106:4)

என்றும்,

"பரியம் இட்டு மூன்றரைக் கழுதை கட்டிக் கொண்ட
பெண்ணல்லவே ஐயே." (ஒதா. குற., பா. 187)

என்றும்,

"வேணுமென் றேழரைக் கழுதையு மிட்டு
மெத்தவும் நான்பிள்ளை போலே வளர்த்தேன்."
(பொய். குற., பா. 64:1)

என்றும்,

"எட்டரைக் களிறையொரு பரிசமுந் தருகச் சொல்வோம்."
(சிவ. குற., பா. 82)

என்றும் குறவஞ்சிகளில் வரும் குறவர்கள், தாம் பரிசில் இட்ட பொருள்களைச் சுட்டிக்காட்டுகின்றனர்; பிரிவாற்றாமையால் வருந்தும் நிலையில் 'இவளுக்காக இவ்வளவு செலவு செய்தேனே, என்னை விட்டுப் பிரிந்து சென்றாளே' என்று ஏங்குகின்றனர், திருமணம் முடிவு செய்யப்பட்ட பின்னர், 'மாப்பிள்ளை வீட்டார் அனைவருக்கும் கள், சாராயம் வழங்கும்'[40] முறையும் குறவரிடையே உண்டு. இதனை, அர்த்தநாரீசுவரர் குறவஞ்சியில் வரும் குறத்தி, "புதுமணஞ்செய் சாராயங்களும் மதுவும் வேண்டுவோம்" எனக் குறிப்பிடுகின்றாள்.

சங்குத் தாலி கட்டுதல்

'ஓலைவிட்டு சங்குத் தாலி கட்டும்' (பா. 106:1) முறையினைக் கும்பேசர் குறவஞ்சி குறிப்பிடுகின்றது. 'மங்கிலியம்

எங்கள் சங்கின் மணிதன்னில் பதிப்போம்' (பா. 29:2) என்று உரைக்கின்றாள் தியாகேசர் குறவஞ்சியில் வரும் குறத்தி. 'சங்கே மங்கிலியமாய்ச் சரமதில் தொடுப்போம்' (பா. 42:3) என்கின்றாள் காங்கேயன் குறவஞ்சியில் வரும் குறத்தி. ஆயின் கறுப்புப் பாசிமாலையை அல்லது மஞ்சள் கயிற்றினைத் தாலி யாகக் கட்டும் வழக்கத்தினையே குறவர் வாழ்வியலை ஆராய்ந்த அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர்.[41]

சிவன்மலைக் குறவஞ்சியில் வரும் குறத்தியும், குறவனும் நிறைநாழி வைத்து ஏழுநாள் திருமணம் செய்தல், கங்கணம் அணிதல், குல தெய்வத்திற்குப் பொங்கல் இடுதல், முகூர்த்தத் திற்குப் பொருத்தம் பார்த்தல், நல்ல நாள் குறித்தல் ஆகிய திருமணச் சடங்குகளைக் குறிப்பிடுகின்றனர்:

''ஏழுநாள் முகூர்த்தம் நிறைநாழி வைத்து மணமுடிப்போம்
கங்கண மணிந்து மணப்பொங்கலிட்டுக் கலியாண
முடிப்போம்.' (பா. 82)

''பொட்டிக்கு நல்ல பொருத்த நிமித்தங் கேட்டேனே—வேத
புராணிகர் சொன்ன முகூர்த்தத்தி னாளு மிட்டேனே
அட்டிகை தோடுஞ் சவுடிகை பொன்னி விட்டேனே—யிவ
ளாசையினால் குலதெய்வத்தையும் கும்பிட்டேனே
மட்டார் குழல்வள்ளி தாய்க்குப் பொங்கலு மிட்டேனே—சிவ
மலையில் முருகர்க்குச் சேவலும் பாலும் இட்டேனே.''
(பா. 124)

'நல்ல பொருத்த நிமித்தம் கேட்டல், வேதபுராணிகர் சொன்ன முகூர்த்தத்தில் நாள் குறித்தல்' குறவரிடையே உண்டு என்பர் அறிஞர்.[42]

## குறவர் வழக்கங்கள்

குறவர் சமூகத்து இளம் பெண்கள் பிறையை வணங்கும் வழக்கம் உண்டு. இதனை, 'இளவயதில் சிறுபிறையைப் பணிவோம்' (பா. 38:இ) என்று மண்ணிப்படிக்கரைக் குறவஞ்சி யில் வரும் குறத்தி குறிப்பிடுவதால் உணரலாம்.

குறப் பெண்கள் காது வளர்க்கும் வழக்கமும் குறவ ரிடையே காணப்படுகின்றது.

''காதுகுத்திப் பெண்களுக்குக் கல்லணியச் செய்வோம்.''
(கீ. 30;7)

என அழகர் குறவஞ்சியும்,

''நாங்கள் மேதினியில் காதுகுத்தி நன்றாய் வளர்ப்போம்.''

(பா. 13)

எனக் காங்கேயன் குறவஞ்சியும் இதனை உணர்த்துகின்றன. 'நாமக்கல் குறவர்கள் காது வளர்த்துப் பெரிய பெரிய காதணிகள் அணிந்திருக்கும் இயல்பி'னைத் தர்ஸ்டன் குறிப்பிடுகின்றார்.[43] குற்றாலக் குறவஞ்சியில் குறவன்—குறத்தி எதிர்த்துரையாடல் பகுதியில்,

'' கள்ளிப்பூப் பூத்தது அதிசய மல்லவோ சிங்கி; தெற்கு
வள்ளியூ ரார்தந்த மாணிக்கத் தண்டொட்டி சிங்கா. ''

(பா. 126: 2)

என வரும் பகுதி இங்கே ஒப்புநோக்கத்தக்கதாகும்.

'குறத்தி பிள்ளை பெறக் குறவன் காயம் தின்றானாம்' என்பது ஒரு பழமொழி. இப்பழமொழி குறவர் வாழ்வில் காணப்படும் ஒரு வியக்கத்தக்க வழக்கத்தினையே எடுத்துக் காட்டுகின்றது. குறத்தி குழந்தை பெறும் நேரத்தில் குறவனுக்கு மருந்தும், கோழி, கறி முதலான சத்துள்ள புலால் உணவு வகைகளும் அளிக்கப்படுமாம்; குறவன் மூன்று நாள்கள் வரை வெளியே எங்கும் செல்லாமல், குடிசைக்குள்ளேயே நன்றாக உண்டு, உறங்கி, முடங்கிக் கிடப்பானாம்.[44] இவ்வழக்கத்தினையே,

'' குறத்தி புளிக்குடிக்கக் குறவனையே மருந்து
குடிக்கச் செய்வோமடி கொம்பனையே. '' (பா. 39)

என்று குன்றாக்குடிக் குறவஞ்சியில் வரும் குறத்தியும்,

'' குறத்தி பிள்ளை பெற்றிடவே
குறவன் கழாயங் குடிப்பான். '' (பா. 40: இ)

என்று மண்ணிப்படிக்கரைக் குறவஞ்சியில் வரும் குறத்தியும் குறிப்பிடுகின்றனர்.

குறவர் குலப் பெண்கள் இரவு வெளியே தங்காமல் தம்மைச் சேர்ந்தவர் தங்கியிருக்கும் குடிசைகளுக்குத் திரும்பி விடவேண்டும் என்னும் கட்டுப்பாடு அச்சமூகத்தினரிடையே காணப்படுகின்றது.

'' எங்கெங்கு சஞ்சரித்தாலும் தங்கித் தரித்தங்கு
ஓர்இரவு இருக்கோம். ''

(பா. 82)

என இவ்வழக்கத்தினைக் குறிப்பிடுகின்றாள் சிவன்மலைக் குறவஞ்சியில் வரும் குறத்தி. 'எருக்கல' இனக் குறவர்கள்,

தம் இனப் பெண்கள் வேறு துணையின்றி, சூரியன் மறைந்த பிறகு வந்தால் சந்தேகக் கண்கொண்டு நோக்குவர்'[45] எனத் தர்ஸ்டன் கூறுகின்றார். 'கணவனோ, மனைவியோ பகல் நேரம் எங்கே இருந்தார்கள் என்பதைப் பற்றிக் கேள்வியில்லை. ஆனால், ஏதேனும் தொழில் செய்வதற்குக் குறப் பெண் வெளியே செல்லும் போது, தன் கணவனின் சந்தேகத்தைத் தீர்ப்பதற்காகவென்றே மற்றொரு பெண்ணையும் துணைக்கு அழைத்துச் செல்வாள்'[46] எனக் குறவர் வழக்கத்தினை மார்ட்டின் பிளாக்கும் குறிப்பிடுகின்றார். 'கால் வலியால் நடக்க இயலாமல் இரவு ஒரு மரத்தடியில் தூங்கிவிட்ட குருவிக்காரப் பெண்ணின்மேல் சந்தேகம் கொண்டு, பழுக்கக் காய்ச்சிய இரும்பைக் கையால் தூக்கச் சொல்லி அவள் கற்பைச் சோதிக்கும் குறவர் வழக்கத்தினை, பிலோ இருதயநாத் 'காடு கொடுத்த ஏடு' என்னும் நூலில் எடுத்துக்காட்டியுள்ளார்.[47]

குறம், குறவஞ்சி, குளுவ நாடகம் ஆகிய இலக்கியங்கள் காட்டும் குறவர் சமுதாயம் குறி கூறுவதிலும், பறவை வேட்டையிலும் திறமை படைத்தது; பற்பல வித்தைகள், மூலிகை வகைகள், மருந்து வகைகள் பற்றிய அறிவை வழி வழியாகப் பெற்று வாழும் சிறப்பு உடையது; தெய்வப் பற்றும், நம்பிக்கையும், கட்டுப்பாடும் கொண்டது இத்தகைய குறவரது வாழ்வியல் செய்திகள் இவ்விலக்கியங்களில் நடப்பியற்பாங்கோடும், கற்பனை மெருகோடும், அழகுணர்ச்சியோடும் சித்திரிக்கப்பட்டுள்ளன எனலாம்.

## குறிப்புக்கள்

1. "குறவர்கள்; இவர்கள் இந்து தேச முழுதும் வசிக்கும் ஒருவகைக் கள்ளச் சாதியார். இவர்கள் பாஷை தமிழ், தெலுங்கு கலந்தது. இவர்கள் பலவிதத் தொழில் செய்வர். இவர்கள் சாத்துபடி குறவர், காவடிக் குறவர், மாண்பாடிக் குறவர், செருப்புக் குறவர், உப்புக் குறவர், கறிவேப்பிலைக் குறவர், புளிக்குறவர், டப்பி குறவர், கஞ்சு குறவர், பூசலவாடு, உட்ளவாடு, காதுகுழிக் குறவர், கூடை கட்டிக் குறவர், லள்ளியம்மைக் கூட்டம், வாலாஜாக் குறவர், உய்யாலு குறவர், சோலைக் குறவர்,

தோகைமலைக் குறவர், கள்ளக் குறவர், கூத்தாடிக் குறவர் முதலிய பலவகை."

—ஆ. சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி,ப. 489.

2. "The section of korovas who carried salt inland from the coast became known as uppu (salt) koravas. Another large class are the Thubba, Dhubbai or Dabbai (split bamboo) Koravas, who restrict their wanderings to the foot of the hill ranges, where bamboos are obtainable. With these they make baskets for the storage of grain, for carrying manure at the bottom of carts and various fancy articles.

—E. Thurston, Castes and Tribes of Southern India, p. 453.

3. "The Koravas are said to be divided into two large families, which they call pōthu and penti, meaning male and female." —E. Thurston, op. cit., p. 450.

4. கோ. சீனிவாசவர்மா, நரிக்குறவப் பழங்குடி மக்கள், பக். 27—28.

5. "A gypsy will eat anything. He eats vegetables as readily as meal when he happens to have them."

—Martin Block, Gypsies; Their Life and Their Customs, p. 104,

6. "The gypsies have one weakness which cannot overcome—alcohol. Both men and women drink it. A celebration without alcohol is unthinkable."

—Martin Block, op. cit., p. 110.

7. "These women (pachaikuttis) who are sufficiently trained to speak in suitable language, are clever enough to give out some yarns in equivocal terms, so that the anxious women, who hope for better futility, understand them in the light uppermost in their own minds. The Korava women will be rewarded duly and doubly too, for they never fail to study the nature of the house all the time."

—E. Thurston, op. cit., pp.456—457.

8. "The wanderers always know more than one language colloquially, and are able to make themselves understood by the people of the country through which they may be passing. Those who have settled in villages invariably speak the language of the locality."

—F. Thurston, op. cit., p. 447.

9. "On the day appointed for the religious service, everything within the hut is thrown outside, and the floor is purified with cow-dung and devices are drawn thereon. The brass vessel is set up and offerings of large quantities of food are made to it. Some of this dedicated food must be given to all the inhabitants of the settlement."

—E. Thurston, op. cit., p. 460.

10. "Pōleramma may be worshipped close to, but not within the hut. To her offerings of boiled rice (pongal) are made by fasting women."

—E. Thurston, op. cit., p. 461.

11. உ. வே. சாமிநாதையர் (பதிப்.), ஸ்ரீ சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தங்கள், ப. 346.

12. உ. வே. சாமிநாதையர் (பதிப்.), திருமலையாண்டவர் குறவஞ்சி, ப். 29.

13. "The household god of the Korava, which is as a rule very rudely carved, may be a representation of either Vishnu or Siva... They worship in addition to these, Kōlapuriamma, Perumālaswami and other appropriate deities, prior to proceeding on a depredatory expedition."

—E. Thurston, op. cit., p.460.

14. "In a note on the Coorroo, Balfour states that they told me that when they pray, they construct a small pyramid of clay, which they term Māriamma, and worship it... The form represented is that of the goddess Kāli."

E. Thurston, op. cit.. pp.461—462.

15. கோ, சீனுவாசவர்மா, ‘எருக்கலவாரு’, ச. அகத்திய லிங்கம் (பதிப்.), தமிழகப் பழங்குடி மக்கள், ப.6.

16. "The manner in which the boiling food bubbles over from the cooking pot is eagerly watched, and accepted as an omen for good or evil."

—E. Thurston, op. cit., p.461

17. "Among other methods of consulting the omens, is to sacrifice a fowl at shrine and sit in front there of listening for the direction whence the chirping of lizards issues."

—E. Thurston, op. cit., p. 457.

18. நன்னிமித்தங்களைப் பற்றிய செய்திகள் ‘நாட்டுப் புறக் கூறுகள்’ என்னும் இயலில் விரிவாகக் கூறப் பட்டுள்ளன. (பக். 219—222).

19. "Another large class are the Thubba, Dhubbai or Dhabbai (split bamboo) Koravas, who restrict their wanderings to the foot of the hill ranges, where bamboos are obtainable. With these they make baskets for the storage of grain, for carrying manure at the bottom of carts and various fancy articles."

—E. Thurston, op. cit . p.453

20. "They (Kunchu Koravas) capture duck or teal largely at night and go to the rice fields below a tank (pond or lake), in which the crop is young, and the ground consequently not entirely obscured. This would be likely feeding ground, or traces of duck having fed there on the previous night might be noticed. They peg a creeper from one bund (mud embankment) to another, parallel to the tank-bund, four inches above the water in the field. From this they suspend a number of running loops touching the mud under water. If the duck or teal come to feed, they are sure to be caught and fall victims to the slip noose."

—E. Thurston, op. cit., p. 455.

21. இரா. இளங்குமரன் (பதிப்.), மண்ணிப்படிக்கரை நீலகண்டர் குறவஞ்சி, ப. 76.

22. கோ. சீனிவாசவர்மா, நரிக்குறவப் பழங்குடி மக்கள் ப. 34.

23. "For the purpose of shooting antelopes, or of getting alone enough to the young one to catch them after a short run, they use a kind of shield made of dried twigs ragged at the edges, which looks like an enormous wind-blown bundle of grass."

—E. Thurston, op. cit., p. 454.

24. "The Kuntsu (Kunchu) Koravas, Mr. Francis tells us, catch small birds by liming twigs or an arrangement of bits of bamboo with a worm hung inside it or by setting horse hair nooses round the nests."

— E. Thurston, op. cit., p. 455

25. "When they come in sight of a herd of antelopes, they set one edge of the shield on the ground, and sitting on their heels behind it, move it slowly forward towards the herd until they get sufficiently close to dash at the young ones or shoot the grownup animals. The antelopes are supposed to mistake the shield for a bush and to fail to notice its gradual approach."

—E. Thurston, op. cit., pp. 454—455.

26. "Quails they capture by freely snaring a piece of ground, and then putting a quail in a cage in the middle of it, to lure the birds towards the snare,"

—E. Thurston, op. cit., p. 455.

27. "Detached parties in the jungle or elsewhere, are able to unite by making sounds like the howling of jackals, or hooting of owls."

—E. Thurston, op· cit., p.470.

28. மசினிகுடி ஆதிவாசிகளைப் பார்க்கச் சென்ற பொழுது, விசித்திரமான தோற்றம் கொண்ட ஒருவனைக் கண்டதாகவும், அவனைப் புகைப்படம்

எடுக்க விழைந்தபோது, அவன் அதற்கு ஒப்புக் கொள்ளாது, 'படம் பிடித்தால் உனக்குக் கால் விளங்காது' என்றுக் கூறிக்கொண்டே ஓடியதையும், கால்களைத் தரையில் ஒட்டிக்கொள்ளச் செய்து விடுவதாகப் பயமுறுத்தியதையும் கூறியதைக் கேட்டு, 'சரி படம் பிடிக்கவில்லை, ஆனால் என் காலைத் தரையில் ஒட்டும்படி செய் பார்க்கலாம்' என்று கூறிய தாகவும், உடனே அவன் சில பச்சிலைகளை எடுத்துக் கசக்கி என்னவோ மொணமொணவென்று சொல்ல, அவருடைய கால்களில் விறுவிறுப்பான உணர்வு தோன்றிக் கால்களை அசைய ஒண்ணாதவாறு செய்ததையும் பற்றிக் குறிப்பிட்டுள்ளார், பிலோ. இருதயநாத்.

—பிலோ. இருதயநாத், காடு கொடுத்த ஏடு, ப. 74.

29. "The gypsies' remarkable knowledge of medicinal herbs often enables them to do good business with the inhabitants of the locality."

—Martin Block, op. cit., p. 105.

30. கோ. சீனிவாசவர்மா, நரிக்குறவப் பழங்குடி மக்கள், ப. 7.

31. „ „ ப. 7.

32. "Strict precautions are taken to prevent a gypsy marrying out side his own people. To do so is to condemn him or herself to perpetual exile from the gypsy community."

—Martin Block. op. cit., p. 190.

33. "A man may marry the daughter of his paternal aunt or maternal uncle."

— E. Thurston, op. cit., p. 484.

34. "A custom is stated by Dr. Shortt to prevail among the Yerukalas, by which the first two daughters of a family may be claimed by the maternal uncle as wives for his sons."

—E. Thurston, op. cit., p. 486.

35. 'As a general rule, the Korava wife is faithful to her husband, but in the event of incompatibility, man and wife will announce their intention of separating to their gang. This is considered equivalent to divorce."
—E. Thurston, op. cit., p.489.

36. "If a husband wishes to secure a divorce, asks his wife to break a twig in two before a caste council. If a woman wishes for a divorce, she elopes with a man, who pays a small fine called ponnu, to the husband, and asks him to break a twig."
—E. Thurston, op. cit,, p.485.

37. E. Thurston, op. cit., pp.489—490.

38. "The younger brother may marry the widow of an elder brother and vice versa."
—E. Thurston, op. cit., p.485.

39. கோ. சீனிவாசவர்மா, நரிக்குறவப் பழங்குடிமக்கள், ப. 86.

40. ,, ,, ப. 82.

41. "The Koravas are said to tie a piece of thread soaked in turmeric water round the bride's neck at weddings, while Yerukalas use a necklace of black beads."
—E. Thurston, op. cit., p.442.

42. "...a Brahman purōhit is asked to fix an auspicious time for the marriage ceremony."
—E. Thurston, op. cit., p.479.

43. "They (The Namakkal Kuravars) are peculiar in wearing long ear-rings."
—E. Thurston, op. cit. p.452.

44. Mr. Rice, in the Mysore Gazetteer says that among the Koravars, it is said that, when a woman is confined, her husband takes medicine for her... As soon as she is confined, he goes to bed for three days, and takes

medicine consisting of chicken and mutton broth spiced with ginger, pepper, onions, garlic etc. He drinks arrack, and eats as good food as he can afford, while his wife is given boiled rice with a small quantity of salt for fear that a large quantity may induce thirst.

—E. Thurston, op. cit., p.493,

45. "The Yerukalas are particular about the reputation of their womankind and consider it a serious matter, if any of them return home without an escort after sunset."

—E. Thurston, op. cit., p.442.

46. "Neither man nor wife asks the other where he or she has passed the day. A gypsy woman seldom goes on a business expedition by herself. She takes with her another of her sex, who can act as a witness if the husband is at all suspicious of her story.' '

—Martin Block, op. cit,, p.192.

47. பிலோ. இருதயநாத், மு. நூ., ப. 18.

# 8. இலக்கியத் திறன்

## காலச் சூழல்

இலக்கியத் திறனைப் பற்றி ஆராய்வதற்கு முன், குறவஞ்சி நாடகம் எழுந்த காலச் சூழலை அறிந்துகொள்வது மிகவும் இன்றியமையாதது ஆகும். தமிழகத்தில் கி. பி. 1529 முதல் 1736 வரை ஏறக்குறைய 207 ஆண்டுகள் நாயக்கர் ஆட்சி நிலவி வந்தது. "பொதுவாக மதுரை நாயக்கர்கள் தண்டமிழ் மொழியை ஆதரிக்கவில்லை; தமிழ்ப் புலவர்களைப் போற்றிய புரவலர்களாயும் இல்லை"[1] என்று அ. கி. பரந்தாமனார் 'மதுரை நாயக்கர் வரலாறு' என்னும் தம் நூலில் குறிப்பிட்டுள்ளார். நாயக்க மன்னருள் குறிப்பிடத்தக்கவரான திருமலை நாயக்கர் தெலுங்கு மொழியை ஆதரித்தாரேயன்றித் தமிழ் மொழியை ஆதரிக்கவில்லை. அவர் தமிழ் மொழியை ஆதரித்துத் தமிழ்ப் புலவர்களைப் போற்றியிருந்தால் நன்றி மறவா இயல்பு படைத்த தமிழ்ப் புலவர்கள் அவர்மீது பல பிரபந்தங்களைப் பாடியிருப்பார்கள். சுப்பிரதீபக் கவிராயர் 'திருமலை நாயக்கர் காதல்' என்ற நூலை இயற்றி அவரது அவையில் அரங்கேற்றியபோது, அவர் அதன் இலக்கியச் சுவையினை அறியாது 'அரவம் அத்வானம்' என்று கூறினாராம். கவிராயர் உள்ளூற வெகுண்டு அந்நூலின் பெயரைக் 'கூளப்ப நாயக்கன் காதல்' என்று மாற்றியமைத்து, கூளப்ப நாயக்கரிடம் சென்று, அவரது அவையில் அதனை அரங்கேற்றி, அவரிடம் பரிசும் பெற்றாராம். சுப்பிரதீபக் கவிராயர், திருமலை நாயக்கர் மேல் கொண்டிருந்த வெறுப்பை மறக்காமல், தமது 'விறலி விடு தூது' என்னும் நூலில், 'சந்தியிலே மாமியிட்ட சண்டையிலே வந்தவொரு தொந்தி வடுகன் சுகிப்பானோ' என்று திருமலை நாயக்கரை மறைமுக மாகத் 'தொந்தி வடுகன்' எனச் சாடியுள்ளார். திருமலை நாயக்கர், குமரகுருபரரிடம் திருக்குறள் கற்பதற்குக்

கடினமாய் இருப்பதாகக் கூறி அதில் உள்ள கருத்துக்களை அமைத்து ஒரு சிறு நூல் இயற்றித் தருமாறு வேண்டியதாகவும், அவர் அவ்வேண்டுகோளுக்கிணங்கி, 'நீதிநெறி விளக்கம்' என்னும் நூலை இயற்றியதாகவும் செவிவழிச் செய்தி ஒன்று கூறுகிறது. மதுரையை ஆட்சி செய்த நாயக்க மன்னர் பதின்மூவருள், தமிழ்ப் புலவரை ஆதரித்து நிலம் வழங்கியவர் விசயரங்க சொக்கநாதர் (கி.பி. 1706 – 1732) ஒருவரே ஆவார். அவர் திருக்குற்றாலக் குறவஞ்சியை இயற்றிய திரிகூடராசப்பக் கவிராயரை ஆதரித்து அவருக்குக் 'குறவஞ்சி மேடு' என வழங்கும் நிலத்தைக் கொடுத்தார். இச்செய்தி,

> "சாலிவாகன சகாப்தம் கசுசும-க்குச் செல்லா நின்ற கொல்லம் அசுக வரு. தை மீ ககவ. ராஜமானிய ராஜஸ்ரீ முத்துவிஜயரங்க சொக்கநாத நாயக்கரவர் களோம்; திருக்குத்தாலம் ராஜப்பன் கவிராஜருக்குப் பொறுப்புப் பட்டயம் எழுதிக் கொடுத்தபடி சுவாமி திருக்குற்றாலநாத சுவாமி பேரில் குறவஞ்சி நாடகம் பாடி அரங்கேற்றினதற்கு மேலச் செண்பகக் காவில் கருப்புக்கட்டி ஊத்துமேட்டில் கல், உல், சங்கிலி அளவு ஹீ ஙவ-யும் ௫உ-யும் விட்டுக் கொடுத்த படியினாலே பொறுப்பு வரு—க்கு தீர்வை…வீதம் குடுத்து கையாடிக் கொண்டு சன்னதி பிரபந்த வித்வானாக நடந்து வருவாராகவும், இந்த நிலத்துக்கு வேறே வரி நாட்டுச் சிலவு, காவல் கூலி, போர் நெல் குடுக்கத் தேவையில்லையென்று கட்டளையிட்ட படியினாலே இந்தப் படிக்குக் கையாடிக் கொள் ளவும்."
>
> கையொப்பம் (தெலுங்கில்) ஸ்ரீராமஜெயம்[1]

என்னும் செப்பேட்டு விளக்கத்தால் தெரியவருகிறது.

இத்தகையதொரு காலகட்டத்தில் இலக்கியம் படைத்த குறவஞ்சிப் புலவர்களுக்குத் தமிழின் அருமையை உணர்த்து வதும், தமிழ் உணர்ச்சியை ஊட்டுவதும் இன்றியமையாத கடமைகளாயின. வ. சுப. மாணிக்கம், 'இலக்கிய வெள்ளம்' என்னும் கட்டுரையில் குறிப்பிடுவது போல், "சங்ககால மக்கட்குத் தமிழ்மொழி இயல்பானது. ஆதலின் அதன் அருமையை அறியும் வாய்ப்பில்லை. இடைக்கால மக்கட்குத் தமிழ் அருந்தமிழ், தீந்தமிழ், ஒண்டமிழ், வண்டமிழ், ஏன்? நிழற்பெருமை வெயிலில் நின்றறிமின் என்றாங்கு, பிறமொழித்

தாக்கம் தமிழருமையை உணர்த்திற்று. 'இனிமையும் நீர்மையும் தமிழெனலாகும்' எனவும், 'தமிழ் தழீஇய சாயலவர்' எனவும், 'என்றுமுள தென்றமிழ் இயம்பி' எனவும், 'பார்படுப முத்தம் பதிபடுவ முத்தமிழ்' எனவும் யாண்டும் தமிழுணர்ச்சியை ஊட்டிக்கொண்டே இருந்தனர்.''[3]

குறவஞ்சி இலக்கியம் 'பிள்ளைத்தமிழ்' என்பது போல், 'குறவஞ்சித்தமிழ்', வஞ்சித் தமிழ்' என்னும் பெயராலேயே பெரும்பாலும் சுட்டப்படுவதைக் காண்கிறோம்:

''குறவஞ்சித் தமிழைப் பாட.'' (குற். குற., பா.1)

''குறவஞ்சித் தமிழ் தந்தானே,'' (குற். குற., பா.2)

''குறவஞ்சித் தமிழ் சொல்லக் கருதினேன்.''
(அழ. குற., பா. 5:1)

''குறவஞ்சித் தமிழ் பாடி..'' (திரு. குற., பா.5)

''குறவஞ்சித் தமிழைக் காக்க.'' (சர. குற., பா.7)

''சீரிய தமிழ் மாலை.'' (குற். குற., பா.6)

''சீர் கொண்ட தமிழினாலே திகழ்குறவஞ்சி.''
(சர, குற., பா. 9)

''நன்னயத் தமிழினாலே நவில்குறவஞ்சி.''
(சர. குற , பா. 2)

''தலைமை பெறு குறவஞ்த் தமிழ்.''
(அழ. குற., பா. 7)

''குறவஞ்சி நாடகச் செந்தமிழ்.'' (அழ. குற., பா. 1)

''தமிழ்க் குறவஞ்சி.'' (கும். குற., பா. 2)

''வரிலசபெறு தமிழ்க் குறவஞ்சி.'' (மண். குற., பா. 9)

''உரைசெறிசெந் தமிழிசையால்.'' குறவஞ்சி
(மண். குற., பா. 5)

''குறவஞ்சி நாடகத் தமிழ்.'' (சோலை. குற., பா. 2)

''தமிழ்க் குளுவ நாடகம்.'' (ஏ. ந. கு. நா., பா. 6;
கோ. ந. கு. நா., பா. 1)

''துய்ய தமிழ் நாடகம்.'' (அ. செ. கு. நா., பா. 11)

என்பன தமிழின் சிறப்பையும் அருமையையும் புலப்படுத்தும் வகையில் குறவஞ்சி, குளுவ நாடகம் ஆகியவற்றில் கையாளப் பட்டுள்ள சில தொடர்களாகும்.

நூலைப் பற்றிக் குறிப்பிடும் அடைமொழிகளாலும், தொடர்களாலும் மட்டுமன்றி, கதைமாந்தரின் கூற்றுக்கள் மூலமாகவும் 'ஒல்லும் வாயெல்லாம்' தமிழ்ப் பற்றை ஊட்டியுள்ளனர் குறவஞ்சிப் புலவர்கள். சரேபந்திர பூபால குறவஞ்சி நாடகத்தில் வரும்பாட்டுடைத் தலைவி மதனவல்லி தென்றலை வெறுத்துப் புலம்பும்பொழுது, "தமிழ்க் காரிகையின் சீர்மையுறு நேர்மையறி யாததென்னே தென்றலே" (பா. 21) என்று கூறுகிறாள். இப்பகுதியில் இடம்பெற்றுள்ள 'தமிழ்க் காரிகை' என்னும் தொடருக்கு 'அகத்திய முனிவன் இருந்த மலயத்தில் இருந்து வந்த நீ காரிகையென்னும் தமிழ் நூலின் சிறப்பை அறியாததென்னவெனப் பொருள்படுவது ஒரு நயம்'[4] என உ. வே. சாமிநாதையர் உரைக்குறிப்பு வரைந்துள்ளார். தமிழ்ப்பெண், காரிகை என்னும் தமிழ்நூல் என இருபொருள் நயந்தோன்றத் தமிழ்க் காரிகை என்னும் சொல்லாட்சியைக் கையாண்டு தம் தமிழுணர்வைப் புலப்படுத்தியுள்ளார் சிவக்கொழுந்து தேசிகர். சிங்கன், கண்ணியில் மாட்டிக் கொண்டு விழிக்கும் பறவைகளைப் பற்றிக் கூறுமிடத்து, அவர் கையாண்டுள்ள உவமையும் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கதாகும்.

> "செந்தமி ழிலக்கணந் தெரியார் கவிசொல்லிச்
> சேரு மதன் குற்றந் தெரிந்தோர் வினவுங்கால்
> சிந்தை மயங்கி விழித்தல்போற் கண்ணியில்
> சிக்கிக்கொண் டிங்கொரு பக்கி விழிக்குது." (பா. 59)

இப்பகுதியில் தமிழ் இலக்கணம் தெரியாதவர்கள் கவி சொல்ல, அறிஞர்கள், அக்கவியிலுள்ள குற்றத்தைக் கேட்கையில், அவர்கள் மறுமொழி கூறமுடியாமல் விழிப்பதனை உவமையாக்கித் தம் தமிழ் உணர்வைப் புலப்படுத்தியுள்ளார் ஆசிரியர்.

ஆங்கில மோகம் மிகுந்து காணப்படும் இந்நூற்றாண்டில் குறவஞ்சி பாடிய ஒரு புலவர் தம் பாட்டுடைத் தலைவியின் பெயரைத் தமிழுடன் தொடர்புபடுத்தித் 'தமிழரசி குறவஞ்சி' என ஒரு நூல் இயற்றியுள்ளார். அதில் அவர் தலைவி தமிழ்த் தெய்வத்தைத் துதிப்பதாக ஒரு பகுதியை அமைத்து, பரமசிவன், திருமால், மீனாட்சியம்மை, கணபதி, முருகன் முதலான தெய்வங்களும் தமிழைப் போற்றிய அருஞ்செயல்களை விதந்து கூறியுள்ளார்:

''அந்தமு மாதியு மில்லா வொருமுத லானபரம் பொருளே—உனை
முந்த விரும்பித் தலைவனென் றோத முதற்சங்க மேறினனே.''
(பா. 19:1)

என்று சிவபெருமான் தமிழ்ச்சங்கத் தலைவனாக மதுரையில் வீற்றிருந்த பெருமையினையும்,

''செந்திரு மாலுந் தனைவட நூன்மறை நொந்து புறந்தொடர
—உன்றன்
விந்தைமிகும் பின்னழ கினைக் காண்பது வேண்டித்
தொடர்ந்தனனே.'' (பா. 19:8)

என்று திருமால் தமிழைத் தொடர்ந்து சென்றதையும்,

''பிள்ளைத் தமிழ்தன்மேற் பாடும்புலவர் பிரானுக்கு
முத்துவடம்—கூடல்
வள்ளைக் குழைக்கயற்கண்ணி வழங்கிநின் மாட்சி
தெரிந்தனளே.'' (பா. 19:9)

என்று பிள்ளைத்தமிழ் பாடிய குமரகுருபரர்க்கு மீனாட்சியம்மை முத்துவடம் அளித்துப் பெருமை செய்ததையும்,

''முட்டையெனப்பாடு கென்றுசெவ்வேளுன் முழுச்சுவை
வேட்டனனே—ஒளவை
யிட்டவகவல் புனைந்து கரிமுகத் தேந்தலும் ஓங்கினனே.''
(பா. 19:10)

என்று முருகனும், கணபதியும் ஒளவையின் தமிழால் பாடப் பெற்றுச் சிறந்தமையையும் அழகாக எடுத்துக்காட்டியுள்ளார் ஆசிரியர்.

'தமிழரசி குறவஞ்சி'யில் வரும் கதைமாந்தரும் தமிழின் மேல் ஆழ்ந்த பற்றும் பாசமும் கொண்டவர்களாக விளங்குகின்றனர். 'பண்பார் தமிழக் குறத்தி' என்று குறத்தியும் தமிழுடன் தொடர்புபடுத்தியே சுட்டப்படுகின்றாள். அவள் நாடகத்தில் அறிமுகமாகும்போது தமிழ்த்தாயை வாழ்த்தியவாறே வருகிறாள்.

''சைவநூற் பொருளைத் தருகுறிப் பினளைத்
திருமந் திரமாம் அரண்மனை யாளைச்
சிவஞான போதத் திருமுடி யினளை
நீல கேசித்திரட் டேலக் குழலியை
உத்தியென்று வைத்தமுப் பத்திரண் டுறுப்பும்
பொருந்து மிலக்கணந் திருந்திய செல்வியை

எண்ணெழுத் தென்னும் இணைவிழி யாளை
மணிமிடை பவளத் தணிநலம் திகழச்
சிவனே வேட்குந் திருக்கோவை வாய்ச்சியைப்
பாடல்சால் சிறப்பின் நாவலர் கைபுனை
பாமாலையே மணிநூன் மாலை யாக
விளங்கும் பத்தழகுங் சொளு மெல்லியை
முகைமணம் போன்று முறுவல் கரந்த
பெருந்தகை யாளைப் பிறங்கொலி சான்ற
மணிமே கலையிடைப் பொருளறி வரிதெனும்
மாட்சி யினாளை வகைவகைப் பல்கலை
உடையா டன்னைப் பெருமித நடைவாய்
சிலப்பதி காரச் சேவடி யாளைத்
திசைதொறு மேம்பட் டொளிமிக் கோங்கு
முப்பா னூலணி பூண்ட மூதாட்டியை
இயற்றமிழ் கருத்தா யிசைத்தமிழ் வாக்காய்
நாடகத் தமிழே நலத்தகு முடலாய்
அறிவிச்சை செயலென் றாங்கியை புணர்ப்பிற்
கரணமுன் றுடைய கன்னியைப் போற்றி
யங்கை கூப்பி யகங்களி துளும்ப
மெய்ம்மயிர் பொடிப்ப விம்மிதம் பூப்ப
வாழிய தமிழ்த்தாய் வாழ்கவெம் மன்னை
வாழிய சயவென வணங்கின ளாகி.'' (பா. 55:20-47)

என்று அவள் தமிழ் இலக்கண, இலக்கிய நூல்களைத் தமிழ்த் தாயின் அணிகளாகவும், உறுப்புக்களாகவும் குறித்துள்ள பாங்கு தமிழுக்கு உயர்வு தருவதாக அமைந்துள்ளது எனலாம்.

இக்குறவஞ்சியில் வரும் சிங்கனும் அறிமுகமாகும்போது தமிழ்த்தாயை வாழ்த்துகின்றான்; வயல்களில் மேய வரும் பறவைகள் 'தமிழ்வாணரை ஆதரிக்கும் வள்ளல்களின் புகழ் போலப் பரவுகின்றன' (பா. 62:1) எனக் கூறுகின்றான்.

'' எந்தமை யீன்ற வரும்பெறல் அன்னையை
எங்கண்முன் னோரெமக் கீந்தவெய்ப் பில்வைப்பைச்
சிந்தையி லாப்பிறர் தம்மொழி மோகத்தாற்
சிறிதுங் கருதாப் பராமுகத் தால்மனம்
நொந்தவ ளென்று முதலாய்த் தொடங்கிய
நோன்பு வலிகொண் டுருவொன் றெடுத்தென
வந்துதஞ் சைக்குட் கரந்தையிற் றோன்றிடும்
வள்ளல் உமாமகே சன்புகழ் போலெங்கும்.'' (பா. 62:2)

பறவைகள் பரவுகின்றன என்று கூறும் பகுதியில், ஆசிரியர் பிற மொழியின்மீது மோகங்கொண்டு, தமிழ்ப் பற்றில்லாமல் வாழும் மக்களின் இழிநிலைமையினை எடுத்துரைப்பதோடு, தஞ்சையில் கரந்தைத் தமிழ்ச்சங்கம் நிறுவித் தமிழ் வளர்த்த உமாமகேசுவரனாரின் முயற்சியையும் பாராட்டிக் கூறுகின்றார். இவ்வாறு ஆசிரியரின் ஆழ்ந்த தமிழ்ப் பற்றினை இந்நூல் முழுவதும் பரக்கக் காண முடிகின்றது.

மதுரை நாயக்க மன்னர்கள் தமிழ் மொழிக்கு ஆதரவு நல்காத நிலை இவ்வியலின் தொடக்கத்தில் சுட்டப்பட்டது. ஆயின், தஞ்சையை ஆண்ட மராட்டிய மன்னர்கள் தமிழ் மொழிக்குப் பெரும் ஆதரவு நல்கியுள்ளனர். தஞ்சையில் ஆட்சியை நிறுவிய முதல் மராட்டிய மன்னனான ஏகோஜியைப் புகழ்கின்றது கும்பேசர் குறவஞ்சி (பா. 6). அவனையடுத்து அரசாண்ட சகசி மன்னன் பெயரால் ஒரு குறவஞ்சி நூல் (சகசி மன்னன்மீது குறவஞ்சி) காணப்படுகின்றது. சகசி மன்னனைத் தொடர்ந்து வந்த துளசாஜியைப் பல பாடல்களில் குறிப்பிடுகின்றது மண்ணிப்படிக்கரை நீலகண்டர் குறவஞ்சி (பா. 10, 25, 33, 36). துளசாஜி மன்னருக்குப் பின் அரசாண்ட சரபோஜி மன்னரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு விளங்குகின்றது சரபேந்திர பூபால குறவஞ்சி. அவருக்குப் பின் அரசு கட்டில் ஏறிய சிவாஜிராசேந்திரனைச் சுட்டுகின்றது சிக்கல் நவநீதேசுவரசுவாமி குறவஞ்சி (பா. 11). இங்ஙனம் மராட்டிய மன்னருள் பலர் குறவஞ்சி நாடகங்களில் சிறப்பித்துக் கூறப்படுவது குறிப்பிடத்தக்கது.

**கற்பனை நயம்**

கற்பனையாவது, கவிஞர் தாம் உணர்ந்த உணர்ச்சியையோ அல்லது பெற்ற முருகியல் அனுபவத்தையோ அல்லது கண்ட காட்சியையோ, நாமும் முழுமையாகவும் தெளிவாகவும் உணர்ந்தோ அனுபவித்தோ கண்டோ இன்புறுமாறு அமைத்துக் காட்டும் அரிய கலைத்திறனாகும். இக்கற்பனை, கவிதையில் ஓர் அடிப்படையான மனநிலையாக—எண்ண ஆற்றலாக—அமைவதும் உண்டு; அல்லது ஓர் அணியாக நின்று அழகு தருவதும் உண்டு. குறவஞ்சி நூல்களில் கற்பனையின் இவ்விரு நிலைகளையும் காண முடிகின்றது.

குறவஞ்சி இலக்கியங்களில் அழகிய, இயல்பான, எளிய கற்பனைகள் ஆங்காங்கே காணப்படுகின்றன. குற்றாலக் குறவஞ்சியில், பாட்டுடைத் தலைவி வசந்தவல்லியின் அழகை

வருணிக்க முற்படுகின்றார் புலவர். 'நெஞ்சைச் சூறையாடும் விழிக் கெண்டையாள், அரும்பு இதழினாள், பிறை நுதலினாள், முத்து நிரை பதித்த பல்லினாள்' என்று வருணித்துக் கொண்டே வந்த அவர், தலைவி தன் மூக்கில் மூக்குத்தி அணிந்திருக்கும் அழகைக் கூறுமிடத்து,

'' பல்லின் அழகை எட்டிப் பார்க்கு மூக்கிலொரு முத்தினாள்.''
(பா. 18)

என்று குறிப்பிடுகின்றார். தலைவியின் மூக்கில் மூக்குத்தி அமைந்திருப்பது அவளது பல்லின் அழகை எட்டிப் பார்ப்பது போல் உள்ளது எனக் கூறுவது நெஞ்சை அள்ளும் கற்பனையாகும்.

'அதோ பார்! எம்முடைய காதலர் பிரிந்து செல்கின்றார்! இதோ பார்! என்னுடைய மேனியில் பசலைநிறம் வந்து படர்கின்றது' என்று வள்ளுவர் படைக்கும் தலைவி ஒருத்தி தன் 'பசப்புறு பருவர'லைக் குறிப்பிடுகின்றாள்:

'' உவக்காண்எம் காதலர் செல்வார் இலக்காண்என்
மேனி பசப்பூர் வது.'' (1185)

நவநீதேசுவரசுவாமி குறவஞ்சியில் வரும் தலைவியும் இவ்வாறே அந்திப்பொழுது வந்துற்றதைக் கண்டு, மனம் வருந்திப் பாடுகின்றாள்:

'' அந்திப் பொழுதும் வந்துதே—என்றன் கைகள்
முந்தி வளைகள் சிந்துதே.'' (பா. 28)

வள்ளுவர் தலைவனது பிரிவினால் வருந்தும் தலைவியின் மேனியில் பசலை மிக விரைவாகப் படர்ந்தது எனக் கூறியிருப்பது போல், இங்கே குறவஞ்சி ஆசிரியர், ஆற்றாமையால் வாடும் தலைவியின் கைவளையல்கள் விரைந்து கழன்று விழுவதைக் காட்டி அவள் மெலிவைக் கற்பனையழகோடு புலப்படுத்தியுள்ளார்.

அழகர் குறவஞ்சியில் வரும் தலைவி, தலைவன்மீது மையல் கொண்ட காரணத்தால் தண்ணிய நிலவொளியும் தீக்கதிர்களாக மாறித் தாக்கும் நிலைமையை அடைகின்றாள்;

'' வான முழுவதும்நீ சுட்டுக் கொப்பள
மானது தானல்லவோ—அதை
மீனினந் தோய்ந்த விசும்பென்று சொல்வது
வீண்மொழி தானல்லவோ—பாவி.'' (கீ. 27:2)

என நிலவினைப் பழித்துரைக்கின்றாள். தலைவியின் பழிப்புரையில் ஓர் அழகிய கற்பனை இடம்பெற்றிருக்கக் காண்கிறோம்.

கற்பனை மெருகோடு நிகழ்ச்சிகள் தொடர்ந்து நிகழ்வதாகப் படைத்துக் கூறுவதைத் 'தொடர்நிகழ்ச்சிக் கற்பனை' எனச் சுட்டலாம். இத்தகைய தொடர் நிகழ்ச்சிக் கற்பனைகளைச் சங்க இலக்கியங்களிலும் காணலாம். எடுத்துக்காட்டாக, குறிஞ்சிக் கலியில் கவணிலிருந்து விசையுடன் எறியப்பட்ட கல் முதலில் வேங்கைப் பூக்களை உதிர்த்து, ஆசினிப் பழங்களின் மேல் பட்டு அவற்றையும் உதிர்த்து, பின்னர்த் தேன்கூட்டைக் கலைத்து, மாங்கொத்தைச் சிதறடித்து, வாழை இலையிற்பட்டு அதைக் கிழித்து, இறுதியில் தாண்டிச் செல்லும் வலிமையின்றிப் பலாப்பழத்துள் சென்று தங்கியது' (பா. 5:10—16) என்று நிகழ்ச்சிகள் தொடர்ச்சியாக நிகழ்வதாகப் படைத்துச் செல்லும் பாங்கினைக் காண்கிறோம். வல்வில் ஓரியைப் பாடிய வன்பரணரின் பாட்டிலும், இத்தகைய தொடர்நிகழ்ச்சிக் கற்பனை அமைந்துள்ளது (புறம். பா. 152).

குறவஞ்சியில் தொடர்நிகழ்ச்சிக் கற்பனை மிகுந்து காணப்படுகின்றது. மலைவளம், நாட்டுவளம் கூறும் பகுதிகளில் இக்கற்பனையின் ஆட்சியைக் காணலாம். ஓர் எடுத்துக்காட்டு வருமாறு:

" சூழ மேதி இறங்குந் துறையிற்
　　சொரியும் பாலைப் பருகிய வாளை
கூழை வாசப் பலாவினிற் பாயக்
　　கொழும்ப லாக்கனி வாழையிற் சாய
வாழை சாய்ந்தொரு தாழையில் தாக்க
　　வருவி ருந்துக் குபசரிப் பார்போல்
தாழை சோறிட வாழை குருத்திடும்
　　சந்த்ர சூடர்தென் ஆரிய நாடே. "

(குற். குற., பா. 58: 3)

'எருமை மாடுகள் கூட்டமாக நீர்த்துறையில் இறங்குகின்றன; அப்பொழுது அவை தம் கன்றுகளை நினைந்து பாலைச் சொரிகின்றன. பாலைப் பருகிய வாளைமீன்கள், அருகிலே உள்ள பலாமரத்தின் மேலேறிப் பாய, அதனால் உதிர்ந்த ஒரு பலாப்பழம் பக்கத்திலே உள்ள வாழைமரத்தின்மேல் வீழ, வாழைமரம் ஒடிந்து, தாழைமீது மோத, அதனால் மடல் விரிந்த தாழை மலர், தன் மகரந்தத்தோடு கூடிய பூக்களைச்

சோறுபோல் கீழே சொரிய, அச்சோற்றுக்கு இலை போடுவது போல, வாழை தன் இளங்குருத்து இலைகளை நீட்டுகின்ற சிறப்புடையது' எனக் குற்றால நாட்டின் வளத்தைச் சிறப்பித்துப் பாடுகின்றார் திரிகூடராசப்பக் கவிராயர்.

குற்றாலக் குறவஞ்சியை அடியொற்றிப் பிற குறவஞ்சி இலக்கியங்களும் இத்தகைய தொடர் நிகழ்ச்சிக் கற்பனைகளை அமைத்து நாட்டுவளத்தைப் புலப்படுத்துகின்றன. அழகர் குறவஞ்சியில் பாண்டிய நாட்டின் வளத்தைக் கூறுவதாக வரும் பாடல் வருமாறு:

" மாங்கனிகள் வருக்கையில் தூங்கும்
வளருமக்கனி வாழையில் தூங்கும்
ஒங்குமக்கனி கன்னலிற் சாயும்
ஒடிந்துகன்னலுஞ் செந்நெலிற் சாயும்
பாங்குசெந்நெலு மஞ்சளைச் சாய்த்திடப்
பங்கயந்தனிற் சங்குதிர் முத்தைத்
தாங்கிமாத ரிலைக்கு விருந்திடு
தண்பணைதிகழ் பாண்டிநன் னாடே. " (கீ. 33: 7)

மீனாட்சியம்மை குறத்தி வரும் குறத்தி, தன் மலையின் சிறப்புக்களைக் கூறுமிடத்து,

" சிங்கமும்வெங் களிறும்உடன் விளையாடும் ஒருபால்
சினப்புலியும் மடப்பிணையுந் திளைத்திடும்அங் கொருபால்
வெங்கரடி மரையினொடும் விளையாடும் ஒருபால்
விடஅரவும் மடமயிலும் விருந்தயரும் ஒருபால். "
(பா. 16)

என்று குறிப்பிடுகின்றாள். உண்மை உலகிலே இக்காட்சிகளைக் காண முடியாது; கவிஞரின் கற்பனை உலகிலேதான் காண முடியும். இத்தகைய கற்பனைகளில் நிகழாது ஒன்றை நிகழ்வதுபோலப் படைத்துக் கூறும் கற்பனையாற்றலைக் காண்கிறோம். "இடைக்காலத்தில் கற்பனை என்பது இல்லாதவற்றைக் கூறுதலே என்று கொள்ளப்பட்டது. வாழ்க்கையையும் இயற்கையையும் கூர்ந்து நோக்கி, உணர்ச்சி மிக்க நிலையிற் சிலவற்றைக் கற்பிதமாகக் கூறும் நிலைபோய், இல்லாதனவற்றையும் நடவாதவற்றையும் திறம்படக் கூறுவதே கற்பனையின் இலக்கணமாகிவிட்டது. அதுமட்டுமன்றி, அதுவே உயர் கவிதையின் தலையாய பண்பாகவும் எண்ணப்பட்டது"[5] என்னும் கூற்று இங்கே நினைவுகூரத்தக்கது.

## அணிநலன்

"இதனாற் (உவமையால்) பயன் என்னை மதிப்பதோ வெனின், புலன் அல்லாதன புலனாதலும், அலங்காரமாகிக் கேட்டார்க்கின்பம் பயத்தலும், 'ஆப்போலும் ஆமா' என வுணர்த்திய வழி, அதனைக் காட்டகத்துக் கண்டான் முன் கேட்ட ஒப்புமை பற்றி இஃது ஆமாவென்று அறியும். 'தாமரை போல் வாண் முகத்துத் தையலீர்' என்ற வழி அலங்கார மாகிக் கேட்டார்க்கு இன்பம் பயக்கும்"[6] என இளம்பூரணர் உவமையியலின் தொடக்கத்தில் உவமையின் பயன்களைக் குறிப்பிட்டுச் செல்கின்றார். அவர் உவமை பற்றிக் கூறுவது, பொதுவாக எல்லா அணிகளுக்கும் பொருந்துவதேயாகும். புலன் அல்லாதன புலன் ஆதல், அலங்காரமாகிக் கேட்டார்க்கு இன்பம் பயத்தல் என்னும் இரு நிலையிலும் குறவஞ்சி இலக்கியங்களில் பல்வேறு அணிநலன்கள் பயின்று வந்துள்ளன.

### உவமையணி

"உவமம் என்பது ஒரு பொருளோடு ஒரு பொருளினை ஒப்புமை கூறுதல்"[7] என்பது பேராசிரியர் உவமைக்குத் தரும் விளக்கம் ஆகும். "இலக்கியத்தை அழகுபடுத்தும் முதல் அணி அல்லது தாயணி உவமையேயாகும். அது காலத்தால் மிகவும் முற்பட்டதுமாகும்"[8] என்பர். தொல்காப்பியர் அணிகளை அறுபதும், நூறுமாக வகுத்துப் பாகுபாடு செய்யாமல், பல அணிகளுக்கு அடிப்படையாக உள்ள உவமை என்ற ஓர் அணியை மட்டும் நன்கு விளக்கியுள்ளார்; அவர் தம் இயலுக்கு 'அணியியல்' எனப் பெயரிடாது, 'உவமையியல்' எனப் பெயரிட்டிருப்பதும் கருதத்தக்கதாகும். "எல்லாவித அலங் காரங்களும் உவமையணியின் விஸ்தாரங்களைத் தவிர வேறொன்றுமில்லை; 'உபமானலங்காரமே அலங்கார சாஸ் திரத்தின் பிராணன்' என்று பழைய இலக்கணக்காரர் சொல்லு கிறார்கள்"[9] என்னும் பாரதியார் கூற்றும் இங்கே மனங் கொளத்தக்கதாகும்.

### உலகியல் உவமை

குறவஞ்சியின் பிற்பகுதியில் பறவைகள் கண்ணிக்குள் சிக்கும் காட்சியைக் கூற வரும் ஆசிரியர், தளுக்கி, மினுக்கிப் பிறரைக் கவர்ந்து பொருள் பறித்திடும் வேசையரின் போக்கினை உவமையாகக் கூறுகின்றார்;

"பூசி உடுத்து முடித்து வளையிட்டுப்
பொட்டிட்டு மையிட்டுப் பொன்னிட்டுப் பூவிட்டுக்
காசு பறித்திடும் வேசையர் ஆசாரக்
கண்ணிக்குள் ளேபடும் காமுகர்போல."
(குற். குற., பா. 99: 4)

பறவைகள் கண்ணிக்குள் சிக்குகின்றனவாம். இவ்வுவமை, உலகில் பொருள் இழந்து தவிக்கும் காமுகரை நம் மனக்கண் முன்னே கொண்டு வந்து நிறுத்துகின்றது. குறவனின் கண்ணிக்குள் பறவை படுவதுபோல, வேசையரின் ஆசாரம் ஆகிய கண்ணிக்குள் காமுகர் படுகின்றனர் என ஆசிரியர் உருவக நயத்தோடு குறிப்பிடுவதும் கருதத்தக்கது.

தன் உதவியாளிடம் பறவைகளைப் பிடிக்கக் கண்ணி குத்துமாறு வேண்டுகின்றான் சிங்கன். இக்காட்சியைப் படைக்கும் கவிஞர் பிறிதோர் உலகியல் நிகழ்ச்சியை எடுத்துக் காட்டி, கண்ணி குத்தும் முறையைச் சிங்கன் தன் உதவியாளிடம் கூறுவதாக அமைக்கின்றார்:

"சாலைத் திருடர்கள் காலினுங் கையினுஞ்
சாற்றுந் தொழுக்கட்டை மாட்டிவிட்டாற் போலக்
காலினுங் கழுத்தினு மாட்டிக் கொள்ளும்படி
கருதிக் குத்தடா குளுவா." (சர. குற., பா. 58:1)

திருடர்களுக்குக் காலையும் கையையும் இணைத்து விலங்கிடுவதைப் போலப் பறவைகளின் காலும் கழுத்தும் சிக்கும் வண்ணம் கண்ணி குத்தவேண்டும் என்று கூறுவது ஆசிரியரின் உலகியல் அறிவைப் புலப்படுத்துவதாக உள்ளது.

குறவர்கள் தாம் பழக்கி வைத்திருக்கும் தீவகக் குருவியைக் கண்ணிக்குள் வைத்துப் பிற பறவைகளைப் பிடிப்பது வழக்கம். இவ்வழக்கத்தினைப் புலப்படுத்த வந்த கவிஞர், உலகில் ஒருவன் செய்யும் பாவத்தொழிலின் தீய விளைவானது அவனை மட்டுமன்றி, அவனைச் சேர்ந்தவரையும் பற்றிக்கொள்ளும் தன்மையினை உவமையாகக் கூறுகின்றார்:

"பாவத் தொழிலவன் பிறரையுந் தனைச்சேரப்
பண்ணுந் திறமெனப் புள்ளின மெலாந்தன்போல்
காவற் படச்செய்யுந் தீவக் குருவியைக்
கண்ணிக்குள் வைத்திடு குளுவா."
(சர. குற., பா. 58: 3)

தலைவன் உலா வரும் காட்சியைக் காணப் பெண்கள் ஆர்வத்தோடு ஓடிவருகின்றனர்; தலைவனைக் கண்டதும் ஆற்றாமையால் வாடுகின்றனர். இதனை,

"உருகுபெருங் கோடையில்நீர் பெருகிடங் கண்ட
மான்கள்போல் ஓடினார்—மயங்கி வாடினார்."

(அழ. குற., கீ. 10:4)

என்னும் உவமையால் அழகுறப் புலப்படுத்தியுள்ளார் கவிகுஞ்சர பாரதியார்.

"வாடும்பயி ருக்கின்ப மழைபோல
வந்தருள் செய்குவாய் தியாகராஜா."

(தியா. குற., பா. 13:3)

என்று தலைவனை நோக்கித் தலைவி துதிக்கும் பகுதியிலும்,

"வெயில் கண்ட நவநீதம் போலவே
வெதும்பியென் மனம் உருகுதே."

(அழ. குற., கீ. 16:1)

என்று தலைவனை நினைந்து தலைவி உருகும் பகுதியிலும் சிறந்த உலகியல் உவமைகள் இடம்பெற்றிருக்கக் காணலாம்.

நாம் விரும்பும் பொருள் ஒன்று தொலைந்து போனால் நமக்கு உண்டாகும் துன்பம் அளவிடற்கரிய ஒன்று. அப்பொருள் மீண்டும் கிடைக்கப்பெற்றால் நமக்கு உண்டாகும் மகிழ்ச்சியும் வருணிக்க இயலாதது ஆகும். சிங்கியைச் சில காலம் பிரிந்து வாடிய சிங்கன், அவளைப் பல்வேறு இடங்களிலும் தேடித் திரிகின்றான்; நகரத் தெருவில் அவர்கள் இருவரும் மீண்டும் சந்தித்துக் கொள்கின்றனர்.

"சேணார் பெருந்தெருவிற் சிங்கியைமுன் தேடிவைத்துக்
காணாமற் போனபொருள் கண்டவர்போல் கண்டானே."

(குற். குற., பா. 121)

என்னும் நயமான உவமையைக் கையாண்டு இவ்வுணர்வுமயமான காட்சியை வருணித்துள்ளார் புலவர்.

பறவை வேட்டையாடும்பொழுது சிங்கன் நூவனைப் பேசாதிருக்குமாறு வேண்டுகின்றான்; அவன் உரத்துப் பேசுவது, பாலும் நெய்யும் ஆறுபோல் பெருகக் கிடைத்து உணவு உண்ணும்போது, பற்களே முரிந்து போகும் வகையில் இடையே ஒரு சிறு கல் வந்து சேர்ந்து உண்பதைத் தடைப்படுத்துவது போல் இருக்கிறது என்கின்றான்.

" பாலாறு நெய்யாறு பாய்கின்ற ஓட்டத்திற்
பல்லொடிக்கச் சிறுகல்லகப் பட்டாற்போல்."
(குற். குற., பா. 99:5)

அன்றாட வாழ்வில் நிகழும் ஓர் இயல்பான அனுபவத்தை ஆசிரியர் இங்கே உவமையாக்கியுள்ள திறம் பாராட்டத் தக்கதாகும்.

சமய உவமை

குறவரது வாழ்வியலைப் பாட வந்தாலும் குறவஞ்சிப் புலவர்களால் தம் இறையுணர்வைக் கைவிட இயலவில்லை; தாம் சார்ந்த சமயக் கடவுளரைப் பாட்டுடைத் தலைவர் களாக்கியும், இயன்றபோதெல்லாம் அவர்தம் புகழ் பாடியும் அவர்கள் தம் சமயப் பற்றினைப் புலப்படுத்தியுள்ளனர்.

" அம்பிகை பாகர் திரிகூட நாதர்
அடியவர் மேல்வந்த துன்பங்கள் போலவும்."
(குற். குற., பா. 106:5)

" சாமிஅழகர் சோலைமலைவாழ் சந்நிதி மேலே—நாளும்
தஞ்சமெனவே அஞ்சலி செய்யும் தவசிகள் போலே—வலை
தப்பி அப்பாலே—வளமிகு
பூமியெல்லாம் மேய்ந்து புள்ளினம் போகுதடய்யே."
(சோலை. குற., பா. 148)

" நறுந்துளப மணிந்த நாரணர் வெற்பினிற்பொருள்
சிறந்த வட்டாக் கரத்தைச் சிந்தித்தோர் பாவம்
போனாற்போல."
(அழ. குற., கீ.50)

" தேவர்கள் மேல்வரு தானவர் போலவும்
சிவனடி யார்க்கிடர் செய்தவர் போலவும்."
(திரு. குற., பா.81)

பறவைகள் கண்ணிக்குள் அகப்படாமல் தப்பிப் பறந்து போயினவாம். இவ்வாறு கடவுளரையும், அடியவரையும் தொடர்புபடுத்திச் சிறப்பிக்கும் சமய உவமைகளைக் குறவஞ்சியில் பரக்கக் காணலாம்.

இவ்வாறே, அவ்வத் தலத்தில் உள்ள தீர்த்த, அருவிகளில் நீராடினால், பாவங்கள் தொலைந்து பயன் பெறலாம் என்று உணர்த்தும் போக்கும் குறவஞ்சியில் உண்டு. பாவங்கள்

தொலைதலைப் பறவைகள் பறந்து போவதற்கு உவமை காட்டிக் கூறும் இயல்பு சில குறவஞ்சிகளில் காணப்படுகின்றது.

" பம்பும் வடபால் அருவியில் தோய்ந்தவர்
பாவம் கழுநீராய்ப் போவது போலவும். "

(குற். குற. பா. 106:5)

என்று குற்றாலக் குறவஞ்சி, குற்றால அருவியின் சிறப்பினையும்,

" தலையருவியை ஆடினார் பவசமூகம் போல்ஓடி—வேறு
தன்திசையை நாடி—வளமிகு
பூமியெல்லாம் மேய்ந்து புள்ளினம் போகுதடய்யே. "

(சோலை. குற., பா. 148)

என்று சோலைமலைக் குறவஞ்சி, தலையருவியின் சிறப்பினையும் உவமைகள் வாயிலாக எடுத்துரைக்கின்றன.

புராண உவமை

புராண நிகழ்ச்சிகளை உவமைகளாகக் கையாண்டு, அவற்றின் வாயிலாகத் தத்தம் சமயங்களை உயர்த்திக் கூறும் பாங்கும் குறவஞ்சி ஆசிரியர்களிடம் காணப்படுகின்றது. திரிகூடராசப்பக் கவிராயர்க்குப் பறவைகள் வரும் காட்சி,

" கூடலை உள்ளாக்கிச் சைவம் புறம்பாக்கிக்
கூடுஞ் சமணரை நீடுங் கழுவேற்ற
ஏடெதிர் ஏற்றிய சம்பந்த மூர்த்திக்கன்
றிட்ட திருமுத்தின் பந்தர் வந்தாற்போல. "

(குற். குற., பா. 89:2)

தோன்றுகின்றது; பறவைகள் பறந்து போகும் காட்சியோ,

" ...... நாயகர் குற்றாலர்
பொல்லாத தக்கன் மதத்தை அழித்தநாள்
வாயில் அடிபட் டிடிபட்டுதைபட்டு
வானவர் தானவர் போனது போலவும், "

" சேயிழை தன்பொருட் டாலேபஞ் சாக்கரம்
செபித்த மன்னவன் பாவம்போ னாற்போலவும். "

" கும்ப முனிக்குச் சிவமான காலம்
குதித்தோடிப் போன வயிணவர் போலவும். "

(குற். குற., பா. 105)

தோன்றுகிறது. இவ்வாறு பல்வேறு புராண நிகழ்ச்சிகளை உவமைகளாகக் கையாண்டு குறவஞ்சிப் புலவர் தம் சமயத்தை உயர்த்திக் கூறியுள்ள திறன் குறிப்பிடத்தக்கதாகும்.

### இல்பொருள் உவமை

இல்லாதனவற்றைப் படைத்துக் காட்டும் போக்கினையும் சில குறவஞ்சிகளில் காண முடிகின்றது. அவித்த பயறு முளைத்ததாக வரலாறு இல்லை. ஆயின் நவநீதேசுவரசுவாமி குறவஞ்சி ஆசிரியர் இதனை ஓர் உவமையில் எடுத்துக்காட்டு கிறார். அக்குறவஞ்சியில் வரும் தலைவி நிலவு தன் கதிரொளியால் வருந்துவதைத் தாங்க இயலாமல் தவிக்கும் நிலையில்,

" சவித்த முனியுன்னைச் சாகாமல் வைத்தாரே வெண்ணிலாவே
அவித்த பயறு முளைத்தாற் போலானாயே வெண்ணிலாவே. "

என்று நிலவைக் கண்டு பேசுகிறாள். அவள் பேச்சில் 'அவித்த பயறு முளைத்தாற் போல' என்னும் இல்பொருள் உவமை இடம்பெற்றுள்ளது.

### தத்துவ உவமை

உவமையின் வாயிலாகத் தத்துவப் பொருளைப் புலப் படுத்தும் பாங்கினையும் குறவஞ்சியில் காணலாம். காட்டாக, சரபேந்திர பூபால குறவஞ்சி நாடகத்தில் பறவையின் வருகையைக் கூறுவதாக வரும் பகுதியைச் சுட்டலாம்.

" ஆங்காரந் தன்னை யடக்கிப் புலனைவென்
றகத்தைப் பரத்தி னிடத்தி னிறுத்தியே
தூங்காமற் றூங்கிடு மாங்கவர் போலவே
தூய வொருநாரை யோய்வுற் றிருக்குது. " (பா.59:5)

இப்பகுதியில் ஆங்காரத்தை அடக்கிப் புலனை வென்று சித்தத்தைப் பரத்தில் நிறுத்தி அசைவற்று இருக்கும் யோகியரது நிலையை, அசைவற்று நிற்கும் ஒரு பறவையோடு உவமித்துக் கூறியுள்ளார் ஆசிரியர்.

### உவமை உணர்த்தும் வழக்கம்

உவமைகளின் வாயிலாக மக்களிடையே காணப்படும் சில பழக்க வழக்கங்களையும் குறவஞ்சிப் புலவர்கள் வெளிப்படுத்தி யுள்ளனர். குற்றாலக் குறவஞ்சியில் பறவைகள் வருவதைக் கூற வந்த திரிகூடராசப்பக் கவிராயர்,

" ... ... ... ... கங்கை
மங்கைக்கு நானே வரிசை செய்வேனென
அன்னை தயவுடை ஆகாச கங்கை
அடுக்களை காணப் புறப்படு நேர்த்திபோல்
பொன்னிற வானெங்குந் தந்நிற மாகப்
புரிந்து புவனம் திரிந்து குருகினம். " (பா. 89:1)

வருகின்றன எனக் குறிப்பிடுகின்றார். இங்கே ஆசிரியர் 'அடுக்களை காணுதல்' என்னும் மக்கள் வழக்கத்தினைப் புலப் படுத்துகின்றார். இவ்வழக்கம், திருநெல்வேலி மாவட்டத்தில் இன்றும் காணப்படுவதாக ஆ. இராமசாமி கூறுகின்றார்.[10]

### உவமையில் நகைச்சுவை

வினை, பயன், மெய், உரு என்னும் நான்கின் அடிப் படையில் உவமை தோன்றும் என்பர் தொல்காப்பியர் (தொல். உவமையியல், நூ.1), குறவஞ்சி ஆசிரியர் சிங்கனின் கையாளாக வரும் நூவனின் வடிவத்தைக் குறிப்பிடும்போது,

> " கொட்டகைத் தூண்போற் காலிலங்க
> ஒட்டகம் போலே மேலிலங்க
> கட்டான திரிகூடச் சிங்கன் முன்னே
> மட்டிவாய் நூவனும் வந்தானே. " (குற். குற., பா.87:4)

என்று கூறுகின்றார். இப்பகுதி நூவனுடைய தோற்றத்தை நம் மனக்கண் முன்னே நிறுத்தி, நகைச்சுவையைத் தோற்று விப்பதாக அமைந்துள்ளது.

### உவமையடுக்கு

குறவஞ்சி இலக்கியத்தில் பல இடங்களில் உவமை யடுக்குகள் இடம்பெறுகின்றன.

> " ......கண்ணி குத்தி வேட்டை ஆடி
> ஞாளிபோல் சுவடெடுத்துப் பூனைபோல்
> ஒளிபோட்டு நரிபோற் பம்மிக்
> கூளிபோல் தொடர்ந்தடிக்கும திரிகூடச்
> சிங்கனெனும் குளுவன் நானே." (குற். குற., ப. 84)

என்று குற்றாலக் குறவஞ்சியில் வரும் சிங்கன் தன் வலிமையை எடுத்துக்கூறுகிறான். இங்கே ஆசிரியர் உவமை அடுக்கினைக் கையாண்டு, சிங்கனின் செயல்திறத்தைப் புலப்படுத்தியுள்ளார்.

பிறிதோரிடத்தில் புலவர் பாட்டுடைத் தலைவியின் நெற்றி அழகை வருணிக்க முற்படுகின்றார்; 'சிலையைப் போல் வளைந்து பிறையைப் போல் இலங்கு நுதலினாள்' (குற். குற., பா. 18) என ஒரு பொருளுக்கு இரு உவமைகளைக் காட்டு கின்றார்.

பறவைகள் கூட்டமாக வருவதையும், வயல்களில் இரை மேய்வதையும், வேட்டைக்குத் தப்பிப் பறந்து போவதையும்

சித்திரிப்பனவாக வரும் பகுதிகளிலும் இத்தகைய உவமை அடுக்குகளைக் காண முடிகின்றது.

உருவக அணி

உவமைக்கும் பொருளுக்கும் வேற்றுமை தோன்றக் கூறுதல் உவமை அணியாகும்; இரு பொருளையும் வேறு வேறாகக் காணாமல் ஒன்றிலேயே மற்றொன்றைக் காண்பது உருவக அணியாகும்.

'' உவமையும் பொருளும் வேற்றுமை யொழிவித்து
ஒன்றென மாட்டின் அஃதுருவகம் ஆகும்.'' (நூ. 36)

என்பது தண்டியலங்காரம் தரும் விளக்கம்.

விழிக்கணை, விழிக்கெண்டை, தென்றற்புலி (குற். குற., பா. 14, 18, 34), கண்கமலம், முககமலம் (கும். குற., பா. 19:3; 35:130) என்பன போன்ற சிறு உருவகங்களைக் குறவஞ்சி இலக்கியங்களில் பரக்கக் காணலாம்.

பூமாதேவிக்கு மலைகளே கொங்கைகளாகவும், திசையே முகமாகவும், முகிலே குழலாகவும், விண்மீன்களே குழலிற் சூடிய பூக்களாகவும், மதியும் கதிரும் கண்களாகவும், இலவம் பூவே அதரமாகவும், கடலே ஆடையாகவும், திருமாலே நாயகனாகவும், மலையரசன் மகளாகிய பார்வதியே பவுத்திரி யாகவும், வேதங்களே புகழ்கூறும் பாடல்களாகவும் அமைந் திருக்கும் பாங்கினைச் சோலைமலைக் குறவஞ்சியில் வரும் பாடல் ஒன்று அழகுறச் சித்திரிக்கின்றது:

'' மலைமுலையாத் திசைமுகமாய்க் குழன்முகிலாய்
மதிகதிரும் வயங்கும் கண்ணாய்க்
கலைகடலாய் உடுமலராய்ப் பதிதிருமா
லாய்இமயக் கன்னி தன்னைப்
பலவிதநூன் முறைகளினும் பவுத்திரியாக்
கியமறையின் பாட்டி யான
இலவிதழாள் புவிமகள்தான் எனதிதயத்
திருந்திந்நூல் இயம்பும் தானே.'' (பா. 14)

பூமிதேவி வணக்கமாக வரும் இப்பாடலில் உருவக அணி சிறப்பாக இடம்பெற்றுள்ளது.

தற்குறிப்பேற்ற அணி

கவிஞர்கள் ஒரு பொருளுக்கு உரிய இயல்பான காரணத்தை ஒழித்துத் தம் கருத்தை — குறிப்பை — அப்பொருளின்மேல்

ஏற்றிக் கூறுவர். இதனை இலக்கண நூலார் 'தற்குறிப்பேற்ற அணி' என்பர்.

" பெயர்பொருள் அல்பொருள் எனவிரு பொருளினும்
இயல்பின் விளைதிற னன்றி அயலொன்று
தான்குறித்து ஏற்றுதல் தற்குறிப் பேற்றம்." (நூ. 56)

என இவ்வணிக்கு விளக்கம் கூறுகின்றது தண்டியலங்காரம்.

குறவஞ்சியில் குறத்தியின் நாட்டுவளத்தைக் கூற விழைகின்றார் ஒரு புலவர். கரும்புகள் வயல்களில் செழித்தோங்கி வளர்ந்திருப்பதைக் காணும்போது அவரது கற்பனை விரிகின்றது. 'ஆடவர், தமக்கு உரிமையுடைய பெண்களின் சொற்களைப் பழித்தது என்று கருதிப் புதைப்பதைப் போல் வயல்களில் நட்டு வைத்த கரும்புகள், செழித்து வளர்ந்து அப் பெண்களின் தோள்களைத் தம் இயற்கைத் தன்மையால் வெற்றி கொண்டு, ஒளிவிட்டெறிக்கின்ற முத்துக்களைத் தந்து அப்பாலும் அம்மகளிரின் பற்களை வென்று, அப்பெண்களை விட்டு ஆடவர் பிரிந்து போன காலங்களில் பெண்மையை வெல்வதற்காக மன்மதனுக்கு வில்லாக வளர்கின்ற சிறப்புடைய நாடு' என்று இயல்பான ஒரு பொருளின் மேல் தம் கருத்தினை ஏற்றிப் பாடுகின்றார் புலவர்:

" அந்ந லார்மொழி தன்னைப் பழித்ததென்
றாடவர் மண்ணில் முடுங் கரும்பு
துன்னி மீள வளர்ந்து மடந்தையர்
தோளை வென்று சுடர்முத்தம் ஈன்று
பின்னும் ஆங்கவர் முரலை வென்று
பிரியுங் காலத்திற் பெண்மையை வெல்லக்
கன்னல் வேளுக்கு வில்லாக ஓங்கும்
கடவுள் ஆரிய நாடெங்கள் நாடே "
(குற். குற., பா. 56:4)

ஆடவர் வயல்களில் கரும்புகளை நட்டுவைப்பது இயல்பு; ஆனால் 'அந்நலார் மொழி தன்னைப் பழித்தது என்று ஆடவர் மண்ணில் முடும் கரும்பு' என்று பாடுவது தற்குறிப்பேற்றம் ஆகும்.

சோலைமலைக் குறவஞ்சியில் பாட்டுடைத் தலைவி சுந்தரவல்லி அழகர்பால் தோழியைத் தூது அனுப்புகிறாள்; தோழி தலைவன் அடையாளம் கேட்க, சுந்தரவல்லி தலைவன் அடையாளம் சொல்கிறாள்; கேட்டு முடித்ததும் தோழி

புறப்பட்டுச் செல்கிறாள். இந்நிலையில் சூரியோதயத்தைப் பாடும் புலவரின் வாக்கில் தற்குறிப்பேற்ற அணி இடம்பெறு கின்றது:

"தோழி தூதுசெலுந்திறம் காண்டும் என்று
ஆழி ஒன்றுடை ஆதவன் தோன்றினான்." (பா. 77)

நவநீதேசுவர சுவாமி குறவஞ்சி ஆசிரியர், பாட்டுடைத் தலைவியின் தோழியான முத்துரேகையின் அழகைப் பின் வருமாறு சிறப்பித்துக் கூறுகின்றார்:

"அன்ன நடையில் மறைய—ஆதிசேசனும்
தன்னைப் புகழ்ந் துறையக்
கன்னல் மாரன் செறிய்
மின்னல் காரில் மறைய
வன்னக் குயிலஞ்சிய முத்துரேகைச் சகி வந்தாள்"
(பா. 24:3)

அன்னம் மறைதலும், ஆதிசேடன் பாதலத்து உறைதலும், மன்மதன் ஒளிதலும், மின்னல் மேகத்து உறைதலும், குயில் அஞ்சுதலும் முத்துரேகையின் எழிலுக்குத் 'தோற்றேயாம் என்று கூறுவது தற்குறிப்பேற்றம் ஆகும்.

மலைவளம், நாட்டுவளம் முதலியன கூறும் பகுதிகளில் இத்தகைய தற்குறிப்பேற்ற அணிகள் மிகுதியாக அமையுமாறு குறவஞ்சிப் புலவர்கள் பாடியுள்ளனர்.

உயர்வு நவிற்சி அணி

ஒரு பொருளை அதன் இயல்பான தன்மையினின்றும் மிகுதி யாக உயர்த்திக் கூறுவது உயர்வுநவிற்சி அணி ஆகும். பிற்காலத்தார் பெருக்கிய அணிகளுள் இதுவும் ஒன்றாகும். மாறனலங்காரம் கூறும் அதிசய அணியோடு இதனை ஒப்பிட லாம், (மாறனலங்காரம், 143). இவ்வணியைச் சிலர் 'பெருக்கு' எனவும், 'மிகைமொழி' எனவும்,[11] 'மயக்கவணி' எனவும் கூறுவர். நடைமுறை உலகில் காண இயலாத காட்சிகளையும் காட்டும் ஆற்றல் இவ்அணிக்கு உண்டு.

'ஆண் குரங்குகள் பலவகைப் பழங்களைப் பறித்துக் கொடுத்துப் பெண் குரங்குகளோடு கொஞ்சி மகிழும்; அக் குரங்குகளால் சிதறி எறியப்படுகின்ற பழங்களை வானுல கத்தில் வாழும் தேவர்கள் இரந்து கேட்பார்கள்; வன வேடர்கள் தம் கண்களால் ஏறெடுத்துப் பார்த்துத் தேவர்களை

அழைப்பார்கள்; வானின் வழியாகச் செல்கின்ற சித்தர்கள் கீழிறங்கி வந்து காயசித்தி மருந்துகளாகிய வன் மூலிகைகளை வளர்ப்பார்கள்; தேன் கலந்த மலையருவியினது அலைகள் மேலெழுந்து வானத்தினின்றும் வழிந்து ஓடும்; அதனால் செந்திற ஞாயிற்றின் தேரில் பூட்டிச் செல்லும் குதிரையின் கால்களும் தேர்ச்சக்கரமும் வழுக்கும்' எனக் குற்றாலக் குறவஞ்சியில் வரும் குறத்தி தன் மலைவளத்தை உயர்த்திக் கூறுகின்றாள்:

"வானரங்கள் கனிகொடுத்து மந்தியொடு கொஞ்சும்
மந்திசிந்து கனிகளுக்கு வான்கவிகள் கெஞ்சும்
கானவர்கள் விழிஎறிந்து வானவரை அழைப்பார்
கமனசித்தர் வந்துவந்து காயசித்தி விளைப்பார்
தேனருவித் திரையெழும்பி வானின்வழி ஒழுகும்
செங்கதிரோன் பரிக்காலும் தேர்க்காலும் வழுகும்
கூனலிளம் பிறைமுடித்த வேணிஅலங் காரர்
குற்றாலத் திரிகூட மலையெங்கள் மலையே." (பா. 54:1)

மலைவளம் கூறுவதாக வரும் பிற பாடல்களிலும் உயர்வு நவிற்சி அணி சிறப்பாக வருவதைக் காணலாம்.

அழகர் குறவஞ்சியில் வரும் குறத்தி, தலையருவித் தீர்த்தத்தின் மகிமையைத் தலைவியிடம் பின்வருமாறு கூறுகின்றாள்:

"குருடன் கனியைக் காட்டக் கூனன் நிமிர்ந்து பார்க்கக்
குறைசேரங்கன் கால்கூடி மரமீதேறி நின்றார்க்கத்
தரந்தோணா வூமையும் வாய்திறந்தெனக் கென்று கேட்க
ஸ்நானஞ் செய்பலனிவ்வா றானதுன் மனமேற்க." (கீ. 32:3)

தீர்த்த மகிமையை மிகைப்படுத்திக் கூறும் இப்பாடலும் உயர்வு நவிற்சியணியின்பாற்படுவதாகும்.

ஐயவணி

இவ்வணியை 'ஐயவுவமை' என உவமையணியின் வகைகளுள் ஒன்றாகக் குறிப்பிடுகின்றது தண்டியலங்காரம். 'ஐயவுவமை யென்பது உவமையையும் பொருளையும் ஐயுற்றுரைப்பது' (தண்டியலங்காரம், ப. 46) என விளக்கம் கூறுவர் உரையாசிரியர்.

பாட்டுடைத் தலைவி பந்தடிக்கும் பாவனையைக் கண்டவர்கள், 'இவள் திருமகளோ, இரதியோ, தெய்வலோக அரம்பையோ, மோகினியோ' என்று ஐயம் கொள்ளுகின்றன

ராம்; 'இவள் மனந்தான் முன் செல்கின்றதா? இவள் கண்கள் தாம் முந்துகின்றனவா? இவள் கைகள் தாம் முந்துகின்றனவா?' என்று தமக்குள் எண்ணிக் கொள்கின்றனராம்:

"இந்திரை யோஇவள் சுந்தரி யோதெய்வ ரம்பையோ
மோகனியோ மன
முந்திய தோவிழி முந்திய தோகர முந்திய
தோவெனவே உயர்
சந்திர சூடர் குறும்பல ஈசுரர் சங்கணி
வீதியிலே மணிப்
பைந்தொடி நாரி வசந்தஒய் யாரி பொற்
பந்துகொண் டாடினளே."

(குற். குற., பா. 20:4)

இப்பாடலில் வரும் முதல் இரண்டு அடிகளில் ஐயவணி சிறப்பாக அமைந்துள்ளது.

சொல் விளையாட்டு

ஒரு சொல்லுக்கு இரண்டு மூன்று பொருளை அமைப்பதன் வாயிலாகவோ சில சொற்களைச் சிலேடைப் பொருளில் தொகுப்பதன் வாயிலாகவோ கவிஞர்கள் சொல் விளையாட்டு ஆடுவது உண்டு. இத்தகைய சொல் விளையாட்டு பாட்டின் பொருளுக்கும் உணர்வுக்கும் ஏற்ப இயைந்து வரும் போது பாட்டு இனிமையுடையதாய் நம்மை இன்புறுத்தும்; பொருத்தமுறச் சொல் விளையாட்டு நிகழவில்லையேல் பாட்டு சுவை குன்றிப் போகும். "சுவை குன்றாவண்ணம், நல்ல வண்ணம் கவிஞர் சொல்லாட்டம் ஆடுவது கவிதைத் துறையில் ஏற்புடையதே ஆகும்"[13] என்பர்.

"தொல்காப்பியனார் அணிகளைப் பலவகையாகப் பாகுபாடு செய்யாது அணிகளுக்கு அடிப்படையாக உள்ள உவமை ஒன்றினை மட்டுமே விளக்கினார். கி. பி. பத்தாம் நூற்றாண்டைச் சார்ந்த திவாகரம் இருபத்தெட்டு அலங்காரங்களையும், பன்னிரண்டாம் நூற்றாண்டில் தோன்றிய தண்டியலங்காரம் முப்பத்தைந்து அணிகளையும் கூறுகின்றன. பதினாறாம் நூற்றாண்டில் இயற்றப்பெற்ற மாறனலங்காரம் அறுபத்து நான்கு அணிகளையும், பிற்காலத்தில் தோன்றிய சந்திராலோகம் நூறு அணிகளையும், விசாகப் பெருமாளையர் இயற்றிய அணியிலக்கணம் நூற்றிரண்டு அணிகளையும், குவலயானந்தம் நூற்றிருபது அணிகளையும் கூறுகின்றன."[14] இவ்வாறு அணிகளின் எண்ணிக்கையானது காலப்போக்கில்

பெருகிக்கொண்டே சென்றுள்ளது. பல்வேறு பொருளணிகளும் சொல்லணிகளும் பெருகியிருந்த ஒரு காலகட்டத்தில் தோன்றிய குறவஞ்சி இலக்கியங்களில் அணிகளின் ஆட்சி மிகுதியாகக் காணப்படுவது இயல்பேயாகும்.

பின்வருநிலையணி

> "முன்வருஞ் சொல்லும் பொருளும் பலவயிற்
> பின்வரு மென்னிற் பின்வரு நிலையே." (நூ.42)

என்று தண்டியலங்காரம் இவ்வணிக்கு இலக்கணம் கூறும். ஒரு சொல் பல்வேறு பொருளில் தொடர்ந்து வருதல் சொற்பின் வருநிலை எனப்படும்; ஒரு சொல் ஒரே பொருளில் தொடர்ந்து வருதல் சொற்பொருட்பின்வருநிலை எனப்படும்; ஒரு பொருள் தரும் வேறு வேறு சொற்கள் வருதல் பொருட்பின்வருநிலை எனப்படும்.

குறவஞ்சி இலக்கியத்தில் சொற்பின்வருநிலை, சொற் பொருட்பின் வருநிலை ஆகிய இரண்டினையும் சிறப்பாகக் காணலாம். உலாக் காணப் பெண்கள் வரும் காட்சியை,

> "ஒருமானைப் பிடித்துவந்த பெருமானைத் தொடர்ந்துவரும்
> ஒருகோடி மான்கள்போல் வருகோடி மடவார்."
> (குற். குற., பா. 15:1)

எனச் சிறப்பித்துக் கூறுகின்றார் ஆசிரியர். இங்கே 'ஒருமான்', 'பெருமான்', 'கோடிமான்' என்னும் சொற்கள் முறையே மானையும், இறைவனையும், பெண்களையும் குறித்து நிற்கின்றன. இவ்வாறே, தலைவி தோழியைத் தலைவன்பால் தூது விடுக்கும்போது,

> "மைப்பழகு விழியாய்என் பெருமாலை நீசொல்லி
> மருமாலை வாங்கியே வாராய் சகியே."
> (குற். குற. பா. 45:16)

என்று கூறுகிறாள். இங்கே 'பெருமாலை', 'மருமாலை' என்னும் சொற்கள் தலைவியின் மையலையும், இறைவனுடைய மாலையையும் உணர்த்திநிற்கின்றன.

> "கங்கைக் கொழுந்தணி தெய்வக் கொழுந்தைநான் கண்டுகுளிர்
> திங்கட் கொழுந்தையும் தீக்கொழுந் தாக்கிக் கொண்டேனே."
> (குற். குற., பா.36:2)

என்று தலைவி தோழியிடம் தன் வருத்தத்தைப் புலப்படுத்தும் பகுதியிலும் 'கொழுந்து' என்னும் சொல் பல்வேறு பொருளில் அமைந்திருக்கக் காணலாம். இத்தகைய சொற்பின்வருநிலை

அணியைக் குறவஞ்சி இலக்கியங்களில் மிகுதியாகக் காண முடிகின்றது.

சொற்பொருள்பின்வருநிலை அணி நவநீதேசுவரர் குறவஞ்சியில் அவையடக்கம் கூறும் பாடலில் இடம் பெற்றுள்ளது:

" மதியுலாஞ் சிகரைபத்தி மருவுமா சிறுவெண்
மதிபுனை நவநீதர் மாபுகழ்க் குறவஞ்சி
மதியிலென் னுரைமகிழ்ந் ததன்கோள் களைப்பொறுத்து
மதியுளார் இகழாது நேர்ந்தருள்வர் மாநிலத்தே." (பா.5)

இப்பாடலில் முதல் இரண்டு அடிகளில் வரும் மதி என்னும் சொல்லுக்கு நிலவு என்னும் பொருளையும், பின் இரண்டு அடிகளில் வரும் மதி என்னும் சொல்லுக்கு அறிவு என்னும் பொருளையும் கொள்ளவேண்டும். இவ்வாறு சொற்பொருள் பின்வருநிலை, சொற்பின்வருநிலை என்னும் இருவகை அணிகளும் இப்பாடலில் சிறப்புறக் காணப்படுவது குறிப்பிடத் தக்கதாகும்.

முரண் அணி

ஒன்றற்கொன்று முரணாகத் தோன்றுவனவற்றை எடுத்துக் காட்டி நயம்பட உரைத்தலை முரண்அணி எனக் கூறுவர் இலக்கண நூலார். தண்டியலங்காரம் இதனை 'விரோத அணி' என உரைக்கின்றது.

" மாறுபடு சொற்பொருள் மாறுபாட்டு இயற்கை
விளைவுதர உரைப்பது விரோத மாகும்." (நூ. 82)

என்பது இவ்வணியின் இலக்கணம் ஆகும்.

' அஞ்சு தலைக்குள் ஆறு தலைவைத்தார் எனது மனதில்
அஞ்சு தலைக்கோர் ஆறு தலைவையார்
நஞ்சு பருகி அமுதங் கொடுத்தவர் எனது வாள்விழி
நஞ்சு பருகி அமுதங் கொடுக்கிலார்."

(குற். குற., பா. 41:2)

" வில்லை யொடித்தம் மானைக் காத்தவர் மாரன்கருப்பு
வில்லை யொடித்தென் மானங் காக்கிலார்
அம்பரத்தினிற் கதிரையொளித்தவர் தனத்திடைமதன்
அம்பரத்தினிற் கதிரை யொழிக்கிலரர்."

(அழ. குற., கீ. 24: 3, 4)

தலைவி தலைவனை நினைத்துப் புலம்பும் இப்பாடல்களில் அஞ்சு—ஆறு, வைத்தவர்—வையார், நஞ்சு — அமுதம், கொடுத்தவர் — கொடுக்கிலார், காத்தவர் — காக்கிலார், என்னும் முரண் சொற்கள் அமைந்து பொருள்நயம் பயப் பதைக் காணலாம்.

"மேக்கெழுந்த மதிசூடிக் கிழக்கெழுந்த
ஞாயிறுபோல் மேவினாரே," (குற். குற., பா. 12)

என்றும்,

" தினகரன்போற் சிவப்பழகும்—அவன்
திருமிடற்றிற் கறுப்பழகும்." (குற். குற., பா. 26:1)

என்றும் பாட்டுடைத் தலைவரைச் சிறப்பித்து வரும் பகுதி களிலும், மேற்கு—கிழக்கு, மதி—ஞாயிறு, சிவப்பு—கறுப்பு என்னும் முரண் சொற்கள் அமைந்துள்ளன. இத்தகைய முரண் அணி குறவஞ்சி இலக்கியத்தில் பரக்கக் காணப் படுகின்றது.

**மடக்கணி**

'எழுத்துக்களது தொகுதி பிறவெழுத்தானும், சொல் லானும் இடையிடாதும் இடையிட்டும் வந்து பெயர்த்தும் வேறு பொருளை விளைப்பது மடக்கென்னும் அலங்காரம்' எனக் கூறுகிறது தண்டியலங்காரம்.

"எழுத்தின் கூட்டம் இடைபிறி தின்றியும்
பெயர்த்தும்வேறு பொருள்தரின் மடக்கெனும் பெயர்த்தே."
(நூ.92)

தோழியைத் தலைவன்பால் தூது விடுத்த ஒரு குறவஞ்சித் தலைவி, 'அவள் இன்னும் வரக் காணேனே' என்று பலவாறு கூறிப் புலம்புகின்றாள்:

" பாவா யென் றேனீங்குப் பாவாயென் றாளந்தப்
பாவிக்கென் வாவி பதைப்புத் தெரியாதே
பாலனஞ் செய்திடன் பாலன மேயென்றேன்
பாலனங் கொண்டுநின் பால்வரு வேனென்று
மேலகன் றாள்...
சகியேயென் றேன்சற்றுச் சகியேயென் றாளவள்வஞ்
சகியேயிப் படியென்னைத் தவிக்கவிட்டுச் சென்றாள்."
(சர. குற., பா.29: 1—3)

சரபேந்திர பூபால குறவஞ்சியில் வரும் இப்பாடலில் சொற்கள் இடையிட்டு வரும் மடக்கு இடம்பெற்றுள்ளது. 'பாவாய்'

என்னும் சொல் 'பெண்ணே' என்றும், 'பாட்டுக்களை ஆய்ந்திரு' என்றும் இருபொருள் தந்து நிற்கின்றது. இவ்வாறே 'பாலனம்' என்னும் சொல்,'பாதுகாப்பு' என்றும், 'பாற்சோறு' என்றும் இருபொருள் தந்து நிற்பதுடன், 'அன்பால் அனமே' என முந்தைய சொல்லோடு இணைந்து நின்று தோழியைக் குறிக்கும் வகையிலும் அமைந்துள்ளது. சகியே என்னும் சொல் முதலில் விளியாக இடம்பெற்றுள்ளது; பின்னர்ப் 'பொறுத்திரு' என்னும் பொருளில் ஆளப்பெற்றுள்ளது; முந்திய அடியின் இறுதிச் சொல்லோடு இணைந்து 'வஞ்சகியே' என்னும் வசைச் சொல்லாகவும் வந்துள்ளது.

சொற்சிலம்பங்கள்

எண்களை அடிப்படையாகக் கொண்டு அமையும் சொற் சிலம்பங்களும் குறவஞ்சி இலக்கியங்களில் காணப்படுகின்றன. காட்டாக, பன்னிரண்டு முதல் ஒன்று வரை கீழ் எண்ணாக அமைந்து நெஞ்சை அள்ளும் பாடல் ஒன்று குற்றாலக் குறவஞ்சியில் இடம்பெற்றுள்ளது:

"பன்னிருகை வேல்வாங்கப் பதினொருவர்
படைதாங்கப் பத்துத் திக்கும்
நன்னவவீ ரரும்புகழ மலைகளெட்டும்
கடலேழும் நாடி ஆடிப்
பொன்னின்முடி ஆறேந்தி அஞ்சுதலை
எனக்கொழித்துப் புயநான் மூன்றாய்த்
தன்னிருதாள் தருமொருவன் குற்றாலக்
குறவஞ்சித் தமிழ்தந் தானே." (பா.2)

முருகக் கடவுள் வணக்கமாக அமைந்த இப்பாடலைப்பின்பற்றி, பின்னர் எழுந்த குறவஞ்சி இலக்கியங்களில் இத்தகைய பாடல்கள் இடம்பெறலாயின. குற்றாலக் குறவஞ்சி முருகப் பெருமானைச் சிறப்பித்துப் பாடியிருப்பது போல, அழகர் குறவஞ்சி ஒரு பாடலில் சோலைமலை அழகருக்குப் பொருந் தும் பன்னிரு பொருள்களை நிரல்படச் சுட்டியுள்ளது:

"பன்னிருநா மஞ்சொலிப்பன் னொருமகம்செய் தேத்தப்
பண்டுதச ரதன்மகவாய் பாடிநவநீதம்
தன்னையுண்டட் டாக்கரத்தின் பொருளெனக் கோவியர்க்காச்
சப்தசுரவே யிசைத்தோ ரறுசமையங் காட்டி
மின்னுமுயர் பஞ்சவர்தூ தேவல் புரிந்தருளி
மிக்குறுநான் மறைமுதலாய் முத்தொழிலு மியற்றி
மன்னுமிரு வினைநீக்குமொரு பொருளா மெங்கள்
மாலழகர் பதுமலரென் மணிமுடிக்குப் போதாம்." (பா.6)

சரபேந்திர பூபால குறவஞ்சியில், தலைவி மன்மதனைப் பழித்துப் பேசும் பகுதியில் பிரபவ, பிரஜோற்பத்தி, மன்மதா, பரிதாபி, துந்துபி, விரோதி, துன்மதி, காலயுக்தி, விஜய, விகுருதி, ஜய, ஆனந்த, பிரமாதி, ஈசுவர, குரோதி, கீலக, சித்திரபானு, சருவஜித், அக்ஷய என்னும் பத்தொன்பது வருடங்களின் பெயர்கள் அமைந்துள்ளன:

"பிரபவ னாகிப் பிரஜோற்பத்தி செய்கின்ற மன்மதா—இன்று
பேதையேன் றன்னைப் பரிதாபி யாக்கலென் மன்மதா
பரவுங் கடலினைத் துந்துபி யாக்கொண்ட மன்மதா—நீயும்
பாவைமார் களுக்குவி ரோதியா யினதென்ன மன்மதா
வானின்மேற் கோடுந்துன் மதியைக் குடையாக்கி மன்மதா — காற்றாம்
வடக்கோடுந் தேர்கொண்டா யிதுவென்ன காலயுத்தி மன்மதா
மீனகே தனத்தினால் விஜயம் பெறலாமோ மன்மதா — யார்க்கும்
விகுருதியா காதிருந்தான் மிகவும் ஜயமாமே மன்மதா

தேனார் மலரம்பா வானந்த மடைகின்றாய் மன்மதா—சீறும்
திறவம்பொன் றுளதாயிற் பிரமாதி யாவையே மன்மதா
மானோர் கரமுற்ற ஈசுவரன் முன்னாளின் மன்மதா—உன்னை
வாட்டிய காலையிற் காட்டுங் குரோதி யல்லை மன்மதா
தெரியுமிவ் வுலகத்தி லேவர்கி லகத்தினால் மன்மதா—என்மேல்
சித்திர பானுவைப்போல் மெத்தவுங் காய்கிறாய் மன்மதா
சரபோஜி மகராஜர் தமைநான் மருவச்செய் மன்மதா—நீ
சருவஜித் தாகிமே லக்ஷய னாகுவாய் மன்மதா."

(பா.17)

"பிரபவனென்று தொடங்கி அக்ஷயனென்று முடித்தது ஒரு நயம்"[15] என இப்பாடலில் நலத்தைப் பாராட்டிக் கூறியுள்ளார் உ. வே. சாமிநாதையர்.

"வார்த்தை விசேடங்கள் கற்ற மலைக்குற வஞ்சிக்கொடியே."

(பா.59)

எனக் குற்றாலக் குறவஞ்சியில் வரும் பாட்டுடைத் தலைவி குறத்தியைப் பாராட்டிக் கூறுவாள். குறத்தியைப் பற்றிய இப்பாராட்டுரை குறவஞ்சிப் புலவர்களுக்கும் பொருந்துவதாகவே உள்ளது. 'வார்த்தை விசேடங்கள்' கற்ற அவர்கள், சொற்களைச் சிறப்பாகக் கையாளும் திறம் படைத்தவர்களாகவும் விளங்குகிறார்கள்.

முன்னோர் மொழிபொருள்

குறவஞ்சிப் புலவர்கள் முன்னோர் மொழிபொருளைப் பொன்னே போற் போற்றிக் கையாண்டுள்ளமையை ஆங்காங்கே கண்டு இன்புறலாம்.

சங்க இலக்கியத் தலைவி ஒருத்தி தலைவனைப் பிரிந்து துன்புறும் நிலையில்,

" யாரணங்கு உற்றனை கடலே...
நள்ளென் கங்குலும் கேட்குநின் குரலே." (குறுந்.163)

என்று கடலை நோக்கிக் கேட்பாள்; காம மிகுதியால் கடலும் யாராலோ துன்புற்று வருந்துவதாக எண்ணிக்கொண்டு பேசுவாள். அவளைப் போலவே, குறவஞ்சி இலக்கியத்தில் வரும் ஒரு தலைவியும்,

" கடலே யென்றனைப் போலவே நீயும்
காதலுற் றாயோ!" (அழ. குற., கீ. 26)

என்று கடலை நோக்கி வினவுவதைக் காண்கிறோம்.

மகளிரைக் காவல் வைத்துக் காக்கும் காப்பு முறையால் எந்தப் பயனும் விளையாது; அவர்கள் நிறை என்னும் பண்பால் தம்மைத் தாம் காக்கும் காப்பே சிறந்தது. இதனை,

" சிறைகாக்குங் காப்புஎவன் செய்யும் மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை." (குறள் 57)

என்னும் வள்ளுவர் வாக்கால் உணரலாம். இக்கருத்தினைச் சொக்கலிங்கப் புலவர் நவநீதேசுவரசுவாமி குறவஞ்சியில் பயன் படுத்திக் கொண்டுள்ளார். 'சிறுக்கி மனங் காணாமல் செடி காத்தவன் போலாச்சே சிங்கி' என்று ஐயுற்று வினவும் குறவனிடம், 'சிவமறியு மென்சிந்தை சிறைகாப்பது எவனடா சிங்கா' (பா. 87:7) என்று கூறுகிறாள் குறத்தி.

தலைவனைப் பிரிந்து வாடும் தலைவி ஒருத்தி மாலைக் காலம் மகளிரின் உயிரை உண்ணும் முடிவுக் காலமாக இருப்பதை இரங்கிக் கூறுகிறாள்:

" மாலையோ அல்லை மணந்தார் உயிருண்ணும்
வேலைநீ வாழிய பொழுது." (குறள், 1221)

இக்குறட்பாவைப் பின்பற்றி, சோலைமலைக் குறவஞ்சி ஆசிரியர், தலைவனின் பவனி கண்ட தலைவி, அவன்மீது மையல் கொண்டு வருந்துவதாகவும், மாலைக் காலம்

வந்துற்றபோது அதன் கொடுமையை உணர்ந்து இரங்குவ தாகவும் அமைத்துள்ளார்.

" 'மாலையோ அல்லை மணந்தார் உயிருண்ணும்
வேலை' என்றபடியே விழுங்கி எண்திசைகளைக்
காலைப் பொதிகையினின் றிழுத்ததன்றி வடவைக்
கனலைச் சுடுவிரகக் கனலைக் கிளப்பிக்கஞ்ச
நூலைப் பொருவிடையர் லீலைக்கிசைந்த காம
நோய்செய் திளங்குருத்தைப் பாய்செய்ததுவு மன்றிக்
கோலைப் பிடித்துவிடைக் குலங்களை மேய்க்குமணிக்
கோவலர் இசைக்கும்வேங் குழலிசை யையுந்தந்த "
(பா. 51)

இப்பாடலில் குறவஞ்சி ஆசிரியர் குறள் வாக்கினைப்பொன்னே போல் போற்றிக் கையாண்டுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

மண்ணிப்படிக்கரை நீலகண்டர் குறவஞ்சி நாடகத்தில் வரும் குறவனுக்கும் குறத்திக்கும் இடையே ஏசல் நிகழ்கிறது. 'சந்தேகந் தோணுது உன்றனிடத்தில் சிங்கி' என்று குறவன் ஐயுற்றுக் கூற, 'பாரில் தன்னெஞ் சறியாமல் என்னபொய் தானுண்டு சிங்கா' என எதிர்த்துரையாடுகிறாள் குறத்தி. குறத்தியின் கூற்றில்,

" தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும்." (குறள், 293)

என்னும் குறட்பாவின் தாக்கத்தைக் காண்கிறோம்.

திருமலையாண்டவர் குறவஞ்சியில் வரும் பாட்டுடைத் தலைவி காமவல்லி குறத்தியிடம்,

" எல்லார்க்கு நல்ல குறிசொல்வ துங்க ளியல்பதென்றாற்
கல்லாமற் பாதி குலவித்தை யேவருங் காணிசமே. "
(பா. 55)

என்று கூறுகிறாள். காமவல்லியின் கூற்றில், "குலவிச்சை கல்லாமல் பாகம் படும்" (பழமொழி, பா. 21) என்னும் பழமொழிப் பாடலின் ஈற்றடிக் கருத்து இடம்பெற்றுள்ளது.

இவ்வாறு முன்னோர் மொழிபொருளைக் கையாளும் திறனைக் குறவஞ்சியில் பல இடங்களில் காண முடிகின்றது.

### யாப்பில் புதுமை

காலந்தோறும் தமிழ்க் கவிதையின் உருவம் மாறிக் கொண்டே வந்துள்ளது.

" ஆசிரியம் வஞ்சி வெண்பாக் கலியென
நாலியற் றென்ப பாவகை நிலையே. "
(தொல். செய். நூ. 101)

என நான்கு வகையான பாக்களைக் குறிப்பிடுகின்றார் தொல்காப்பியர். ஆயின் சங்க இலக்கியத்தில் ஆசிரியப்பாவே அரசோச்சியது. கலித்தொகையில் வெண்கலிப்பாவும், கலி வெண்பாவும் இடம்பெற்றன. பரிபாடலில் பரிபாட்டு என்னும் இசைப்பா வடிவம் இடம்பெற்றது. வஞ்சிப்பா சங்க இலக்கியம் முழுவதிலும் சில இடங்களில் மட்டுமே இடம்பெற்றிருந்தது. சங்கம் மருவிய காலத்தில் பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் தோன்றின. அவற்றுள் பெரும்பாலானவை வெண்பா யாப்பில் இயற்றப்பட்டன. காப்பிய இலக்கிய காலத்தில் விருத்த யாப்பு சிறந்தோங்கியது. திருத்தக்கதேவர், தம் சிந்தாமணிக் காப்பியம் முழுவதையும் விருத்த யாப்பில் வடித்துத் தந்தார். அவரைப் பின்பற்றிக் கம்பர் விருத்தப் பாவில் பல புதுமைகள் புரிந்தார். பின்வந்த பெரிய புராணம், வில்லிபாரதம் போன்ற நூல்களும் விருத்தப்பாவிலேயே பாடப் பெற்றன.

காப்பிய கால நிலை இவ்வாறிருக்க, இடைக்காலத்தில் சிற்றிலக்கியங்கள் பல்வேறு புதிய புதிய யாப்பு வகைகளை மேற்கொண்டு பிறந்தன. எட்டாம் நூற்றாண்டில் தோன்றிய உலா இலக்கியம் கலிவெண்பா யாப்பைப் பரவலாக்கியது. மாணிக்கவாசகர் பல வகையான நாட்டுப்புறப் பாடல் வடிவங்களைக் கையாண்டதோடு, கவிதை உலகில் அரிதாக வழங்கிய கட்டளைக் கலித்துறை யாப்பைக் கோவைப் பிரபந்தம் பாடக் கையாண்டார்; அடுத்துத் தோன்றிய கோவை இலக்கியங்கள் அவர் வழியைப் பின்பற்றின. ஒன்பதாம் நூற்றாண்டில் தோன்றிய நந்திக் கலம்பகம் பல்வகையான பாக்களையும், பாவினங்களையும் கொண்டு விளங்கியது. பன்னிரண்டாம் நூற்றாண்டில் பிறந்த பரணி இலக்கியம் தாழிசை அமைப்பைப் படைத்தது. பதினான்காம் நூற்றாண்டில் உருவான தூது இலக்கியம் கலிவெண்பா யாப்பினைப் பின்பற்றியது. பிள்ளைத்தமிழ் கழிநெடில் ஆசிரிய விருத்தமாகப் பாடும் போக்கினைத் தோற்றுவித்தது. அருணகிரிநாதர் சந்த விருத்தம் என்னும் புதுவகை விருத்த யாப்பினைப் பயன்படுத்தினார். பதினேழாம் நூற்றாண்டில் தோன்றிய பள்ளு இலக்கியத்தில் சிந்து என்னும் புதிய யாப்பு வகை தலைகாட்டத்தொடங்கியது. பதினேழு, பதினெட்டாம் நூற்றாண்டுகளில் சிறப்புற்று ஓங்கிய

குறவஞ்சி இலக்கியத்தில் இச்சிந்து என்னும் யாப்பு வகை மேலும் வளர்ந்தது. பதினெட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த அருணாசலக் கவிராயர் கீர்த்தனை என்னும் யாப்பு வடிவினை அறிமுகப்படுத்தி இராமநாடகக் கீர்த்தனை பாடினார். அவரைப் பின்பற்றிக் கோபாலகிருஷ்ண பாரதியார் நந்தனார் சரித்திரக் கீர்த்தனையைப் படைத்தார். அண்ணாமலை ரெட்டியார் காவடிச் சிந்து என்னும் புதுவகையைப் படைத்தார். இருபதாம் நூற்றாண்டுக் கவிஞரான சுப்பிரமணிய பாரதியார் 'சிந்துக்குத் தந்தை' என்று கூறத்தக்க வகையில் சிந்து யாப்பினைப் புது மெருகுடன் வளர்த்துப் பெருமை கொண்டார். இவ்வாறு காலந்தோறும் கவிதையின் வடிவம் மாறிக்கொண்டே வந்துள்ளமை குறிப்பிடத்தக்க தாகும்.

குறவஞ்சி இலக்கியம் பாடுவாருக்குப் பலவகையான பாக்களும் பாவினங்களும் யாக்கத் தெரிய வேண்டும்; இயற்பாக்களோடு இசைநாடகப் பாடல்களும் இயற்றத் தெரிய வேண்டும். குறவஞ்சி இலக்கியங்களில் நேரிசை வெண்பா, இன்னிசை வெண்பா, நேரிசையாசிரியப்பா, நிலைமண்டில ஆசிரியப்பா, கொச்சகக் கலிப்பா, தரவு கொச்சகக் கலிப்பா என்னும் பாக்களும், ஆசிரியத்துறை, ஆசிரிய விருத்தம், கலி விருத்தம், கலித்துறை, கட்டளைக் கலித்துறை, கட்டளைக் கலிப்பா, கலித்தாழிசை, வஞ்சித்துறை, குறள்வெண் செந்துறை என்னும் பாவினங்களும், சிந்து,[16] கீர்த்தனை முதலான புதிய யாப்பு வகைகளும் பயின்று வருகின்றன.

"இடைக்காலம் யாப்பிற் புரட்சி கண்ட காலம்... இடைக் காலத் தமிழ் நடையழகும், தொடையழகும் பெற்று, எப்பொருளையும் கலகலத்துச் சொல்லும் நெகிழ்ச்சியுற்றது. பாவினங்களையும் நூலினங்களையும் பெருக்கித் தமிழினத்தைக் கவியினமாகவே"[17] என்று வ. சுப. மாணிக்கம் இடைக்கால இலக்கியம் பற்றிக் கூறியுள்ள கருத்து குறவஞ்சி இலக்கியத் திற்கு முற்றிலும் பொருந்துவதாகும்.

> " பல்வகைத் தாதுவின் உயிர்க்கு உடல் போல்பல
> சொல்லால் பொருட்கு இடனாக, உணர்வினின்
> வல்லோர் அணிபெறச் செய்வன செய்யுள். "
>
> (நன்னூல், நூ. 268)

என்பது நன்னூலார் செய்யுளுக்குத் தரும் இலக்கணம். இவ்விலக்கணத்திற்கு இணங்க, குறவஞ்சி இலக்கியம் உணர்

வினில் வல்லோரால் அணிபெறச் செய்யப்பட்டுள்ளது; கற்பனை நயம், அணிநலன், சொல் விளையாட்டு, முன்னோர் மொழி பொருள், யாப்புப் புதுமை போன்ற பல்வேறு இலக்கியத் திறன் களைப் பெற்றுப் பொலிந்துள்ளது.

### குறிப்புக்கள்

1. அ. கி. பரந்தாமனார், மதுரை நாயக்கர் வரலாறு, ப. 437.
2. பு. சி. புன்னைவநாத முதலியார் & செ. ரெ. இராம சாமி பிள்ளை (உரை.), திருக்குற்றாலக் குறவஞ்சி, 'நூலாசிரியர் வரலாறு', ப. 14.
3. வ. சுப. மாணிக்கம், இலக்கிய விளக்கம், பக். 82-83.
4. உ. வே. சாமிநாதையர் (பதிப்.), ஸ்ரீசிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தங்கள், ப. 309.
5. க. கைலாசபதி & இ. முருகையன், கவிதை நயம், ப. 39.
6. இளம்பூரணர் (உரை.), தொல்காப்பியம், பொருளதி காரம், ப. 395.
7. பேராசிரியர் (உரை.), தொல்காப்பியம், பொருளதி காரம், ப. 57.
8. தமிழண்ணல், சங்க இலக்கிய ஒப்பீடு—இலக்கியக் கொள்கைகள், ப. 128.
9. பாரதியார், பாரதியார் கட்டுரைகள், ப. 251.
10. "The other groups of birds look like Akasa Ganga coming to see the kitchen of her daughter Ganga. The seeing of kitchen or அடுக்களை காணல் is a custom even now seen in the Tirunelveli district when the mother-in-law comes for the first time after marriage to see her daughter."

    —A. Ramaswami, 'Tirikutaracappakkavirayar', Unpublished M Ltt Thesis Annamalai University, 1961, p. 259.
11. இ. சுந்தரமூர்த்தி, திருக்குறள் அணிநலம், ப. 190
12. கொ. இராமலிங்கத் தம்பிரான் (உரை.), தண்டியலங் காரம், குறிப்புரை, ப. 127.
13. சு. பாலச்சந்திரன், இலக்கியத் திறனாய்வு, ப. 162.
14. இ. சுந்தரமூர்த்தி, திருக்குறள் அணிநலம், ப. 18.
15. உ. வே. சாமிநாதையர் (பதிப்.), ஸ்ரீ சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தங்கள், ப. 305.
16. சிந்து யாப்பின் பல வகைகள் குறவஞ்சி இலக்கியங் களில் இடம்பெற்றுள்ளமை 'நாட்டுப்புறக் கூறுகள்' என்னும் இயலில் சுட்டப்பட்டுள்ளது (பக். 203-205).
17. வ. சுப. மாணிக்கம், இலக்கிய விளக்கம், பக். 76-77.

# 9. முடிவுரை

இவ் ஆய்வு குறம், குறவஞ்சி, குளுவ நாடகம் என்னும் உறவுடைய இலக்கிய வகைகளைப் பல்வேறு கோணங்களில் ஆராய்வதாக அமைந்துள்ளது. ஆய்வுலகில் இன்னும் சரியாக அறிமுகம் ஆகாத நிலையில் உள்ள குளுவ நாடகம் பற்றிய செய்திகள் இவ் ஆய்வில் ஆங்காங்கே விரிவாகவும், விளக்கமாகவும் சுட்டப்பட்டுள்ளன. பல்வேறு நூலகங்களிலிருந்தும், தமிழார்வலரிடமிருந்தும் பெற்ற பதினான்கு குறங்கள், நாற்பது குறவஞ்சிகள், ஐந்து குளுவ நாடகங்கள் ஆகியவற்றின் அடிப்படையில் இவ் ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

'சிற்றிலக்கிய அறிமுகம்' என்னும் இரண்டாம் இயலின் தொடக்கத்தில் குறம், குறவஞ்சி, குளுவ நாடகம் ஆகியவற்றின் ஆசிரியர் பற்றியும், அவை எழுந்த காலம் பற்றியும் கூறப்பட்டுள்ளன. பிற்பகுதியில் அவ்விலக்கியங்களின் தோற்றமும், வளர்ச்சியும் ஆராயப்பட்டுள்ளன. முதல் குற இலக்கியமான மதுரை மீனாட்சியம்மை குறம் பதினேழாம் நூற்றாண்டின் முற்பகுதியிலும், முதல் குறவஞ்சி இலக்கியமான கும்பேசர் குறவஞ்சி பதினேழாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும், முதல் குளுவ நாடகமான சின்னமகிபன் குளுவ நாடகம் பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் தோன்றியுள்ளன என்பது இவ்வியல் காட்டும் முடிபு ஆகும். 'குறவனுக்குச் சிறப்பளிக்க வேண்டும் என்னும் எண்ணத்தில் குளுவனைத் தலைமை மாந்தனாகக் கொண்டு, குறவஞ்சியைப் பின்பற்றி எழுந்த நாடக வகையே குளுவ நாடகம்' என்பது இவ்வியலில் தக்க காரணங்களுடன் நிறுவப்பட்டுள்ளது.

'அமைப்பாய்வு' என்னும் மூன்றாம் இயலில் குறம், குறவஞ்சி, குளுவ நாடகம் ஆகிய இலக்கியங்களின் பொதுப்

பண்புகளும், தனித் தன்மைகளும் ஆராயப்பட்டுள்ளன. குற இலக்கியம், குறத்தி வருதல், மலைவளம், நாட்டுவளம் முதலியன கூறுதல் ஆகியவற்றைப் பொதுக் கூறுகளாகக் கொண்டுள்ளமையும், குறவஞ்சி இலக்கியத்தின் கதைக்கரு பெரும்பாலும் ஒரே வகையாக இருப்பினும், அதன் அமைப்பு முறையில் சிற்சில வேறுபாடுகள் காணப்படுவதும், இருபதாம் நூற்றாண்டில் எழுந்த குறவஞ்சி இலக்கியங்கள் அமைப்பு முறையில் பற்பல புதுமைகளைக் கொண்டு திகழ்வதும், ஏழு நகரத்தார் குளுவ நாடகம் நீங்கலான பிற குளுவ நாடகங்கள் அமைப்பில் ஒன்றுபட்டு விளங்குவதும் இவ்வியலில் எடுத்துக் காட்டப் பெற்றுள்ளன.

குறவஞ்சி இலக்கியம் தனக்கு முன்னர் எழுந்த பல்வேறு சிற்றிலக்கியக் கூறுகளைத் தன்னகத்தே கொண்டுள்ளது. அவை உறவுடையவை, தொடர்புடையவை, சாயலுடையவை என்னும் மூன்று நிலைகளில் 'குறவஞ்சியில் பிற சிற்றிலக்கியக் கூறுகள்' என்னும் நான்காம் இயலில் ஆராயப்பட்டுள்ளன. குறத்திப்பாட்டு, கலம்பகம், குறம், குளுவ நாடகம் ஆகிய வற்றைக் குறவஞ்சியுடன் உறவுடைய இலக்கிய வகைகள் என்றும், பள்ளு, நொண்டி நாடகம் ஆகியனவற்றைக் குறவஞ்சி யுடன் தொடர்புடைய இலக்கிய வகைகள் என்றும், உலா, தூது, கேசாதிபாதம், பவானிக்காதல், தசாங்கம், ஆற்றுப் படை, கோவை ஆகியவற்றைச் சாயலுடைய இலக்கிய வகைகள் என்றும் இவ்வியல் சுட்டுகின்றது. குறவஞ்சி இலக்கியத்தில் வரும் சிங்கன் சிங்கியின் நினைவால் பறவை வேட்டையில் வெற்றி பெறத் தவறுகின்றான். குறவஞ்சிச் சிங்கனின் பாத்திரப் படைப்பில் காணப்படும் இக்குறை, குறவஞ்சிக்குப் பின்னர் எழுந்த குளுவ நாடகத்தில் நிறைவு செய்யப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கதாகும். 'தமிழ் இலக்கிய வரலாற்றில் பதினேழு, பதினெட்டாம் நூற்றாண்டுகளிலிருந்து பொதுமக்கள் சார்ந்த இலக்கிய வடிவங்கள் (பள்ளு, குறவஞ்சி, நொண்டி நாடகம்) சில தோன்றலாயின. அவ்விலக்கிய வடிவங்கள் நாடகப் பண்பும், இசைப்பாங்கும் கொண்டு விளங்கியதால் பொதுமக்களிடையே பெரும் வரவேற்பைப் பெற்றன' என்னும் கருத்தையும் இவ்வியல் சுட்டிக்காட்டி யுள்ளது.

'நாடகத் திறன்' என்னும் ஐந்தாம் இயலின் தொடக் கத்தில், கிரேக்கம், ரோமன், ஆங்கிலம், பிரெஞ்சு, சீனம் ஆகிய மொழிகளில் உள்ளதைப் போலவே, தமிழ் மொழியிலும்

நாடகத்தின் தொடக்கம் சமயத் தொடர்புடையதாகவே அமைந்துள்ளமை குறிப்பிடப்பட்டுள்ளது. குறவஞ்சி நாடகத்தை, கட்டியக்காரன் வரவு, பாட்டுடைத் தலைவர் பவனி, பாட்டுடைத் தலைவி வருதல், குறத்தி வருகை, சிங்கன் வருகை, சிங்கன்—சிங்கி சந்திப்பு என்னும் ஆறு களங்களாகப் பிரித்துக் கூறுவதே பொருத்தமாகும் என்பது இவ்வியல் நிலைநாட்டும் ம்டிபு ஆகும். இருவர் உரையாடுதல், குழுவினர் வருகை, காட்சி மாற்றம், இரட்டைக் கரு அமைப்பு, இயைபு ஆகியவற்றைக் குறவஞ்சி நாடக அமைப்பில் காணப் படும் முக்கியமான கூறுகளாக இவ்வியல் எடுத்துக்காட்டி யுள்ளது. குறவஞ்சி நாடகத்தில் இடம்பெறும் மாந்தர்களான கட்டியக்காரன், பாட்டுடைத் தலைவர், பாட்டுடைத் தலைவி, தோழி, குறத்தி, சிங்கன், நூவன் ஆகியோரது பங்கும், பண்பும் இவ்வியலில் சுருங்கக் கூறப்பட்டுள்ளன. குறவஞ்சி, நாடக வகையைச் சார்ந்தது ஆதலின், அதில் பேச்சு வழக்குச் சொற்களும், தொடர்களும், மருஉ மொழிகளும், சேரி வழக்கு களும் இடம்பெறுதல் இயல்பு என்பதை இவ்வியலின் 'உரை யாடற்பாங்கு' என்னும் பிரிவு எடுத்துக்காட்டியுள்ளது. குறமோ, குளுவ நாடகமோ நாடகமாக நடிக்கப் பெற்றமைக்குச் சான்று இல்லை என்பதும் இவ்வியலில் குறிப் பிடப்பட்டுள்ளது.

'நாட்டுப்புறக் கூறுகள்' என்னும் ஆறாவது இயலில், குறம், குறவஞ்சி, குளுவ நாடகம் ஆகிய இலக்கியங்களில் இடம் பெற்றுள்ள சொற்கள், தொடர்கள், கருத்துக்கள் ஆகியன திரும்பத் திரும்ப வருதல், இசைப்பாங்கு, சுட்டி ஒருவர்ப் பெயர் கொளப் பெறா மரபு, புராண மரபுச் செய்திகள், பழமொழி ஆட்சி, விடுகதைப் பாங்கு, பேச்சு வழக்குச் சொற்கள், நாட்டுப்புற நம்பிக்கைகளும், சடங்குகளும் என்னும் நாட்டுப்புறக் கூறுகள் ஆராயப்பட்டுள்ளன. 'மக்கள் நுதலிய அகன் ஐந்திணையும், சுட்டி ஒருவர்ப் பெயர் கொளப் பெறாஅர்' என்னும் தொல்காப்பிய மரபைப் பின்பற்றி, குறம், குறவஞ்சி, குளுவ நாடகம் ஆகிய மூன்று இலக்கியங்களிலும் தலைமை இடத்தினைப் பெறும் குறவன், குறத்தி, குளுவன் ஆகியோர் இயற்பெயரால் சுட்டப்பெறவில்லை என்பது இவ்வியலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

'வாழ்வியல் செய்திகள்' என்னும் இயலில், குறம், குறவஞ்சி, குளுவ நாடகங்கள் காட்டும் குறவர் வாழ்வியல் விரிவாக ஆராயப்பட்டுள்ளது. குறவருள் உப்புக் குறவர்,

கூடை முறம் கட்டும் குறவர், பூனைக் குறவர், நிலக் குறவர், வலைக் குறவர் எனப் பல்வேறு பிரிவினர் இருப்பதைக் குறவஞ்சி நூல்களால் உணர முடிகின்றது. குறி கூறுதல், பறவை வேட்டையாடுதல் ஆகியன குறவரின் முக்கியத் தொழில்களாக விளங்கின என்பதும், கூடைமுறம் கட்டுதல், பச்சை குத்துதல், தேன் எடுத்தல், கிழங்கு அகழ்தல், துகில் நெய்தல், உறிக்கலயம் சேர்த்தல், சங்கணி தொடுத்தல் போன்ற சிறு சிறு தொழில் களையும் அவர்கள் மேற்கொண்டிருந்தனர் என்பதும் இவ் வியலில் தக்க சான்றுகளுடன் எடுத்துக்காட்டப் பெற்றுள்ளன. 'குறவர் சமூகத்தைச் சார்ந்த ஆண் பெண் ஆகிய இருவருமே தம் வாழ்விற்காக உழைத்து உண்ணும் நிலையில் உள்ளனர்' என்பது இவ்வியல் கூறும் பிறிதொரு வாழ்வியல் செய்தியாகும். குறவர் வாழ்வியலில் காணப்படும் சிறு தெய்வ வழிபாடு, நம்பிக்கைகள், பழக்க வழக்கங்கள், சடங்குகள், திருமண முறைகள் போல்வனவும் இவ்வியலில் விரிவாக ஆராயப் பட்டுள்ளன. 'குறவரது வாழ்வியல் குறம், குறவஞ்சி, குளுவ நாடகங்களில் நடப்பியற்பாங்கோடும், கற்பனை மெருகோடும், அழகுணர்ச்சியோடும் சித்திரிக்கப்பட்டுள்ளது' என்பது இவ்வியல் வலியுறுத்தும் ஆய்வு முடிபு ஆகும்.

'இலக்கியத் திறன்' என்னும் எட்டாவது இயலின் முற்பகுதியில் குறவஞ்சி நாடகம் எழுந்த காலச் சூழல் விளக்கப் பெற்றுள்ளது; குறவஞ்சிப் புலவர்கள் தமிழின் அருமையைப் புலப்படுத்தும் வகையிலும், தமிழுணர்ச்சியை ஊட்டும் முறையிலும் கையாண்டுள்ள பகுதிகள் எடுத்துக்காட்டப் பெற்றுள்ளன. நிகழாத ஒன்றை நிகழ்வது போலப் படைத்து மொழியும் தொடர்நிகழ்ச்சிக் கற்பனைகளின் ஆட்சி, புலன் அல்லாதன புலனாக்கும் பொருட்டும், அலங்காரமாகிக் கேட்டார்க்கு இன்பம் பயக்கும்பொருட்டும் வரும் பொருளணி, சொல்லணிகளின் பெருக்கம், சொல் விளையாட்டு, முன்னோர் மொழி பொருள் போற்றல், யாப்புப் புதுமை ஆகியவை இவ்வியலில் குறவஞ்சி இலக்கியத் திறன்களாகக் கூறப் பெற்றுள்ளன.

இவ் ஆய்வு, 'முன்னையவற்றின் பரிணாமமாக மலருகின்ற ஓர் இலக்கிய வகை, பின்னர் வருவனவற்றிற்கு அடித்தளமாய் அமையும்' என்னும் கூர்தலறக் கோட்பாட்டினைக் குறவஞ்சி இலக்கியம் கொண்டு விளக்குவதாய் அமைகிறது எனலாம்.

## பின்னிணைப்பு—1

# குறம், குறவஞ்சி, குளுவ நாடகங்களின் பெயர்ப்பட்டியல்

## 1. குறம்

| எண் | நூலின் பெயர் | ஆசிரியர் |
|---|---|---|
| 1. | அகண்ட வெளிக் குறம் | வீ. எஸ். வாலாம்பாள் |
| 2. | அம்பலக் குறம் | — |
| 3. | இலக்கணையார் குறம் | — |
| 4. | குறமாது அல்லது மாதுக்குறம் அல்லது சொர்க்கக் குறம் | மீறான் கனி அண்ணாவி |
| 5. | ஞானக் குறம் | பீர் முகமது அப்பா |
| 6. | தஞ்சை வெள்ளைப் பிள்ளையார் குறம் | — |
| 7. | தர்மாம்பாள் குறம் | வீ. எஸ். வாலாம்பாள் |
| 8. | திருக்குருகூர் மகிழ் மாறன் பவனிக்குறம் | — |
| 9. | திருவர்முனி ஞானக் குறம் | — |
| 10. | துரோபதை குறம் | புகழேந்திப் புலவர் |
| 11. | நெல்லை நாயகர் குறம் | — |
| 12. | பிஸ்மில் குறம் | பீர் முகமது அப்பா |
| 13. | மதுரை மீனாட்சியம்மை குறம் | குமரகுருபரர் |
| 14. | மின்னொளியாள் குறம் | புகழேந்திப் புலவர் |
| 15. | வித்துவான் குறம் | — |
| 16. | விதுரர் குறம் | — |
| 17. | வேதபுரீசர் குறம் | — |
| 18. | வேதாந்தக் குறம் | வீ. எஸ். வாலாம்பாள் |

## 2. குறவஞ்சி

எண் நூலின் பெயர் ஆசிரியர்

1. அமரவிடங்கன் குறவஞ்சி —
2. அர்த்தநாரீசுவரர் குறவஞ்சி —
3. அழகர் குறவஞ்சி—கவி குஞ்சர பாரதி
4. அனலைத் தீவு ஐயனார் குறவஞ்சி
—முத்துக்குமாரப்புலவர்
5. ஆதிமூலேசர் குறவஞ்சி தில்லை விடங்கன்
மாரிமுத்தாப்பிள்ளை
6. இரகுநாதராய குறவஞ்சி —
7. இராமபத்திர மூப்பனார் குறவஞ்சி—க. சுப்பராமய்யர்
8. இராஜமோகனக் குறவஞ்சி—கிரிராஜகவி
9. இரிஷிவிந்தக் குறவஞ்சி—இராசப்ப உபாத்தியாயர்
10. இலக்ஷணக் குறவஞ்சி—முனியப்ப முதலியார்
11. ஒதாளர் குறவஞ்சி எனும் அலகுமலைக்
குறவஞ்சி—சின்னத்தம்பி நாவலர்
12. கச்சபேசர் குறவஞ்சி —
13. கச்சால் குறவஞ்சி—மாம்பாண முதலியார்
14. கச்சேரி முதலியார் குறவஞ்சி—இன்பக் கவி
15. ஸ்ரீகண்ணப்ப நாயனார் சரித்திரக்
குறவஞ்சிப் பண் கீர்த்தனம்—மார்க்கண்ட நாவலர்
16. கதிரைமலைக் குறவஞ்சி—சதுமலைப்புலவர் விநாயகர்
17. கபாலீச்சுரர் குறவஞ்சி —
18. காங்கேயன் குறவஞ்சி—பொன்மணி செல்லப்பன்
19. காயாரோகணக் குறவஞ்சி—அழகுமுத்துப் புலவர்
20. காரைக் குறவஞ்சி—யாழ்ப்பாணம் சஞ்சித சுப்பையர்
21. காளியண்ணன் குறவஞ்சி —
22. கும்பேசர் குறவஞ்சி நாடகம்—பாபநாச முதலியார்
23. குமாரலிங்கக் குறவஞ்சி —
24. குறவஞ்சி —தாமோதரக் கவிராயர்
25. குறவஞ்சி (தெலுங்கு) —

26. குருக்குத்துறைக் குறவஞ்சி—தி. சு. ஆறுமுகம் (சிவதாசன்)
27. குன்றாக்குடி சிவ சுப்பிரமண்யக் கடவுள் குறவஞ்சி—வாணிதாச வீரபத்திரக் கவிராயர்
28. கூட்டுறவுக் குறவஞ்சி—தஞ்சைவாணன் (துரை. சீனிவாசன்)
29. கொடுமளூர்க் குறவஞ்சி—நல்ல வீரப்பப் பிள்ளை
30. கொடுமுடிக் குறவஞ்சி —
31. கோமாசிக் குறவஞ்சி—ச. து. சு. யோகி
32. கௌள குறவஞ்சி —
33. சகசி மன்னர் குறவஞ்சி—முத்துக்கவி
34. சந்திரசேகரக் குறவஞ்சி —
35. சரபேந்திர பூபால குறவஞ்சி நாடகம் —ஸ்ரீசிவக்கொழுந்து தேசிகர்
36. சாப்டூர் குறவஞ்சி—நகரம் முத்துசாமிக் கவிராயர்
37. சிக்கல் நவநீதேசுவரசுவாமி குறவஞ்சி —சொக்கலிங்கம் பிள்ளை
38. சிதம்பரக் குறவஞ்சி—செல்லப்பப் பிள்ளை
39. சிதம்பரக் குறவஞ்சி —
40. சிவகிரி குறவஞ்சி —
41. சிவபெருமான் குறவஞ்சி—தாமோதரக் கவிராயர்
42. சிவன் மலைக் குறவஞ்சி—தே. இலக்குமண பாரதி
43. சிற்றம்பலக் குறவஞ்சி —கே. என். தண்டாயுதபாணி பிள்ளை
44. சுவாமிமலை முருகன் குறவஞ்சி—இலிங்கப்பையர்
45. செந்தில் குறவஞ்சி —
46. செந்திலாண்டவர் குறவஞ்சி —
47. சேற்றூர் முத்துச்சாமித் துரைக் குறவஞ்சி —இராமசாமிக்கவிராயர்
48. சோலைமலைக் குறவஞ்சி—ஜம்புலிபுத்தூர் கிருஷ்ணய்யங்கார்

49. சோழக் குறவஞ்சி—கம்பர்
50. ஞானக்குறவஞ்சி—குமரகுருபர தேசிகர்
51. ஞானரத்தினக் குறவஞ்சி—பீர் முகமது அப்பா
52. டெல்லிக் குறவஞ்சி —
53. தஞ்சைக் குறவஞ்சி —
54. தத்துவக் குறவஞ்சி—அணவை. முருகேச பண்டிதர்
55. தமிழரசி குறவஞ்சி—அ. வரதநஞ்சைய பிள்ளை
56. தியாகேசர் குறவஞ்சி —
57. திருக்குற்றாலக் குறவஞ்சி திரிகூடராசப்பக் கவிராயர்
58. திருச்செங்கோட்டுக் குறவஞ்சி —
59. திருப்பரங்குன்றக் குறவஞ்சி —
60. திருப்போரூர்க் குறவஞ்சி—சபாபதி முதலியார்
61. திருமணக் குறவஞ்சி—ஆ. சுப்பிரமணியக் கவிராயர்
62. திருமலையாண்டவர் குறவஞ்சி —
63. திருவாரூர் (தியாகராசர்) குறவஞ்சி —
64. திருவிடைக்கழிக் குறவஞ்சி—மீனாட்சி சுந்தரம்பிள்ளை
65. துரோபதைக் குறவஞ்சி —
66. தேவேந்திரக் குறவஞ்சி—சரபோஜி
67. நகுலமலைக் குறவஞ்சி—விசுவநாத சாஸ்திரியார்
68. நகுலமலைக்குறவஞ்சி—சேனாதிராய முதலியார்
69. நல்லைக் குறவஞ்சி—சேனாதிராய முதலியார்
70. நல்லைநகர்க் குறவஞ்சி—ப. கந்தப்பிள்ளை
71. நவபாரதக் குறவஞ்சி—ச. து. சு. யோகி
72. நெல்லைக் குறவஞ்சி—தொண்டைமான் முதலியார்
73. பழனிக் குறவஞ்சி— வே. முத்தனாச்சாரியார்
74. பாண்டிக் கொடுமுடிக் குறவஞ்சி —
75. பாம்பண காங்கேயன் குறவஞ்சி—பாலபாரதி முத்துசாமி ஐயர்
76. பாரத ஸ்வதந்திர குறவஞ்சி—பிருந்தா வரதராஜன்
77. பிரகதீஸ்வரர் குறவஞ்சி—சிவக்கொழுந்து தேசிகர்

78. பிலிப்பு விராட்ரிக்கோ முத்துக்
கிருட்டிணன் குறவஞ்சி—இன்பக்கவி

79. பெத்லகேம் குறவஞ்சி—வேதநாயக சாஸ்திரியார்

80. பெம்பண்ணக் கவுண்டர் குறவஞ்சி
—அருணாசலக் கவிராயர்

81. பொங்கலூர்க் குறவஞ்சி—பிரமயனப் புலவர்

82. பொய்யா மொழியீசர் குறவஞ்சி
—சிதம்பர தத்துவலிங்கையர்

83. மணியனூர் ராசாக் கவுண்டர் குறவஞ்சி —

84. மண்ணிப்படிக்கரை நீலக்கண்டர் குறவஞ்சி
—வெ. சாமிநாதையர்

85. மந்திரி சுப்பிரமணிய முதலியார் குறவஞ்சி —

86. மயிலைக் குறவஞ்சி —

87. மருங்காபுரிச் சிற்றரசர் குறவஞ்சி
—வெறிமங்கைபாகக் கவிராயர்

88. மருதப்பக் குறவஞ்சி—பிலிப்பு தெ. மெல்லோ

89. மல்வில் குறவஞ்சி—வெற்றிவேலுப் புலவர்

90. மாத்தளை முத்துமாரியம்மன் குறவஞ்சி
—நவாலியூர் சு. சொக்கநாதன்

91. மாந்தைக் குறவஞ்சி—வீரபத்திரக் கவிராயர்

92. முத்தானந்தர் குறவஞ்சி— —

93. முத்தையேந்திரர் குறவஞ்சி —

94 முத்துச்சாமித்துறைக் குறவஞ்சி
—முகவூர் கந்தசாமிக் கவிராயர்

95. முத்துக்கிருட்டிணன் குறவஞ்சி – இன்பக்கனி

96. முத்து வடுகநாதன் குறவஞ்சி —

97. முருகக்கடவுள் குறவஞ்சி—இலிங்கப்பையர்

98. முருகர் குறவஞ்சி—நல்ல வீரப்பப்பிள்ளை

99. மெஞ்ஞானக் குறவஞ்சி—கச்சிப்பிள்ளையம்மாள்

100. மெய்ஞ்ஞானக் குறவஞ்சி— முகம்மது
101. யாழ்ப்பாணத்துச் செல்வர் குறவஞ்சி —
102. வண்ண வாடிக்கரை குறவஞ்சி —
103. வண்ணைக் குறவஞ்சி—விசுவநாத சாஸ்திரியார்
104. வண்ணை வைத்திலிங்கர் குறவஞ்சி—கணபதி ஐயர்
105. வருணாபுரி ஆதிமூலேசர் குறவஞ்சி—மாரிமுத்துப்பிள்ளை
106. வள்ளிக் குறவஞ்சி —
107. வள்ளியம்மன் ஆயலோட்டும் குறவஞ்சி —
108. வாதசெயக் குறவஞ்சி —
109. விராலிமலைக் குறவஞ்சி—பிள்ளைப் பெருமாள் கவிராயர்
110. வெங்கடசாமி நாயக்கர் குறவஞ்சி
—மாம்பழக் கவிச்சிங்கநாவலர்
111. வெங்களப்பநாயக்கர் குறவஞ்சி
—அழகியசிற்றம்பலக் கவிராயர்
112. வைணவக் குறவஞ்சி
—முருகேச ராமானுச ஏ தாங்கிச் சுவாமிகள்
113. வைத்தியக் குறவஞ்சி—கொங்கணர்
114. வையாபுரிக் குறவஞ்சி— —
115. ஸ்ரீ கிருஷ்ணமாரி குறவஞ்சி—ஸ்ரீ தேவி கருமாரிதாசர்

### 3. குளுவ நாடகம்

1. அருணாசலம் செட்டியார்
குளுவநாடகம்— சரவணப்பெருமாள் கவிராயர்
2. ஏழு நகரத்தார் குளுவநாடகம் —
3. கறுப்பர் குளுவ நாடகம்—பாடுவார் முத்தப்பச்செட்டியார்
4. கோட்டூர் நயினார் குளுவநாடகம்—வெள்ளையப் புலவன்
5. சின்னமகிபன் குளுவ நாடகம்—முத்தாண்டி

## பின்னிணைப்பு – 2

# ஆய்வாளர்களுக்குக் கிடைத்துள்ள குறம், குறவஞ்சி, குளுவ நாடகங்களின் ஆய்வடங்கல்

### 1. குறம்

| எண். | நூலின் பெயர் | ஆசிரியர் | பதிப்பாசிரியர் உரையாசிரியர் | வெளியீட்டகம் பொருளுதவி | பதிப்பு | ஆண்டு |
|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 |
| 1. | அகண்டவெளிக் குறம் | வீ. எஸ். வாலாம்பாள் | ஆர். எஸ். சுபலக்ஷ்மி அம்மாள் | — | III | 1949 |
| 2. | இலக்கணையார் குறம் | — | ஸ்ரீ ஜீவேந்திர நைனார் | ஸ்ரீ காஞ்சிபூஷண அச்சுக்கூடம், காஞ்சிபுரம். | I | 1886 |
| 3. | குறமாது அல்லது மாதுக் குறம் அல்லது சொர்க்கக் குறம் | மீறான் கனி அண்ணாவி | — | எம். ஏ. ஷாஹுல் ஹமீது அண்டு ஸன்ஸ், சென்னை. | I | 1968 |
| 4. | ஞானக் குறம் (மெய்ஞ்ஞானத் திருப்பாடற்றிரட்டு, பக். 145-152) | பீர் முஹம்மது ஸாஹிபு | — | டாஸ் பிரஸ், நாகர்கோவில் | II | 1952 |

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 |
|---|---|---|---|---|---|---|
| 5. | தஞ்சை வெள்ளைப் பிள்ளையார் குறம் | — | வி. சொக்கலிங்கம் (பதிப்பு) | தஞ்சை சரசுவதி மகால் நூல்நிலையம், தஞ்சாவூர். | II | 1965 |
| 6. | தர்மாம்பாள் குறம் | வி. எஸ். வாலாம்பாள் | ஆர். எஸ். சுபலக்ஷ்மி அம்மாள் | — | III | 1949 |
| 7. | திருக்குருகூர் மகிழ்மாறன் பவனிக்குறம் | — | வெ. நா. ஸ்ரீநிவாஸய்யங்கார் (பதிப்.) | ஸ்ரீ கான வித்யா பிரஸ், ஸ்ரீவைகுண்டம். | — | 1932 |
| 8. | துரோபதை குறம் | புகழேந்திப் புலவர் | — | ஆர். ஜி. பதி கம்பெனி, சென்னை. | — | — |
| 9. | திருவரமுனி ஞானக் குறம்** | — | — | — | — | — |
| 10 | பிஸ்மில் குறம் | பீர்முஹம்மது ஸாஹிபு | — | எம். ஏ. ஷாஹுல் ஹமீது அண்டு சன்ஸ், சென்னை. | — | 1977 |
| 11. | மதுரை மீனாட்சியம்மை குறம் (ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு, பக். 529-541) | குமரகுருபரர் | உ. வே. சாமிநாத ஐயர் (உரை.) | ஸ்ரீ குமரகுருபரன் சங்கம், ஸ்ரீ வைகுண்டம் | IV | 1961 |
| 12. | மின்னொளியாள் குறம் | புகழேந்திப் புலவர் | — | வித்தியாரத்நாகரம் பிரஸ், சென்னை. | — | 1935 |
| 13. | வித்துவான் குறம் | புகழேந்திப் புலவர் | — | நாராயணசாமிப் பிள்ளை & பிரதர், சென்னை. | — | 1913 |
| 14. | வேதாந்தக் குறம் | வி. எஸ். வாலாம்பாள் | ஆர். எஸ். சுபலக்ஷ்மி அம்மாள் (பதிப்.) | — | III | 1949 |

## 2. குறவஞ்சி

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 |
|---|---|---|---|---|---|---|
| 1. | அர்த்தநாரீசுவரர் குறவஞ்சி** | — | — | — | — | — |
| 2. | அழகர் குறவஞ்சி | கவிகுஞ்சர பாரதி | கே. நாகமணி (பதிப்.) | சங்கீத நாடக சங்கம், சென்னை. | I | 1963 |
| 3. | இரிஷிவிந்தக் குறவஞ்சி | இராசப்ப உபாத்தி யாயர் | ஆர். கே. பார்த்த சாரதி & பூ. சுப்ர மணியம் (பதிப்.) | Bulletin of the Govt. Manuscripts Library, Madras. | Vol. XVII & XVIII (pp. 1-40; 1-13) | 1965 |
| 4. | இலக்ஷணக் குறவஞ்சி | முனியப்ப முதலியார் | சிதம்பர முதலியார் (பதிப்.) | மனோன்மணி விலாச அச்சுக்கூடம், கொண்ணூர் | I | 1881 |
| 5. | ஒதாளர் குறவஞ்சி எனும் அலகுமலைக் குறவஞ்சி | சின்னத்தம்பிநாவலர் | க. பழனிச்சாமிப் புலவர் (பதிப்.) | தமிழக வளர்ச்சித் துறை, தமிழக அரசு. | I | 1969 |
| 6. | ஸ்ரீகண்ணப்ப நாயனார் சரித்திரக் குறவஞ்சிப் பண் கீர்த்தனம் | மார்க்கண்ட நாவலர் | — | ஸ்ரீ தயாநிதி அச்சுக் கூடம், சென்னை. | I | 1887 |
| 7. | காங்கேயன்/ குறவஞ்சி | பொன்மணி செல்லப்பன் | இரா. இளங்குமரன் (பதிப்.) | தமிழ்நாட்டுப் பாட நூல் நிறுவனம், சென்னை. | I | 1980 |
| 8. | கும்பேசர் குறவஞ்சி நாடகம் | பாபநாச முதலியார் | எஸ். கலியாண சுந்தரையர் (பதிப்.) | உ. வே. சாமிநாதையர் நூல்நிலைய வெளியீடு, சென்னை. | II | 1961 |

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 |
|---|---|---|---|---|---|---|
| 9. | குமாரலிங்கக் குறவஞ்சி** | — | — | — | | |
| 10. | குறுக்குத்துறை குறவஞ்சி | தி. சு. ஆறுமுகம் (சிவதாசன்) | — | ஏ. சண்முகசுந்தரம், திருநெல்லை நகர். | I | 1972 |
| 11. | குன்றாக்குடி சிவ-சுப்பிரமண்யக் கடவுள் குறவஞ்சி | வாணிதாச வீரபத்திரக் கவிராயர் | வீரபத்திரக் கவிராயர் (பதிப்.) | ஸ்ரீஹயவதன விலாஸ பிரஸ், கும்பகோணம். | I | 1914 |
| 12. | கூட்டுறவுக் குறவஞ்சி | தஞ்சைவாணன் (துரை. சீனிவாசன்) | — | முத்தமிழ் மன்றம், சென்னை. | I | 1968 |
| 13. | சகசி மன்னர் குறவஞ்சி (ஐந்து தமிழிசை நாட்டிய நாடகங்கள், பக். 83-155) | முத்துக்கவிராயர் | வ. வேணுகோபாலன் (பதிப்.) | தஞ்சை சரசுவதி மகால் வெளியீடு, தஞ்சாவூர். | I | 1980 |
| 14. | சரபேந்திர பூபால குறவஞ்சி நாடகம் (ஸ்ரீசிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தங்கள், பக். 278-394) | ஸ்ரீசிவக்கொழுந்து தேசிகர் | உ. வே. சாமி நாதையர் (பதிப்.) | திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் ஸ்வாமிநாத ஸ்வாமிகள். | I | 1932 |
| 15. | சிக்கல் நவநீதே சுவர சுவாமி குறவஞ்சி | சொக்கலிங்கம் பிள்ளை | இரா. இளங்குமரன் (பதிப்.) | தமிழ்நாட்டுப் பாட நூல் நிறுவனம், சென்னை. | I | 1980 |

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 |
|---|---|---|---|---|---|---|
| 16. | சிதம்பரக் குறவஞ்சி | — | மு. அருணாசலம் (பதிப்.) | தமிழ் நூலகம், சென்னை. | I | 1949 |
| 17. | சிவன்மலைக் குறவஞ்சி | தே. இலக்குமணபாரதி | தி. அ. முத்துசாமிக் கோனார் (பதிப்.) | விவேக திவாகரன் அச்சுக்கூடம், திருச்செங்கோடு. | I | 1918 |
| 18. | சிற்றம்பலக் குறவஞ்சி | கே. என். தண்டாயுத பாணி | ஏ. பி. எம். எஸ். கிஸார் (பதிப்.) | தென்னிந்திய பரத நாட்டிய கலாலய வெளியீடு, சென்னை. | I | — |
| 19. | செந்திலாண்டவர் குறவஞ்சி* | — | — | — | — | — |
| 20. | சோலைமலைக் குறவஞ்சி | ஜம்புலிபுத்தூர் கிருஷ்ணய்யங்கார் | எஸ். கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் (பதிப்.) | புத்தூர் அக்ரஹாரம் திருச்சி. | I | 1975 |
| 21. | ஞானக் குறவஞ்சி | முதல் 2 பகுதிகள்: குமரகுருபரதேசிகர், 3-ம் பகுதி: பீரு முகம்மது | வீ. சொக்கலிங்கம் (பதிப்.) | தஞ்சை சரசுவதி மகால் வெளியீடு, தஞ்சாவூர். | I | 1974 |
| 22. | ஞானரத்தினக் குறவஞ்சி (சித்தர் பாடல்கள், பக். 264-269) | பீரு முகம்மது | த. கோவேந்தன் (பதிப்.) | பூம்புகார் பிரசுரம், சென்னை. | I | 1976 |
| 23. | தத்துவக் குறவஞ்சி | அணவை. முருகேச பண்டிதர் | கன்னைய் செட்டியார் (பதிப்.) | வித்தியாவிலாச முத்திராக்ஷர சாலை. | I | 1875 |
| 24. | தமிழரசி குறவஞ்சி | அ. வரதநஞ்சைய பிள்ளை | — | தஞ்சைக் கூட்டுறவுப் பதிப்பகம், தஞ்சை. | I | 1951 |

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 |
|---|---|---|---|---|---|---|
| 25. | தியாகேசர் குறவஞ்சி | — | வே. பிரேமலதா (பதிப்.) | தஞ்சை ஸரஸ்வதி மஹால் வெளியீடு, தஞ்சாவூர். | I | 1970 |
| 26. | திருக்குற்றாலக் குறவஞ்சி | திரிகூடராசப்பக் கவிராயர் | — | திருக்குற்றாலநாத சுவாமி தேவஸ்தானம் | III | 1938 |
| 26அ. | ,, | ,, | எஸ். கல்யாண சுந்தரையர் (பதிப்.) | கலாக்ஷேத்ரம், சென்னை. | மறு பதிப்பு | 1963 |
| 26ஆ. | ,, | ,, | பு. சி. புன்னைவநாத முதலியார் & செ. ரெ. இராமசாமி பிள்ளை (உரை.) | தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட், சென்னை. | VI | 1975 |
| 27. | திருப்பரங்குன்றக் குறவஞ்சி** | — | — | — | — | — |
| 28. | திருமலை யாண்டவர் குறவஞ்சி | — | உ. வே. சாமி நாதையர் (பதிப்.) | கலைமகள் வெளியீடு. சென்னை. | I | 1938 |
| 29. | நகுலமலைக் குறவஞ்சி | நா. விசுவநாத சாஸ்திரிகள் | கணேசக்குருக்கள் (பதிப்.) | சோதிடப்பிரகாச யந்திரசாலை, கொக்குவில். | I | — |
| 30. | பாம்பண காங்கேயன் குறவஞ்சி | பாலபாரதி முத்துசாமி ஐயர் | கு. அருணாசலக் கவுண்டர் & கே. பி. முத்துசாமி (பதிப்.) | மக்கள் வெளியீடு, சென்னை. | II | 1978 |

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 |
|---|---|---|---|---|---|---|
| 31. | பாரத ஸ்வதந்திர குறவஞ்சி | ப்ருந்தா வரதராஜன் | — | 13, பீமன்ண முதலி தோட்ட்த் தெரு, சென்னை. | I | — |
| 32. | பெத்லகேம் குறவஞ்சி | வேதநாயக சாஸ்திரியார் | — | கிறிஸ்தவ இலக்கியச் சங்கம், சென்னை. | II | 1964 |
| 33. | பொய்யாமொழி யீசர் குறவஞ்சி | சிதம்பர தத்துவ லிங்கையன் | மு. அருணாசலம் (பதிப்.) | தமிழ்நாட்டுப் பாட நூல் நிறுவனம், சென்னை. | I | 1980 |
| 34. | மண்ணிப்படிக் கரை நீலகண்டர் குறவஞ்சி | வெ. சாமிநாதையர் | இரா. இளங்குமரன் (பதிப்.) | தமிழ்நாட்டுப் பாட நூல் நிறுவனம், சென்னை. | I | 1980 |
| 35. | மந்திரி சுப்பிர மணிய முதலியார் குறவஞ்சி* | — | — | — | — | — |
| 36. | மாத்தளை முத்து மாரியம்மன் குறவஞ்சி | நவாலியூர் சு. சொக்கநாதன் | — | முக்கவிஞர் வெளியீடு மாத்தளை (இலங்கை). | I | 1964 |
| 37. | முத்தானந்தர் ஞானக் குறவஞ்சி | — | மு. அருணாசலம் (பதிப்.) | தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை, சென்னை. | I | 1981 |

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 |
|---|---|---|---|---|---|---|
| 38. | மெஞ்ஞானக் குறவஞ்சி (இளையான்குடி. இலக்கியங்கள், பக். 32-33) | கச்சிப்பிள்ளையம்மாள் | — | சீதக்காதி தமிழ்ப் பணிக் கழகம், இளையான்குடி. | I | 1980 |
| 39. | வள்ளியம்மன் ஆயலோட்டும் குறவஞ்சி | — | — | — | — | — |
| 40. | விராலிமலைக் குறவஞ்சி | — | மு. பசுபதி (பதிப்.) | Bulletin of the Govt. Oriental Manuscripts Library, Madras. | Vol. XII No. 1, pp. 21-50, No.2 pp.29-55. | 1971 |
| 41. | ஸ்ரீகிருஷ்ணமாரி குறவஞ்சி | ஸ்ரீதேவி கருமாரிதாசர் | — | சூபர் பவர் பப்ளிகேஷன்ஸ், சென்னை. | I | 1971 |

3. குளுவ நாடகம்

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 |
|---|---|---|---|---|---|---|
| 1. | அருணாசலம் செட்டியார் குளுவ நாடகம் | சரவணப் பெருமாள் கவிராயர் | — | அள. அரு. ராம. அருணாசலம் செட்டியார், தேவகோட்டை எஸ்டேட் பிரஸ். | I | 1914 |

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 |
|---|---|---|---|---|---|---|
| 2. | ஏழு நகரத்தார் குளுவ நாடகம் | — | திருஞானசம்பந்தக் கவிராயர் (பதிப்.) | சாத்தப்ப. ராமநாத. முத்தைய. சிதம்பர. பெத்தாச்சி செட்டியார் | I | 1922 |
| 3. | கறுப்பர் குளுவை நாடகம்* | பாடுவார் முத்தப்பச் செட்டியார் | — | — | — | — |
| 4. | கோட்டூர் நயினார் குளுவ நாடகம் | வெள்ளையப்புலவன் | சொ. வேலுச்சாமிக் கவிராயர் (பதிப்.) | நாக. ஆ. ராம. கிருஷ்ணன் செட்டியார், தேவகோட்டை. | I | 1930 |
| 5. | சின்னமகிபன் குளுவ நாடகம் | முத்தாண்டி | ஏ. என். பெருமாள் (பதிப்.) | உலகத் தமிழா ராய்ச்சி நிறுவனம், சென்னை. | I | 1980 |

குறிப்பு

* ஓலைச் சுவடி நிலையில் உள்ள இலக்கியம் (palm leaf)

** காகிதப்பிரதி நிலையில் உள்ள இலக்கியம் (paper manuscript)

## பின்னிணைப்பு—3

## கருத்தலகுகள் (Thematic Units)

### 1. குறம்

1. குறம்
2. காப்பு
3. அவையடக்கம்
4. கதையின் வரலாறு
5. குறத்தி வருகை
6. குறத்தி தன்னைத்தானே அறிமுகப்படுத்திக் கொண்டு வருதல்
7. பிறர் குறத்தி வேடம் அணிந்து வருதல்
8. குறத்தியின் தோற்றம்
9. வேடம் அணிந்தவருக்குக் குறி கூறுதல்
10. குறத்தியின் நிலை
11. பாட்டுடைத் தலைவர் பவனி வருதல்
12. தலைவி தலைவர் பவனி கண்டு மையல் கொண்டு புலம்புதல்
13. குறத்தி மலைவளம் பாடுதல்
14. குறத்தி நாட்டுவளம் பாடுதல்
15. குறத்தி வாசல்வளம் பாடுதல்
16. குறத்தி தன் குலப்பெருமை, குடி இயல்பு முதலியன உரைத்தல்
17. குறத்தியின் குறித்திறன்
18. தன் முன்னோர் குறிச்சிறப்பு உரைத்தல்
19. தன் குறிச்சிறப்பு உரைத்தல்
20. குறி சொல்வதற்கு முன் செய்ய வேண்டியவற்றைச் சொல்லுதல்
21. தெய்வம் பராவுதல்
22. குறிப்பலன்
23. நெற்குறி பார்த்துக் குறிப்பலன் சொல்லுதல்
24. கைக்குறி, மெய்க்குறி, முகக்குறி முதலியன நோக்கித் தலைவிக்கு நற்குறி உரைத்தல்
25. நன்னிமித்தம் பார்த்துக் குறிப்பலன் உரைத்தல்
26. வாழ்த்து

## 2. குறவஞ்சி

1. காப்பு
2. தோடையம்
3. மங்களம்
4. நூற்பயன்
5. அவையடக்கம்
6. கணபதி வருகை
7. இந்திரன் வருகை
8. கட்டியக்காரன் வருகை
9. கட்டியக்காரன் தோற்றம்
10. நாடகத்தில் தோன்றும் முதல் கதை மாந்தரை அறிமுகப்படுத்துதல்
11. பாட்டுடைத் தலைவர் பவனி வருதல்
12. பவனி காணப் பெண்கள் வருதல்
13. பாட்டுடைத் தலைவி தோன்றுதல்
14. தலைவியின் தோற்ற வருணனை
15. தலைவி பந்தடித்து விளையாடுதல்
16. தலைவி கும்மியடித்தல்
17. தலைவி சோலையில் மலர் பறித்தல்
18. தலைவி ஊஞ்சலாடுதல்
19. தலைவர் பவனி கண்டு தலைவி மையல் கொள்ளுதல்
20. மயக்கமுற்று வீழ்தல்
21. மயக்கமுற்ற தலைவிக்குத் தோழியர் சீதளோபசாரம் செய்தல்
22. தலைவி நிலவைப் பழித்துரைத்தல்
23. தலைவி மன்மதனைப் பழித்துரைத்தல்
24. தலைவி தென்றலைப் பழித்துரைத்தல்
25. தலைவி குயிலைப் பழித்துரைத்தல்
26. தலைவி கழிக்கரைப் பொருட்களைப் பழித்துரைத்தல்
27. தலைவி மாலைப் பொழுதைப் பழித்துரைத்தல்
28. தலைவி தலைவரைத் துதித்து வேண்டுதல்
29. முதுதாதி வருதல், தலைவிக்கு ஆறுதல் அளித்தல்
30. தோழி வருதல்
31. தோழியின் தோற்ற வருணனை

32. தோழி தலைவியின் நிலைக்கு இரங்கித் தலைவனை நோக்கித் துதித்தல்
33. தோழி தலைவனைப் பழித்தல்
34. தலைவி தலைவனின் சிறப்பியல்புகளை எடுத்துக்கூறி அவள் எண்ணத்தை மாற்றுதல்
35. தலைவி தோழியைத் தலைவனிடம் தூது விடுத்தல்
36. தலைவனைக் காணக்கூடிய பொழுது உரைத்தல்
37. தோழி தலைவனிடம் சென்று தலைவியின் காதலை எடுத்துரைத்தல்
38. தோழி திரும்பி வருதல்
39. தோழி மாலை பெற்றுத் திரும்பி வருதல்
40. தலைவன் தலைவியின் காதலை ஏற்றுக்கொண்டதைத் தெரிவித்தல்
41. தலைவி கூடவிழைத்தல்
42. குறத்தி வருகை
43. குறத்தி பாட்டுடைத் தலைவரின் தசாங்கம் பாடிய வாறே வருதல்
44. குறத்தியின் தோற்ற வருணனை
45. இலக்குமி/மாதவன்/நாரதர் குறத்தியாகத் தோன்று தல்
46. குறத்தி தன்னை அழைக்க வரும் தோழிக்கே குறி யுரைத்தல்
47. குறத்தி வாசல் வளம் பாடுதல்
48. குறத்தி மலைவளம் பாடுதல்
49. குறத்தி தன் சொந்த மலையைத் தேர்ந்தெடுத்ததற்கு உரிய காரணம் கூறுதல்
50. குறத்தி நாட்டுவளம் கூறுதல்
51. குறத்தி தலமகிமை உரைத்தல்
52. குறத்தி தேசவளம் சொல்லுதல்
53. குறத்தி நதிவளம் கூறுதல்
54. குறத்தி அண்டகோளத்தின் அதிசயம் உரைத்தல்
55. குறத்தி தன் சாதிவளம் கூறுதல்
56. குறத்தி தலைவரின் கிளைச்சிறப்பு உரைத்தல்
57. குறத்தி குறி சொல்லுதல்
58. குறத்தி தன் குறிச்சிறப்பு உரைத்தல்

59. குறத்தி தன் முன்னோர் குறிச்சிறப்பு உரைத்தல்
60. குறத்தி குறி சொல்வதற்குமுன் செய்ய வேண்டிய யவற்றைச் சொல்லுதல்
61. குறத்தி தன் குல தெய்வங்களைப் போற்றிப் பரவுதல்
62. குறத்தி குறிவகை நினைத்துப் பார்த்தல்
53. குறத்தி கஞ்சி, எண்ணெய், வெற்றிலை, பாக்கு முதலியன தருமாறு வேண்டுதல்
64. குறத்தி நன்னிமித்தம் நோக்கிக் குறி சொல்லுதல்
65. குறத்தி கைக்குறி, மெய்க்குறி பார்த்துக் குறி சொல்லுதல்
66. குறத்தி தெய்வம் ஏறிக் குறி சொல்லுதல்
67. தலைவி குறத்திக்குப் பரிசில் அளித்தல்
68. குறத்தி தலைவிக்குத் தலைவனைச் சேரும் மார்க்கம் அறிவித்தல்
69. தலைவர் தலைவியை மணம் புரிதல்
70. சிங்கன் வருகை
71. சிங்கன் தன் வலிமை கூறுதல்
72. சிங்கன் வந்தவுடன் நாட்டில் மழை பெய்தல்
73. சிங்கனின் கையாள் வருதல்
74. சிங்கன் பறவைகள் வரவு கூறுதல்
75. பறவைகள் கீழ் இறங்கி வயல்களில் இரை மேய்வதைச் சொல்லுதல்
76. கண்ணி குத்துதல்
77. சிங்கன் சிங்கியை நினைத்துப் புலம்புதல்
78. வண்டுகளை நோக்கிச் சிங்கி இருக்கும் இடம் வினவுதல்
79. சிங்கியைத் தேடித் தருமாறு தன் கையாளை வேண்டுதல்
80. ஊராரை நோக்கி வேண்டுதல்
81. கையாள் சிங்கியின் அடையாளம் வினவச் சிங்கன் கூறுதல்
82. கையாள் சிங்கியைக் காட்டக் கைக்கூலி வினவுதல்
83. ஊரார்/கையாள் சிங்கி இருக்குமிடம் கூறுதல்
84. கையாள் சிங்கியை அழைத்து வருதல்
85. சிங்கனும் சிங்கியும் எதிர்த்துரையாடுதல்

86. சிங்கனும் சிங்கியும் கூடி வாழ்ந்து புதல்வரைப் பெற்றுச் சிறக்க வாழ்தல்
87. சிங்கன், சிங்கி, குளுவன் ஆகிய அனைவரும் சேர்ந்து பாட்டுடைத் தலைவரைப் போற்றுதல்
88. வாழ்த்து
89. மங்களம்

### 3. குளுவ நாடகம்

1. காப்பு
2. தோடையம்
3. மங்களம்
4. கட்டியக்காரன் வருகை
5. பாட்டுடைத் தலைவனின் சிறப்பியல்புகள்
6. குளுவன் வருகை
7. குளுவனின் தோற்றம்
8. குளுவன் தன் வலிமையும், தான் அறிந்த சித்து வித்தை, பச்சிலை வகைகள் முதலியனவும் கூறுதல்
9. குளுவனின் கையாள் வருதல்
10. கையாள் தன் ஞானப் புலமையை உரைத்தல்
11. குளுவன் பறவை வேட்டையாடுதல்
12. தெய்வங்களைத் துதித்துக் கண்ணி ஊன்றுதல்
13. பறவைகள் வயல்களில் இறங்கி, இரை மேய்வதைக் கூறுதல்
14. பறவைகளைத் தெய்வங்களுக்குக் காணிக்கை யாக்குதல்
15. அரசர், வள்ளல், புலவர், ஒரு தேசிகர் போன்றோருக்குப் பறவைகளைக் கொடுத்துப் பரிசில் பெற்று வருமாறு கூறுதல்
16. குளுவன் சிங்கியைத் தேடத் தொடங்குதல்
17. சிங்கி வருகை
18. சிங்கன்—சிங்கி எதிர்த்துரையாடுதல்
19. வாழ்த்து

## பின்னிணைப்பு—4

# குறம், குறவஞ்சி, குளுவ நாடகம் பற்றிய ஆய்வுகள்

## 1. குறம்

1. உவ்வஸ், ம. மு. 'பிஸ்மில் குறம்', முகம்மது பாருக், கா. (பதிப்.), மெய்ஞ்ஞானி பீர்முகம்மது அப்பா இலக்கிய ஆய்வுக்கோவை. திருவிதாங்கோடு: நன்னெறிப் பதிப்பகம், 1976. பக். 433-437.

2. சண்முகம், மு. (பதிப்.). 'குறம்', தமிழ்நூல் விவர அட்டவணை, முதல் தொகுதி, இரண்டாம் பகுதி. சென்னை: தமிழ்நாட்டு அரசின் தமிழ் வளர்ச்சி மன்ற வெளியீடு, 1962. ப, 634.

3. சாம்பசிவன், ச. 'மதுரை மீனாட்சியம்மை குறம்', சிற்றிலக்கியச் சொற்பொழிவுகள் மூன்றாவது மாநாடு சென்னை: சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 1960. பக். 293-330.

4. நிர்மலா மோகன். 'குறத்தின் இலக்கணம்', புலமை, தொகுதி 4, பகுதி 3 & 4, ஜூலை-செப்டம்பர், 1978. பக். 201-227.

5. ————————. 'மீனாட்சியம்மை குறமும், மகிழ்மாறன் பவனிக் குறமும்', பத்தாவது கருத்தரங்கு ஆய்வுக் கோவை—தொகுதி 1. இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்ற வெளியீடு, 1978. பக். 407-412.

6. ————. 'தர்மாம்பாள் குறம், வேதாந்தக் குறம், அகண்ட வெளிக் குறம்—ஓர் ஆய்வு', பன்னிரண்டாவது கருத்தரங்கு ஆய்வுக் கோவை—தொகுதி 3. இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்ற வெளியீடு, 1980. பக். 180-185.

7. பஷீர், எம். எஸ், 'தக்கலை தவஞானி தந்த பிஸ்மில் குறம்', முஸ்லிம் முரசு. செப்டம்பர், 1969. பக். (இல்லை).

8. ————————. 'ஞானமேதை பீரப்பா தந்த ஞானக் குறம்', முழக்கம். 5-10-69. பக். 5-8.

